


# மூன்றாம் பகுதி

1. பீஷ்ம பருவம்
2. துரோண பருவம்
3. கர்ண பருவம்
4. சல்லிய பருவம்
5. சௌப்திக பருவம்
6. ஸ்திரீ பருவம்

தமிழில் தருபவர் :

அ. லெ. நடராஜன்

**அருணா பப்ளிகேஷன்ஸ்**

13/1. உஸ்மான் ரோடு

தியாகராய நகரம் • சென்னை-17.

முதற் பதிப்பு : ஆகஸ்டு, 1964.
இரண்டாம் பதிப்பு : செப்டம்பர், 1966.


விலை : சென்னை நகரம் ரூ. 2-50
வெளியூர்களில் ரூ. 2-50
இலங்கை, மலேசியா ரூ. 3-00

அச்சிட்டது : சௌந்தரா பிரிண்டர்ஸ், சென்னை.17

# முன்னுரை

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்க ராச்சாரிய சுவாமிகளின் ஆசியும் ஸ்ரீமுகம் பெற்று வியாசர் அருளிய மகா பாரதம் முதல் இரண்டு பகுதிகள் வெளி வந்திருக்கின்றன; இப்பொழுது மூன்றும் பகுதியும், நான்காம் பகுதியும் வெளிவருகின்றன. இந்த நான்கு பகுதிகளோடு வியாசர் அருளிய மகா பாரதம் முற்றுப் பெறுகிறது.

ஆண்டவனுடைய அருளினலும் ஸ்ரீ ஜகத்குரு அவர்களின் ஆசியாலும்தான், மாபெரும் இந்த இதிகாசத்தை, யாவரும் புரிந்துகொள்ளும் எளிய தமிழ் நடையில், கூடுமான வரை என்ருல் எழுத முடிந்தது என்று சொல்லலாம். பெரிய காரியம் எதுவும் பெரியவர்களின் ஆசியும் பாராட்டும் இல்லாமல் முற்றுப் பெறுவது இல்லை என்னும் உண்மை நான் சொல்லித் தெரியவேண்டும் என்பது இல்லை.

எனவே, இறைவனுக்கும் ஸ்ரீ ஜகத்குரு அவர்களுக்கும் முதலில் எனது அஞ்சலியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இந்த மூன்றும் பகுதியில் மொத்தம் ஆறு பருவங்கள் வெளிவந்திருக்கின்றன. போர் நிகழ்ச்சிகளும் அதனல் விளையும் பலாபலன்களும் இந்தப் பருவங்களில் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

போரினல் எத்தகைய அழிவு நேரும் என்பதை, நேருக்கு நேர் வெள்ளித் திரையில் காண்பதுபோல, இந்தப் பருவங்களிற் படித்து நாம் தெரிந்துகொள்ளலாம்.

இந்தப் பருவங்களில் வரும் பாத்திரங்களில் நால்வர் முக்கியமானவர்கள்; பீஷ்மர், துரோணர், கர்ணன், சல்லியன். இந்த நால்வருக்கும் நான்கு பருவங்கள் தனித் தனியே ஒதுக்கப்பட்டிருக்கின்றன; பீஷ்மர் பாண்டவர்களின் பாட்டனர்;

துரோணர் குரு; கர்ணன் தமையன்; சல்லியன் மாமன். இந்த நால்வரும் எதிரிகள் சார்பாக இருந்து பாண்டவர்களோடு போர் செய்கின்றனர். அநியாயக் கட்சியோடு சேர்ந்து நியாயக் கட்சியை எதிர்க்கின்றனர்; அதில் தத்தம் உயிரையும் துறக்கின்றனர். ஒருவனுக்கு நன்றியறிதல் முக்கியமா அல்லது நியாயம் முக்கியமா என்னும் கேள்வி எழும்பொழுது, நன்றியறிதல்தான் முக்கியம் என்பதைப் பீஷ்மர், துரோணர், கர்ணன், சல்லியன் இவர்களின் நடத்தையிலிருந்து நாம் தெரிந்துகொள்ளுகிறோம்.

அதேபோல, நன்றியறிதல் அவ்வளவு முக்கியமில்லை, நியாயம்தான் முக்கியம் என்பதைக் கிருஷ்ணனுடைய நடத்தையிலிருந்து நாம் தெரிந்துகொள்ளுகிறோம்.

இந்த இரண்டு பகுதிகளையும் மீண்டும் ஒப்புநோக்கிச் சிறு சிறு திருத்தங்கள் செய்து இருக்கிறேன்.

அன்புள்ள,

அ. லெ. நடராஜன்.

# பொருளடக்கம்

## பீஷ்ம பருவம்


| | | | |
|---|---|---|---|
| 1. | அறம் வெல்லும் | ... | 3 |
| 2. | ஆசி பெற்றார் | ... | 7 |
| 3. | முதல் நாள் போர் | ... | 13 |
| 4. | இரண்டாம் நாள் போர் | ... | 19 |
| 5. | மூன்றாம் நாள் போர் | ... | 24 |
| 6. | நான்காம் நாள் போர் | ... | 30 |
| 7. | ஐந்தாம் நாள் போர் | ... | 35 |
| 8. | ஆறாம் நாள் போர் | ... | 38 |
| 9. | ஏழாம் நாள் போர் | ... | 43 |
| 10. | எட்டாம் நாள் போர் | ... | 49 |
| 11. | ஒன்பதாம் நாள் போர் | ... | 55 |
| 12. | தன்னைக் கொல்ல வழி சொன்னவர் | ... | 60 |
| 13. | பத்தாம் நாள் போர் | ... | 63 |
| 14. | தாக சாந்தி | .. | 69 |
| 15. | பீஷ்மரும் கர்ணனும் | ... | 70 |


## துரோண பருவம்


| | | | |
|---|---|---|---|
| 1. | பீஷ்மரின் வாழ்த்து | ... | 75 |
| 2. | சேனாதிபதி துரோணர் | ... | 77 |
| 3 | உயிருடன் பிடிக்க வேண்டும் | ... | 79 |
| 4. | பதினோராம் நாள் போர் | ... | 81 |
| 5. | யுதிட்டிரரும் ஓடினார் | ... | 85 |
| 6. | கண்ணன் மெச்சினார் | ... | 89 |
| 7. | பகதத்தன் வதம் | ... | 93 |
| 8. | பத்ம வியூகம் | ... | 97 |
| 9. | மேலான வீரன் | ... | 100 |
| 10. | தந்தையை நிகர்த்தவன் | ... | 104 |

11. அபிமன்யு வதம் ... 107
12. எப்படிச் சமாதானம் சொல்வேன்? ... 110
13. தந்தை செய்த சபதம் ... 112
14. அபயம் ... 116
15 தமையன் சொன்ன ஆறுதல் ... 119
16. அரசரைக் காப்பாற்று ... 120
17, துச்சாதனன் ஓட்டம் ... 125
18. பார்த்தசாரதி ... 127
19. சாத்யகி ... 132
20. துரியோதனன் ஓட்டம் ... 136
21. அர்ச்சுனனைப் பார்த்து வா ... 139
22. கர்ணனும் பீமனும் ... 143
23. பூரிசிரவஸ் ... 147
24. ஜயத்ரதன் வதம் ... 152
25. ஆனந்தக் கண்ணீர் ... 157
26. தெய்வத்தின் கட்டளை ... 160
27. பதினைன்காம் நாள் போர் ... 162
28. நாவை அறுப்பேன் ... 164
29. புலியால் தாக்குண்ட யானை ... 167
30. போர் வெறி ... 170
31. கடோத்கசன் போர் செய்யட்டும் ... 173
32. அலாயுதன் ... 176
33. கண்ணன் அடைந்த ஆனந்தம் ... 179
34. யுதிட்டிரர் சொன்ன பொய் ... 186
35. துரோணர் வதம் ... 188
36. மகன் கொண்ட சீற்றம் ... 190
37. வாக்கு வாதம் ... 193
38. நாராயண அத்திரம் ... 196
39. ஏன் பலிக்கவில்லை? ... 198

## கர்ண பருவம்

1. பதினைன்காம் நாள் போர் ... 203
2. கர்ணனும் நகுலனும் ... 205

3. சல்லியன் சம்மதம் ... 207
4. அப சகுனங்கள் ... 211
5. சல்லியன் சொன்ன கதை ... 213
6. வாய்ச் சண்டை ... 216
7. கர்ணனும் யுதிட்டிரரும் ... 218
8. கர்ணனும் பீமனும் ... 221
9. அசுவத்தாமாவின் தோல்வி ... 222
10. படுகளச் சிறப்பு ... 225
11. மலயத்துவஜ பாண்டியன் ... 227
12. அசுவத்தாமாவும் திட்டத்துய்மனனும் ... 229
13. அரசருக்குக் காயம் ... 231
14. யுதிட்டிரரும் கோபித்தார் ... 234
15. கர்ணன் சொன்ன புத்திமதி ... 237
16. தமையனை நிந்தி ... 243
17. காடு செல்வேன் ... 244
18. பதினைந்து கிராமங்கள் ... 246
19. வீர மரணமா? வெற்றியா? ... 249
20. அமிர்தம்போல் சுவைக்கிறது ... 252
21. இரண்டு பிரிவுகள் ... 255
22. நண்பன் சொன்ன புத்திமதி ... 259
23. சிறிது நேரம் பொறுத்துக்கொள் ... 260
24. கர்ணன் வதம் ... 264
25. அரசன் ஆனேன் ... 266

## சல்லிய பருவம்

1. வீர மரணமே மேல் ... 271
2. சேனாதிபதி சல்லியன் ... 273
3. சல்லியன் வதம் ... 276
4. சால்வன் வதம் ... 278
5. போர் வெறி ... 281
6. மூர்க்கனின் போக்கு ... 283
7. சகுனி மாண்டான் ... 285

8. யுயுத்சு ... 288
9. மடுவினுள்ளே ஒளிந்தான் ... 292
10. போர் செய்ய வருக ... 295
11. பீமனும் துரியோதனனும் ... 297
12. பலராமர் ... 302
13. மேலான மரணம் ... 304
14. தரும விரோதம் ... 308
15. பூமாரி ... 310
16. கண்ணன் சொன்ன சமாதானம் ... 313
17. சேனாதிபதி அசுவத்தாமா ... 316

## சௌப்திக பருவம்

1 கோட்டான் கற்றுக் கொடுத்த பாடம் ... 321
2. சிவபெருமான் கொடுத்த கத்தி ... 324
3. படுகொலை ... 327
4. துரியோதனன் முடிவு ... 330
5. புத்திர சோகம் ... 331
6. கொடிய பாணம் ... 334
7. அர்ப்பணுகி அலைவாய் ... 337

## ஸ்திரீ பருவம்

1. வியாசர் சொன்ன ஆறுதல் ... 341
2. எஞ்சிய மூவர் ... 343
3. இரும்புப் பாவை ... 344
4. பாண்டவர்களின் நடுக்கம் ... 346
5. காந்தாரியின் சாபம் ... 349
6. நீர்க் கடன் ... 351

# வியாசர்
## அருளிய
# மகாபாரதம்

பீஷ்ம பருவம்

# வியாசர்

அருளிய

# மகா பாரதம்

## அறம் வெல்லும்

இரு தரப்புச் சேனைகளும் போர்புரியக் குருசேத்திரத்தில் கூடின. எத்தகைய முறைகளைக் கடைப்பிடித்துப் போர் புரிவது என்பது பற்றி, பாண்டவர்களும் கௌரவர்களும் சில விதி முறைகளை ஆரம்பத்தில் வகுத்துக்கொண்டனர்.

போர் நடந்து ஓய்ந்த பின்னர், இரு தரப்பினரும் ஒவ்வொரு நாளும் அன்புடன் கலந்து பழக வேண்டும். தமக்குச் சமதையுள்ளவர்களை மட்டுமே போரில் எதிர்க்க வேண்டும். அநியாயமான முறையில் ஒருவரை ஒருவர் தாக்குவதோ, தப்பி ஓடுபவர்களைத் தாக்குவதோ கூடாது. தேராளி தேராளியுடனும், யானை வீரன் யானை வீரனுடனும், குதிரை வீரன் குதிரை வீரனுடனும், காலாள் காலாளுடனும் போர் செய்ய வேண்டும். எதிரியை நம்பியவன்மீதும், பயந்தவன் மீதும் ஆயுதப் பிரயோகம் செய்யக் கூடாது. போர் செய்து கொண்டு இருக்கும் ஒருவனைப் போரில் கலவாதவன் தாக்கக் கூடாது; கவசம் உடைந்தவன், கவசக்குறைவாக இருப்பவன் ஆயுதம் இழந்தவன், புறங்காட்டி ஓடுபவன் ஆகியோரை ஒரு போதும் கொல்லக் கூடாது. படைக்கலன்களை எடுத்து வந்து கொடுப்போர், பேரிகை அடிப்போர், சங்கம் ஊதுவோர் ஆகியவர்கள்மீதும் ஆயுதப் பிரயோகம் செய்யக் கூடாது.

இத்தகைய விதிமுறைகளைப் போரில் கடைப்பிடிப்பது என இரு தரப்பினரும் முடிவு செய்துகொண்டனர்.

கிழ்த்திசையிலும் மேல்திசையிலும் போருக்கு ஆயத்த மாக இரு தரப்புச் சேனைகளும் திரண்டு நிற்பதை வியாச மக ரிஷி அறிந்தார். அவர் திருதராட்டிர மன்னனிடம் வந்து, "அரசே! உன் புதல்வர்களும், மற்ற அரசர்களும் போரில் அழியப் போகிறார்கள். கால மாறுபாட்டினால் நடக்க இருக்கும் இந்தப் போர் குறித்து நீ கவலைகொள் ளாதே. போர் நடப்பதைக் காண விரும்பின், உனக்கு நான் கண் பார்வையைத் தருகிறேன்" என்று சொன்னார்.

"மகரிஷியே! உலகினர்களின் அழிவைக் காண நான் விரும்பவில்லை. போர் நடப்பைப்பற்றி, செவிப்புலன் மூலம் தெரிந்துகொள்ள நான் விரும்புகிறேன். அதற்குத் தாங்கள் அருள் புரியவேண்டும்" என்று வியாசரைத் திருதராட்டிர மன்னன் வேண்டிக்கொண்டான்.

அதற்கு வியாச மகரிஷி உடன்பட்டார். "அரசே! சஞ்சய னுக்கு நான் ஞானக் கண்ணைக் கொடுக்கிறேன். அதன் மூலம் அறிந்து, போர் நிகழ்ச்சிகளை, சஞ்சயன் உனக்குச் சொல்வான்; தெய்வச் செயலால் நடக்கவிருக்கும் தவிர்க்க இயலாத, இந்தப் போரைக் குறித்து நீ கவலைகொள்ளாதே. எங்கே தருமம் இருக்கிறதோ, அங்குதான் ஜெயம் ஏற்படும்" என்று சொல்லி, வியாச மகரிஷி திரும்பிவிட்டார்.

திருதராட்டிரன் சிந்தனையில் ஆழ்ந்தான்; அடிக்கடி பெருமூச்சுவிட்டான். "சஞ்சயா! பூமியின் பொருட்டாய், பொறாமை வயப்பட்டு, அரசர்கள் சண்டையிட்டுக்கொள் ளும் இந்தப் போரைப்பற்றி எனக்குச் சொல்" என்று

சஞ்சயன் சொல்லுகிறான்:

இரு தரப்புச் சேனைகளும் அணிவகுத்து நின்றன. சகல தருமங்களையும் அறிந்த பீஷ்மர், கௌரவர் தரப்புச் சேனையினரை உற்சாகப்படுத்தினார்.

"அரசர்களே! சொர்க்கத்துக்குச் செல்லும் பெரிய வாயில் இதோ உங்களுக்காகத் திறந்து இருக்கிறது. இந்திர னோடும் பிரம்மாவோடும் சேர்ந்து வாழும் பெரும் பேறு உங்களுக்குக் கிட்டப்போகிறது. உங்கள் மூதாதையரும் முன்னோரும் கடைப்பிடித்த நெறியில் நீங்களும் செல்லுங்கள். வெற்றி அல்லது சொர்க்கம். இந்த இரண்டில் ஒன்று இதோ உங்கள் முன் நிற்கிறது. நிரந்தரமான உங்கள் குல தருமத் தைக் கடைப்பித்துப் பெருமை அடையுங்கள். கவலையை ஒழித்து, மகிழ்ச்சியுடன் போர்புரியுங்கள். அதன் மூலம்

பெருமையையும் மேன்மையையும் அடையுங்கள். யயாதி, மாந்தாதா, நகுஷன் முதலியோர் போர்புரிந்து பெருமை அடைந்தனர். நோயுற்று வீட்டில் மடிவது அரச குலத்தில் பிறந்தவனுக்குப் பெருமை அளிக்காது; ஆயுதத்துக்கு இறை யாவதே அவனுக்கு ஏற்பட்ட மேலான தருமம்."

பீஷ்மர் இவ்வாறு சொன்னதும், அரசர்கள் ஆரவாரம் செய்தனர். திசைகள் அதிர முழக்கம் செய்துகொண்டு, உற்சாகத்துடன் போருக்குக் கிளம்பினர். கொடிகள், குடைகள், குதிரைகள், யானைகள், காலாட் படையினர் ஆகியவற்றால் அந்தப் படை பொலிவுற்றுத் திகழ்ந்தது.

சேனையின் முன் அணியில் பீஷ்மர் நின்றார். அவருடைய கொடியில் பனை மரமும், ஐந்து நட்சத்திரங்களும் சூரியன் போல் பிரகாசித்தன. சிம்மவால் வடிவம் பொறித்த அசுவத் தாமா கொடி காற்றில் அசைந்தாடிற்று. சல்லியன் முதலிய ஏழு வீரர்கள் அசுவத்தாமாவை முன்னிட்டுக்கொண்டு போருக்குக் கிளம்பினார்கள். துரோணருடைய பொன்னிறக் கொடியில் கமண்டலுவும் வில்லும் காட்சி தந்தன. கிருப ருடைய கொடியில் காளை மாடும், ஜயத்ரதன் கொடியில் பன்றியும் எழுதப்பட்டு இருந்தன. அரவக் கொடியைப் பறக்கவிட்டுக்கொண்டு, துரியோதனன் புறப்பட்டான். அவனைத் தொடர்ந்து, பல்லாயிரக்கணக்கான அரசர்கள் சென்றார்கள்.

போருக்கு அணிவகுத்து, கௌரவ சேனை தயாராக நிற்ப தைக் கண்ட யுதிட்டிரன், தன் தம்பி அர்ச்சுனனை நோக்கி, "தன் படை, பகைவனின் படையைக் காட்டிலும் குறைந்த எண்ணிக்கையில் இருப்பின், தன் படையை ஒருசேரக் குவித் துப் போர்புரிய வேண்டும். எண்ணிக்கை அதிகம் இருப்பின், பரவலாக நிறுத்திப் போர்செய்ய வேண்டும்" என்று பிருகஸ்பதி கூறி இருக்கிறார். நமது படை எண்ணிக்கையில் குறைவு. ஆகையால், அதற்கு ஏற்றபடி ஊசிமுக அமைப் பில் நமது படையை அணிவகுத்து நிறுத்து" என்று சொன்னார்.

"அரசர்களில் சிறந்தவரே! வஜ்ரம் என்னும் உறுதி யுள்ள வியூகத்தை இப்பொழுது நான் அமைக்கிறேன். பகைவர்களால் தாக்குப் பிடிக்க முடியாத பீமன் முன்னே செல்வார். இந்திரனை அடுத்து, தேவர்கள் பயமின்றி இருப் பதைப்போல, நாமும் பீமனை அடுத்துப் பயமின்றி இருப் போம்" என்று பதில் சொன்னான் அர்ச்சுனன்.

அர்ச்சுனன் சொன்ன பதிலைக் கேட்டு, வீரர்கள் உற்சாகம் அடைந்து அவனைப் புகழ்ந்தனர்.

எதிர்அணி வகுத்து, கௌரவப் படையை அர்ச்சுனன் எதிர்க்க முனைந்தான். பீமசேனன், திட்டத்துய்மனன், நகுலன், சகதேவன் ஆகியோர் முன் அணியில் நின்றார்கள்; ஓர் அக்குரோணி சேனையுடன் விராடன் பக்கவாட்டில் நின்றான். அபிமன்யுவும், திரௌபதி புதல்வர்களும் பின்புறத்தில் நின்றார்கள். அர்ச்சுனனைத் துணைகொண்டு, பீஷ்மரைக் கொல்ல, சிகண்டி முனைப்பாக நின்றான். யானைப்படை நடுவே யுதிட்டிரர் நின்றார். ஓர் அக்குரோணி சேனையுடன் துருபத மன்னன் பின் அணியில் நின்றான்.

அர்ச்சுனனுடைய தேரில் வானரக் கொடி கம்பீரமாகப் பறந்தது. வஜ்ர வியூகத்தை வகுத்து, பாண்டவ சேனையை அர்ச்சுனன் பாதுகாத்தான். எல்லாத் திக்குகளிலிருந்தும் இடிமுழக்கம் போன்ற ஓசைகள் உண்டாயின. எங்கு பார்த்தாலும் ஒரே புழுதி மயம்.

போர்புரிவதற்கு இரு தரப்புச் சேனைகளும் அதி உற்சாகத்துடன் நின்றன; கௌரவர்கள் மேற்கு முகமாக நின்றார்கள்; பாண்டவர்கள் கிழக்கு முகமாக நின்றார்கள். கௌரவர்களின் சேனை, அசுரர்களின் சேனையைப்போல் இருந்தது; பாண்டவர்களின் சேனை, தேவர்களின் சேனையைப் போல் இருந்தது.

வந்திகளும் மாகதர்களும் துதிபாட, துரியோதனன் மதப் பெருக்குடன் கூடிய யானைமீது வீற்றிருந்தான். வெள்ளைத் தலைப்பாகை அணிந்து, வெள்ளைக் குதிரை பூட்டிய தேரில் ஏறி, வெள்ளை நிற வில்லைக் கையில் பிடித்தவராய், சேனையை நடத்திக்கொண்டு பீஷ்மர் முன்னே வந்தார். ஆசாரியர் துரோணர் சிவப்புக் குதிரை பூட்டிய தேரில் வந்தார்.

போருக்குத் தயாராக நிற்கும் கௌரவர்களின் பெருஞ் சேனையைக் கண்டு, யுதிட்டிரர் பெரிதும் வருந்தினார். பீஷ்மரால் அணிவகுக்கப்பட்டுள்ள கௌரவ சேனையை உடைக்கக் கூடாது; உடைக்கத் தகாது என்று அவர் கருதினார். ஆகவே, தனஞ்சயனை நோக்கி, "தம்பி! பாட்டனார் பீஷ்மர் போர்புரிய வந்து தயாராக நிற்கிறார். அவர் வகுத்து இருக்கும் வியூகத்தை ஒருவராலும் உடைக்க முடியாது. இருந்தும் நாம் போருக்கு வந்துவிட்டோம். நமக்கு வெற்றி எவ்வாறு கிட்டும்?" என்று கவலையுடன் கேட்டார்.

பகைவரை வதைப்பவனை அர்ச்சுனன், "வேந்தே! பண்பும் திறமையும் வாய்ந்தவர்கள் சிறிய தொகையினராய் இருப்பினும், பெரும் பெரும் சேனைகளையும் அவர்களால் தோற்கடிக்க முடியும். சத்தியம், தருமம், விடாமுயற்சி இவற்றையுடையவர்கள் ஒருபோதும் தோல்வியடையார். எங்கே தருமம் இருக்கிறதோ, அங்கே வெற்றி நிச்சயம் உண்டு! எங்கே வாசுதேவர் இருக்கிறாரோ, அங்கே வெற்றி ஏற்பட்டே தீரும்!" என்று பதில் சொன்னான்.

## ஆசி பெற்றார் !

இதன் பிறகு பாண்டவர்கள் அணிவகுப்பு ஏற்பாடு களைச் செய்தார்கள். சேனை முன்பு சஞ்சரிக்கிற திட்டத் துய்மனனுக்குப் பீமசேனன் பாதுகாப்பாக இருந்தான். யானைப் படைகள் நடுவே, யுதிட்டிரர் தேரில் இருந்தார். மகரிஷிகள் துதிபாடி அவரை உபசரித்தார்கள்; ஆசி கூறினார்கள்.

யுதிட்டிரர் பழங்கள், மலர்கள், ஆடைகள், பசுக்கள் ஆகியவற்றை அந்தணர்களுக்கு வழங்கினார். பிறகு போர்க் களத்தை நாடிப் புறப்பட்டார்.

வெண்மையான குதிரைகள் பூட்டிய அர்ச்சுனனுடைய தேரானது, போர்க்களத்தில் சூரியனைப்போல் பிரகாசித்தது. வானரக் கொடி பறக்கிற அந்தத் தேரில், காண்டீவத்தைப் பிடித்துக்கொண்டு அர்ச்சுனன் வீற்றிருந்தான்; அந்தத் தேரைக் கண்ணன் சாரத்தியம் செய்தார்.

துரியோதனனுடைய சேனை முழுவதையும் அழிக்கப் பீமன் முனைப்புடன் இருந்தான். கௌரவ சேனையினர் அவனைக் கண்டு கிடுகிடுத்து நடுங்கினர்.

சாரத்தியம் செய்யும் கண்ணபிரான் அர்ச்சுனனை நோக்கி, "அர்ச்சுனா! முந்நூறு அசுவமேத யாகங்களைச் செய்த பீஷ்மர் அதோ சேனையின் நடுவே நிற்கிறார். சேனையை அழித்து, பீஷ்மரை எதிர்க்க முற்படு" என்று சொன்னார்.

மேலும் அவர் சொன்னார்: "அர்ச்சுனா! புயவலி மிக்க வனே! போர்செய்வதற்கு முன்னர், துர்க்கையை நீ துதி செய்; அதனால் நீ வெற்றிபெறுவாய்!"

"ஆகட்டும்" என்று சொல்லித் தேரிலிருந்து இறங்கிக்

கொண்டு, கைகளைக் குவித்துத் துர்க்கையை அர்ச்சுனன் துதி செய்தான்.

"பக்தர்களுக்கு நன்மை புரிபவளே! வெற்றியைக் கொடுப்பவளே! மகிஷாசூரனை வதம் செய்தவளே! போரில் விருப்பம் உள்ளவளே! உன்னை வணங்குகிறேன் மகா தேவி! தூய மனத்தினால் உன்னை வணங்குகிறேன். அருள்செய்து எனக்கு நீ வெற்றியைக் கொடு" என்று சொல்லி, துர்க்கையை அர்ச்சுனன் துதித்தான்.

அவனுடைய பக்தியை அறிந்த துர்க்கை, அர்ச்சுனனுக்குக் காட்சி அளித்தாள். எதிரில் ஆகாயத்தில் நின்றபடி, "பாண்டவ! சிறிது காலத்தில் உன் பகைவர்களை நீ ஜயிப்பாய். நாராயணருடைய உதவி இருப்பதனால், இந்திரனாலும் உன்னை வெல்ல முடியாது" என்று சொல்லி மறைந்தாள்.

தேவியின் வார்த்தைகளைச் செவிமடுத்த அர்ச்சுனன் தனக்கே வெற்றி என்று கருதினான்.

பிறகு தனக்கு மிகவும் பிடித்த தேரில் ஏறிக்கொண்டான்; கிருஷ்ணனும் அவனும் தேரில் இருந்துகொண்டு, சங்கங்களை முழக்கினார்கள்.

* * *

இவ்வாறு யுத்த விவரத்தைத் திருதராட்டிர மன்னனுக்குச் சஞ்சயன் சொல்லி வந்தபோது, திருதராட்டிர மன்னன் அவனிடம், "சஞ்சயா! போர் செய்யும் எண்ணத்துடன் குரு க்ஷேத்திரத்தில் ஒருங்குசேர்ந்திருக்கும் பாண்டவர்களுக்கும் நம்மவர்களுக்கும் இடையில் என்ன நடந்தது?" என்று கேட்டான்.

"அரசே! துரியோதனனுக்கு உற்சாகத்தை உண்டு பண்ணும் எண்ணத்துடன், பீஷ்மர் தனது சங்கத்தை முழக்கினார். பேரிகைகள், முரசங்கள், துந்துபிகள், கொம்புகள் யாவும் சேர்ந்து முழங்கின.

"அர்ச்சுனனும் கண்ணனும் தங்கள் தங்கள் சங்கங்களை முழக்கினார்கள். பாஞ்சசன்யம் என்னும் சங்கத்தைக் கண்ணனும் தேவதத்தம் என்னும் சங்கத்தைப் பார்த்தனும் ஊதினார்கள். அநந்தவிஜயம் என்னும் சங்கத்தைப் பீமசேனன் ஊதினான். யுதிட்டிரர், சிகண்டி, நகுலன், சகதேவன், விராடன், சாத்யகி, திட்டத்துய்மனன் ஆகியோரும் தங்கள் தங்கள் சங்கங்களை முழக்கினார்கள். கௌரவர்கள் போருக்குத் தயாராக நிற்பதைக் கவனித்த அர்ச்சுனன்

வில்லைக் கையில் எடுத்துக்கொண்டு, "அச்சுதரே! இரண்டு படைகளுக்கும் இடையில் எனது தேரைச் செலுத்தி நிறுத்தும். தீய நடத்தையுள்ள துரியோதனனுக்கு உதவிபுரிய யார் யார் வந்திருக்கிறார்கள் என்பதை நான் பார்க்கட்டும்" என்று சொன்னான்.

அதன்படி அச்சுதர் தேரை, பீஷ்மர், துரோணர், அரசர்கள் ஆகியோருக்கு முன்னிலையில் செலுத்தி நிறுத்தி, "அர்ச்சுனா! இங்கே ஒருங்கு கூடியிருக்கிற கௌரவர்களைப் பார்" என்று சொன்னார்.

பார்த்தன் போர்க்களத்தைக் கவனித்தான். தந்தையர், பாட்டன்மார்கள், ஆசாரியர்கள், உறவினர்கள், நண்பர்கள் ஆகியோர் போர்புரிய அங்கே ஒருங்கு திரண்டு நிற்பதைக் கண்டான். அவனுடைய உள்ளத்தில் கருணை உணர்ச்சி பொங்கியது; துயரம் மேலிட்டு நின்றது. அவன் கிருஷ்ணனை நோக்கி, "கிருஷ்ணா! போர்புரிய இங்கே திரண்டு இருக்கிற உற்றார் உறவினர்களைக் கண்டபொழுது எனது அவயவங்கள் சோர்வடைகின்றன. வாய் உலர்ந்து போகிறது. உடம்பில் நடுக்கமும் மயிர்க் கூச்சமும் உண்டாகின்றன. காண்டீவம் கையினின்று நழுவுகிறது. என்னால் நிற்பதற்குக்கூட முடியவில்லை. போர் செய்து சுற்றங்களைக் கொன்று குவிப்பதில் நன்மை எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. உற்றார் உறவினர்களைக் கொன்று இராஜ்ய போகத்தை அடைவதனால் விளையும் நற்பயன் யாது? ஒன்றும் இல்லை. ஆகையால் நான் போர் புரிய விரும்பவில்லை" என்று சொல்லி, வில்லையும் அம்பையும் கீழே வைத்துவிட்டுத் தேரின் நடுவே உட்கார்ந்தான்.

கண் கலங்கித் துயருற்று வருந்தும் அர்ச்சுனனுக்கு, கிருஷ்ணன் தக்க காரணங்களை எடுத்துக்காட்டி, அவனுடைய மனக் கலக்கத்தை அகற்றினார்.

பகவான் கூறிய அறிவுரைகளை—பகவத் கீதையை—கேட்டதனால் ஐயங்கள் அகன்று, அர்ச்சுனன் உற்சாகம் அடைந்தான். வில்லையும் காண்டீவத்தையும் கையில் எடுத்துக் கொண்டான்.

இதைக் கண்ட மற்ற வீரர்கள் ஆரவாரம் செய்து, தங்கள் தங்கள் சங்குகளை எடுத்து முழக்கினார்கள். பேரிகைகளும் முரசுகளும் எக்காளங்களும் முழங்கின. இதனால் எங்கும் பெருத்த ஓசை நிலவியது.

கந்தர்வர்கள், தேவர்கள், சித்தர்கள் அனைவருமே இந்தப் போரைக் காணத் திரண்டுவிட்டார்கள்.

சமுத்திரம்போல் திரண்டு நிற்கும் இரு தரப்புச் சேனைகளையும் வீரரும் தருமசீலருமான யுதிட்டிரர் கவனித்தார். பிறகு தாம் அணிந்திருந்த கவசத்தைக் கழற்றித் தேர்த் தட்டில் வைத்தார். ஆயுதங்களையும் வைத்துவிட்டுத் தேரிலிருந்து இறங்கினார். கைகளைக் குவித்துக்கொண்டு, மௌனமாகத் தம் பாட்டனார் பீஷ்மரை நாடி நடந்தார்.

தன் தமையன் இப்படிச் செல்வதைக் கவனித்த அர்ச்சுனன், தானும் தேரிலிருந்து இறங்கிக்கொண்டு, அவரைப் பின்தொடர்ந்தான். வாசுதேவரும் பின்தொடர்ந்தார். மற்ற அரசர்களும் அதுபோலவே, யுதிட்டிரரைப் பின் தொடர்ந்தார்கள்.

அப்போது அர்ச்சுனன் அவரிடம், "அரசே! எங்களை விட்டுவிட்டு, பகைவர்களை நாடிக் கிழக்குமுகமாகக் காலால் நடந்து செல்வதன் நோக்கம் யாது?" என்று வினவினான்.

"அரசே! கவசமின்றியும் ஆயுதமின்றியும் பகைவர்கள் மத்தியில் நீர் செல்லுவதன் நோக்கம் யாது?" என்று கேட்டான் பீமசேனன்.

தம் தம்பியர் கேட்ட கேள்விகளுக்கு மறுமொழி கூறாமல் மௌனமாக யுதிட்டிரர் சென்றுகொண்டிருந்தார்.

அப்போது வாசுதேவர் சிரித்துக்கொண்டே, "அரசரின் கருத்தை நான் அறிவேன். பீஷ்மர், துரோணர், சல்லியன், கிருபர் முதலிய பெரியோர்களிடம், போர்செய்யத் தமக்கு அனுமதியளிக்கும்படி வேண்டப் போகிறார். 'பெரியோரின் அனுமதியின்றி யுத்தத்தைத் தொடங்குபவன், பெரியோரின் நிந்தனைக்கு ஆளாவான்' என்று நூலகள் கூறுகின்றன" என்று சொன்னார்.

இது சமயம் கௌரவ சேனையில் பெருத்த ஆரவாரம் உண்டாயிற்று. துரியோதனனைச் சேர்ந்தவர்கள், "யுதிட்டிரனுக்குப் பயம் அதிகரித்துவிட்டது. அதனால்தான் பீஷ்மரிடம் தஞ்சம் அடையத் தன் தம்பியர்களுடன் வருகிறான், யுதிட்டிரன். அரச குலத்தில் பிறந்தவன் செய்யக் கூடிய செய்கையா இது? இவன் நடத்தை அரச குலத்துக்குக் களங்கத்தை உண்டு பண்ணுவதாய் இருக்கிறது. அர்ச்சுனனும் பீமனும் இருக்கும்போது இவன் ஏன் இப்படிப் பயப்படுகிறான்?" என்று பேசி, யுதிட்டரரை அவர்கள் நிந்தித்தனர்.

உற்சாக மிகுதியினால், கௌரவ சேனையிலுள்ளவர்கள் தங்கள் தங்கள் ஆடைகளை எடுத்து வீசி, மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டனர்.

இது சமயம் ஆயுதங்கள் ஏந்தி நின்ற படையினூடே புகுந்து, யுதிட்டிரர் தம் தம்பியர்களுடன் பீஷ்மர் இருக்கும் இடத்தை அடைந்தார். அவருடைய இரு பாதங்களையும் பற்றிக்கொண்டு, "வெல்ல முடியாத வீரரே! உம்முடன் நாங்கள் யுத்தம் செய்ய இருக்கிறோம். அனுமதி தந்து, எங்களுக்கு ஆசி சொல்லும்" என்று வேண்டினார்.

"பாண்டவனே! குழந்தாய்! என்னை அடைந்து என் அனுமதியை நீ கோரியது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். உனக்கு வெற்றி கிட்டும். நீ விரும்புவதை என்னிடம் நீ வரமாகக் கேட்கலாம். நீ நடந்துகொள்ளும் முறையால் உனக்குத் தோல்வி உண்டாகாது" என்று சொல்லி, பீஷ்மர் யுதிட்டிரரை வாழ்த்தினார்.

"புயவலி மிக்கவரே! துரியோதனன் பொருட்டாக நீர் போர் செய்வதை நான் தடுக்க விரும்பவில்லை. போரில் வெல்ல முடியாத உம்மை நாங்கள் எவ்வாறு வெல்வோம்? உம்மை வெல்வதற்கு உரிய உபாயம் யாது?" என்று கேட்டார் யுதிட்டிரர்.

"குழந்தாய்! என்னை வெல்லவல்லவன் ஒருவனும் இல்லை. எனக்கு உரிய மரண காலமும் வரவில்லை. மீண்டும் வந்து என்னிடம் கேள்" என்று கூறினார் பீஷ்மர்.

பீஷ்மர் இப்படிச் சொன்னதும், யுதிட்டிரர் மீண்டும் அவரை வணங்கினார். பிறகு, தம் தம்பியர்களையும் அழைத்துக்கொண்டு துரோணருடைய தேரை நோக்கிப் புறப்பட்டார். அவரை அடைந்து, வலம்வந்து வணங்கி, "அந்தணரே! உமது அனுமதிபெற்று நாங்கள் போர்செய்ய விரும்புகிறோம். பகைவர்களை நாங்கள் வெல்வதற்கு உரிய வழிகள் யாவை? கபடமின்றி இதை எங்களுக்குச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார்.

"யுதிட்டிரா! நீ வந்து என்னை இப்படிக் கேட்டதற்காக மகிழ்ச்சி அடைகிறேன். போர் புரிவதற்கு உனக்கு நான் அனுமதி கொடுக்கிறேன். நீ வெற்றி பெறுவாய் நீ விரும்புவதை என்னிடம் வரமாகக் கேட்கலாம். மனிதன் பொருளுக்கு அடிமைப்பட்டவன். பொருள் யாருக்கும் அடிமைப் பட்டதன்று. கௌரவர்கள் சார்பாக யுத்தம் செய்யாமல் என்னால் இருக்க முடியாது. வேறு எதை வேண்டுமானாலும் என்னிடம் வரமாகக் கேட்கலாம்" என்று சொன்னார் துரோணர்.

"அந்தண சீலரே! எனக்கு நன்மையும் வெற்றியும் கிட்ட

வேண்டும் என்று ஆசீர்வதியுங்கள்" என்று வேண்டினார் யுதிட்டிரர்.

"அரசனே! உனக்கு நான் அனுமதி தந்தேன். பகைவர்களை நீ வெல்வாய்; எங்கே தருமம் இருக்கிறதோ அங்கு கிருஷ்ணன் இருப்பார்; எங்கே கிருஷ்ணன் இருக்கிறாரோ, அங்கு வெற்றி நிச்சயம். நீ சென்று யுத்தம் செய். உனக்கு வெற்றி கிட்டும். மேலும் உனக்கு என்ன வேண்டுமோ கேள்" என்று சொல்லி வாழ்த்தினார் துரோணர்.

"அந்தணரே! பகைவர்களால் வெல்ல முடியாத உம்மை நாங்கள் எவ்வாறு வெல்வோம்? அதற்குரிய வழி யாது?" என்று கேட்டார் யுதிட்டிரர்.

"அரசனே! நம்பத்தக்க மனிதனிடமிருந்து, எனக்குப் பிரியமில்லாத செய்தி ஒன்றை நான் கேட்க நேர்ந்தால், யுத்தம் செய்துகொண்டிருந்தாலும்கூட, அப்போது ஆயுதங்களை நான் கீழே எறிந்துவிடுவேன். இது முற்றும் உண்மை" என்று தெரிவித்தார் துரோணர்.

விவரத்தைத் தெரிந்துகொண்டதும் துரோணரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு, யுதிட்டிரர் கிருபரிடம் சென்றார். யுத்தம் செய்வதற்கு அவரிடம் அனுமதி பெற்றுக் கொண்டு, சல்லியனிடம் போனார்.

அவனை வலம்வந்து வணங்கிய பின்னர், "யாராலும் வெல்லமுடியாத வீரரே! போர்புரிவதற்கு எங்களுக்கு அனுமதி கொடுத்து, எங்களை ஆசீர்வதியும்" என்று வேண்டினார் யுதிட்டிரர்.

அதற்குச் சல்லியன், "அரசே! என்னை அணுகி நீ போர் செய்ய அனுமதி கோரியதால், நான் மகிழ்ந்தேன். உனக்கு வெற்றி உண்டாகும். உனது விருப்பத்தை என்னிடம் வரமாகக் கேள்" என்று சொன்னான்.

"அரசே! போர் நடக்கும் காலத்தில் கர்ணனுக்கு உள்ள உற்சாகத்தை நீர் தளரச் செய்ய வேண்டும். இதை நான் உம்மிடம் வரமாக வேண்டுகிறேன்" என்று வேண்டிக்கொண்டார் யுதிட்டிரர்.

அதற்கு இசைந்து, சல்லியன் அனுமதி கொடுத்தான். யுதிட்டிரர் அவனிடம் விடை பெற்றுக் கொண்டு, படைகளை விட்டுத் தம் தம்பியர்களுடன் வெளிப்போந்தார்.

இது சமயம் யுத்தகளத்தில் கர்ணனை நாடி வாசுதேவர் சென்றார். அவனிடம், "கர்ணா! பீஷ்மரிடம் உள்ள வெறுப்

பினல் நீ போர்செய்யப் போவதில்லை என்று கேள்விப் பட்டேன். பீஷ்மர் வதம் ஏற்படும்வரையில் நீ பாண்டவர்களுடன் இரு. அதன் பின்னர்ப் போர்புரிவது அவசியம் என்று உனக்குத் தோன்றினல் துரியோதனன் கட்சியில் சேர்ந்து நீ போர் செய்" என்று சொன்னர்.

அதற்குக் கர்ணன், "கேசவரே! துரியோதனன் கருத்துக்கு மாறுபட என்னல் நடக்க முடியாது. அவனுக்காக என் உயிரையும் கொடுக்க நான் தயாராக இருப்பவன். இதை நீர் தெரிந்துகொள்ளும்" என்று பதில் சொன்னன்.

இதன் பின்னர், யுதிட்டிரர், சேனையில் நடுவில் நின்றுகொண்டு, "எங்கள் தரப்பில் சேர விரும்புபவர்கள் இப்பொழுது எங்களுடன் சேர்ந்துகொள்ளலாம்" என்று உரக்கக் கூவினர்.

அப்போது, திருதராட்டிரன் புத்திரர்களில் ஒருவனை யுயுத்சு என்பவன், "நான் உங்கள் தரப்புக்கு வந்து கௌரவர்களை எதிர்த்து உங்களுக்காகப் போர்புரிகிறேன்" என்று சொல்லி, துந்துபி வாத்தியத்தை முழக்கிக்கொண்டு, பாண்டவர்களின் சேனையை அடைந்தான்.

## முதல் நாள் போர்

கௌரவர்களின் போர்க்களத்தைவிட்டு வெளிப்போந்த யுதிட்டிரர், தங்கமயமான கவசத்தை எடுத்து மகிழ்ச்சியுடன் அணிந்துகொண்டார். அவரைச் சேர்ந்த வீரர்கள் அனைவரும் தங்கள் தங்கள் தேர்களில் ஏறிக்கொண்டார்கள்.

பிறகு, கௌரவர்களை எதிர்ப்பதற்கு விரைந்தார்கள். துந்துபிகள், பேரிகைகள் ஆகியவற்றை முழக்கினர்கள். பாண்டவர்கள் போருக்குத் தயாராகிவிட்டதை அறிந்த திட்டத்துய்மனன் முதலியோர் மகிழ்ச்சி அடைந்தார்கள். பாண்டவர்களுடைய நடத்தையையும் சீலத்தையும் பெரிதும் மெச்சினர்கள்.

பீஷ்மரை முன்னிட்டுக்கொண்டு, துச்சாதனன் முதலானவர்கள், கௌரவர்கள் தரப்பில் போருக்கு ஆயத்தமானர்கள். பீமனை முன்னிட்டுக்கொண்டு, பாண்டவர்களைச் சார்ந்தோர் போருக்குக் கிளம்பினர்கள்.

இரு தரப்பிலிருந்தும் செருப்பறைகள் முழங்கின. யானைகள் பிளிறின. குதிரைகள் கனைத்தன. இந்த ஓசைகளை

எல்லாம் கீழ்ப்படுத்திக்கொண்டு, பீமசேனன் கம்பீரமாகக் கர்ஜித்தான்.

பீமனுடைய இடி முழக்கம்போன்ற கர்ஜனையைச் செவி மடுத்த படைவீரர்கள் பயந்து போனார்கள். யானைகளும் குதிரைகளும் ஜலமலங்களைப் பெருக்கின. துரியோதனன், துச்சாதனன், விகர்ணன் முதலியோர் நாற்புறமும் சூழ்ந்து கொண்டு பீமசேனனை எதிர்த்தார்கள். அபிமன்யு, நகுலன், சகதேவன், திட்டத்துய்மனன் ஆகியோரும் கௌரவர்களை எதிர்த்தார்கள்.

முதல் நாள் நடந்த போரில் ஒருவனாவது புறங்காட்டி ஓடவில்லை.

பயங்கரமான அன்றைய தினம், காலையில் போர் ஆரம்பம் ஆயிற்று. வாத்தியங்களின் முழக்கமும், அம்பை விடுவதனால் ஏற்படுகிற ஓசையும், குதிரைகளின் கனைப்பும், யானைகளின் பிளிறலும் எங்கும் உண்டாயின. மிகுந்த துணிச்சலுடன் கௌரவர்கள் பாண்டவர்களை எதிர்த்தார்கள்.

பீஷ்மர் அர்ச்சுனனை எதிர்த்து வந்தார். தனது பிரசித்த மான காண்டீவத்தை எடுத்துக்கொண்டு, அர்ச்சுனனும் பீஷ்மரை எதிர்த்தான்.

யுதிட்டிரர் மத்ர நாட்டு மன்னன் சல்லியனை எதிர்த்தார். சல்லியன் அவருடைய வில்லை இரண்டாகத் துண்டித்துவிட்டான். சடுதியில் வேறு ஒரு வில்லை எடுத்துக் கொண்டு, யுதிட்டிரர் அவனுடன் போர்புரிந்தார்.

திட்டத்துய்மனன் துரோணரை எதிர்த்தான். துரோணர் மிகுந்த கோபமுற்று, திட்டத்துய்மனனின் வில்லை மூன்று துண்டாக ஆக்கினார். மற்றொரு பாணத்தை அவனுடைய உடலில் பாயும்படி எய்தார். இருவருக்கும் இடையில் பயங்கரமாகப் போர் நடந்தது.

சிகண்டி, துரோண புத்திரரான அசுவத்தாமாவை எதிர்த்தான். அசுவத்தாமாவும் சிகண்டியை எதிர்த்தான்.

விராட மன்னன், வீரன் பகதத்தனை எதிர்த்தான். இருவரும் சரமாரி பொழிந்து, ஒருவரை ஒருவர் கடுமையாகத் தாக்கினார்கள்.

பகைமை உணர்ச்சியும் கர்வமும் உள்ள துரியோதனனைப் பீமசேனன் எதிர்த்தான். சரமாரிகளைப் பொழிந்து இருவரும் கடுமையாகப் போர் செய்தார்கள்.

துச்சாதனன் நகுலனை எதிர்த்தான். அவனுடைய

பாணங்களையும், வில்லையும் கொடியையும் அட்டகாசம் செய்து நகுலன் அறுத்துவிட்டான்.

துருபத மன்னனும் சிந்து நாட்டு மன்னன் ஜயத்ரதனும் உள்ளக் கிளர்ச்சியுடன் ஒருவரை ஒருவர் தாக்கினார்கள்.

இந்த யுத்தம் நடந்தபோது, ஆரம்பத்தில் சிறிது நேரம் பார்ப்பதற்கு இனிமையாக இருந்தது. பிறகு பைத்தியம் பிடித்ததுபோல் ஆயிற்று. என்ன நடக்கிறது என்றே யாருக்கும் புரியவில்லை.

தகப்பனுக்கு மகனைத் தெரியவில்லை; மகனுக்குத் தகப்பனைத் தெரியவில்லை. அண்ணனுக்குத் தம்பியைத் தெரியவில்லை; தம்பிக்கு அண்ணனைத் தெரியவில்லை; மாமனுக்கு மருமகனைத் தெரியவில்லை; மருமகனுக்குத் மாமனைத் தெரியவில்லை. நண்பனுக்கு நண்பனைத் தெரியவில்லை. இப்படி வெறிபிடித்த ஒரு சூழ்நிலையில் பாண்டவர்களும் கௌரவர்களும் போர்புரிந்தார்கள்.

ஒருவரை ஒருவர் அம்புகளால் அடித்துக்கொண்டார்கள். கத்திகளால் வெட்டிக்கொண்டார்கள். கோடரிகளால் பிளந்தார்கள். சிலரை யானைகள் நசுக்கித் துவைத்தன. தேர் உருளைகள் ஊர்ந்து, அரைபட்டுச் சிலர், உயிர் நீத்தார்கள்.

எதிர்த்து நிற்க முடியாமல் சிலர், உறவினர்களைக் கூவி அழைத்தார்கள். அண்ணனை அழைப்பது, தந்தையை அழைப்பது, மாமனை அழைப்பது, நண்பனை அழைப்பது போன்ற ஓலங்கள் போர்க்களத்தில் எங்கும் எழுந்தன.

சிலர் தொடைகள் வெட்டப்பட்டுக் கிடந்தார்கள். சிலர் தலை அறுபட்டுக் கிடந்தார்கள். சிலர் விலாப்புறங்கள் பிளக்கப்பட்டுக் கிடந்தார்கள். சிலர் தாகத்தால் அலறினார்கள். ஒருவரை ஒருவர் நிந்திப்பதில் சிலர் மும்முரமாய் இருந்தார்கள்.

இவ்வாறு பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் இடையில் போர் நடந்தது. பீஷ்மரின் ஆற்றலைத் தாங்க இயலாமல், பாண்டவர்களின் படை பெரும் பீதியை அடைந்தது.

முற்பகல் முழுவதும் இவ்வாறு போர் நடந்தது. துரியோதனன் தூண்ட, கிருபர், சல்லியன் முதலானோர் பீஷ்மருக்குப் பக்க பலமாகச் சென்று அவரைப் பாதுகாத்தார்கள்.

இவர்களை அழைத்துக்கொண்டு, பாண்டவர்களின் சேனையைப் பீஷ்மர் கலக்கினார். தேரில் செல்லும்போதே யானை

களையும் வீரர்களையும் அடித்து வீழ்த்தினார். அடிபட்ட யானைகள் மூர்க்கமாக அலறின.

இதைக் கவனித்த அபிமன்யு அதிகக் கோபமுற்று, தங்க மயமான தனது தேரில் ஏறிக்கொண்டு, பீஷ்மரை எதிர்க்க முனைந்தான். பீஷ்மரையும் அவருடன் வந்திருக்கிற மற்ற வீரர்களையும் அபிமன்யு துணிவோடு எதிர்த்தான். அவனுடைய ஆற்றலையும் தைரியத்தையும் கண்ட பகைவர்கள், அவனை அர்ச்சுனனாகவே கருதினார்கள்.

பீஷ்மர், அர்ச்சுனன் புதல்வனைப் பாணங்களால் அடித்து, அவனுடைய கொடியையும் அறுத்தார். அவனுடைய சாரதியையும் வதம் செய்தார்.

சல்லியன், கிருபர் முதலானவர்கள் சேர்ந்து தாக்கியும் அபிமன்யு மலைபோல் அசையாமல் இருந்தான். பீஷ்மர் விடுத்த அம்புகளை எல்லாம் துண்டித்துத் தடுத்தான். பிறகு ஒன்பது பாணங்களை ஏவி, பீஷ்மரின் கொடியை அறுத்தான்.

இதைக் கண்ட வீரர்கள் பெருத்த ஆரவாரம் செய்தார்கள். அபிமன்யுவை உற்சாகப்படுத்தும் பொருட்டு, பீமன் பெருத்த கர்ஜனை செய்தான்.

இந்தப் போரில் பீஷ்மர் அரிய பல ஆயுதங்களைப் பயன்படுத்தினார். ஆயிரக்கணக்கான அம்புகளை அபிமன்யுமீது ஏவினார். அது சமயம் விராடன், விராடன் புதல்வன், திட்டத்துய்மனன், பீமன், சாத்யகி ஆகிய பத்து வீரர்கள், அபிமன்யுவைக் காக்க விரைந்தார்கள்.

பீஷ்மர் அவர்கள் அனைவரையும் தாக்கினார். பீமனுடைய சிம்மக் கொடியைத் தேரிலிருந்து அறுத்துத் தள்ளினார். பீமனும் அவரைப் பதிலுக்கு எதிர்த்தான்.

விராடனுடைய புதல்வனான உத்தரன் யானைமீது வந்து சல்லியனை எதிர்த்தான். உக்கிரம் வந்த யானை, சல்லியன் தேர்க் குதிரைகள் நான்கையும் காலால் நசுக்கிக் கொன்றுவிட்டது. இதனால் கோபமுற்ற சல்லியன், சிறந்த சக்தி ஒன்றை உத்தரன்மீது எறிந்தான். அது உத்தரனுடைய கவசத்தைப் பிளந்துவிட்டது. அவன் மூர்ச்சையுற்று, அங்குசமும் தோமரமும் நழுவி, யானையின் பிடரியிலிருந்து கீழே விழுந்து, உயிர் நீத்தான்.

யானைமீது கோபமுற்ற சல்லியன், தனது தேரிலிருந்து கீழே குதித்துக் கத்தியால் யானையின் துதிக்கையை வெட்டினான். யானை ஓலமிட்டுக் கதறிக்கொண்டு, கீழே விழுந்து உயிர் நீத்தது.

இந்த இரண்டு காரியங்களையும் செய்துவிட்டு, சல்லியன் விரைந்து, கிருதவர்மாவின் தேரில் ஏறிக்கொண்டான்.

தன் தம்பி உத்தரன் சல்லியனால் கொல்லப்பட்டதை அறிந்த சுவேதன், ஆத்திரமுற்று, சல்லியனை எதிர்த்தான். சல்லியன் அவனைச் சமாளிக்க முடியாது தத்தளிக்கவே, ஜயத்ரதன் முதலான ஏழு வீரர்கள் சல்லியனை மீட்பதற்கு விரைந்தார்கள். அம்புகளை மழைபோல் பொழிந்து, சுவேதனை அவர்கள் தாக்கினார்கள். சுவேதன் அவர்கள் பொழிந்த அம்புகளை எல்லாம் அரை நிமிடத்திலே நாசம் பண்ணினான். பிறகு சல்லியனை நோக்கி விரைந்தான்.

இது சமயம் கௌரவ சேனையில் ஒருவிதக் கலக்கம் உண்டாயிற்று. பீஷ்மரை முன்னிட்டுக்கொண்டு, துரியோதனன் சுவேதனின் தேரை நோக்கி விரைந்தான். சாவின் பிடிப்பில் சிக்குண்டு தவித்த சல்லியனை அவன் விடுவித்தான்.

ஆச்சரியமான முறையில் பீஷ்மர் போர் புரிந்தார். இலட்சக்கணக்கான அம்புகளைப் பொழிந்து வீரர்களின் சிரங்களை அறுத்துத் தள்ளினார்; யானைகளைக் கொன்றார்; பீஷ்மரின் போர்த் திறமைக்கு ஆற்றாது, பாண்டவர்களைச் சார்ந்தோர் நான்கு பக்கங்களிலும் சிதறி ஓடினார்கள் பீஷ்மர் ஒருவரைத் தவிர்த்து, மற்றவர்கள் சுவேதனைக் கண்டு நடுங்கினார்கள். கௌரவ சேனையை அழித்து வருகின்ற சுவேதனைப் பீஷ்மர் விரைந்து எதிர்த்தார் மதம் கொண்ட இரு யானைகள் சண்டையிட்டுக்கொள்வது போலவும், இரு காளைகள் பொருதிக்கொள்வது போலவும், பீஷ்மரும் சுவேதனும் சண்டையிட்டுக்கொண்டார்கள். பீஷ்மருடன் சுவேதன் திறமையாகப் போர்புரிவதைக் கண்டு, பாண்டவர்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள்.

இது சமயம், துரியோதனன் தன் சேனையுடன் சென்று சுவேதனை எதிர்த்தான். சுவேதன் அவனுடைய சேனையைச் சிதறஅடித்துவிட்டான். அம்பை எய்து பீஷ்மரின் தேரிலுள்ள பனைமரக் கொடியையும் அறுத்துத் தள்ளினான் 'சுவேதனால் பீஷ்மருக்கு மரணம் ஏற்படாமல் காப்பாற்றுங்கள்'' என்று துரியோதனன் மற்ற வீரர்களைப் பக்க பலமாக அனுப்பினான்.

பீஷ்மர் பலமாகப் போர் கொடுத்தார். பாணங்களை எய்து, சுவேதனுடைய குதிரைகளையும் சாரதியையும் கொன்றார். கோபத்துடன் தேரிலிருந்து கீழே குதித்து, சுவேதன்

பீஷ்மருடன் உக்கிரமாகப் போர்செய்தான். பீஷ்மர் எய்த பாணங்களை எல்லாம் பயனற்றதாகச் செய்தான்.

இது சமயம் ஆகாயத்திலிருந்து "பீஷ்மரே! இவனைச் சடுதியில் கொல்லும்" என்ற ஒரு வாக்கியம் பீஷ்மர் காதில் விழுந்தது. இதனால் மகிழ்ச்சி அடைந்த பீஷ்மர் சுவேதனைக் கடுமையாக எதிர்த்தார். மேன்மையான ஒரு பாணத்தினால் சுவேதனை அவர் அடிக்கவே, அது சுவேதனுடைய உயிரை வாங்கிவிட்டது.

இதைக் கண்ட பாண்டவர்கள் வருந்தினர்; கௌரவர்கள் மகிழ்ச்சியுற்றனர்.

சுவேதன் கொல்லப்பட்டதனால், அர்ச்சுனனும் கண்ணனும் போர் நடப்பதைச் சிறிது நேரம் ஒத்திப்போட்டார்கள்.

பிறகு திரும்பவும் போர் ஆரம்பமாயிற்று.

சங்கன் என்பவன் பாண்டவர்கள் சார்பாக, கௌரவர்களைக் கடுமையாக எதிர்த்தான். சல்லியனும் அவனும் ஆத்திரம் பீறிடப் போர் செய்தனர். பீஷ்மர் பாண்டவர்களின் சேனையைச் சிதறஅடித்து அழித்தார். சேனை அஞ்சிக்கொண்டு நாற்புறமும் ஓடியது. சூரிய அஸ்தமனம் ஆகிவிட்டபடியால் நடப்பது எதுவும் தெரியவில்லை. ஆகையால் மேலும் தொடர்ந்து அன்று போர் செய்யாது பாண்டவர்கள் நிறுத்திக்கொண்டார்கள்.

முதல் நாள் போரில் பீஷ்மர் வல்லமையினால் கௌரவர்களின் கையேலோங்கி நின்றது. அதனால் துரியோதனன் ஆனந்தக் கூத்து ஆடினான்.

யுதிட்டிரரோ அதிக வருத்தம் அடைந்தார். தம்பியரை அழைத்துக்கொண்டு கண்ணனிடம் சென்று யோசனை செய்தார். "அச்சுதரே! உலர்ந்த காட்டைத் தீ எரிப்பதை ஒப்ப, பாட்டனார் பீஷ்மர் எங்கள் சேனையை அழிக்கிறார். எங்கள் படை நிலைகலங்கிச் சிதறி ஓடுகிறது. இந்திராதி தேவர்களை ஜயித்தாலும் ஜயிக்கலாம். ஆனால், பிதாமகர் பீஷ்மரை ஜயிக்க முடியாது. போர் செய்வதை நிறுத்திவிட்டுக் காட்டுக்குத் திரும்பி, தவ வாழ்வை மேற்கொள்வதே நலம் என்று கருதுகிறேன். உற்றார் உறவினர்களை ஒழிப்பதைக் காட்டிலும் தவ வாழ்வை மேற்கொள்வது நலம் அல்லவா? எது செய்தால் எங்களுக்கு நன்மை ஏற்படுமோ, அதைக் கால தாமதம் இன்றி, எங்களுக்குச் சொல்லும். உம் அருளால் தான் பகைவர்களைக் கொன்று பாண்டவர்கள் நாட்டை ஆளக்கூடும்" என்று சொன்னார்.

இவ்வாறு சொல்லிவிட்டு, யுதிட்டிரர் நெடு நேரம் கவலையுடன் இருந்தார். தியானத்திலும் ஆழ்ந்தார்.

இதைக் கவனித்த கோவிந்தர் பாண்டவர்களுக்கு உற்சாகமும் ஊக்கமும் ஏற்படும்படி செய்தார். "பரத குலச் செம்மலே! நீர் கவலைப்படுதல் தகாது. நான், விராடன் துருபதன், திட்டத்துய்மனன் முதலியோர் உமக்குச் சார்பாக இருக்கும்பொழுது நீர் ஏன் வீணே கவலைப்படுகிறீர்? பீஷ்மரை வதம் செய்வதற்காகவே சிகண்டி பிறந்திருப்பதை நீர் அறியீரா?" என்று சொன்னார்.

அப்பொழுது யுதிட்டிரர் அங்கு இருந்த திட்டத்துய்மனனிடம், "வீரனே! சேனாதிபதியான உன்னைப் பின்பற்றி நடக்க நாங்கள் சித்தமாய் இருக்கிறோம். சேனாபதியாக இருந்து, தேவர்களைச் சுப்பிரமணியர் காத்ததுபோல, எங்களுக்குச் சேனாபதியாக இருந்து, உன் வல்லமையைக் காட்டி, கௌரவர்களை நீ வதம் செய்வாயாக" என்று சொன்னார்.

அதற்குத் திட்டத்துய்மனன், "அரசே! கவலை வேண்டாம். துரோணரை வதம் செய்வதற்காகவே, நான் பிறந்து இருக்கிறேன். துரோணர், பீஷ்மர், கிருபர், ஜயத்ரதன், சல்லியன் இவர்களின் கொட்டத்தை நான் அடக்குவதை நீர் காண்பீர்" என்று சொன்னான்.

"கிரவுஞ்ச வியூகம் வகுத்தால் எதிரிகளை எளிதில் நாசம் செய்யலாம் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த வியூகத்தை வகுத்து, நாளைக் கௌரவர்களுடன் போர் தொடுப்பதற்கான ஏற்பாடுகளை எல்லாம் நீ செய்" என்று திட்டத்துய்மனனிடம் சொன்னார் தரும நந்தனர்.

## இரண்டாம் நாள் போர்

பொழுது புலர்ந்ததும், திட்டத்துய்மனன் தரும நந்தனர் சொல்லியபடி கிரவுஞ்ச வியூகத்தை வகுத்தான். தனஞ்சயனை, சகல சேனைகளுக்கும் முன் அணியில் நிறுத்தினான் அர்ச்சுனனுடைய வானரக் கொடி வானளாவ, ஒய்யாரமாகப் பறந்தது; மற்ற அரசர்களையும் தகுந்த தகுந்த இடத்தில் நிறுத்தி, வியூகத்தை அமைத்து, சூரிய உதயம் ஆவதை எதிர்நோக்கிக் காத்திருந்தான் திட்டத்துய்மனன்.

பாண்டவர்கள் வகுத்திருந்த வியூகத்தைத் துரியோதனன் பார்த்தான். தன்னைச் சார்ந்த வீரர்களுக்கு உற்சா

கத்தை ஊட்டினான். பீஷ்மர், துரோணர், கிருபர், சல்லியன் ஆகியோரையும் மற்ற வீரர்களையும் அணுகி, "வீரர்களே! போர் செய்வதில் நீங்கள் வல்லவர்கள்; ஆகையால் பாண்டவர்களை வெல்வது எளிது. பாண்டவர்களின் சேனையைவிட, நம்முடைய சேனை அளவில் பெரியது; அதைப் பாதுகாப்பவர் பீஷ்மர். ஆகையால் தைரியத்துடன் போர் செய்யுங்கள்" என்று கூறினான்.

இதன் பிறகு, துரோணரும் பீஷ்மரும் பாண்டவர்களை எதிர்க்க, பெரிய வியூகம் ஒன்றை வகுத்தார்கள். பீஷ்மரைத் தலைவராகக்கொண்ட கௌரவப் படை, பாண்டவர்களைப் பலமாகத் தாக்கிற்று. உயிரையும் துச்சமாக நினைத்து, கௌரவர்களைச் சார்ந்தவர்கள் ஊக்கத்துடன் போரிட்டார்கள். பயங்கரமான பீஷ்மர் வில்லைக் கையில் ஏந்தி, பகைவரின் படைமீது அம்புகளைச் சரமாரியாகப் பொழிந்தார்.

திட்டத்துய்மனன் வகுத்திருந்த வியூகம் இதனால் உடைந்து போயிற்று. பாண்டவர்கள் படைக்குப் பெருத்த சேதம் ஏற்பட்டது. யானை வீரரும் குதிரை வீரரும் தேராளிகளும் காலாட் படையினரும் சிதறியோடத் தலைப்பட்டனர்.

இதைக் கவனித்த அர்ச்சுனன் அளவற்ற கோபம் கொண்டான். அவன் தன் சாரதி கண்ணனை நோக்கி, "எனது தேரைப் பாட்டனார் பீஷ்மர் இருக்கும் இடத்து அருகே செலுத்தும். துரியோதனனுக்கு நன்மை செய்வதில் நாட்டமுள்ள அவர், நமது படையை அழிக்காமல் விடமாட்டார். பீஷ்மரை வதம் செய்யாவிட்டால், நம் சேனை தப்பாது" என்று சொன்னான்.

"சரி" என்று சொல்லி, கண்ணன், அர்ச்சுனனுடைய தேரை, பீஷ்மர் அருகில் ஓட்டிச் சென்றார்.

போகும்போதே எதிரிகளை வதம் செய்துகொண்டு அர்ச்சுனன் சென்றான்.

வேகத்துடன் தன்னை எதிர்க்க வரும் அர்ச்சுனனைப் பீஷ்மர் கவனித்தார். ஒப்புயர்வற்ற வீரரான அவர், அர்ச்சுனனை விரைந்து எதிர்த்தார். பீஷ்மருக்குத் துணையாகத் துரியோதனன் அனுப்பி இருந்த வீரர்களும், பீஷ்மரைச் சூழ்ந்துகொண்டு அர்ச்சுனனைத் தாக்கினார்கள். துரோணர், துரியோதனன், சல்லியன், விகர்ணன் ஆகியோர் அவனைக் கடுமையாகத் தாக்கினார்கள்.

இவற்றை எல்லாம் அர்ச்சுனன் பொருட்படுத்தவில்லை. மலைபோல் அசையாது நின்று, எதிரிகளை அர்ச்சுனன் சளைக்

காது தாக்கினான். பீஷ்மர், துரோணர், கர்ணன் ஆகிய மூவரையும் தவிர்த்து, அர்ச்சுனனை அடிக்கும் ஆற்றல் பெற்றவர்கள் யாருமே இல்லை என்பது உலகம் அறிந்த உண்மை.

அர்ச்சுனனுக்குப் பக்க பலமாக, சாத்யகி, விராடன், திட்டத்துய்மனன், அபிமன்யு ஆகியோர் இருந்தார்கள்.

அர்ச்சுனன் கௌரவ சேனையின் ஊடே புகுந்து அதை நிலைகலங்கச் செய்தான். தேரில் செல்லும்பொழுதே அரசர்களின் தலைகளை எல்லாம் அறுத்துத் தள்ளினான்.

இதைக் கவனித்த துரியோதனன் கலக்கமுற்றான். பீஷ்மரிடம் இருந்த நம்பிக்கை அவனுக்குக் குன்றத் தொடங்கியது. அவன் பீஷ்மரை அணுகி, "கங்கையின் புதல்வரே! நீரும் துரோணரும் உயிருடன் இருக்கும்பொழுதே, கண்ணனைத் துணை சேர்த்துக்கொண்டு, அர்ச்சுனன் நமது சேனையைச் சிதற அடிக்கிறான். என்மீது அன்புள்ள கர்ணன், உம் பொருட்டாக, ஆயுதத்தைக் கையில் எடாமல் விலகி இருக்கிறான். பார்த்தனை வதைப்பதற்கான வழியை நீர் உடனே செய்ய வேண்டும்" என்று சொன்னான்.

"அரசகுல தருமம் நிந்தைக்கு உரியது" என்று துரியோதனனுக்குப் பதில் சொல்லிவிட்டு, பீஷ்மர் அர்ச்சுனனை எதிர்க்க விரைந்தார்.

இருவருடைய தேர்களிலும் வெள்ளைக் குதிரைகள் பூட்டப்பட்டிருந்தன. அர்ச்சுனனும் பீஷ்மரும் சமமாகவும் திறமையாகவும் போர்புரிந்தார்கள். இவர்கள் போர் புரிவதைக் காண, தேவர்கள், கந்தர்வர்கள், ரிஷிகள் ஆகியோருமே திரண்டுவிட்டார்கள்.

பீஷ்மர் அர்ச்சுனனை ஆக்ரோஷத்துடன் எதிர்த்தார். வாசுதேவரையும் மூன்று பாணங்களால் நடு மார்பில் அடித்தார். அதனால் காயமுற்ற கண்ணன், யுத்த களத்தில் நிற்கும் பலாச மரம்போல் நின்றார்.

மாதவர் காயமுற்றதைக் கண்ட அர்ச்சுனன், கோபத்தால் கொதித்து, பீஷ்மருடைய தேர்ப்பாகனைக் கொன்றுவிட்டான்.

அர்ச்சுனனும் பீஷ்மரும் சரிசமமாகப் போர் புரிந்தனர். இதைக் கண்டு சகல சீவராசிகளும் ஆச்சரியத்தில் மூழ்கின. இருவரும் கரந்தும் வெளிப்பட்டும் போர் செய்தார்கள். அர்ச்சுனனைப் பீஷ்மர் வெல்ல முடியாது; பீஷ்மரை அர்ச்சு

னன் வெல்ல முடியாது' என்று போர் நடப்பதைக் கவனித்தவர்கள் பேசிக்கொண்டனர். கொடியின் அடையாளத்தைக் கொண்டே, 'இவன் அர்ச்சுனன்' 'இவர் பீஷ்மர்' என்பதை மற்றவர்கள் தெரிந்துகொள்ள முடிந்தது.

பீஷ்மரும் அர்ச்சுனனும் வியத்தகு முறையில் இவ்வாறு ஒரு புறத்தில் போர்செய்துகொண்டிருக்கும்போது, மற்றொரு புறத்தில் துரோணரும் திட்டத்துய்மனனும் மும்முரமாகப் போர்செய்துகொண்டிருந்தார்கள்.

துரோணர் திட்டத்துய்மனனைப் பலமாகத் தாக்கினார். திட்டத்துய்மனனுடைய சாரதியை அம்பால் அடித்து, அவனைத் தேர்த்தட்டிலிருந்து கீழே விழச்செய்தார். அவனுடைய சிறந்த குதிரைகள் நான்கையும் நான்கு பாணங்களினால் அடித்தார்.

அலட்சியமாகச் சிரித்துக்கொண்டே, "நில்லும் நில்லும்" என்று சொல்லி, துரோணரை, திட்டத்துய்மனன் பல பாணங்களால் அடித்தான. இதனால் கோபம்கொண்ட துரோணர் வஜ்ராயுதத்தை நிகர்த்த ஓர் அம்பைத் திட்டத்துய்மனன் மீது தொடுத்தார். அதன் ஆற்றலைக்கண்டு சேனையில் இருந்தவர்கள் கலங்கினர்; ஆனால் திட்டத்துய்மனன் மட்டும் நிலை கலங்காது மலைபோல் நின்றான். தன்மீது பாயவரும் கொடிய அந்தப் பாணத்தை அறுத்துத் துண்டாக்கினான். பதிலுக்கு எண்ணிறந்த பாணங்களைத் துரோணர்மீது ஏவினான்.

திட்டத்துய்மனனின் செயற்கரும் இந்தச் செயலைக்கண்டு பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் பெருத்த ஆரவாரம் செய்தார்கள்.

தன்னை எதிர்த்த திட்டத்துய்மனனின் வில்லை, துரோணர் பல தடவை அறுத்துத் தள்ளினார். திட்டத்துய்மனன் ஒரு கதாயுதத்தை எடுத்துக்கொண்டு, தேரிலிருந்து குதிக்கப் போனான். அதற்குள்ளாக, அவனுடைய கதாயுதத்தைத் துரோணர் அடித்துத் தள்ளிவிட்டார். இதன் பின்னர், கத்தியையும் கேடயத்தையும் எடுத்துக்கொண்டு, துரோணரைத் தாக்கத் திட்டத்துய்மனன் விரைந்தான். மதம் கொண்ட யானையை, சிங்கம் ஒன்று எதிர்ப்பதுபோல, துரோணரை அவன் எதிர்த்தான். துரோணர் ஒன்றும் செய்ய முடியாதபடி அவனைத் தடுத்துவிட்டார்.

திட்டத்துய்மனன் களைப்புற்றுச் சோர்ந்து போனான். அவனால் நடக்கக்கூட முடியவில்லை.

நிலைமையை அறிந்த பீமன், திட்டத்துய்மனனுக்கு உதவி

புரிய ஓடி வந்தான். துரோணரைப் பாணங்களால் அடித்து விட்டு, திட்டத்துய்மனனைத் தனது தேரில் ஏற்றிக்கொண்டான்.

இது சமயம் துரோணரைக் காப்பதற்காகத் துரியோதனன் கலிங்கர் படையை அனுப்பி வைத்தான். அவர்கள் வந்து பீமனைத் தாக்கினார்கள். யார் தம்மைச் சேர்ந்தவர்கள்; யார் பகைவரைச் சேர்ந்தவர்கள் என்பதை அறிய முடியாதபடி, வெறியோடு இரு தரப்பினரும் போர்செய்தார்கள்; தங்களைச் சேர்ந்த வீரர்களைத் தாங்களே கொன்றார்கள்.

மகா பலசாலியான பீமன் ஆச்சரியப்படத் தக்கவாறு போர் செய்தான். சிலரைக் காலால் மிதித்துக் கொன்றான்; சிலரைக் கத்தியால் வெட்டிக் கொன்றான்; சிலரைக் கர்ஜனையால் கொன்றான்; சிலர் பீமனைப் பார்த்ததுமே பயந்துபோய்த் தங்கள் உயிரைவிட்டனர்.

"காலனே பீமசேனன் வடிவில் வந்திருக்கிறான்" என்று கௌரவ சேனையினர் அலறினார்கள். இதைச் செவிமடுத்த பீஷ்மர், பீமனை எதிர்க்க விரைந்து வந்தார். சாத்யகி, பீமன், திட்டத்துய்மனன் ஆகிய மூவரும் பீஷ்மரை எதிர்த்தார்கள்.

பீமனுடைய குதிரைகளைப் பீஷ்மர் அம்பு எய்து கொன்றார்; பீமன் கதாயுதத்தை எடுத்துக்கொண்டு தேரிலிருந்து குதித்தான்; இது சமயம் பீஷ்மருடைய சாரதியை, அம்பு எய்து சாத்யகி கொன்றுவிட்டான். அதனால் குதிரைகள் பீஷ்மரையும், தேரையும் இழுத்துக்கொண்டு ஓட்டம் பிடித்தன.

இதன் பின்னர், பீமன், காய்ந்த புல்லைக் கொளுத்தும் நெருப்புப்போல, பிரகாசத்துடன் நின்றான்; கலிங்கர்களை வதம் செய்தான். அப்போது திட்டத்துய்மனன் பீமனை நோக்கி, "கேதுமான், சக்ரதேவன் ஆகிய கலிங்கர்களைத் தனித்து நின்றே வதம் செய்துவிட்டாய். உனது புயவலியின் பெருமையே பெருமை" என்று பீமனைப் பாராட்டினான்.

இதன் பிறகு, பிற்பகலில் போர் மீண்டும் ஆரம்பமாயிற்று. அசுவத்தாமா, சல்லியன், கிருபர் ஆகியோரைத் திட்டத்துய்மனன் எதிர்த்தான். துரியோதனன் புதல்வன் இலக்குவனை அபிமன்யு எதிர்த்தான். தன் புதல்வனுக்குப் பக்க பலமாக அர்ச்சுனன் நின்றான். கௌரவ வீரர்கள் அர்ச்சு

னனை எதிர்த்தார்கள். அவர்களை அர்ச்சுனன் எதிர்த்துத் துரத்திவிட்டான்.

அர்ச்சுனனுடைய பிரதாபத்தைக் கவனித்த பீஷ்மர் துரோணரிடம், "வீரரே! பாண்டுவின் புதல்வனான அர்ச்சுனன், கண்ணனுடன் சேர்ந்துகொண்டு நமது சேனையை நிலைகுலையச் செய்கிறான்; இவனைப் போரில் வெல்ல முடியாது. சூரிய அஸ்தமனம் ஆகப் போகிறது. யுத்தத்தைத் தொடர்ந்து நடத்தாமல் நிறுத்திக்கொள்வது நலம் என்று கருதுகிறேன். நம் படைவீரர்கள் களைத்தும் சோர்ந்தும் காணப்படுகின்றனர்" என்று சொல்லிவிட்டு, இரண்டாம் நாள் போரை அத்துடன் நிறுத்துமாறு பீஷ்மர் கட்டளையிட்டார்.

வெற்றிபெற்ற பாஞ்சாலர்களும் பாண்டவர்களும் பெருத்த ஆரவாரம் செய்தார்கள். நான்கு விதமான வாத்தியங்கள் எதிரொலிக்க, அர்ச்சுனன் மனக் களிப்புடன் தனது பாசறை திரும்பினான்; மற்றவர்களும் அர்ச்சுனனைப்போலவே களிப்புடன் திரும்பினார்கள்.

## மூன்றும் நாள் போர்

மூன்றும் நாள் பொழுது புலர்ந்ததும் போருக்கு வேண்டிய ஆயத்தங்களைப் பீஷ்மர் செய்தார். கௌரவர்கள் வெற்றி பெற வேண்டும் என்ற விருப்பத்தால் கருட வியூகத்தை வகுத்து, அதன் முன் அணியில் பீஷ்மர் நின்றார். துரோணர், கிருதவர்மா, அசுவத்தாமா ஆகியோர் தக்க தக்க இடங்களில் நின்றார்கள். சல்லியன், பகதத்தன், ஜயத்ரதன் ஆகியோர் அந்த வியூகத்தின் கழுத்தில் நின்றார்கள். துரியோதனன் தன் பரிவாரத்தினருடன் சேர்ந்து, அந்த வியூகத்தின் பின் அணியில் நின்று, அதைப் பாதுகாத்தான்.

இதற்குப் பாண்டவர்கள் எதிர் அணி வகுத்தார்கள். அரைச் சந்திர வடிவத்தில் தங்கள் வியூகத்தை வகுத்து, அதன் வலது முனையில் பீமனும், இடது முனையில் அர்ச்சுனனும் நின்று, வியூகத்தைப் பாதுகாத்தார்கள்.

அணிவகுக்கப்பட்ட இரு தரப்புச் சேனைகளும் ஒன்றை ஒன்று தாக்கத் தொடங்கின. தேர் ஒலியும் வாத்தியங்களின் ஒலியும் வானளாவ வியாபித்தன. கைகலக்கும் போர் ஆரம்பமாகியது. அர்ச்சுனன் கௌரவர்களின் தேர்ப்

படையை அழித்து விட்டான். கௌரவர்களும் சளைக்காது போர் செய்தார்கள். போர்க்களத்தில் ஒரே புழுதி மயம்.

துரோணரால் காக்கப்பெறும் கௌரவர்களின் வியூகத்தைப் பாண்டவர்களால் உடைக்க முடியவில்லை; அதேபோல அர்ச்சுனனாலும் பீமனாலும் காக்கப்பெறும் பாண்டவர்களின் வியூகத்தைக் கௌரவர்களால் உடைக்க முடியவில்லை.

இரு தரப்பில் இருந்த நாற் படையினரும் மிகுந்த உற்சாகத்துடனும் ஊக்கத்துடனும் போரில் ஈடுபட்டனர். இரத்த ஆறு பெருகி, போர்க்களத்தில் புழுதி அடங்கியது.

கௌரவர்கள் முழு மூச்சுடன் அர்ச்சுனனைக் குறி வைத்துத் தாக்கினார்கள். நாற்புறமும் சுற்றி வளைந்து, படைக்கலன்களை அவன் மீது ஏவினார்கள். பளபளக்கும் சக்தி ஆயுதம், கூரிய ஈட்டிகள், கதாயுதம், கோடரி, உலக்கை ஆகியன விட்டிற் பூச்சிக் கூட்டத்தைப்போல் அர்ச்சுனனைத் தாக்க வந்தன. நாற்புறங்களிலும் அம்புகளை எய்து, அர்ச்சுனன் அவற்றைத் தடுத்து விட்டான்.

தேவர்கள், அசுரர்கள், கந்தர்வர்கள் ஆகியோர் அர்ச்சுனன் திறமையை, 'நன்று! நன்று!' என்று சொல்லிப் பெரிதும் பாராட்டினார்கள்.

மற்றொரு புறத்தில் சகுனியையும் அவன் படையினரையும் சாத்யகியும் அபிமன்யுவும் எதிர்த்தார்கள். அப்போது சாத்யகியின் தேரைச் சகுனியைச் சேர்ந்தவர்கள் தூள் தூளாக உடைத்துவிட்டார்கள். உடனே அவன் அபிமன்யுவின் தேரில் ஏறிக் கொண்டான். பிறகு இருவரும் சேர்ந்து அம்புகளை ஏவி ஏவிச் சகுனியின் படையை அழித்து விட்டார்கள்.

பீஷ்மரும் துரோணரும் சேர்ந்து யுதிட்டிரரின் படையைத் தாக்கினார்கள்; அதை அழிக்கவும் செய்தார்கள். யுதிட்டிரரும் நகுல சகாதேவர்களும் துரோணருடைய படையை எதிர்த்தார்கள்

பீமனும் அவன் புதல்வன் கடோத்கசனும் துரியோதனனைத் தாக்கினார்கள். தன் தந்தையையும் மிஞ்சிய நிலையில் கடோத்கசன் இன்று போர் புரிந்தான்.

பீமன் துரியோதனனை ஒரு பாணத்தால் அடிக்கவே, அவன் மூர்ச்சையுற்றான்; அவனுடைய தேர்ப்பாகன் போர்க்களத்திலிருந்து அவனை வேறு ஓர் இடத்துக்குக் கொண்டு போனான்.

இதனால் கௌரவர்களின் சேனை சிதறி ஓடியது. ஓடும் படையினரைப் பீமன் பாணங்களால் அடித்தான். துரத்தித் துரத்தி அடித்தான். யுதிஷ்டிரரும், திருஷ்டத்யும்னனும் பாணங்களை எய்து, அந்தப் படையைத் துன்புறுத்தினார்கள்.

பீஷ்மரும் துரோணரும் ஓடுகின்ற படையைத் தடுத்து நிறுத்த முயன்றார்கள்; அவர்களால் முடியவில்லை; நிலைகலங்கி, படை ஓடிக்கொண்டே இருந்தது. அர்ச்சுனனும் அந்தப் படையைத் தாக்கினான்.

பிறகு பீஷ்மரும் துரோணரும் பரபரப்புடன் முயன்று ஓடும் சேனையைத் தடுத்து நிறுத்தினார்கள். துரியோதனனும் மூர்ச்சை தெளிந்து, திரும்பி வந்து, சிதறி ஓடும் சேனையைத் திருப்பினான். துரியோதனனைக் கண்டதும் ஓடுகின்ற வீரர்கள் அந்தந்த இடத்திலேயே திரும்பினார்கள். நாணப்பட்டுத் திரும்பின அவர்கள் உள்ளத்தில் மீண்டும் யுத்த வேகம் ஏற்பட்டது.

இது சமயம் துரியோதனன், பீஷ்மரையும் துரோணரையும் அணுகி அவர்களிடம், "பெரியோரே! நீங்கள் இருவரும் பார்த்து இருக்கும்பொழுதே நமது சேனையைப் பாண்டவர்கள் துரத்தித் துரத்தி அடிக்கின்றனர். இந்த இழிநிலை நமது சேனைக்கு ஏற்பட்டு இருப்பது உங்கள் தகுதிக்கு அடுக்காது! பெருமையும் தராது. பாண்டவர்கள்பால் நீங்கள் பரிவு காட்டுவதே இந்த இழிநிலைக்குக் காரணம். 'பாண்டவர்களையும் திட்டத்துய்மனனையும் சாத்யகியையும் எங்களால் எதிர்க்க முடியாது' என்று வெளிப்படையாகவே நீங்கள் சொல்லியிருக்கலாமே! இப்படி நீங்கள் முன்பே எனக்குத் தெரிவித்து இருந்தால், கர்ணனைக் கலந்து யோசித்து, செய்ய வேண்டியவற்றை நான் முன்பே செய்து முடித்து இருப்பேன். உங்கள் இருவருக்கும் என்னைக் கைவிடும் எண்ணம் இருக்குமாயின், அதை இப்பொழுதே தெரிவித்துவிடுங்கள்; இல்லையேல் உங்கள் வல்லமையைக் காட்டி ஊக்கத்துடன் போர் புரியுங்கள்" என்று சொன்னான்.

துரியோதனன் சொன்ன இந்த வார்த்தைகளைச் செவி மடுத்த பீஷ்மர் உரக்கச் சிரித்தார். கோபம் வந்து கண்களை உருட்டி விழித்து, துரியோதனனை நோக்கினார்.

"அரசனே! பாண்டவர்களைத் தேவர்களாலும் வெல்ல முடியாது என்ற உண்மையை உனக்கு நான் சொன்னேன். உண்மையாயும் இதமாயும் நான் சொன்ன புத்திமதிகளை நீ கேட்க மறுத்து விட்டாய். போரைத் தொடங்கி விட்டு

இப்பொழுது என்மீது பழியைப் போடுகிறாய். நான் வயதானவன்; என்னால் இயன்றதை எல்லாம் வஞ்சனையின்றி உனக்காக நான் செய்வேன்; நான் தனியாக நின்று பாண்டவர் சேனையைத் தடுப்பதை இப்பொழுது நீ காண்பாய்' என்று சொன்னார்.

பீஷ்மரின் சொல்லைச் செவிமடுத்த கௌரவர்கள் மகிழ்ச்சி அடைந்தனர்; சங்கங்களை ஊதினர்; பேரிகைகளை முழக்கினர். பாண்டவர்களும் முரசங்களை முழக்கிக் கொண்டு போருக்கு ஆயத்தமாயினர்.

முற்பகல் நடந்த போரில் பாண்டவர்களின் கை மேலோங்கி இருந்தது; அதனால் அவர்கள் மகிழ்ச்சியுடன் இருந்தனர்.

கௌரவர்களும் மற்ற வீரர்களும் தம்மைச் சூழ்ந்துவர, பீஷ்மர் பாண்டவர்களை எதிர்த்துச் சென்றார். மயிர்க் கூச்சம் ஏற்படும் வகையில் கைகலந்த போர் ஆரம்பமாயிற்று. 'நில், அடி, திரும்பு, நிற்கிறேன், இதைத் தெரிந்துகொள், உறுதியாக நில்' என்ற சொற்கள் எங்கும் கேட்டன. தசையும் குருதியும் தலைகளும் முண்டங்களும் ஆயுதங்களும் எங்கும் சிதறிக் கிடந்த காரணத்தால், போர்க்களத்தில் தேர்கள், தடையின்றிச் செல்ல முடியவில்லை. 'ஐயா, அண்ணா, தம்பி, நண்பா, மாமா' என்ற கூச்சல்கள் எழுந்தன.

பீஷ்மர் தமது ஆற்றலை எல்லாம் காட்டி, கடுமையாகப் போர் செய்தார்; நான்கு திசைகளிலும் தாம் நின்று போர் செய்வதை ஒப்ப, ஒருவித மாயையை உண்டுபண்ணிக் கொண்டு பீஷ்மர் போர் செய்தார். பாண்டவ சேனையினரில் ஒருவனாவது பீஷ்மரை எதிர்த்து நிற்க முடியவில்லை. மானுட சக்திக்கு அப்பாற்பட்ட ஆற்றலுடன் பீஷ்மர் சஞ்சரிப்பதைக் கண்ட அவர்கள் கூச்சலிட்டார்கள். நெருப்பில் விழுந்து உயிரை மாய்த்துக்கொள்ளும் விட்டில் பூச்சிபோல, பாண்டவ சேனையினர் ஆயிரக்கணக்கில், பீஷ்மரின் பாணத்தால் இறந்தார்கள். பீஷ்மர் எய்த அம்புகளில் ஒன்றுகூட அன்று வீணாகவில்லை.

பீஷ்மரை எதிர்த்து நிற்க இயலாமல், தைரியம் இழந்து, பாண்டவ சேனை சிதறியோடத் தலைப்பட்டது. கண்ணன், அர்ச்சுனன், சிகண்டி ஆகிய மூவரும் ஓடுகின்ற பாண்டவ சேனையைத் தடுத்து நிறுத்த முயன்றார்கள்; பலிக்கவில்லை. அப்போது கிருஷ்ணன் அர்ச்சுனனை நோக்கி, "வீரனே! நீ விரும்பிய காலம் வந்திருக்கிறது. 'பீஷ்மர், துரோணர் முத

லானவர்களைக் கொல்வேன்' என்று நீ முன்பு சபதம் செய் திருப்பதை நினைவுபடுத்திக்கொள். யுதிட்டிரருடைய சேனை பயந்து சிதறி ஓடுவதைப் பார்'' என்று சொன்னார்.

''மாதவரே! எவராலும் அவமதிக்க முடியாதவரான பாட்டனார் பீஷ்மர் இருக்கும் இடத்தை நோக்கி, தேரைச் செலுத்தும். பீஷ்மரை அடித்து வீழ்த்துவதை நீர் காண்பீர்'' என்று பதில் சொன்னான் அர்ச்சுனன்.

வெள்ளைக் குதிரைகள் பூட்டியிருந்த அர்ச்சுனனுடைய தேரைப் பீஷ்மர் இருக்கும் இடத்தை நாடிக் கண்ணன் செலுத்தினார். இதைக் கவனித்த பீஷ்மர், தன்னை எதிர்க்க வரும் அர்ச்சுனன்மீது அம்பு மாரிகளைப் பொழிந்தார். பீஷ்மர் இறைத்த அம்புகளின் பெருக்கத்தினால், அர்ச்சுனன் தேரில் இருப்பது யாருக்கும் தெரியவில்லை. அதைப் பொருட்படுத் தாமல் கண்ணன் தேரை ஓட்டினார்.

அர்ச்சுனன் காண்டீபத்தை எடுத்து, மூன்று அம்புகளால் பீஷ்மரின் வில்லை அறுத்தான்; உடனே பீஷ்மர் வேறு ஒரு பெரிய வில்லை எடுத்துக்கொண்டு, நாணேற்றி இழுத்து விட்டார். அர்ச்சுனன் அந்த வில்லையும் துண்டித்து முறித் தான்.

அர்ச்சுனனுடைய போர்த் திறமையைக் கவனித்த பீஷ்ம ரால் அதைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. ''வீரனே! வா. வந்து என்னுடன் போர் செய். உனது திறமையைக் கண்டு நான் அகமகிழ்ந்தேன்'' என்று சொல்லி, அவனைப் பாராட்டினார்.

இதன் பின்னர், பெரிய ஒரு வில்லை எடுத்துக்கொண்டு பார்த்தன்மீது பாணங்களைப் பொழிந்தார். தம் திறமை யைக் காட்டி வாசுதேவர் அப்போது போர்க்களத்தில் தேரைச் செலுத்தினார்.

பீஷ்மரோ, வாசுதேவன், தனஞ்சயன் இருவரையுமே கூரிய பாணங்களால் அடித்தார்; இருவருக்கும் உடம்பில் விழுப்புண்கள் ஏற்பட்டன. அடிக்கடி தொடர்ந்து பாணங் களை ஏவி, கண்ணனையும் அர்ச்சுனனையும் பீஷ்மர் நடுங்கச் செய்தார்; பீஷ்மருடைய தாக்குதல் பலமாக இருந்தது.

அர்ச்சுனனோ மெதுவாகப் போர் செய்தான்; பீஷ்மர் மீது இருந்த அபிமானத்தால் அவரைக் கடுமையாக எதிர்க்க அவன் தயங்கினான். பாண்டவ சேனை பாணத்தால் அடி பட்டுச் சிதறியோடுவதை அறிந்தும் அர்ச்சுனன் இப்படித் தயக்கத்துடன் போர் புரிவது கண்ணபிரானுக்குப் பிடிக்க

வில்லை. 'மேலும் தயங்கினுல் பாண்டவ சேனையை ஒரு நொடியில் பீஷ்மர் அழித்து விடுவார். ஆகையால், பாண்டவர்களின் பொருட்டாய்க் கவசமணிந்து பீஷ்மரை நான் வதம் செய்வேன். அர்ச்சுனன் பீஷ்மரிடத்தில் வைத்திருக்கும் அபிமானத்தினுல அவரை அடிப்பதற்குத் தயங்குகிருன்'' என்று தனக்குள் கருதினுர்.

கண்ணன் இப்படி எண்ணிய சமயத்தில், பீஷ்மர் அம்புகளைப் பொழிந்து பாண்டவ சேனையை நடுங்கச் செய்தார். துரோணர், விகர்ணன், ஜயத்தரன் முதலியோர் பீஷ்மரின் கட்டளைக்கு இணங்க, அர்ச்சுனனைத் தாக்கினுாகள். பாண்டவர் படை நாற்புறமும் சிதறியோடிற்று. இதைக் கவனித்த சாத்யகி, "வீரர்களே! ஓடாதீர்கள். இது உங்களுக்குப்பெருமை அன்று? உங்கள் தருமத்தைக் காப்பாற்றுங்கள்'' என்று கூவினுன்.

இதைக் கவனித்த கண்ணபிரான், சாத்யகியைப் பெரிதும் புகழ்ந்தார். "சினி குலத்தில் உதித்த உத்தம வீரனே! போக விருப்பமுள்ளவர்கள் போகட்டும்; பாண்டவர்களின் பொருட்டாய், பீஷ்மர், துரோணர் முதலானவர்களை நான் வதம் செய்வதை நீ காண்பாய்'' என்று சொன்னுர்.

இப்படிச் சொல்லிவிட்டு, தமது சக்ராயுதத்தை அவர் நினைத்ததும், அது ஒரு நொடியில் அவரிடம் வந்து சேர்ந்தது. உடனே கண்ணபிரான் குதிரைகளின் கடிவாளங்களைப் போட்டு விட்டு, சக்ரத்தைக கையில் எடுத்துக்கொண்டு தேரிலிருந்து குதித்தார். பூமி அதிரும்படி வேகமாக நடந்து, பீஷ்மரை நோக்கிச் சென்றுர்.

தன்னைக் கண்ணன் எதிர்க்க வருகிறுர் என்பதைக் கவனித்த பீஷ்மர், அதற்காகக் கலங்கவில்லை. அவசரப்படாமல் பெரிய வில் ஒன்றை எடுத்து, அதை நாணேற்றி இழுத்தார். தார். தன் முகத்தில் வீரம் துலங்க, கண்ணனை அவர் வரவேற்றுர்.

"மாதவரே! வருக! வருக! உடக்கு வணக்கம். இந்தப் போரில் உம் கையினுல் நான் மடிவேனுயின், அதனுல் இம்மையிலும் மறுமையிலும் எனக்கு நன்மை உண்டு. மூவுலகத்தாரும் என்னைக் கௌரவிப்பார்கள்'' என்று சொன்னுர்.

இதைக் கவனித்த அர்ச்சுனன் தேரிலிருந்து விரைவாகக் குதித்தான். ஓடிச் சென்று அவருடைய கைகளைப் பற்றிக் கொண்டான். கண்ணபிரான் நிற்காது அவனையும் இழுத்துக் கொண்டு வேகமாகச் சென்றுர். இதனுல் அவரை மேலும்

செல்லவிடாது தடுக்க அவன் ஓர் உபாயம் செய்தான். கண்ணபிரானுடைய பாதங்கள் இரண்டையும் பலமாக அவன் பற்றிக்கொண்டான். அவர் நிற்கவும், அன்புமீதூர அர்ச்சுனன் தரைமீது விழுந்து அவரை வணங்கினான். "கேசவரே! நீர் கோபம் கொள்ளவேண்டாம். பாண்டவர்களுக்கு நீர்தான் கதி. எடுத்துக்கொண்ட சபதப்படி காரியத்தை நான் முற்றுவிப்பேன். கௌரவர்களை நிச்சயம் அழிப்பேன்; இது உறுதி" என்று சொன்னான்.

கண்ணன் இதனால் மகிழ்ச்சி அடைந்தார். அர்ச்சுனனுக்கு நன்மை செய்யக் கருதி, திரும்பவும் தேரில் ஏறிக்கொண்டார்; தமது சங்கம் பாஞ்சசன்யத்தை எடுத்து ஊதினார்.

அர்ச்சுனன் முழு மூச்சுடன் போர் செய்யத் தொடங்கினான். காண்டீபத்தின் ஒலியானது வான் முகடு முட்ட ஒலித்தது. துரியோதனன் முதலான கௌரவ வீரர்கள் அர்ச்சுனனை எதிர்த்தார்கள். பீஷ்மர் சக்தியாயுதத்தையும் கதாயுதத்தையும் கொண்டு அர்ச்சுனனை எதிர்த்தார். அர்ச்சுனன் சளைக்காது அவரை எதிர்த்தான்; பீஷ்மர், துரோணர், துரியோதனன், பாஹ்லீகன் ஆகியோருக்குப் பலத்த காயம். அர்ச்சுனன் ஐந்திராத்திரம் என்பதைப் பிரயோகிக்கத் தயாரானான். இதைக் கண்டதும் பீஷ்மர் முதலானவர்கள் போர்க்களத்தை விட்டு ஓடினார்கள்.

அர்ச்சுனன் மகத்தான வெற்றிபெற்றான்; கௌரவர்கள் தோல்வியுற்று, தங்கள் பாசறைகளுக்குத் திரும்பினார்கள்.

## நான்காம் நாள் போர்

பொழுது புலர்ந்ததும், பீஷ்மர் கௌரவ சேனையை அணிவகுக்கத் தொடங்கினார். துரோணர், துரியோதனன், ஜயத்ரதன் முதலிய வீரர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு சென்றார்கள். தேவர்களால் சூழப்பட்ட இந்திரன்போல அப்போது பீஷ்மர் விளங்கினார்.

சேனையானது யானைகளும் குதிரைகளும் தேர்களும் நிறைந்து, மழைக் காலத்து ஆகாயம் போலக் காட்சி அளித்தது. சிவப்பு, மஞ்சள், கறுப்பு, வெள்ளை முதலிய நிறத்தாலான கொடிகள் அசைந்தாடின. வியாளம் என்ற வியூகத்தை வகுத்துக்கொண்டு, பீஷ்மர் தலைமையில், கௌரவ சேனை தங்களைத் தாக்க வருவதைத் தூரத்திலிருந்தே அர்ச்சு

னன் கவனித்துவிட்டான். பகைவர்களை எதிர்ப்பதில் உறுதி கொண்டு, அர்ச்சுனன் தேரில் புறப்பட்டான்.

போர் ஆரம்பம் ஆயிற்று. பீஷ்மா அர்ச்சுனனை எதிர்க்க முற்பட்டார். போர் செய்யும் அபிமன்யுவைக் கடந்து, அர்ச்சுனனை நோக்கி விரைந்தார்.

அசுவத்தாமா, பூரிசிரவஸ், சல்லியன், சித்ரசேனன், சலன் புதல்வன் ஆகிய ஐந்து வீரர்களும் அபிமன்யுவை எதிர்த்தார்கள். சிங்கக்குட்டி ஒன்று, யானைகளை எதிர்த்துப் போர் புரிவதை ஒப்ப, அபிமன்யு அவர்களை எதிர்த்தான். தன் மைந்தன் கௌரவ வீரர்களுடன் திறமையாகப் போர்புரிவதைக் கண்டு அர்ச்சுனன் சிங்கநாதம் செய்தான்; தானும் அவனுக்கு உதவ வந்தான்.

சல்லியன், அசுவத்தாமா, பூரிசிரவஸ், சலன் புதல்வன் ஆகியோரால் அபிமன்யுவை எதிர்த்து நிற்க முடியவில்லை. இதை அறிந்த துரியோதனன், மத்ர நாட்டு வீரர்களையும் கேகய நாட்டு வீரர்களையும் அவர்களுக்கு உதவும் பொருட்டு அனுப்பினான். இருபத்தையாயிரம் வீரர்கள் வந்து, அர்ச்சுனனையும் அபிமன்யுவையும் சூழ்ந்து கொண்டார்கள்.

இதைக் கவனித்த பாண்டவ சேனாபதி திட்டத்துய்மனன், பெரும் படையுடன் அங்கே வந்து சேர்ந்தான். அப்போது சலனுடைய புதல்வன் அவனைத் தாக்கினான். பெரிய கத்தியை எடுத்துக்கொண்டு தேரிலிருந்து குதித்துச் சென்று, திட்டத்துய்மனனை வெட்டப் போனான். அப்போது திட்டத்துய்மனன், அருகில் வந்தவனைக் கதாயுதத்தால் அடித்து, தலையைப் பிளந்து சலனுடைய புதல்வனைக் கொன்றுவிட்டான்.

தன் புதல்வன் கொல்லப்பட்டதை அறிந்த சலன் கோபத்தால் கொதித்தான். அவனும் சல்லியனும் திட்டத்துய்மனனைப் பலமாகத் தாக்கினார்கள். கூர்மையான அம்பு ஒன்றை எவி, திட்டத்துய்மனனுடைய வில்லைச் சல்லியன் அறுத்துவிட்டான். இதைக் கவனித்த அபிமன்யு சல்லியனை வேகத்துடன் எதிர்த்தான்.

சல்லியனை அபிமன்யு தீவிரமாக எதிர்க்கிறான் என்பது தெரிந்ததும், துரியோதனன் தன் தம்பியர்களை அழைத்துக் கொண்டு, அந்த இடத்திற்கு விரைந்தான். நாற்புறத்திலும் சூழ்ந்துகொண்டு, அவர்கள் மத்ரநாட்டு மன்னனைக் காத்தார்கள். அபிமன்யுவைக் கையோடு பிடிக்க விரும்பினார்கள். அது சாத்தியப்படவில்லை.

இது சமயம் பீமசேனன் அங்கு வந்து சேர்ந்தான்.

வந்தவன் இரும்புக் கதாயுதம் ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு, மேரு மலையைப்போல் கம்பீரமாக நின்றான். துரியோதனன் தம்பியர்கள் இவனைக் கண்டதும் பயந்து வெலவெலத்து ஓட்டமெடுத்தார்கள்.

இதனால் மிகுந்த கோபம்கொண்ட துரியோதனன், பதினாயிரம் யானைகள் அடங்கிய படை ஒன்றைப் பீமன்மீது ஏவினான். சட்டைசெய்யாது அந்த யானைப் படையைப் பீமன் எதிர்த்தான். தேரிலிருந்து இறங்கிக்கொண்டு, கதாயுதத்தினால் பலம்கொண்ட மட்டும் யானைகளைத் தாக்கினான் பீமன்; யானைகள் வெருண்டுபோய், கர்ஜித்துக்கொண்டு, ஒன்றை ஒன்று தாக்கி மடிந்தன. இது சமயம் பீமனுக்கு உதவியாகப் பாண்டவர்களைச் சேர்ந்தவர்கள் வந்து சேர்ந்தார்கள். அம்புகளை அபாரமாகப் பொழிந்து அவர்களும் யானைகளைத் தாக்கினார்கள்.

யானைப் படைக்குத் தலைமை தாங்கிவந்த மகநாதன் என்பவன், பெரிய யானை ஒன்றை அபிமன்யுவின்மீது ஏவினான். அபிமன்யு அதனுடைய தலையை ஒரு பாணத்தினால் துண்டித்துவிட்டான்.

இது சமயம் பீமசேனன் கதாயுதத்தை எடுத்துக்கொண்டு அந்த யானைப் படையினுள் புகுந்தான். வஜ்ராயுதத்தைக்கொண்டு இந்திரன் மலைகளைப் பிளப்பதே போன்று, யானைகளைத் தனது கதாயுதத்தினால் பிளந்து, பீமசேனன் கொன்றான்.

ஏராளமான யானைகள் அடிபட்டு, போர்க்களத்தில் மலைகள்போலக் கிடந்தன. இரத்தத்தைக் கக்கிக்கொண்டும் கதறித் துடித்துக்கொண்டும், பீமன் செல்லுகின்ற வழிகளில் அவை கிடந்தன.

பீமனுடைய உடம்பில் நிணமும் குருதியும் கொழுப்பும் ஊறிப் படிந்திருந்தன. கதாயுதத்திலும் இரத்தம் சொட்டியது; கதாயுதத்துடன் அவன் போர்க்களத்தில் நின்ற கோலம், மயானத்தில் நிற்கும் சூலபாணியான பரமசிவனை நினைவுபடுத்தியது.

யானைப் படை அழிவுற்றதைக் கண்டு ஆத்திரமடைந்த துரியோதனன், 'பீமனைக் கொல்லுங்கள்' என்று தன் படையினர் அனைவரையும் ஏவினான்; அந்தப் படையினரை, காற்றானது மரங்களை ஒடித்து வீழ்த்துவதுபோல, பீமசேனன் தனது கதையினால் அடித்து வீழ்த்தினான். சோமதத்தன் புதல்வனான பூரிசிரவஸ் என்பவனைத் தவிர்த்து, மற்ற

வீரர்கள், பீமனுக்கு ஆற்ற மாட்டாது களைத்துச் சோர்ந்து போனார்கள்.

பீமசேனனை எதிர்க்கத் துரியோதனன் தன் தம்பியர்கள் பத்துப் பேருடன் வந்தான். வந்தவன் பீமனை ஒன்பது பாணங்களினால் அடித்தான்.

பீமசேனன் விரைந்து தனது தேரில் ஏறிக்கொண்டு, தன் தேர்ப்பாகனை நோக்கி, "விசோகா! நீண்ட காலமாக நான் எதிர்பார்த்துக் காத்து இருந்த விருப்பம் நிறைவெய்தும் காலம் எனக்கு வாய்த்திருக்கிறது. துரியோதனன் தன் தம்பியர்களை அழைத்துக்கொண்டு, போருக்கு ஆயத்தமாக வந்து நிற்கிறான். இவர்கள் அனைவரையும் எமன் உலகு அனுப்ப என் உள்ளம் விழைகிறது. ஆகையால், கடிவாளத்தைப் பிடித்துத் தேரைத் திறமையாக ஓட்டு!" என்று சொன்னான்.

இப்படிக் கூறிவிட்டு, துரியோதனனைப் பீமன் கூரிய பாணத்தால் அடித்தான். துரியோதனன் பீமனுடைய வில்லை, கைபிடிக்கும் இடத்தில் துண்டித்துவிட்டான். வேறு ஒரு வில்லை எடுத்து, துரியோதனனுடைய வில்லைப் பீமன் துண்டித்துவிட்டான். இதனால் சினமடைந்த துரியோதனன், கொடிய பாணம் ஒன்றைக் குறிவைத்து, பீமசேனனின் மார்பில் அடித்தான். பாணம் நன்றாகத் தைத்ததால் வருத்தமுற்றுச் சோர்ந்து தேரின் நடுவே, பீமசேனன் உட்கார்ந்தான்.

இதைக் கவனித்த அபிமன்யு முதலான பாண்டவ வீரர்களுக்கு உள்ளம் கொதித்தது. வேகம் வாய்ந்த பாணங்களைத் துரியோதனன் மீது அவர்கள் ஏவினர்.

மூர்ச்சை தெளிந்து பீமன் எழுந்தான். அப்போது துரியோதனன் தம்பியர்கள் பதினான்கு பேர், பீமனை எதிர்த்தார்கள். பீமன் தன் கடைவாய்களை நக்கிக்கொண்டு, பசுக் கூட்டத்தின் நடுவே ஓநாய் புகுவதுபோல் புகுந்து, அவர்களில் எட்டுப்பேரை வதம் செய்துவிட்டான். மற்றவர்கள் இதைக் கண்டு பயந்து ஓடிவிட்டார்கள்.

பீமனைப் பிடிக்கும்படி பகதத்தனைப் பீஷ்மர் அனுப்பினார். மதப்பெருக்குள்ள யானை ஒன்றின் மீது வந்து, பீமனைப் பகதத்தன் தாக்கினான். பீமன் மூர்ச்சையுற்றுக் கொடிமரத்தின் மீது சாய்ந்தான்.

தன் தந்தையின் நிலையைக் கவனித்த கடோத்கசனுக்குக் கோபம் தாங்க முடியவில்லை. அவன் தன் மாயையினால் ஒரு

நிமிடத்துக்குள் கண்டவர்கள் வெருளும்படியான ஒரு கோர வடிவத்தை எடுத்துக்கொண்டான். பெரிய யானை ஒன்றின் மீது வந்த அவனை, அநேக பெரிய மத யானைகள் தொடர்ந்து வந்தன. யானைமீது வந்த கடோத்கசன் பகதத்தனைத் தாக்கினான். நான்கு தந்தங்களைக்கொண்ட கடோத்கசனுடைய யானை, பகதத்தனுடைய யானையைத் தனது தந்தங்களால் குத்தித் துன்புறுத்தியது. யானை அலறுவதைக் கேட்டு, பீஷ்மர், துரோணர் முதலானவர்கள், பகதத்தனுக்கு உதவ ஓடி வந்தார்கள்.

கடோத்கசன் இதைக் கண்டதும் உரத்த சிங்கநாதம் செய்தான். அவனுடைய ஆற்றலைத் தாளாது கௌரவப் படையினர் தவித்தனர்.

இதைக் கவனித்த பீஷ்மர், "இந்தக் கொடிய அரக்கனோடு இன்று நாம் யுத்தம் செய்ய முடியாது. நம் வீரர்கள் காயமுற்றுக் களைத்துப் போய் இருக்கிறார்கள்; வாகனங்களும் சோர்வடைந்திருக்கின்றன. சூரியன் மறையப் போகிறான். இரவில் அரக்கர்களுக்குப் பலம் அதிகம். ஆகையால் யுத்தம் செய்வதை இன்று இத்துடன் நிறுத்திக்கொண்டு, நாளைக் காலையில் போரைத் தொடங்கலாம்" என்று துரோணரிடம் சொன்னார்.

கௌரவர்கள், அன்று போர் செய்வதை அத்துடன் நிறுத்திக்கொண்டு, கவலையுடன் தங்கள் பாசறைகளுக்குத் திரும்பினார்கள்.

பாண்டவர்களோ வெற்றியால் விம்மிதமுற்றுத் தங்கள் சங்கங்களை மகிழ்ச்சியுடன் முழக்கினார்கள். பீமனையும் கடோத்கசனையும் பெரிதும் பாராட்டினார்கள்.

அன்று ஏற்பட்ட தோல்வியாலும், தன் சகோதரர்கள் எட்டுப் பேர் இறந்ததாலும், துரியோதனன் சிந்தை கலங்கினான்; அவனுடைய கண்களில் நீர் ததும்பிற்று; துயரத்துடன் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிக் கிடந்தான் அவன்.

பிறகு எழுந்து பீஷ்மரிடம் சென்றான் துரியோதனன். "பிதாமகரே! நீர், துரோணர், அசுவத்தாமா, கிருபர், பகதத்தன் ஆகியோர் உயிரைத் திரணமாக மதிப்பவர்கள்; மூவுலகங்களையும் வெல்வதற்கு வல்லமையுடையவர்கள். பாண்டவர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து எதிர்த்தாலும் உங்களில் யாரையும் வெல்ல முடியாது. அப்படியிருக்கும் போது, நாள்தோறும் பாண்டவர்கள் வெற்றி அடைந்து

வருவதற்குரிய காரணம் என்ன? அதன் உண்மை ரகசியத்தை எனக்குச் சொல்லுங்கள்'' என்று கேட்டான்.

அதற்குப் பீஷ்மர், ''அரசனே! நான் சொல்வதைக் கேள். பலமுறை உனக்கு நான் இதுபற்றிச் சொன்னதை நீ ஏற்க மறுத்துவிட்டாய். பாண்டவர்களுடன் சமாதானமாகப் போய்விடு; அதனால் உனக்கு நன்மை உண்டு; உலகத்துக்கும் நன்மை உண்டு என்று சொன்னேன். உறவினர்கள் ஒற்றுமையாக இருந்து உலகத்தை ஆளுங்கள் என்று சொன்னேன்; இதை நீ கேட்கவில்லை. பாண்டவர்களை நீ அவமதித்தாய். அதன் பயனை இப்பொழுது நீ அனுபவிக்கிறாய். கிருஷ்ணனின் சகாயம் கிடைத்துள்ள பாண்டவர்களை எந்த மனிதராலும் வெல்ல முடியாது. ஆகையால் பாண்டவர்களுடன் சமாதானமாகப் போய்விடு. அப்படியின்றி, பாண்டவர்களை நீ அவமதித்தாயானால் நீ அழிந்தே போவாய்'' என்று சொன்னார்.

துரியோதனன் பீஷ்மரிடம் விடைபெற்றுக்கொண்டு திரும்பி, தன் படுக்கையில் படுத்துக்கொண்டான்.

## ஐந்தாம் நாள் போர்

ஐந்தாம் நாள் பொழுது புலர்ந்ததும், இரு தரப்புச் சேனைகளும் போருக்கு ஆயத்தமாயின; கோபத்துடன் ஒருவரை ஒருவர் எதிர்ப்பதற்கு முனைந்து நின்றனர். பீஷ்மர் மகர வியூகத்தை வகுத்து, கௌரவ சேனையைப் பாதுகாத்தார். பாண்டவர்கள் சியேன வியூகத்தை வகுத்துக் கொண்டனர்.

பாண்டவர்கள் வகுத்த வியூகத்தின் முன் அணியில் பீமசேனன் நின்றான். சிகண்டி, திட்டத்துய்மனன், சாத்யகி ஆகிய மூவரும் அவனுக்கு அடுத்தாற்போல் நின்றனர். இவர்களை அடுத்து அர்ச்சுனன் நின்றான். கேகய மன்னன் வலப் பக்கவாட்டிலும் துருபத மன்னன் இடப் பக்க வாட்டிலும் நின்றார்கள்; அர்ச்சுனனை அடுத்து, அபிமன்யுவும் மற்ற வீரர்களும் நின்றார்கள்; அனைவருக்கும் பின்னே யுதிட்டிரரும் நகுலனும் சகதேவனும் நின்றார்கள்.

பீமசேனன் கௌரவர்களின் வியூகத்தைக் கலைத்து, உள் புகுந்து, பீஷ்மரை அம்புகளால் தாக்கினான். பீஷ்மர் மேம்பட்ட ஆயுதங்களைப் பாண்டவர்கள் படைமீது ஏவி மயங்

கச் செய்யவே, அர்ச்சுனன் விரைந்து வந்து, அந்தப் பாணங்களைத் தடுத்துத் தன் படையைக் காப்பாற்றினுன்.

போரின் ஆரம்பத்திலேயே தங்களுக்குப் பெருத்த தோல்வி ஏற்பட்டிருப்பதையும், தன் தம்பிமார்கள் வதம் செய்யப்பட்டிருப்பதையும் நினைந்து துரியோதனன் மனம் புழுங்கினுன். ஆகவே, அவன் துரோணரை அணுகி, "ஆசாரியரே! தங்களையும் பீஷ்மரையும் அடுத்தே இந்தப் போரை நாங்கள் தொடங்கினேம். தேவர்களைக்கூட வெல்லலாம் என்று நாங்கள் நம்பினேம். பாண்டவர்களை எளிதில் வெல்லலாம் என்று கருதினேம. பாண்டவர்களை வதம் செய்வதற்குரிய காரியத்தைத் தாங்கள் விரைந்து செய்ய வேண்டும்" என்று சொன்னுன்.

அதற்குத் துரோணர், "துரியோதனு! பிடிவாத குணமுள்ள நீ, பாண்டவர்களின் ஆற்றலை அறியாது பேசுகிறுய். நீ நினைப்பதுபோல் பாண்டவர்களை எளிதில் வெல்ல முடியாது. எனது ஆண்மைக்கும் ஆற்றலுக்கும் இயைய வஞ்சனையின்றி நான் போர்புரிவேன்" என்று பதில் சொன்னுர்.

இப்படிச் சொல்லிவிட்டு, பாண்டவ சேனையை அவர் பலமாகத் தாக்கினுர். இதைக் கவனித்த சாத்யகி, துரோணரை எதிர்த்தான். இருவருக்கும் இடையில் பயங்கரமான கோர யுத்தம் நடந்தது. துரோணரின் தாக்குதலைச் சமாளிக்க முடியாது, சாத்யகி தத்தளிப்பதைக் கண்ட பீமன், அவனுக்கு உதவி புரிய விரைந்தான்.

அப்போது துரோணரும் பீஷ்மரும் சல்லியனும் சேர்ந்து பீமனை எதிர்த்தார்கள். அம்புகளுடன் வந்த சிகண்டி பீஷ்மரையும் துரோணரையும் எதிர்த்தான். சரமாரிகளைப் பொழிந்து, அவர்கள் இருவரையும் தாக்கினுன். பெண்ணுய்ப் பிறந்து, பிறகு ஆண்தன்மையை அடைந்துள்ள சிகண்டியை எதிர்க்க விரும்பாத பீஷ்மர் அப்பால் போய்விட்டார்.

பீஷ்மர் விலகி இருப்பதைக் கவனித்த துரோணர், சிகண்டியைத் தாக்கினுர். எதிர்ப்பைச் சமாளிக்க முடியாது பயந்து, போர் செய்யாது சிகண்டி விலகிப் போய்விட்டான்.

பீமனுல் ஏற்படும் பயத்தைத் தவிர்ப்பதற்காகப் பீஷ்மர், சங்குல யுத்தத்தைத் தொடங்கினுர். முற்பகல் முழுவதும் சங்குல யுத்தம் மிகக் கோரமான முறையில் நடந்தது. கூக்குரலும் சங்க முழக்கமும், கர்ஜனைகளும் வானளாவ ஒலித்தன. குண்டலங்களும் தலைப்பாகைகளும் அணிந்திருந்த தலைகள் தரையில் விழுந்து கிடந்தன. விற்பிடித்த கை அப்படியே

துண்டித்துக் கிடந்தது; தோள்வளையம் அணிந்த கைகளும் துண்டித்துக் கிடந்தன. யானைகளும், குதிரைகளும், மனிதர்களும் அடிபட்டு, உடல்கள் பதைபதைக்க, பூமியில் கிடந்தனர்.

பீஷ்மரும் பீமனும் உற்சாகத்துடனும் ஊக்கத்துடனும் போர் செய்தனர். இது சமயம் துரியோதனன் கலிங்க தேசப் படையுடன் பீஷ்மருக்கு உதவ வந்தான். பீமனுக்கு உதவியாக வந்து, கௌரவர்களை அர்ச்சுனன் எதிர்த்தான்.

போரும் மும்முரமாக நடந்தது; தேரில் இருந்தவர்கள், தேரிலிருந்து விழுந்தார்கள்; குதிரையில் இருந்தவர்கள் குதிரையிலிருந்து விழுந்தார்கள்; யானைகளில் இருந்து போர் செய்தோர், யானைகளிலிருந்து விழுந்தார்கள்; பூமியில் நின்று போர் செய்தவர்களோ நிலைதவறிப் பூமியில் விழுந்தார்கள்.

கூர்மையான ஓர் அம்பினால் சாத்யகியினுடைய தேர்ப் பாகனைப் பீஷ்மர் வீழ்த்தினார். அதனால் குதிரைகள் பிய்த்துக் கொண்டு வேகமாக ஓடத் தொடங்கின. பீஷ்மர் பாண்டவ சேனையை வெகுவாகத் துன்புறுத்தினார்.

அசுவத்தாமாவும் அர்ச்சுனனும் ஒருவரை ஒருவர் தாக்கிக்கொண்டார்கள். "இவர் என் ஆசாரியரின் புதல்வர்; அவருக்கு மிகவும் பிரியமானவர்; அந்தணரான இவரை நான் கௌரவிக்கக் கடமைப்பட்டவன்" என்று கருதி, அவருடன் தொடர்ந்து போர் செய்வதை விட்டுவிட்டு, மற்ற வீரர்களை அர்ச்சுனன் தாக்கத் தொடங்கினான்.

சாத்யகியினுடைய புதல்வர்கள் பத்துப் பேர், பூரிசிரவஸ் என்ற மகாரதனைத் தாக்கினார்கள். பூரிசிரவஸ் என்பவனும் அவர்களைப் பதிலுக்குத் தாக்கினான். இவர்கள் பத்துப் பேரையும் பூரிசிரவஸ் தன் அம்புக்கு இரையாக்கி விட்டான். இடியினால் தாக்குண்ட மரம்போல, அந்தப் பத்துப் பேரும் பூமியில் விழுந்தார்கள்.

தன் புதல்வர்கள் பதின்மரும் பூரிசிரவஸால் கொல்லப் பட்டதை அறிந்த சாத்யகி ஆத்திரம் பொங்க, பூரிசிரவஸைத் தாக்கினான். இந்தப் போரில் இருவரின் தேர்களும் உடைந்தன; குதிரைகளும் கொல்லப்பட்டன. பிறகு கத்தியையும் கேடயத்தையும் எடுத்துக்கொண்டு, தரையில் நின்றபடி இருவரும் போர் புரிந்தார்கள். வாட்போரில் பூரிசிரவஸை மிஞ்ச முடியாது என்பதை அறிந்த பீமன் அங்கே வந்து, சாத்யகியைத் தன் தேரில் ஏற்றி வைத்துக்கொண்டு, அப்பால் போய்விட்டான்.

சூரியன் அஸ்தமனம் ஆகிக்கொண் டிருந்தான். இது சமயம் அர்ச்சுனன் கௌரவ சேனையினரில் இருப்பத்தையா யிரம் வீரர்களை வதம் செய்துவிட்டான். நெருப்பை அணுகி உயிரைவிடும் விட்டில்கள்போல, வீரர்கள் அர்ச்சுனனை அணுகி, அவனுடைய படைக்கலன்களுக்குப் பலியானார்கள். மச்ச நாட்டினரும் கேகயர்களும் அர்ச்சுனனைச் சூழ்ந்து கொண்டு, அவனைப் பெரிதும் பாராட்டினார்கள்.

சூரியன் அஸ்தமனம் ஆனான். பீஷ்மர் போரை அத்துடன் நிறுத்திவிட்டார்.

## ஆறும் நாள் போர்

ஆறும் நாள், பொழுது புலர்ந்ததும் இரு தரப்பினரும் போருக்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்தார்கள். யுதிட்டிரன் கட்டளைப்படி, திட்டத்துய்மனன் பாண்டவ சேனையை, மகர வியூக முறைப்படி அணிவகுத்து நிறுத்தினான். பீஷ்மர் கௌரவ சேனையைக் கிரவுஞ்ச வியூகத்தில் அணிவகுத்தார்.

இரு தரப்புப் படைகளும் போரைத் தொடங்கின; அன்று நடந்த போரில், தொடக்கத்திலேயே ஆள் சேதம் அதிகமாக ஏற்பட்டுவிட்டது.

பீமசேனன் துரோணரை எதிர்த்தான். துரோணர் பீமனை எண்பது பாணங்களால் அடித்து, நையப் புடைத்து விட்டார். துரோணருடைய சாரதியைப் பீமன் வதம் செய்துவிட்டான். அதனால் கடிவாளத்தைப் பிடித்து, தாமே தேரை நடத்திக் கொண்டு, துரோணர் போர் செய்தார். பஞ்சுக் குவியலைத் தீ அழிப்பதுபோல பாண்டவ சேனையை அவர் அழித்தார்.

இரு தரப்பு வியூகங்களும் உடையத் தொடங்கின; பாண்டவ சேனையைச் சேர்ந்த கேகயர்களும் சிருஞ்சயர்களும் ஓடத் தலைப்பட்டார்கள். கைகலப்பு யுத்தம் கோரமாக நடந்தது.

* * *

வியாசரின் அருளைப் பெற்றிருந்த சஞ்சயன், நாள்தோறும் போர் நிகழ்ச்சிகளைத் திருதராட்டிர மன்னனுக்கு விவரித்து வந்தான்.

அப்போது திருதராட்டிரன், "ஏ சஞ்சயா! நமது

சேனை கடல் போல் பெரியது: போர்த்தந்திர முறைகள் அனைத்திலும் சிறந்தது. ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் போர்புரியக் கூடியது. இழிகுலத்தில் பிறந்தவர்கள் நமது சேனையை நடத்தவில்லை. உற்ரூர், உறவினர், சுற்றத்தார் முதலியோரால் நிரம்பி இருப்பது: அற்புதமான படைக் கலன்களையும் வாகனங்களையும் கொண்டது; பீஷ்மர், துரோணர், கிருபர், பகதத்தன், அசுவத்தாமா, ஜயத்ரதன் முதலிய பெரும் வீரர்களால் காக்கப்படுவது. இத்தகைய ஆற்றல் மிகுந்த நம் பெருஞ் சேனை, தோல்வியுற்று வருவதைக் கேட்கும்போது, என் மனம் புழுங்குகிறது. இது தெய்வச் செயலைத் தவிர்த்து வேறு இல்லை என்று நான் கருதுகிறேன். பாண்டவர்கள் சார்பில் தேவர்களே வந்து போர்புரிகிறூர்களோ என்று கருதுகிறேன். விதுரன் இதமாகச் சொன்ன புத்திமதிகளை என் புதல்வன் துரியோதனன் ஏற்க மறுத்துவிட்டான். தெய்வத்தின் திருவுளப்படி நடப்பது நடந்தே தீரும். அதை யாராலும் மற்ற முடியாது" என்று சொன்னன்.

அதற்குச் சஞ்சயன், "அரசே! நீர் செய்த தவறுகளின் காரணமாகவே இப்பொழுது நீர் இப்படித் துயரப்பட நேர்ந்திருக்கிறது! சூதாடுவதற்கு அனுமதி கொடுத்தது நீர்தான்! போர் நடக்க அனுமதித்தவரும் நீர்தான்! தான் செய்த செயல்களின் பயனை இம்மையிலும் மறுமையிலும் ஒருவனல் அனுபவிக்காமல் தீராது' என்று பதில் சொல்லிவிட்டுப் போர் நடப்புகளைத் திருதராட்டிர மன்னனுக்குத் தொடர்ந்து சொல்லத் தொடங்கினன்.

துரியோதனனுடைய தம்பியர்களைக் கொல்ல வேண்டும் என்ற எண்ணத்துடன், கௌரவர்களின் படைக்குள் புகுந்து அவர்களைப் பீமசேன் தேடினன். துச்சாதனன், துர்விஷகன், துஸ்ஸகன், துர்மதன், ஜயன், ஜயத்சேனன், விகர்ணன், சித்திரசேனன், சுதர்சனன், சாருசித்திரன், சுவர்மா, துஷ்கர்ணன் ஆகியோரும் பிறரும் காத்துவரும் கௌரவ சேனைக்குள் பீமன் புகுந்தபோது, இவர்கள் அனைவரும் அவனைச்சுற்றி வளைத்துக்கொண்டார்கள். பீமனை உயிரோடு பிடிக்க வேண்டும் என்று அவர்கள் ஆசைப்பட்டார்கள். கடுமையாக அவனைத் தாக்கினர்கள்.

பீமசேனன் சிறிதும் பயப்படவில்லை. தன்னைப் பிடிக்க வரும் துரியோதனன் தம்பியர்களை வதம் செய்வதில் பீமன் முனைந்து நின்ருன். தேவாசுர யுத்தம்போல இரு தரப்பி

லும் போர் நடந்தது. தான் ஒருவனாகவே நின்று, தன்னை எதிர்த்து வரும் வீரர்களையும் யானைகளையும் பீமசேனன் கொன்றான்.

பிறகு, பீமசேனன் கதாயுதத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, தேரிலிருந்து கீழே குதித்தான். அவன் தன் சாரதியை நோக்கி, "விசோகா! நீ இங்கேயே நில். நான் சென்று திருதராட்டிரன் புத்திரர்களை வதம் செய்துவிட்டுத் திரும்புகிறேன்" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டான்.

இப்படிச் சொல்லிவிட்டு, கடல்போன்ற கௌரவ சேனைக்குள் புகுந்தான் பீமன். யானைகளையும் குதிரைகளையும் கதாயுதத்தினால் அடித்துக் கொன்றான் காலதண்டத்தைக் கையில் பிடித்த காலன் போல, தன்னை எதிர்ப்பவர்களை எல்லாம் பீமன் அடித்துக் கொன்றான் அடியின் வேகத்தால் தேர்கள் உடைந்து துகள்துகளாய் விழுந்தன.

படையினுள் புகுந்த பீமன் திரும்பாததைக் கண்ட திட்டத்துய்மனன், துரோணருடன் போர் செய்வதை நிறுத்திக்கொண்டு, பீமனை நாடிவந்தான். படையினூடே புகுந்து பீமனையும் அவனுடைய தேரையும் தேடினான். பீமசேனன் இல்லாமல் தேர் மட்டும் சாரதியுடன் இருப்பதைக்கண்டு கவலையால் பெருமூச்சு விட்டான்; கண்களில் நீர் பெருகியது. சோகத்தால் மனம் புழுங்கியவாறு தேர்ப்பாகனை அணுகி, "விசோகா! உயிரைக் காட்டிலும் பிரியனான பீமன் எங்கே?" என்று கேட்டான்.

திட்டத்துய்மனனைக் கைகூப்பி வணங்கிவிட்டு, "அரசே! என்னை இங்கேயே நிற்கச் சொல்லிவிட்டு, திருதராட்டிரன் புத்திரர்களை வதம்செய்யும் பொருட்டு, கதாயுதத்துடன் படைக்குள் புகுந்தார்" என்று விசோகன் தெரிவித்தான்.

உடனே திட்டத்துய்மனன், "விசோகா! நான் இப்போது பீமனைத் தேடிச் செல்கிறேன். நான் பகைவர்களைக் கொன்று திரும்புவதை நீ காண்பாய்" என்று சொல்லி, பகைவர்களின் சேனையினூடே புகுந்தான். கதாயுதத்திற்கு இரையாகி வழிநெடுகிலும் யானைகள் கிடப்பதைப் பார்த்துக் கொண்டே திட்டத்துய்மனன் போனான்.

பகைவர்களுக்கு நடுவில் பீமன் நிற்பதைத் திட்டத்துய்மனன் பார்த்தான். பீமனுக்கு உடம்பு முழுவதும் காயங்கள்; கதாயுதத்தைக் கையில் பிடித்துக் கொண்டு, கடுங் கோபத்துடன் பீமன் போர்புரிந்து கொண்டு நின்றான்.

திட்டத்துய்மனன் அவனை அணுகி அன்போடு தழுவிக்கொண்டு, பீமன் உடம்பில் இருந்த அம்புகளை எடுத்து எறிந்தான். பிறகு அவனைத் தன் தேரில் ஏற்றிக்கொண்டு புறப்பட்டான்.

இது சமயம் துரியோதனன் வெகு வேகமாகத் தன் தம்பியர்கள் இருக்கும் இடத்தை அடைந்தான். "துருபத மன்னன் மகனும் பீமனும் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள். திட்டத்துய்மனனைத் தாக்குங்கள். இனிப் போர்செய்ய ஒட்டாதபடி அவனை ஒழித்துக் கட்டுங்கள்" என்று தன் தம்பியருக்குக் கட்டளையிட்டான்.

அவ்வாறே அவர்கள் புறப்பட்டுச் சென்று, திட்டத்துய்மனனைத் தாக்கினார்கள். இவர்களின் தாக்குதலை அவன் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. தான் துரோணரிடமிருந்து கற்றிருந்த ஓர் அத்திரத்தை ஏவி, அவர்களை மயக்கமடையச் செய்துவிட்டான்.

இதைக் கண்டதும் கௌரவப் படையைச் சேர்ந்தவர்கள் நாலா பக்கங்களிலும் சிதறியோடத் தலைப்பட்டார்கள். இந்தச் சமயத்தைப் பயன்படுத்தி, கொஞ்சம் நீர் பருகி, பீமன் இளைப்பாறிக்கொண்டான் பிறகு, எழுந்து சிங்கநாதம் செய்துகொண்டு, கௌரவர்களைத் தாக்கினான்.

இதுசமயம் திருதராட்டிரன் புதல்வர்கள் அத்திரத்தால் மயக்கமுற்றுக் கிடப்பதாக, துரோணர் கேள்விப்பட்டார். உடனே அவர் அந்த இடத்துக்கு வந்தபோது பீமனும் திட்டத்துய்மனனும் அங்கே நிற்பதைக் கண்டார். திட்டத்துய்மன் எய்த மோகனாத்திரத்துக்கு மாறான ஓர் அத்திரத்தைப் பிரயோகித்து, மயக்கமுற்றுக் கிடப்பவர்களுக்கு நினைவு வரும்படி செய்தார். அவர்கள் எழுந்து மறுபடியும் போரில் உற்சாகத்துடன் கலந்துகொண்டார்கள்.

திட்டத்துய்மனனைப்பற்றியும் பீமனைப்பற்றியும் நிலவரம் என்ன என்று தெரியாமல் இருந்தபடியால், யுதிட்டிரர் சிந்தை கலங்கினார். ஆகவே, அவர்களுக்கு உதவும் பொருட்டு அபிமன்யு தலைமையில் பன்னிரண்டு தேராளிகளை அனுப்பி வைத்தார். நண்பகல் நேரத்தில் இவர்கள் போர்க்களத்தில் புகுந்தார்கள். ஊசிமுனை என்னும் வியூகத்தை வகுத்து, கௌரவர்களுடைய சேனையை அவர்கள் பிளந்தார்கள்.

அபிமன்யு உதவிக்கு வந்திருப்பதை அறிந்த திட்டத்துய்மனனும் பீமனும் மகிழ்ச்சி அடைந்து, போரைத் தீவிரமாக நடத்தினார்கள்.

தன் குருவான துரோணர் தன்னை எதிர்க்க வந்திருப்பதைக் கவனித்த திட்டத்துய்மனன், கௌரவர்களைக் கொல்வதில் ஊக்கம் காட்டவில்லை. துரோணர் திட்டத்துய்மனனைத் தாக்கவே, பதிலுக்கு அவன் துரோணரைத் தாக்கினான்.

துரோணர் அவனுடைய வில்லை அறுத்தார்; குதிரைகளையும் சாரதியையும் கொன்றுவிட்டார். அதனால் திட்டத்துய்மனன் தன் தேரிலிருந்து குதித்து அபிமன்யுவின் தேரில் ஏறிக்கொண்டான்.

அன்று துரோணர் கடுமையாகப் போர்புரிந்த காரணத்தால், பாண்டவ சேனை நடுங்கித் தவித்தது. இதைக் கவனித்த கௌரவர் படையினர் களிப்புற்று ஆரவாரம் செய்தனர் துரோணரைச் சூழ்ந்துகொண்டு, அவரைப் பெரிதும் பாராட்டி புகழ்ந்தனர்

இதன் பின்னர், சங்குல யுத்தம் மிகக் கோரமாக நடந்தது. துரியோதனனும், பீமனும் நேருக்கு நேர் சந்தித்துக் கடுமையான முறையில் போர் செய்தார்கள். பீஷ்மர் பாண்டவர்களின் சேனையை ஓட ஓட அடித்துத் துரத்தினார்.

சூரியன் அஸ்தமனம் ஆகிக்கொண்டிருந்தான். பீமனை எப்படியாவது கொன்றுவிட வேண்டும் என்று துரியோதனன் முனைப்புடன் நின்றான். அப்பொழுது பீமன் அவனை நோக்கி, "காந்தாரியின் மைந்தனே! அநேக ஆண்டுகளாக நான் ஆசையுடன் எதிர்பார்த்திருந்த சந்தர்ப்பம் எனக்கு இப்போது வாய்த்திருக்கிறது. நீ எங்களுக்குச் செய்த கொடுமைகளுக்கு உரிய பலன் உனக்கு இப்போது கிடைக்கப் போகிறது. உன்னை நான் எமன் உலகு அனுப்பப் போகிறேன்" என்று கர்ஜித்தான்.

பிறகு, பாணங்களை ஏவி, துரியோதனனின் வில்லை அறுத்ததோடு, அவனுடைய தேர்ப்பாகனையும் கொன்று விட்டான் பீமன். அவனுடைய கொடியையும் குடையையும் கீழே தள்ளினான் பீமனின் தாக்குதலுக்கு ஆற்றாது மூர்ச்சித்து, தேர்த் தட்டில் உட்கார்ந்தான் துரியோதனன்.

இதைக் கவனித்த ஜயத்ரதன், தன் சேனையுடன் வந்து சூழ்ந்துகொண்டு, துரியோதனனைப் பாதுகாத்தான். நினைவு இழந்திருந்த அவனைத் தனது தேரில் ஏற்றி வைத்துக் கொண்டான்.

இது சமயம் அபிமன்யு வந்து, கௌரவர் படையைக் கடுமையாகத் தாக்கினான். கூரிய அம்புகளால் விகர்ணன் என்பவனை அடித்து வீழ்த்தி விட்டான்.

சூரியன் அஸ்தமனம் ஆகிவிட்டான். இரு தரப்புச் சேனையினரும் போர் செய்வதை நிறுத்திவிட்டுத் தத்தம் பாசறைகளுக்குத் திரும்பினார்கள். திட்டத்துய்மனனும் பீமனும் திரும்பியதைக் கண்ட யுதிட்டிரர், மகிழ்ச்சியடைந்து, அவர்கள் இருவரையும் உச்சிமோந்தார்.

## ஏழாம் நாள் போர்

ஏழாம் நாள் இரு தரப்பினரும் போருக்கு ஆயத்தமானார்கள். துரியோதனனுக்கு உடம்பு முழுதும் விழுப்புண்கள் ஏற்பட்டு இருந்தன. கவலை தோய்ந்த முகத்துடன் பிதாமகர் பீஷ்மரை அணுகி, "பாண்டவர்கள் நமது அணிவகுப்புகளைப் பிளந்து மகிழ்ச்சி அடைகிறார்கள். வீரர்களை வதம் செய்கிறார்கள். நம் அனைவரையும் நினைவு தப்பச் செய்கிறார்கள். மகர வியூகத்தைப் பிளந்துகொண்டு வந்து, பீமன் என்னைத் துன்புறுத்திவிட்டான். பீமனின் கோபத்தால் பயந்து என் மனம் தத்தளிக்கிறது நீர் ஊக்கம் காட்டினால் தான் பாண்டவர்களை நாம் வெல்ல முடியும். என் மனம் ஆறுதலைப் பெற முடியும்" என்று அவன் சொன்னான்.

துரியோதனன் இப்படிச் சொன்னதைக் கேட்டு, உதார குணமுள்ள பீஷ்மர் நகைத்தார். துயருற்று வருந்தும் துரியோதனனுக்கு ஆறுதல் மொழிகள் சொன்னார்.

"அரச குமாரா! உனக்கு வெற்றியும் நலமும் தேடித் தர வேண்டும் என்ற விருப்பத்துடன், போரில் நான் முழு மூச்சுடன் ஈடுபட்டு வருகிறேன். நான் வஞ்சனையோடு நடக்கவில்லை. பாண்டவர்களை யாராலும் வெல்ல முடியாது. உன் பொருட்டாக உயிரையும் துறக்க நான் சித்தமாய் இருக்கிறேன். தேவர்களும் அசுரர்களும் எதிர்த்து வரினும், உன் பொருட்டாக அவர்களின் உலகங்களை அழிப்பேன். பாண்டவர்களை எதிர்த்து உன் விருப்பம் ஈடேறச் செய்கிறேன்" என்று சொன்னார்.

பீஷ்மரின் வார்த்தைகளைக் கேட்டுத் துரியோதனன் அக மகிழ்ந்தான். "போருக்குப் புறப்படுங்கள்" என்று சொல்லி, படைகளை ஏவினான்.

பீஷ்மர் துரியோதனனுக்கு உற்சாகம் ஏற்படச் செய்தார். "அரசனே! நான் துரோணர், சல்லியன், கிருதவர்மா,

அசுவத்தாமா, விகர்ணன், பகதத்தன், சகுனி, அவந்தி நாட்டு அரசர்கள், பாகலீகன், திரிகர்த்த தேசாதிபதி, மகத தேசாதிபதி, பிருகத்பலன், கோசல நாட்டு மன்னன் ஆகியோர் உன் பொருட்டாகப் போர்செய்ய இருக்கும்போது, நீ ஏன் கவலைப் படுகிறாய்? ஆயிரக்கணக்கான குதிரைகளும், தேர்களும், யானைகளும், வீரர்களும், படைக்கலன்களும் உன் பொருட்டு, போர் செய்ய ஆயத்தமாய் இருக்கின்றன. உன் பொருட்டாக உயிரையும் துறக்கக் கூடிய துணிவு அவர்களுக்கு ஏற்பட்டு இருக்கிறது. ஆயினும் கண்ணன் ஆதரவு பெற்றுள்ள பாண்டவர்களை வெல்வது கடினம். இருந்தாலும், என்னால் ஆன மட்டும் முயன்று பாண்டவர்களை நான் வெல்லப் பார்க்கிறேன்'' என்று சொன்னார்.

பிறகு விசல்யகரணி என்ற ஒரு மருந்தை அவனுக்குக் கொடுத்தார். அதனால் காயங்கள் குணமடைந்து, துரியோதனன் மகிழ்ச்சியுற்றான்.

பொழுது புலர்ந்ததும் மண்டல வியூகத்தை வகுத்து, கௌரவ சேனையைப் பீஷ்மர் பாதுகாத்தார். கவசம் அணிந்து, தேரில் ஏறிக்கொண்டு போருக்குப் புறப்பட்டான் துரியோதனன்.

இதைக் கண்ணுற்ற யுதிட்டிரர் தம் சேனையை வச்சிர வியூகமாக அணிவகுக்கும்படி கட்டளையிட்டார்.

போர் தொடங்கிற்று. மச்ச நாட்டு மன்னனைத் துரோணர் எதிர்த்தார். சிகண்டியை அசுவத்தாமா எதிர்த்தார். திட்டத்துய்மனனைத் துரியோதனன் எதிர்த்தான். தங்கள் மாமன் சல்லியனை நகுல, சகதேவர்கள் எதிர்த்தார்கள். கடோத்கசனைப் பகத்தன் எதிர்த்தான்.

அங்கு வந்திருந்த அரசர்கள் அனைவரையும் அர்ச்சுனன் எதிர்த்தான். "மாதவரே! இந்த அரசர்கள் அனைவரையும் அழிப்பதை நீர் காண்பீர்'' என்று சொல்லி அம்பு மாரிகளைப் பொழிந்தான்.

அர்ச்சுனன் எதிர்ப்பை ஆற்றாது கௌரவ சேனையில் பெரிய கூக்குரல் உண்டாயிற்று. இதைக் கவனித்த துரியோதனன் மற்ற அரசர்களை நோக்கி, "வீரர்களே! தனஞ்சயனை எதிர்த்துப் போர் புரிவதில் பிரதாமகர் மிகுந்த முனைப்புடன் இருந்து வருகிறார். தம் உயிரையும் பொருட்படுத்தாமல் போரில் அவர் குதிக்கப் போகிறார். அவருக்குக் காப்பாகச் சென்று நீங்கள் அனைவரும் உதவுங்கள்'' என்று சொன்னான்.

பீஷ்மர் அர்ச்சுனனை எதிர்த்தார். வெள்ளைக் குதிரைகள்

பூட்டிய தேரில், வானரக் கொடி பறக்க, அர்ச்சுனன் போர்க் களத்தில் புகுந்தான். அவனையும் வாசுதேவரையும் பார்ப்பதற்கே கௌரவ சேனையினர் அஞ்சினார்கள். அதேபோல, பீஷ்மரைக் காணப் பாண்டவர்கள் அஞ்சினார்கள். நாற்புறங்களிலும் சுற்றி வளைந்து கொண்டு பீஷ்மர் போர் தொடுத்தார்.

விராடனுக்கும் துரோணருக்கும் நடந்த போரில் விராடன் தோற்றுப் போனான். அவனுடைய வில்லை அறுத்து, சாரதியையும் குதிரைகளையும் துரோணர் வதம் செய்து விட்டார். உடனே விராடன் துள்ளிக் குதித்து, தன் மைந்தன் சங்கனுடைய தேரில் ஏறிக்கொண்டான். இருவரும் சேர்ந்து துரோணரை எதிர்த்தார்கள். துரோணர் கோபம் கொண்டு, பாம்புபோன்ற கொடிய பாணம் ஒன்றைச் சங்கன் மீது விடுத்தான். அம்பும் வில்லும் நழுவி விழ, அந்த இடத்திலேயே சங்கன் உயிர் நீத்தான். இதைக் கண்ணுற்ற விராடன், பயந்து துரோணரை எதிர்க்காது அப்பால் போய் விட்டான்

துரோணர் ஆயிரக்கணக்கில் பாண்டவ சேனையை வதம் செய்தார்.

துரோண புத்திரர் அசுவத்தாமாவுக்கும் துருபதன் புத்திரன் சிகண்டிக்கும் கடும்போர் நடந்தது. சிகண்டியினுடைய சாரதியையும் குதிரைகளையும் அசுவத்தாமா கொன்று விட்டார். உடனே அவன் தேரிலிருந்து கீழே குதித்து, கத்தியையும் கேடயத்தையும் கையில் எடுத்துக் கொண்டு, போர்க்களத்தில் புகுந்து போர் செய்தான். அசுவத்தாமா அவனுடைய கேடயத்தை உடைத்து, வாளையும் துண்டாக்கி விட்டார். துண்டிக்கப்பட்ட கத்தியைச் சுழற்றி அசுவத்தாமாமீது வீசினான் சிகண்டி. அதையும் அசுவத்தாமா தடுத்துவிட்டார். கூரிய அம்புகளால் படுகாய முற்று இருந்த சிகண்டி, விரைந்து சாத்யகியினுடைய தேரில் ஏறிக்கொண்டான்.

அலம்புசன் என்ற அரக்கனுக்கும் சாத்யகிக்கும் கடும் போர் நடந்தது. கூரிய அம்புகளால் சாத்யகியை அந்த அரக்கன் படுகாயப்படுத்தினான். இருந்தும் சாத்யகி சளைக்காது போர் செய்தான். அவன் முன் நிற்க மாட்டாது பயந்து போய், அந்த அரக்கன் போர்க்களத்தைவிட்டு ஓடிப் போய் விட்டான். இதைக் கண்டதும் பாண்டவர் தரப்புச் சேனை வீரர்கள் பெருத்த ஆரவாரம் செய்தார்கள்.

துரியோதனனுக்கும் திட்டத்துய்மனனுக்கும் போர்

மும்முரமாக நடந்தது. திட்டத்துய்மனன் துரியோதனனுடைய வில்லை அறுத்து, அவனுடைய நேர்க் குதிரைகளையும் கொன்றுவிட்டான். தாமதியாது தேரிலிருந்து குதித்து, கத்தியை எடுத்துக்கொண்டு, திட்டத்துய்மனனை எதிர்த்தான் துரியோதனன், சகுனி வந்து உடனே துரியோதனனைத் தன் தேரில் ஏற்றிக்கொண்டு, அப்பால் அழைத்துப் போய் விட்டான்.

கிருதவர்மாவுக்கும் பீமனுக்கும் போர் நடந்தது. இருவரும் சளைக்காது போர் செய்தனர். பீமசேனன் அவனுடைய சாரதியையும் குதிரைகளையும் கொன்றுவிட்டான். கிருதவர்மாவின் உடம்பை அம்புகளால் துளைத்தான். அம்புகள் பதிந்திருந்த கிருதவர்மாவின் உடம்பு முள்ளம்பன்றி போலக் காட்சி அளித்தது. தோல்வியுற்ற கிருதவர்மா சகுனியின் தேரை நோக்கி ஓடினான்.

அவந்தி நாட்டு அரசர்கள் விந்தன் அநுவிந்தன் ஆகிய இருவரும், யாகசேனன் புதல்வன் யுதாமன்யு என்பவனை எதிர்த்தார்கள். அவர்களுடைய தேர்ப்பாகனை யுதாமன்யு வதம் செய்துவிட்டான். குதிரைகள் வெருண்டு போய், தேரை இழுத்துக் கொண்டு ஓடின. அந்த இருவரின் படையை அழித்து, அவர்களைத் தோல்வியுறச் செய்தான் யுதாமன்யு.

இடிம்பையின் புதல்வனான கடோத்கசன் பகதத்தனை எதிர்த்தான். பகதத்தன் பாண்டவ சேனையைப் பயந்து நடுங்கி ஓடும்படி செய்துவிட்டான். கடோத்கசன் ஒருவனைத் தவிர்த்து மற்றவர்கள் பயந்து ஓடிவிட்டார்கள். பகதத்தன் ஓயாது தாக்கி, கடோத்கசனின் தேர்க்குதிரைகளைக்கொன்று விட்டான். தனது ஆற்றல்கள் அனைத்தும் பகதத்தனிடம் பயன்படாது இருப்பதைக் கண்ட கடோத்கசன், பயந்து ஓட்டம் பிடித்தான்.

மத்ர நாட்டு மன்னன் சல்லியன், நகுல, சகதேவர்களுடன் போர்தொடுத்தான். நகுலனுடைய தேர்ப்பாகனையும் நான்கு குதிரைகளையும் சல்லியன் கொன்றான். உடனே நகுலன் தன் தேரிலிருந்து இறங்கித் தன் சகோதரன் சகதேவனுடைய தேரில் ஏறிக்கொண்டான். இருவரும் சல்லியனைத் தாக்கினார்கள். சகதேவன் சிறந்த ஓர் அம்பைச் சல்லியன்மீது ஏவவே, அதனால் அவன் படுகாயமுற்று மூர்ச்சை அடைந்தான். இதைக் கவனித்த சல்லியனுடைய தேர்ப்பாகன், அவனை வேறு ஓர் இடத்துக்குக் கொண்டு

சென்றான். சல்லியன் தோல்வியுற்றுத் திரும்புவதைக் கண்ட கௌரவ வீரர்கள் மனம்வருந்தி ஊக்கம் குன்றினர்.

நகுல, சகதேவர்களோ தங்கள் மாமனைத் தாங்கள் வென்றது குறித்து அகமகிழ்ந்தனர். அதற்கு அடையாள மாகச் சங்கங்களை முழக்கி, கர்ஜனை செய்தனர்.

சூரியன் உச்சிப்பொழுதை அடைந்திருந்த சமயம், யுதிட் டிரர் சிருதாயுவை எதிர்ப்பதற்கு விரைந்தார். அவர் அவனை எதிர்த்தபோது, சிருதாயு அம்புகளை ஏவி, யுதிட்டிரருடைய கவசத்தை உடைத்துவிட்டான். அதனால் அவருடைய தேகத்தில் காயங்கள் ஏற்பட்டன.

தருமநந்தனர் இதனால் அதிக கோபமுற்றார். தன் இயல் புக்கு முற்றும் மாறான கோபத்தைத் தருமநந்தனர் அடைந் திருப்பதைக் கண்டு உலகமே நடுங்கியது. ஊழிக் காலத்துச் சூரியன்போல, கோபத்தால் பிரகாசித்த யுதிட்டிரர், தமக்கு வந்த கோபத்தை மட்டுப்படுத்திக் கொண்டார். பிறகு, ஓர் அம்பை எடுத்து ஏவி, சிருதாயுவினுடைய குதிரைகளையும் சாரதியையும் கொன்றார். தேரிலிருந்து இறங்கி அவன் ஓடிப் போய்விட்டான்.

இதைக் கண்ட கௌரவ சேனை நிலைகலங்கி, புறங்காட்டி யோடத் தலைப்பட்டது.

சேகிதானன் என்பவன் பாண்டவர்கள் சார்பில் கிருபரை எதிர்த்தான். அம்பை ஏவி, சேகிதானனுடைய குதிரைகளை யும் சாரதியையும் கிருபர் வதம் செய்துவிட்டார். உடனே, அவன் தேரிலிருந்து குதித்து, ஒரு கதையை எடுத்துக் கொண்டு ஓடி, கிருபருடைய குதிரைகளைக் கொன்று, சாரதி யையும் வதம் செய்துவிட்டான். கிருபர் தேரிலிருந்து இறங்கிக்கொண்டு, வில்லால் சேகிதானனைத் தாக்கினார். சேகிதானன் கத்தியை எடுத்துக்கொண்டு கிருபரைத் தாக்கு வதற்காக ஓடினான். கிருபரும் வில்லைக் கீழே போட்டுவிட்டுக் கத்தியை எடுத்துக்கொண்டார். கத்தியால் தாக்கிக் கொண்ட இருவரும் காயமுற்றுக் கீழே விழுந்தார்கள். இதைக் கவனித்த பீமசேனன் தேரை யோட்டிவந்து, சேகி தானனைத் தன் தேரில் தூக்கி வைத்துக்கொண்டு அப்பால் போய்விட்டான். சகுனி வந்து கிருபரைத் தன் தேரில் ஏற்றிக்கொண்டு, அப்பால் அழைத்துச் சென்றான்.

திருஷ்டகேதுவுக்கும் பூரிசிரவஸ் என்பவனுக்கும் இடை யில் போர் நடந்தது. அதில் திருஷ்டகேது தேரையும் குதிரை

களையும் இழந்து, தோல்வியுற்றுப் போர்க்களத்தைவிட்டு ஓடிப் போனான்.

துரியோதனன் தம்பியர் மூவர், அர்ச்சுனன் புதல்வன் அபிமன்யுவை எதிர்த்துச் சென்றார்கள். அவர்களைக் கடுமையாகத் தாக்கி, அபிமன்யு தோல்வியுறச் செய்தான். "இவர்களை நான் கொன்றால் பீமசேனன் செய்துகொண்டுள்ள சபதத்துக்குப் பங்கம் நேரும்" என்று கருதி அவர்களை ஒன்றும் செய்யாது விட்டுவிட்டான அபிமன்யு.

இதுசமயம் அபிமன்யுவைத் தாக்குவதற்காகப் பீஷ்மர் வந்தார். இதைக் கவனித்துவிட்ட அர்ச்சுனன், "மாதவரே! யுத்த மதம்கொண்ட கௌரவர்களை நாம் தாக்கலாம். தேரை அவர்கள் இருக்கும் இடம் செலுத்தும்" என்று சொன்னான்.

அதன்படி வாசுதேவர் தேரைச் செலுத்தினார். அர்ச்சுனன் கௌரவர்களைப் பலமாகத் தாக்கினான். இரு தரப்பிலும் போர் கடுமையாக நடந்தது; இரத்தம் ஆறாகப் பெருகி ஓடியது.

கடுமையாகத் தாக்கி, கௌரவர் தரப்பு அரசர்களை அர்ச்சுனன் வதம் செய்துவிட்டான். இதைக் கவனித்த திரிகர்த்த ராஜன் கோபங்கொண்டு, அர்ச்சுனனை எதிர்த்து வந்தான்; துரியோதனன், ஜயத்ரதன் முதலானவர்களும் வந்து தனஞ்சயனைத் தாக்கினார்கள். இவர்களை விட்டுவிட்டு, பீஷ்மரைத் தாக்கும் பொருட்டு அர்ச்சுனன் புறப்பட்டான். பீஷ்மரும் மற்ற அரசர்களைத் தாக்குவதை விட்டுவிட்டு, அர்ச்சுனனைத் தாக்க முனைந்தார்.

இது சமயம் மற்றப் பாண்டவர்களும் வந்து அர்ச்சுனனுடன் சேர்ந்து, பீஷ்மரைத் தாக்கினார்கள். பீஷ்மர் அவர்கள் அனைவருக்கும் ஈடுகொடுத்து, சளைக்காது போர்க்களத்தில் நின்றார். பீஷ்மர் ஆக்ரோஷத்துடன் போர்செய்து, சிகண்டியினுடைய வில்லை அறுத்துவிட்டார்.

அப்போது யுதிட்டிரர் சிகண்டியை நோக்கி, "வீரனே! 'பீஷ்மரை நான் வதம் செய்வேன். இது உறுதி' என்று உன் தந்தை துருபத மன்னன் முன்னர் நீ சபதம் செய்தாய். அதை நிறைவேற்றி, உனது புகழை நிலைநாட்டிக்கொள். எனது சேனைகளைப் பீஷ்மர் தவிக்கச் செய்துகொண்டிருப்பதை நீயே பார்" என்று சொன்னார்.

யுதிட்டிரர் இப்படிச் சொன்னதும், தனது தவறை உணர்ந்து, சிகண்டி, பீஷ்மரை எதிர்க்க விரைந்தான்.

சல்லியன் தாக்குவதையும் பொருட்படுத்தாமல் சிகண்டி நின்றான். இது சமயம் பீஷ்மர், ஒரு பாணத்தை ஏவி, யுதிட்டிரருடைய வில்லையும் கொடியையும் அறுத்துவிட்டார். அவருடைய குதிரைகளையும் கொன்றுவிட்டார். உடனே யுதிட்டிரர் தன் தம்பி ஒருவனுடைய தேரில் ஏறிக்கொண்டு, போர் தொடுத்தார். பீஷ்மரின் ஆற்றலை எதிர்த்துச் சமாளிக்க மாட்டாது, யுதிட்டிரர் பெரிதும் கவலைப்பட்டார்.

சூரியன் அஸ்தமனம் ஆகிக்கொண்டிருந்தான். நரிகள் போர்க்களத்தில் புகுந்து, ஊளையிட்டு, மாமிசங்களைத் தின்னத் தொடங்கின. பூதங்களும், பேய்களும், மாமிசம் தின்னும இதர விலங்குகளும் ஆயிரக் கணக்கில் போர்க் களத்துக்கு வந்து, மாமிசங்களைத் தின்றன.

போரை இரு பக்கத்தாரும் நிறுத்திவிட்டு, பாசறை களுக்குத் திரும்பினார்கள். உடம்பில் தைத்திருந்த அம்புகளை அகற்றி, காயங்களைக் கழுவி, முறைப்படி மருந்து போட்டுக் கொண்டார்கள். பிறகு பகைமை உணர்ச்சியை மறந்து, இசைக் கருவிகளை வாசித்து, சிறிது நேரம் உல்லாசமாகப் பொழுது போக்கினார்கள். அப்போது அந்த இடம் பார்ப் பதற்கு இனிமையாகவும், சொர்க்க லோகத்தை நிகர்த்தும் இருந்தது. அப்பொழுது போர் சம்பந்தமான பேச்சையே ஒருவரும் பேசவில்லை.

## எட்டாம் நாள் போர்

ஏழாம் நாள் இரவு பாண்டவர்களும் கௌரவர்களும் நன்றாக அயர்ந்து தூங்கினார்கள். எட்டாம் நாள் பொழுது புலர்ந்ததும், இரண்டு கடல்கள் ஒலிப்பதைப்போல முழங்கிக் கொண்டு, போருக்கு ஆயத்தமானார்கள். பீஷ்மர் கௌரவர் களின் படையைக் கூர்ம வியூகமாக வகுத்து, அதன் முன் அணியில் சென்றார். அவரை அடுத்து, துரோணர் சென்றார். துரோணரை அடுத்து, பகதத்தன் சென்றான். துரியோதனன் தன் தம்பியர்களுடன் சேர்ந்து அசுவத்தாமாவை அடுத்துச் சென்றான்.

கௌரவர்களின் இந்த வியூகத்தைக் கவனித்த யுதிட் டிரர் தன் சேனாதிபதி திட்டத்துய்மனனிடம் "வீரனே! ஒழுங்காக அணிவகுத்துக் கடல்போல நிற்கும் கௌரவர் களின் சேனையைப் பார். இந்த அணியை எதிர்ப்பதற்கு

ஏற்ற எதிர் அணியை வகுக்க ஏற்பாடு செய்" என்று சொன்னார்.

அதன்படி திட்டத்துய்மனன் சிருங்காடகம் என்னும் வியூகத்தை வகுத்து, பாண்டவர்களின் படையைப் போருக்கு ஆயத்தப்படுத்தினான். பேரிகைகள் முழங்கின. சேனை வீரர்கள் முதலில் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். மனத்தாலேயே ஒருவருடன் ஒருவர் போரிட்டுக் கொண்டார்கள். பிறகு, உடலைத் தாக்குகிற போரில் ஈடுபட்டார்கள்.

முதலில் பீஷ்மர் பாண்டவ சேனையைக் கடுமையாகத் தாக்கி, வீரர்களை வதம் செய்தார். பீமன், பீஷ்மரைத் தாக்கி, அவருடைய தேர்ப்பாகனைக் கொன்றுவிட்டான். துரியோதனன் தம்பி சுநாபன் என்பவனை ஓர் அம்பினால் கொன்றான்.

இதனால் கோபமுற்ற சகோதரர்கள் ஆதித்யகேது, பகவாசி, குண்டதாரன், மகோதரன், அபராஜிதன், பண்டிதகன், விசாலாக்ஷன் ஆகிய எழுவரும் ஓடிவந்து பீமனை எதிர்த்தார்கள். இவர்கள் ஏழு பேரையும் பீமன் போர் செய்து யமன் உலகு அனுப்பினான். துரியோதனன் கவலையில் ஆழ்ந்தான்; சபையில் தான் செய்த சபதத்தைப் பீமன் நிறைவேற்றிவிடுவானோ என்று அஞ்சிய மற்றவர்கள், போர்க்களத்திலிருந்து வெகு வேகமாக ஓட்டம் எடுத்தார்கள். பேரறிஞர் விதுரர் சொன்ன அறிவுரையைக் கேளாததன் பலன் என்று தங்களைத் தாங்களே நொந்து கொண்டார்கள்.

துக்கம் மேலிட்டுத் துரியோதனன் புலம்பலானான். அவன் பீஷ்மரை அணுகி, "என் சகோதரர்களைப் பீமன் வதம் செய்துவிட்டான். நீங்கள் எங்களிடம் பிரியம் காட்டாமல் நடுநிலைமை வகிக்கிறீர்கள். இதனால் எங்களுக்கு நேர்ந்த அழிவைப் பாருங்கள்" என்று சொல்லி வருந்தினான்.

துரியோதனன் இப்படிச் சொன்னதும் பீஷ்மர் கண்களில் நீர் ததும்பியது. அவர் துரியோதனனை நோக்கி, "பகைவர்களை அழிப்பவனே! இப்படி நடக்கும் என்பதை, நான், துரோணர், விதுரன், காந்தாரி ஆகியவர்கள் உனக்கு எடுத்துக்காட்டினோம். தன்னை எதிர்ப்பவர்களைப் பீமன் கொல்லாமல் விடமாட்டான். மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு நீ போரில் இறங்கு. முடிவில் சொர்க்கமே கதி என்பதை நினைத்துக்கொள். பாண்டவர்களைத் தேவர்களாலும் வெல்ல முடியாது" என்று சொன்னார்.

நடுப்பகல்வரை போர் கடுமையாக நடந்தது. இரு தரப்புச் சேனைகளிலும் சேதம் அதிகம். போர்க்களத்தில் இரத்த வெள்ளம் கரைபுரண்டு ஓடியது. அலறலும், கூக்குரலும், அழுகையும் நாலா பக்கமும் கேட்டன.

சகுனி பாண்டவர்களைக் கடுமையாகத் தாக்கினான்.

அர்ச்சுனனுக்கு நாக கன்னிகை உலூபிகை என்பவளிடத்தில் பிறந்த மகன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் இராவான. அவன் பாண்டவர்களுக்குத் துணை செய்ய விரும்பி, போரில் கலந்துகொண்டான். இராவானுக்கும் காந்தார நாட்டுப் படைக்கும் போர் கடுமையாக நடந்தது. இந்தப் போரில் சகுனியின் சகோதரர்களை இராவான் வதம் செய்துவிட்டான்.

இதனால் கோபமடைந்த துரியோதனன், அலம்புசன் என்னும் அரக்கனை நோக்கி, "வீரனே! இந்த இராவானை நீ கொல். இவனால் அழிவு அதிகமாகி வருகிறது" என்று சொல்லி ஏவினான்.

"ஆகட்டும்" என்று சொல்லிவிட்டு, சிங்கநாதம் செய்து கொண்டு, அந்த அரக்கன், இராவானை நாடிப் புறப்பட்டான். மாயையில் வல்ல இருவருக்கும் இடையில் போர் கடுமையாக நடந்தது. கடைசியில் இராவான் என்பவனை அலம்புசன் என்னும் அந்த அரக்கன் கொன்றுவிட்டான்.

தன் புதல்வன் இராவான் கொல்லப்பட்ட செய்தி தெரியாமல் அர்ச்சுனன் வேறு இடத்தில் மற்ற அரசர்களைத் தாக்கிக் கொண்டிருந்தான்.

இராவான் கொல்லப்பட்டதை அறிந்து, பீமசேனன் குமாரன் கடோத்கசன் கோபத்தால் கொதித்து எழுந்தான். சூலாயுதத்தை எடுத்துக்கொண்டு, இடிபோல் முழங்கி, நாற்புறமும் திரிந்து, கௌரவ வீரர்களை அழித்தான். ஊக்கம் குன்றிக் கௌரவர் சேனை தவித்தது.

இதைக் கவனித்த துரியோதனன், பெரிய வில்லைக் கையில் ஏந்திக்கொண்டு, கடோத்கசனை எதிர்த்து வந்தான். அப்போது, கடோத்கசனைச் சேர்ந்த அரக்கர்கள் துரியோதனனுடைய யானைப் படைகளை அழித்துவிட்டார்கள்; இதனால் மிகுந்த பரபரப்பு அடைந்த துரியோதனன், அரக்கர்களைக் கடுமையாக எதிர்த்தான். பிரபலமான நான்கு அரக்கர்களை அவன் வதம் செய்துவிட்டான்.

உடனே கடோத்கசன் துரியோதனனை நேரில் எதிர்த்தான். அவன் துரியோதனனை நோக்கி, "நீ என் தந்தையர்

களைக் காட்டுக்குப் போகச் செய்து, கொடுமைப்படுத்தினாய். தாய் திரௌபதியைப் பலவாறு துன்புறுத்தி, அவமானப் படுத்தினாய். அவற்றுக்கு எல்லாம் உரிய பலனை இன்று நீ அனுபவிக்கப் போகிறாய்" என்று முழங்கினான்.

இவ்வாறு சொல்லிவிட்டு, பெரிய வில் ஒன்றை எடுத்துக் கொண்டும், தன் கடைவாய்களை நக்கிக்கொண்டும் துரியோதனனை அவன் எதிர்த்தான். துரியோதனனும் அவனை எதிர்த்தான். கடோத்கசன் பெரிய சக்தி ஒன்றை எடுத்துக் கொண்டு, துரியோதனனைக் கொல்ல விரைந்தான். கடோத்கசனை வங்க நாட்டு மன்னன் தடுத்து விட்டான். அதனால் கோபமுற்ற கடோத்கசன் அந்தச் சக்தியை அவனுடைய பெரிய யானைமீது வீசவே, குருதி சொரிய, அந்த யானை கீழே விழுந்து உயிரைவிட்டது.

இதைக் கண்ணுற்ற துரியோதனன் அதிக வருத்த முற்றான். கடோத்கசனை அவனால் எதிர்த்து நிற்க முடிய வில்லை. ஆயினும், அரசகுல தருமத்தை அனுசரித்து, போர்க் களத்தை விட்டு அசையாது நின்றான். பெரிய பாணம் ஒன்றை எடுத்து, அந்த அரக்கன்மீது ஏவினான். கடோத்கசன் உரக்கக் கர்ஜித்ததால், சேனைகள் பயந்து நடுங்கின.

கடோத்கசனுடைய பயங்கரமான ஒலியைச் செவிமடுத்த பீஷ்மர், துரோணாச்சாரியரிடம், "இப்பொழுது செவி மடுத்த கர்ஜனை, துரியோதனனுடன் கடோத்கசன் போர் புரிகிறான் என்பதை அறிவிக்கிறது. போரில் இவனை வெல்ல யாராலும் முடியாது. துரியோதனனைக் காப்பாற்ற நாம் அனைவரும் விரைந்து செல்வது அவசியம்" என்று சொன்னார்.

துரோணர், சோமதத்தன், ஜயத்ரதன், அசுவத்தாமா முதலியோர் துரியோதனன் போர் செய்யும் இடத்துக்கு விரைந்தனர். இவர்கள் வருவதைப் பொருட்படுத்தாமல், கடோத்கசன் அசையாது நின்றான். போர் கடுமையாக நடந்தது. வந்தவர்கள் அனைவரும் கடோத்கசனிடம் தோற்றுப் போனார்கள். கடோத்கசன் துரியோதனனை எதிர்த்து ஓடினான். பதிலுக்குக் கௌரவர்கள் அவனை எதிர்த்து, துன்பம் கொடுத்தார்கள். கருடனைப்போல் கிளம்பி, ஆகாயத்தில் எங்கும் சஞ்சரித்து, அவன் கர்ஜனை செய்தான்.

இந்தக் கர்ஜனையைச் செவிமடுத்த யுதிட்டிரர், பீமசேனனிடம், "கடோத்கசன் திருதராட்டிரன் புதல்வர்களுடன் போர் புரிகிறான் என்று தெரிகிறது. பீஷ்மர், பாஞ்சாலர்

களைத் தாக்குவதனால், அர்ச்சுனன் அங்கே போர் புரிகிறான்; இடிம்பையின் புதல்வன் தனியாக நின்று பகைவர்களை எதிர்த்து வருவதால், அவனுக்கு உதவி புரிய நீ செல்'' என்று சொன்னார்.

தன் தமையனின் கட்டளைக்கு இணங்க, பீமன் புறப் பட்டுச் சென்றான். பெரும் சேனை ஒன்று, அபிமன்யு தலைமை யில் ஆறாயிரம் யானைப் படையுடன் கடோத்கசனைப் பாது காக்க விரைந்தது. இதைக் கண்டதும் கௌரவ சேனை, கடோத்கசனுடன் போர் செய்வதை நிறுத்திக்கொண்டது. பயத்தால் வெலவெலத்து ஓடவும் தலைப்பட்டது.

தனது சேனை ஓட்டம் எடுப்பதைக் கண்ட துரியோதனன், பீமசேனனைத் தானே நேரில் எதிர்த்தான். துரியோதன னுக்கு உதவியாக, துரோணர் ஆட்களை அனுப்பினார். பூரி சிரவஸ் முதலியோர் துரியோதனனைச் சூழ்ந்துகொண்டு அவனைப் பாதுகாத்தார்கள். துரோணரும் உடன் வந்து பீமசேனனைத் தாக்கினார். பீமசேனன் பாணங்களால் அவரைத் திருப்பி அடிக்கவே, மூர்ச்சித்து, அவர் தேரின்மீது உட்கார்ந்தார்.

இதைக் கவனித்த அசுவத்தாமாவும் துரியோதனனும் ஒன்றுகூடிப் பீமனைத் தாக்கினார்கள். தேரிலிருந்து குதித்து, கதாயுதத்தால் பீமசேனன் அவர்களுடன் போர் செய்தான். இதுசமயம் கடோத்கசனும் விரைந்து, கௌரவ சேனையைப் படுநாசப்படுத்திவிட்டான். அவனுடைய மாயைக்கு ஆற்ற மாட்டாது, கௌரவ சேனை, நடுக்கமுற்று ஓடத் தலைப் பட்டது. பீஷ்மர் முதலியவர்கள் தடுத்துப் பார்த்தும், பயத்தால் வெலவெலத்த கௌரவ சேனை ஓடுவதை நிறுத்த வில்லை. சூரியனும் அஸ்தமனம் ஆகிக்கொண்டிருந்தான்.

கடோத்கசன் அடைந்த வெற்றி, துரியோதனனுக்கு ஆழ்ந்த வருத்தத்தை உண்டுபண்ணியது. அவன் பீஷ்ம ரிடம் சென்று, விவரத்தைச் சொல்லி வருந்தினான். ''பிதாமகரே! தங்களையும் துரோணரையும் நம்பி, நான் பாண்டவர்களை எதிர்த்தேன். கடோத்கசன் இன்று என்னைத் தோற்கடித்துவிட்டான். இந்தத் தோல்வி என் உள்ளத்தைப் பெரிதும் எரிக்கிறது. பிறரால் அவமதிக்க இயலாத உம்மை அடுத்து, அந்தக் கடோத்கசனை நான் வதம் செய்ய விரும்பு கிறேன்'' என்று தெரிவித்துக்கொண்டான்.

அதற்குப் பீஷ்மர், ''அரசனே! நான் சொல்வதைக் கேள். நீ எப்பொழுதும் அரசர்களுடன் போர்போரிவதற்கு முனைந்து

றில். இயவனை கடோத்கசனுடன் போர் புரிய விரும்பாதே. உன் பொருட்டாக நானும் துரோணரும் உன் தம்பியரும் போர் புரிகிறோம்" என்று சொன்னார்.

இப்படிச் சொல்லிவிட்டு, பகதத்தனைக் கடோத்கச னுடன் போர்புரிய அனுப்பினார். பகதத்தன் கடுமையாகப் போர் புரிந்து, பீமசேனனின் தேர்க் குதிரைகளைக் கொன்று, தேர்ப்பாகனைப் படுகாயப்படுத்திவிட்டான். இதனால் கோப முற்ற பீமன், கதாயுதத்தை எடுத்துக்கொண்டு அவனுடன் போர் செய்தான்.

இது சமயம் அர்ச்சுனன், தேரில் கண்ணனுடன் அந்த இடத்துக்கு வந்து சேர்ந்தான். இராவான் வதம் செய்யப் பட்ட விவரத்தை இது சமயம் அர்ச்சுனனுக்கும் கண்ண பிரானுக்கும் பீமன் சொன்னான்.

தன் புதல்வன் போர்க்களத்தில் மடிந்தான் என்பதை அறிந்த அர்ச்சுனன் அளவற்ற துயரம் அடைந்தான். அவன் கிருஷ்ணனை நோக்கி, "போர் நடந்தால் அதனால் பாண்டவர் களுக்கும், கௌரவர்களுக்கும் பெருத்த தீமை ஏற்படும் என்பதை அறிஞர் விதுரர் முன்பே அறிந்திருக்கிறார். பொருளின் பொருட்டாக, உறவினர்கள் ஒருவரை ஒருவர் கொல்லும் இந்த இழிநிலை ஏற்பட்டு இருக்கிறது. உறவினர் களைக் கொன்று, செல்வச் சீமான் ஆவதைக் காட்டிலும் வறுமையில் உழன்று உயிரை விடுவதே மேலானது. துரியோதனனுடன் சமாதானமாகிவிடுவதை யுதிட்டிரர் விரும்பினாரே அது நியாயம்தான் என்று தோன்றுகிறது. இரு திறத்து வீரர்களும் போர்க்களத்தில் கொலையுண்டு குவிந்து கிடப்பதைக் காணும்போது, ஐந்து கிராமங்களை யுதிட்டிரர் கேட்டது சாலச் சிறந்த செயல்தான். போர் செய்வதில் எனக்கு விருப்பம் இல்லை. அரசர்கள் என்னைக் கோழை என்று கருதிவிடக்கூடாதே என்பதற்காகத்தான் இப்பொழுது நான் போரில் இறங்கி இருக்கிறேன். துரியோ தனன் இருக்கும் இடத்தை நாடித் தேரைச் செலுத்தும்" என்று சொன்னான்.

அதன்படி கண்ணபிரான் தேரைச் செலுத்திச் சென்றார். அர்ச்சுனன் அங்கே சென்றதும் போர் மும்முரமாக நடந்தது. அப்போது பீமசேனன், துரியோதனன் தம்பியர்—அநா திருஷ்டி, குண்டபேதி, விராஜன், நீப்தலோசனன், தீர்க்க பாகு, சுபாகு, மகரத்துவஜன் ஆகியவர்களை விரட்டி விரட்டி அடித்து, வதம் செய்துவிட்டான்.

அஸ்தமனம் ஆகி, இரவு தொடங்கியபடியால், போரை நிறுத்திக்கொண்டு, பாண்டவர்களும், கௌரவர்களும் பாசறைகளுக்குத் திரும்பினார்கள்.

## ஒன்பதாம் நாள் போர்

தினக்குத் தோல்வி ஏற்பட்டு வருவதனால் கலக்கமுற்ற துரியோதனன், சகுனி, கர்ணன் முதலானவர்களை அழைத்து யோசனை செய்தான். பாண்டவர்களை எவ்வாறு வெல்வது என்பதுபற்றி அவர்கள் ஆலோசித்தார்கள். அப்போது துரியோதனன் கர்ணனிடம், "கர்ணா! துரோணர், பீஷ்மர், சல்லியன் ஆகியோரால் பாண்டவர்களைப் போரில் வெல்ல முடியவில்லை. அதற்கு உரிய காரணமும் எனக்குத் தெரிய வில்லை. ஆனால், பாண்டவர்கள் என் படையை அழித்துக் கொண்டே இருக்கிறார்கள். துரோணர் பார்த்திருக்க என் தம்பியர்களைப் போரில் பீமன் வதம் செய்துவிட்டான். பாண்டவர்களை வெல்ல எத்தகைய முறையில் நாம் போராட லாம்?" என்று கேட்டான்.

இதைக் கேட்ட கர்ணன், "அரசே! நீர் கவலைப்பட வேண்டாம். பீஷ்மர் போரிலிருந்து விலகி இருந்து கொண் டால், பாண்டவர்கள் பார்த்திருக்க, பீமனை நான் வதம் செய்வதை நீ காண்பாய். இது உறுதி. பீஷ்மர் பாண்டவர் களிடம் கருணையோடு நடந்து வருகிறார். பாண்டவர்கள் அனைவரும் ஒருங்குசேர்ந்து எதிர்த்தாலும், அவர்கள் அனை வரையும் வெல்லும் ஆற்றல் பெற்றவர் பீஷ்மர்; இருந்தும் அவர்களை எதிர்ப்பதில் முனைப்பின்றி அவர் இருக்கிறார். போர்க்களத்தைவிட்டு விலகி, பீஷ்மர் ஆயுதத்தைக் கீழே வைத்துவிடட்டும். பாண்டவர்களை நான் ஒரு கை பார்க்கி றேன்" என்று சொன்னான்.

"அவ்வாறே செய்கிறேன்" என்று சொல்லிவிட்டு, துரியோதனன் புறப்பட்டான். குதிரைமீது ஏறிக்கொண்டு அலங்காரமாகச் சென்ற துரியோதனனைத் தம்பியர்கள் புடைசூழ்ந்து சென்றார்கள். பீஷ்மர் இருக்கும் பாசறையை அடைந்து, துரியோதனன் குதிரையிலிருந்து இறங்கிக்கொண் டான். உள்ளே சென்று அவரைக் கைகூப்பி வணங்கிவிட்டு, சிறந்த ஆசனம் ஒன்றில் உட்கார்ந்தான். கண்களில் நீர் மல்கி நிற்க, பீஷ்மரை நோக்கி, "பகைவரை அழிப்பவரே!

நீர் முனைப்புடன் போர் தொடுத்தால் பாண்டவர்களை எளிதில் வதம் செய்துவிடலாம். 'பாஞ்சாலர்களை நான் வதைப்பேன்' என்று முன்பு நீர் சபதம் செய்து இருக்கிறீர். அந்தச் சபதத்தை இப்போது நடைமுறைப்படுத்தும். என்னிடம் அன்பு குறைந்துவிட்டதனால்தான் நீர் பாண்டவர்களிடம் கருணை காட்டுகிறீர் என்று கருதுகிறேன். ஆகவே மனமுவந்து கர்ணனுக்கு நீர் அனுமதி கொடுத்தால், அவன் கட்டாயம் பாண்டவர்களை வெல்வது திண்ணம்" என்று சொன்னான்.

உதாரகுணமுள்ள பீஷ்மரிடம் துரியோதனன் நேர்முகமாகவும் இடித்தும் இவ்வாறு பேசினான். பீஷ்மர் பெருமூச்சு விட்டுக் கண்களை உருட்டி விழித்து அவனைப் பார்த்தார். "துரியோதனா! என் ஆற்றலுக்கு ஏற்ப உன் நன்மையின் பொருட்டு நான் போர் செய்து வருகிறேன். அதை அறியாது கொடுஞ் சொற்களால் என்னை நீ தாக்குகிறாய். சொல்லத் தக்கது எது, சொல்லத்தகாதது எது என்பதை எல்லாம் அறியாமல் நீ பேசுகிறாய். சாகப்போகும் மனிதனுக்கு மரங்கள் அனைத்தும் தங்கமயமாகத் தோன்றுமாம். அதே போல யாவற்றையும் விபரீத நோக்கோடு நீ பார்க்கிறாய். நீயே வலிந்து பாண்டவர்களிடம் பகைமை தேடிக்கொண்டாய். எனவே, அவர்களுடன் ஆண்மையோடு போர் செய்து பார்; இந்திரன் முதலிய தேவர்களாலும் பாண்டவர்களை வெல்ல முடியாது. சிகண்டி ஒருவனைத் தவிர்த்து, மற்றவர்களை நான் வதம் செய்வேன். சிகண்டியை மட்டும் நான் எதிர்க்க மாட்டேன். பெண்ணாய்ப் பிறந்து பிறகு வரத்தின் வலிமையால் ஆண்தன்மையை அடைந்தவன் அவன். அத்தகைய ஒருவனை என் உயிர்போயினும் நான் வதம் செய்ய மாட்டேன். நாளைய தினம் பெரும் போர் நடப்பதை நீ காண்பாய்" என்று சொன்னார்.

பீஷ்மரை வணங்கி, விடை பெற்றுக்கொண்டு தன் இருப்பிடம் திரும்பினான் துரியோதனன். மகிழ்ச்சியுற்று, சேனைகளைத் திரட்டும்படி அவன் கட்டளையிட்டான்.

இரவு துரியோதனன் புலம்பிச் சென்றதைச் செவிமடுத்த பீஷ்மர், அவன் தன்னை அவமதிப்பதாகக் கருதினார். பிறனை அடுத்து வாழ்வதை நினைந்து, தம்மைத் தாமே அவர் நிந்தித்துக்கொண்டார். அர்ச்சுனனுடன் போர்புரிவதற்கான உபாயங்களைப்பற்றி நெடு நேரம் சிந்தித்தார்.

பீஷ்மர் ஆக்ரோஷத்துடன் போர் செய்வார் என்பதை

அறிந்துகொண்ட துரியோதனன் ஆறுதல் அடைந்தான். தன் தம்பி துச்சாதனனை நோக்கி, "நமது படைகளைப் போருக்கு ஆயத்தம் செய்; பரிசுத்தமனத்துடன்' தாம் போர் புரியப் போவதாகப் பீஷ்மர் என்னிடம் சொன்னார். சிகண்டி ஒருவனை மட்டும், தாம் எதிர்க்கமுடியாது என்றும், மற்றவர்களைத் தாம் கடுமையாக எதிர்க்கப்போவதாகவும் கூறினார். ஆகையால் நமது முழுப் பலத்தையும் கொண்டு, கண்காணிப்புடன் பீஷ்மரை நாம் பாதுகாக்க வேண்டும். கவனக் குறைவாக இருந்தால், சிங்கத்தைக்கூடச் செந்நாய் கொன்று விடும். பீஷ்மரைச் சிகண்டி தாக்காதபடி நாம் கவனமாய் இருக்க வேண்டும். சகுனி, சல்லியன், துரோணர், கிருபர் ஆகியோர் பீஷ்மரைப் பாதுகாக்கட்டும்" என்று சொன்னான்.

அதன்படி பீஷ்மரை முன்னிட்டுக்கொண்டு, கௌரவர்கள் போருக்குக் கிளம்பினார்கள். பீஷ்மருக்குப் பாதுகாவலாக அவரைச் சுற்றி, சூழ்ந்து சென்றார்கள்.

இதைக் கவனித்த அர்ச்சுனன் திட்டத்துய்மனனிடம், "பாஞ்சாலனே! சிகண்டியைப் பீஷ்மருக்கு எதிரில் நிற்கச் செய்; அவனை நான் பாதுகாக்கிறேன்" என்று கூறினான்.

கௌரவர்களுக்காக, சர்வதோபத்திரம் என்ற பெரிய வியூகத்தைப் பீஷ்மர் வகுத்தார். பாண்டவர்களும் எதிர் அணி வகுத்துப் போருக்கு ஆயத்தமானார்கள்.

பறைகள், வாத்தியங்கள், சங்கங்கள் ஆகியவற்றை முழக்கிக்கொண்டு, இருதரப்பைச் சார்ந்தவர்களும் ஒருவரை ஒருவர் எதிர்த்தார்கள்.

இது சமயம் பல துர்நிமித்தங்கள் தோன்றின. சூரியன் பிரகாசம் குன்றிப்போனான்; நரிகள் பயங்கர ஒலியுடன் ஊளையிட்டன. மண்மாரி பொழிந்தது; இரத்தத்தோடு கலந்த எலும்பு மழை பெய்தது வாகனங்கள் கவலையுற்று ஜலமலங்களைப் பெருக்கின. நாய்கள் குரைத்தன.

இன்று அபிமன்யு திறமையாக அம்புகளைப் பொழிந்து எதிரிகளை நடுங்கச் செய்தான்; அரசர்கள் அவனைப் பெரிதும் பாராட்டினார்கள். அர்ச்சுனன் புதல்வனான அவனை அரசர்கள் அர்ச்சுனனாகவே கருதினார்கள். அபிமன்யுவின் ஆற்றலுக்கு ஈடுகொடுக்க முடியாது கௌரவ சேனை அலறியது.

இதைச் செவிமடுத்த துரியோதனன் இரிசியசிங்கரின் புதல்வன் அலம்புசன் என்பவனைத் தன்பால் அழைத்து "நமது சேனையை அபிமன்யு கடுமையாகத் தாக்

அவனை எதிர்ப்பதற்கு நீதான் வல்லவன். நீ சென்று அந்த அபிமன்யுவைத் தாக்கி வதம்செய்; நாங்கள் அர்ச்சுனனை வதம் செய்கிறோம்" என்று சொன்னான்.

உடனே அலம்புசன் என்னும் அந்த அரக்கன் கர்ஜித்துக் கொண்டு, போர்க்களத்தில் புகுந்தான். அவனுடைய கர்ஜனையைக் கேட்ட பாண்டவ சேனை நிலைகலங்கியது. பல வீரர்கள் பயத்தால் நடுங்கி, உயிர்பிரிந்து பூமியில் விழுந் தார்கள். அர்ச்சுனன் புதல்வன் அபிமன்யு அவனை விரைந்து எதிர்த்தான். மாயையில் வல்லவனான அந்த அரக்கன், தன் மாயைகளை எல்லாம் காட்டி, அபிமன்யுவை எதிர்த்தான். அபிமன்யு அவற்றை எல்லாம் சமாளித்து நின்று அலம்பு சனை எதிர்த்தான். அலம்புசன் தாக்குப் பிடிக்க முடியாது தேரைவிட்டு இறங்கி ஓட்டம் பிடித்தான். கௌரவ சேனை யும் நிலைகலங்கி ஓட்டம் பிடிக்கத் தலைப்பட்டது.

அசுவத்தாமாவுக்கும் சாத்யகிக்கும் இடையில் கடும் போர் நடந்தது. சாத்யகி விடுத்த அம்புகளால், அசுவத் தாமா மூர்ச்சையுற்றார். பிறகு மூர்ச்சை தெளிந்து, சாத் யகியை அவர் அடித்தார். இது சமயம், துரோணர் தன் புதல்வனுக்கு உதவியாக வந்து, சாத்யகியை அடித்தார். சாத்யகிக்கு உதவியாக வந்து அர்ச்சுனன் துரோணரை அடித்தான். இருவருக்கும் இடையில் போர் பிரமாதமாக நடந்தது.

பீஷ்மர் கடுமையாகப் போர்செய்த காரணத்தால், பாண்டவ சேனை நிலைகலங்கியது. நாலா பக்கங்களிலும் சிதறியோடத் தொடங்கியது; ஆற்றாது புலம்பிக்கொண்டு, பசுமந்தைபோல, நாலா பக்கங்களிலும் தடுமாறிக்கொண்டு ஓடியது.

இதைக் கவனித்த கண்ணன், மேலும் தேரை ஓட்டாமல் நிறுத்திக்கொண்டார். அவர் அர்ச்சுனனை நோக்கி, "வீரனே! விராடன் சபையில் நீ எடுத்துக்கொண்ட சபதத்தை நினைவு கூர்ந்து, பீஷ்மரைத் தாக்கு. அரசகுல தருமத்தை நினைந்து நீ போர்செய்" என்று சொன்னார்.

கண்ணன் இப்படிச் சொன்னதும் அர்ச்சுனன் தலை குனிந்துகொண்டான். போர்செய்யத் தனக்கு விருப்பம் இல்லை என்பதுபோலப் பேசலானான். "கொல்லத் தகாதவர் களைக் கொன்று அரசை அடைவதை நான் விரும்பவில்லை. ஆயினும் நீர் சொல்வதால், நான் போர் செய்கிறேன். பீஷ்மர் போர்புரியும் இடத்துக்குத் தேரைச் செலுத்தும்" என்று சொன்னான்.

அதன்படி மாதவர் அங்கே தேரைச் செலுத்தினார். அர்ச்சுனன் போர்புரிய வந்துவிட்டான் என்பதை அறிந்ததும் பாண்டவ சேனை உற்சாகம் அடைந்தது.

பீஷ்மர் அர்ச்சுனனையும் கண்ணனையும் கூரிய அம்புகளால் தாக்கினார்; அர்ச்சுனன் பீஷ்மரின் வில்லை அறுத்து விட்டான். மீண்டும் ஒரு பெரிய வில்லை எடுத்து நாண் ஏற்றப் போனார் பீஷ்மர். அந்த வில்லையும் அர்ச்சுனன் அறுத்து விட்டான்.

அர்ச்சுனனுடைய திறமையைப் பீஷ்மர் பெரிதும் புகழ்ந்தார். "குந்தி மைந்தனே! உன் திறமையே திறமை!" என்று அவனைப் பாராட்டினார்.

பீஷ்மர் பிறகு வேறு ஒரு வில்லை எடுத்துக்கொண்டு அர்ச்சுனனையும் கண்ணனையும் தாக்கி, அவர்கள் இருவர் உடலிலும் காயங்களை உண்டுபண்ணினார். இதைச் சட்டை செய்யாது, தேரைப் போர்க்களத்தில் கண்ணன் திறமையாகச் செலுத்தினார்.

அர்ச்சுனன் தயங்கித் தயங்கி, பீஷ்மருடன் போர் புரிவது கண்ணனுக்குப் பிடிக்கவில்லை. ஆகையால், தேரை நிறுத்திவிட்டு அவர் கீழே குதித்தார். ஆயுதம் எடாமல் தன் கைகளாலேயே போர் செய்ய விரும்பி, பீஷ்மரை அவர் எதிர்க்க விரைந்தார்.

இதைக் கண்டதும் அர்ச்சுனன் விரைந்து சென்று, கண்ணனைத் தன் இரு கைகளாலும் கட்டிப்பிடித்துக்கொண்டான். அவருடைய கால்களைப் பற்றிக்கொண்டு, "கேசவரே! நீர் போர் செய்யக் கூடாது. 'நான் போர்புரியேன்' என்று நீர் கூறியதை நினைவுபடுத்திக்கொள்ளும். 'கண்ணன் பொய் பேசுபவர்' என்னும் நிந்தனை உமக்கு ஏற்பட வேண்டாம். பீஷ்மரை வதம் செய்வது என் முழுப் பொறுப்பு; இது உறுதி! உறுதி! உறுதி! எனது ஆயுதங்களின்மீது ஆணை" என்று சொன்னான்.

இப்படி அர்ச்சுனன் சொன்னதும், கேசவர் திரும்பி வந்து தேரில் ஏறிக்கொண்டார்.

பீஷ்மர் பிறகு அவர்களைத் தாக்கினார். பாண்டவ சேனை பயமுற்று ஓடியது. அதைத் தடுத்து நிறுத்துவார் யாரையும் காணோம்.

இது சமயம் சூரியன் அஸ்தமனம் ஆனான். இரு தரப்பினரும் போர் செய்வதை அத்துடன் நிறுத்திக்கொண்டார்கள்.

# தம்மைக் கொல்ல வழி சொன்னவர்

ஒன்பதாம் நாள் இரவு வந்தது. பாண்டவர்கள் தங்கள் படைகளுக்குப் பீஷ்மரால் ஏற்பட்டிருக்கும் பெருத்த அழிவை நினைத்து மிகுந்த கவலைப்பட்டார்கள். பிறகு தங்கள் சார்பினரை எல்லாம் ஒருங்குகூட்டி யோசனை செய்தார்கள். யுதிட்டிரர் நெடுநேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பிறகு அவர் கிருஷ்ணனை நோக்கி அடியில் வருமாறு சொன்னார்:

"கிருஷ்ணரே! தாமரைக் காட்டை யானை அழிப்பது போல, எனது படையைப் பீஷ்மர் அழித்து வருகிறார். இந்திரன், யமன், குபேரன், வருணன் இவர்களைக்கூட வெல்லலாம்; ஆனால் பாட்டனார் பீஷ்மரை வெல்ல முடியாது என்று தோன்றுகிறது. புத்திக்குறைவினால் நான் ஆரம்பித்த இந்தப் போரை இத்துடன் நிறுத்திக்கொண்டு, கானகம் திரும்புவதையே மேன்மையானது என நான் கருதுகிறேன். உம் கருத்து என்ன? எங்கள் நன்மையில் எப்பொழுதும் நாட்டமுள்ள நீர் இனி நாங்கள் செய்யத்தக்கது என்ன என்பதைச் சொல்லும்" என்று கேட்டார்.

அதற்குக் கண்ணன் பல காரணங்களை எடுத்துக்காட்டிப் பதில் சொல்லி, யுதிட்டிரனுக்கு ஆறுதல் ஏற்படச் செய்தார். "தருமசீலரே! வீரர்களான தம்பியர்களைப் பெற்றுள்ள நீர் துயரப்படலாகாது. அனுமதி தந்தால் பீஷ்மரை எதிர்த்துப் போர்புரிய நான் தயாராக இருக்கிறேன். பீஷ்மரை வீழ்த்துவதாக முன்பு அர்ச்சுனன் சபதம் செய்திருக்கிறான். இதை அவன் எளிதில் செய்து முடிப்பான் என்பது திண்ணம். பீஷ்மருக்கு அந்திம காலம் சமீபித்துவிட்டது. அதனால் அறிவு மயக்கம் ஏற்பட்டு, செய்யத்தக்கவற்றைச் செய்யத் தெரியாது திகைக்கிறார்" என்று சொன்னார்.

இதற்குத் தருமநந்தனர், "வாசுதேவரே! பிதாமகர் பீஷ்மர் எங்களைப் பிள்ளைப் பருவத்திலிருந்தே பேணி வளர்த்தவர். எங்கள்பால் அன்புள்ளவர். 'உனக்காக நான் போர் புரிய மாட்டேன். ஆயினும் உன் நன்மையின் பொருட்டு, செய்யத்தக்கதைச் செய்கிறேன்' என்று எனக்கு அவர் வாக்களித்து இருக்கிறார். ஆகவே நாம் அனைவரும் அவரை அணுகி, இதுபற்றி ஆலோசனை கேட்டு, அவரை வதம் செய்யலாம்" என்று சொன்னார்.

உடனே கண்ணபிரான், "அறிஞரே! இதுதான் சரியான

யோசனை; நாம் அனைவரும் பீஷ்மரிடம் செல்லலாம்" என்று பதில் சொன்னார்.

எனவே கண்ணபிரானும் பாண்டவர்களும் ஆயுதங்களை வைத்துவிட்டு, பீஷ்மரிடம் சென்றார்கள். சென்று தலை தாழ்த்தி வணங்கி நின்றார்கள்.

பீஷ்மர் அவர்கள் அனைவரையும் அன்புடன் வரவேற்றார். "வாசுதேவரே! உமக்கு நல்வரவு. பாண்டவர்களே! உங்களுக்கு நல்வரவு! உங்கள் நன்மையின் பொருட்டாய் இப்பொழுது என்ன செய்ய வேண்டுமோ சொல்லுங்கள்; அதை அட்டியின்றிச் செய்கிறேன். ஆயினும் போரை மட்டும் உங்களுக்காக நிறுத்த முடியாது" என்று சொல்லிக் கேட்டார்.

அதற்கு யுதிட்டிரர். "பிதாமகரே! நாங்கள் போரில் வெற்றி அடைவதை விரும்புகிறோம்; நாட்டை அடைய விரும்புகிறோம். படையினருக்கு அழிவு நேராமல் இருப்பதை விரும்புகிறோம். தேவரீர் உயிருடன் இருக்கும் வரை எங்கள் விருப்பம் நிறைவேற வழி இல்லை. ஆகையால் உம்மை வதம் செய்வதற்குரிய வழியை எங்களுக்கு நீர் சொல்ல வேண்டும். இல்லையேல் உம்மை யாராலும் வெல்ல முடியாது; எங்கள் விருப்பமும் நிறைவேற முடியாது" என்று சொன்னார்.

"தரும நந்தனா! நீ கூறுவது முற்றும் உண்மை. நான் உயிருடன் இருக்கும்வரை போரில் உங்களுக்கு வெற்றி கிட்டாது. என்னை நீங்கள் ஜயித்துவிட்டதாகவே கொள்ளலாம். ஆகையால் போரில் என்னைப் பலமாகத் தாக்குங்கள். என்னை நீங்கள் உள்ளது உள்ளபடி அறிவீர்கள்" என்று சொன்னார் பீஷ்மர்.

"உண்மை நாங்கள் வெல்வதற்குரிய வழி எது? அதை நீர் எங்களுக்கு உரைக்க வேண்டும்" என்று வேண்டிக்கொண்டார் யுதிட்டிரர்.

"பாண்டு புதல்வனே! ஆயுதம் எடுத்து நான் போர் செய்யத் தொடங்கிவிட்டால் என்னை இந்திரனாலும் வெல்ல முடியாது. ஆயுதத்தை நான் கீழே வைத்துவிட்டால், எந்த வீரனாலும் என்னைக் கொல்ல முடியும். ஆயுதத்தைக் கீழே வைத்தவன், விழுந்தவன், கவசத்தை இழந்தவன், கொடியை இழந்தவன், ஓடுகிறவன், பயந்தவன், 'நான் உன்னைச் சேர்ந்தவன்' என்று கூறுபவன், பெண்ணால் ஜயிக்கப்பட்டவன், பெண்ணை முக்கியமாகக் கருதுபவன், பெண் என்று பிரசித்திபெற்றவன், பெண் பெயரை வைத்துக்

கொண்டிருப்பவன், அங்கஹீனன், ஒரே ஒரு மகளை உடையவன், குழந்தை இல்லாதவன், பேடி இவர்களை எதிர்த்து நான் ஒருபோதும் போர்புரியேன். அரசனே! சிகண்டி என்பவன் சிறந்த வீரன் அல்லன்; பெண்ணாய்ப் பிறந்து, பிறகு ஆணாக மாறியவன்; அவன் போர் புரிவதில் முனைப்புடன் இருந்து வருகிறான். அவனை முன்னிட்டுக்கொண்டு வந்து அர்ச்சுனன் போர் புரியட்டும்; அம்புகளால் என்னை அடிக்கட்டும். அர்ச்சுனன், கண்ணன் இவர்கள் இருவரையும் தவிர்த்து, என்னைப் பாணத்தினால் அடிக்கக் கூடிய வேறு மானுடனை நான் காணவில்லை இப்படி நீ செய்தால் உனக்கு வெற்றி உண்டு" என்று சொன்னார்.

இதன் பின்னர், பாண்டவர்கள், பீஷ்மருக்கு வணக்கம் தெரிவித்துவிட்டுத் தங்கள் பாசறைகளுக்குத் திரும்பினார்கள்.

திரும்பியதும் அர்ச்சுனன் மிகுந்த கவலையுற்றான்; துக்கம் தாளாமல் அவன் கண்ணனை நோக்கி, "மாதவரே! பிராயம் முதிர்ந்த பாட்டனாரை எதிர்த்து நான் எவ்வாறு போர் புரிவேன்? குழந்தையாய் இருக்கும்போது, புழுதிபடிந்த உடலுடன் எவருடைய மடியில் நான் ஏறி விளையாடினேனோ, அவரை வதம் செய்ய எனக்கு எவ்வாறு மனம் வரும்? நான் போர்புரிய விரும்பவில்லை. வெற்றியோ தோல்வியோ ஏற்படுவது ஏற்படட்டும். அதில் எனக்கு அக்கறை இல்லை" என்று சொன்னான்

அதற்குக் கண்ணன், "அர்ச்சுனா! 'பீஷ்மரை நான் வதைப்பேன்' என்று நீ சபதம் செய்ததை இப்போது நினைவுபடுத்திக்கொள். அவரைக் கொல்லாவிட்டால் உங்களுக்கு வெற்றி இல்லை. வயது முதிர்ந்தவனாய் இருந்தாலும், அறிவில் சிறந்தவனாய் இருந்தாலும், நற்குணங்கள் வாய்க்கப் பெற்றவனாய் இருந்தாலும், அவன் தன்னைக் கொல்ல வருவானாயின் அவனை நிச்சயமாகக் கொல்லலாம்; கொல்ல வேண்டும்" என்று சொன்னார்.

"சரி, அப்படியாயின், சிகண்டியை முன்னிட்டுக்கொண்டு, பீஷ்மரை நான் வதம் செய்கிறேன்" என்று அர்ச்சுனன் சம்மதித்தான்.

பாண்டவர்களும் கண்ணனும் அர்ச்சுனனுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டுப் புளகாங்கிதம் அடைந்தார்கள். மனநிறைவுடன் படுத்துத் தூங்கினார்கள்.

# பத்தாம் நாள் போர்

பத்தாம் நாள், பொழுது புலர்ந்ததும், பேரிகைகளையும் மத்தளங்களையும் முழக்கி, சங்கங்களை எடுத்து பாண்டவர்கள் ஊதினார்கள். படைகளை அணிவகுத்து நிறுத்திச் சிகண்டியை முன்னதாக நிற்கச் செய்துகொண்டு பாண்டவர்கள் போருக்குப் புறப்பட்டார்கள்.

கௌரவர்கள் பீஷ்மர் தலைமையில் போருக்குக் கிளம்பினார்கள்.

போர் ஆரம்பமாயிற்று; நகுலன், சகதேவன், சாத்யகி ஆகிய மூவரும் கௌரவப் படையில் புகுந்து அதைக் கலைத்து நாசம் செய்தார்கள். பாதுகாப்பார் இன்றி, கௌரவ வீரர்கள் சிதறி ஓடினார்கள். யானை, குதிரை, காலாட்கள் ஆகியோருக்கு ஏற்பட்ட அபரிமிதமான சேதத்தைக் கண்டு பீஷ்மர் பொறுக்கவில்லை. தம் உயிரையும் திரணமாக மதித்துப் பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் பீஷ்மர் கடுமையாக எதிர்த்தார். வானவில்லை நிகர்த்த பெரியதொரு வில்லைத் தம் கையில் எடுத்துக்கொண்டு, போர்க்களத்தில் பீஷ்மர் சஞ்சரிப்பதைக் கவனித்த பாண்டவர்கள் ஆச்சரியமுற்று நின்றார்கள்.

சிகண்டி, பீஷ்மரை மூன்று பாணங்களால் அடித்தான். பீஷ்மருக்குக் கோபமும் சிரிப்பும் ஒருங்கே உண்டாயின. அவர் சிகண்டியை நோக்கி, "நீ அடிக்க விரும்பினால் அடி. சும்மா இருக்க விரும்பினால் சும்மா இரு. பதிலுக்கு உன்னை நான் திருப்பி அடிக்கப்போவது இல்லை" என்று கூறினார்.

அதற்குச் சிகண்டி, "புயவலி மிக்கவரே! உம் மகிமையை நான் அறிவேன். பாண்டவர்களுக்கு நன்மை செய்யும் விருப்பத்துடன் போர்க்களத்தில் உம்மை நான் எதிர்க்கத்தான் போகிறேன். நீர் என்னை எதிர்த்தாலும் சரி, அல்லது எதிர்க்காது சும்மா இருந்தாலும் சரி, அதை நான் ஒரு பொருட்டாகக் கொள்ளப்போவது இல்லை. உம்மை நான் வதம்செய்யாமல் விடப்போவது இல்லை. இது உறுதி" என்று முழங்கினான்.

இவ்வாறு சொல்லிவிட்டு, ஐந்து பாணங்களால் சிகண்டி பீஷ்மரை அடித்தான். இதுதான் பீஷ்மரை வதைப்பதற்குத் தக்க சமயம் என்று கருதிய அர்ச்சுனன், சிகண்டியை நோக்கி, "பகைவர்களை அடித்து விரட்டிக்கொண்டு உன்னை நான் பின் தொடர்கிறேன். நீ துரிதமாகப் பீஷ்மரைத் தாக்கு. கௌர

வர்களால் ஏது நேருமோ என்ற அச்சம் உனக்கு வேண்டாம் என்னுடன் சேர்ந்திருக்கும் நீ பீஷ்மரை வதம் செய்யாவிட்டால், ஜனங்கள் உன்னைக் கேலி செய்வார்கள். துரோணர், கிருபர், அசுவத்தாமா, ஜயத்ரதன், அலம்புசன், பூரிசிரவஸ் ஆகியோரை நான் கவனித்துக்கொள்கிறேன். நீ பீஷ்மரை வதம் செய்" என்று தூண்டினான்.

கௌரவர்கள் பீஷ்மருக்குப் பக்க பலமாகச் சென்றார்கள். தாம் எடுத்துக்கொண்ட சபதப்படி, பீஷ்மர் பாண்டவர்களின் படைகளை அழித்தார்.

அர்ச்சுனன் பீஷ்மரை எதிர்த்தான். அர்ச்சுனன் செய்த முழக்கத்தைக் கேட்டுக் கௌரவ சேனையினர் ஓட்டம் பிடித்தார்.

இதனைக் கலக்கமுற்ற துரியோதனன், பீஷ்மரை அணுகி, "ஐயா! கண்ணனைச் சாரதியாகவுடைய பார்த்தன், நெருப்புக் காட்டைக் கொளுத்துவதுபோல, எனது படைகளை அழித்து வருகிறான். வீரர்கள் நாலா பக்கங்களிலும் சிதறியோடுகின்றனர். கருணைகூர்ந்து, கௌரவ சேனையை நீர் காப்பாற்றும். உம்மைத் தவிர வேறு கதி எங்களுக்கு இல்லை" என்று புலம்பினான்.

துரியோதனன் இப்படிச் சொன்னதும், பீஷ்மர் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்தார். தம் மனதில் ஒரு நிச்சயத்தைச் செய்துகொண்டு, துரியோதனனை மனம் ஒறுதலடையத்தக்க வார்த்தைகளைச் சொன்னார்.

"துரியோதனா! 'நாளொன்றும் பதினாயிரம் வீரர்களை நான் வதைப்பேன்' என்று உனக்கு நான் வாக்குறுதி தந்தபடி காரியங்களைச் செய்து முடித்து இருக்கின்றேன். இனி நடக்க வேண்டிய பெரிய காரியம் ஒன்று இருக்கிறது. அது யாதெனில், போரில் நான் படுவேன், அல்லது பாண்டவர்கள் படுவார்கள். பாண்டவர்களை இந்திரன் முதலிய தேவர்களாலும் ஜயிக்க முடியாது. மற்றவர்களைப்பற்றிக் கேட்பானேன்? உன்னிடம் உண்ட சோற்றுக்கு என் உயிரை விட்டு எனது கடனை நான் தீர்த்துக் கொள்கிறேன்" என்று சொன்னார்.

இவ்வாறு சொல்லிவிட்டு, பீஷ்மர் பாண்டவர்களின் சேனையைக் கடுமையாகத் தாக்கினார். பாண்டவர்களும் பீஷ்மரை எதிர்த்துப் போர்புரிந்தார்கள். பாண்டவர்கள் சேனையில் இலட்சக்கணக்கான வீரர்களையும் குதிரைகளையும் யானைகளையும் பீஷ்மர் வதம் செய்துவிட்டார்.

அப்போது அர்ச்சுனன் சிகண்டியிடம், பயப்படாமல் "நீ பீஷ்மரை எதிர்த்துத் தாக்கு. நானும் கூரிய அம்புகளால் அவரைத் தாக்கித் தேரிலிருந்து அவரைக் கீழே தள்ளுகிறேன்" என்று சொன்னான்.

அதன்படி சிகண்டி பீஷ்மரை எதிர்த்தான்; திட்டத்துய்மனன், அபிமன்யு, விராடன், துருபதன், குந்திபோஜன், நகுலன், சகதேவன், யுதிட்டிரர் ஆகிய அனைவரும் பீஷ்மரை எதிர்க்கும் பொருட்டுச் சென்றார்கள்.

கிருதவர்மா திட்டத்துய்மனனைத் தடுத்தான்.

பீமசேனனைச் சோமதத்தன் மகன் தடுத்தான்.

விகர்ணன் நகுலனைத் தடுத்தான்.

சகதேவனைக் கிருபர் தடுத்தார்.

துர்முகன் என்னும் அரக்கன் கடோத்கசனை எதிர்த்தான்.

சாத்யகியை அலம்புசன் எதிர்த்தான்.

அபிமன்யுவைக் காம்போஜ நாட்டு மன்னன் எதிர்த்தான்.

விராடன், துருபதன் ஆகிய இருவரையும் அசுவத்தாமா தடுத்தார்.

துரோணர் யுதிட்டிரரைத் தடுத்தார்.

அர்ச்சுனனைத் துச்சாதனன் தடுத்தான்.

பீஷ்மரைக் கடுமையாக எதிர்க்கும்படி பாண்டவ சேனையை உற்சாகப்படுத்தினான் திட்டதுய்மனன். "வீரர்களே! விரைந்து செல்லுங்கள். அர்ச்சுனன் பீஷ்மரை எதிர்க்கப் போகிறான். பீஷ்மர் இனி நீண்ட காலம் மண்ணுலகில் வாழ மாட்டார். அர்ச்சுனன் விரைவில் அவரை வதம் செய்துவிடுவான்" என்று உற்சாகப்படுத்தினான்.

அதன்படி பாண்டவ சேனையைச் சேர்ந்தவர்கள் பீஷ்மரை எதிர்க்க விரைந்தார்கள்.

துச்சாதனன், பீஷ்மரைக் காக்க விரைந்தான். கூரிய மூன்று அம்புகளால் அர்ச்சுனனையும் இருபது அம்புகளால் வாசுதேவரையும் அவன் அடித்தான். இதனால் கோபமுற்ற அர்ச்சுனன் துச்சாதனனைக் கடுமையாக எதிர்த்தான். அவனுடைய தேரை உடைத்து, வில்லையும் அறுத்து விட்டான் அர்ச்சுனன். அர்ச்சுனனை எதிர்த்து நிற்க மாட்டாது பீஷ்மருடைய தேரை நாடி ஓட்டம் பிடித்தான் துச்சாதனன்.

இது சமயம் துரோணர் தம் புதல்வனிடம், "குழந்தாய்! போர்க்களத்தில் பல துர்நிமித்தங்கள் தோன்றுகின்றன. இன்று பீஷ்மரை அர்ச்சுனன் கடுமையாகத் தாக்கப் போகிறான். சிகண்டியை முன்னிட்டுக்கொண்டு பார்த்தன் செல்வதனால், சிகண்டியைப் பீஷ்மர் தாக்காமல் இருப்பார். இதனால் பீஷ்மருக்கு ஆபத்து நேரும் என்பதில் ஐயம் இல்லை. ஆகவே, அர்ச்சுனன் வரும் வழியில் நிற்காமல் வேறு விலகி இருந்துகொள்; வேறு இடங்களில் போர் செய். நீ திட்டத்துய்மனனை எதிர்த்துச் செல்; நான் யுதிட்டிரனை எதிர்க்கிறேன்" என்று சொன்னார்.

பத்தாவது நாள் அன்று நடந்த போரில் பீஷ்மர் பாண்டவ சேனைக்குப் பெருத்த அழிவை உண்டுபண்ணினார். ஆயிரக்கணக்கான வீரர்களை அவர் வதம் செய்தார். போர் செய்து செய்து சலிப்படைந்த அவர், மேலும் போரைத் தொடர்ந்து நடத்த விரும்பவில்லை; உயிருடன் வாழவும் பிரியப்படவில்லை. ஆகவே, அவர் யுதிட்டிரனிடம், "அறிஞனே! போர் செய்து செய்து நான் அலுத்துப் போனேன். நீண்ட காலம் ஜீவித்திருக்க எனக்கு விருப்பம் இல்லை. இந்த உடல் மீதே எனக்கு வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. ஆகையால் அர்ச்சுனனை முன்னிட்டுக்கொண்டு என்னை வதம்செய்ய முயற்சி செய். அது எனக்குப் பிரியமான காரியத்தைச் செய்ததாகும்" என்று சொன்னார்.

இரு தரப்பிலும் போர் மும்முரமாக நடந்தது. இரு தரப்புச் சேனைகளும் சிதறியோடத் தலைப்பட்டன. "பீஷ்மரை வதம்செய்ய முனைந்து நில்" என்று அர்ச்சுனன் சிகண்டியை உற்சாகப்படுத்தியபடி இருந்தான். சிகண்டி கூரிய அம்புகளால் பீஷ்மரைத் தாக்கினான். பீஷ்மர் பதிலுக்கு அவனைத் தாக்காமல் மற்றவர்களைத் தாக்கினார். அர்ச்சுனனைத் துணைக்கு அழைத்துக்கொண்டு, அருகில் வந்து பீஷ்மரைச் சிகண்டி அடித்தபோது, பீஷ்மர் அர்ச்சுனனைத் தான் தடுத்தார். துச்சாதனன் பீஷ்மருக்கு உதவியாக நின்று, பாண்டவர்களை ஆக்ரோஷத்துடன் தாக்கினான்.

சிகண்டி, பீஷ்மரைப் பாணங்களால் அடிக்க அடிக்க, அதைப் பிதாமகர் புன்னகையுடன் ஏற்றுக்கொண்டார்.

"அர்ச்சுனனைக் கண்டு பயப்படாமல் எதிர்த்துப் போர் புரியுங்கள். பீஷ்மரை எதிர்த்து முறியடிக்க யாராலும் முடியாது" என்று கௌரவ சேனையைத் துரியோதனன் உற்சாகப்படுத்தினான்.

அதன்படி எதிர்த்துச் சென்ற அரசர்கள் அனைவரையும் அர்ச்சுனன் முறியடித்துவிட்டான்.

பாண்டவர்களும் பாண்டவர்களைச் சேர்ந்த அரசர்களும் சிகண்டியும் பீஷ்மரைத் தாக்கினார்கள். பீஷ்மருடைய கவசம் சிதறிவிட்டது; உடம்பில் பலத்த காயங்கள் ஏற்பட்டன. இதை எல்லாம் பொருட்படுத்தாமல் பீஷ்மர் அவர்களைப் பாணங்களால் திருப்பி அடித்தார்.

சிகண்டி ஏவிய கணைகள் பீஷ்மரை ஒன்றும் செய்யவில்லை. ஆகவே சிகண்டியைத் தனக்கு முன்னர் நிறுத்திக்கொண்டு அர்ச்சுனன் பீஷ்மரைத் தாக்கத் தொடங்கினான்; எடுத்த எடுப்பிலேயே பீஷ்மருடைய வில்லை அர்ச்சுனன் முறித்து விட்டான். மீண்டும் மீண்டும் புதியதொரு வில்லை எடுத்து, பீஷ்மர் அர்ச்சுனனைத் தாக்கினார். அவர் எடுத்த ஒவ்வொரு வில்லையும் அர்ச்சுனன் முறித்துவிட்டான்.

மேலும் போரைத் தொடர்ந்து நடத்த பீஷ்மர் பிரியப் படவில்லை. தமக்கு அந்திம காலம் நெருங்கிவிட்டதை அவர் உணர்ந்தார். 'நீ விரும்பும்போது உனக்கு மரணம் நேரும்' என்று தம் தந்தை சந்தனு மன்னன் தமக்கு அளித் திருந்த வரத்தை நினைவுபடுத்திக்கொண்டார். பீஷ்மர் இப்படி நினைத்ததுதான் தாமதம். நறுமணம் கமழும் காற்று வீசியது; மலர்மாரி பெய்தது. தேவதுந்துபிகள் முழங்கின.

சிகண்டியும் அர்ச்சுனனும் பீஷ்மரைத் தொடர்ந்து தாக்கினார்கள். அம்புகள் அவருடைய உடம்பில் தைத்தன. அப்போது அவர் துச்சாதனனிடம், "துச்சாதனா! அம்புகள் என் உடலைத் தாக்குகின்றன. அர்ச்சுனன் ஏவும் அம்புகள் தான் என்னைத் தாக்க முடியும். மற்றவர்களின் அம்பு என்னை ஒன்றும் செய்யாது. எனக்குத் துன்பத்தைத் தருகின்ற பாணங்கள் சிகண்டியுடையன அல்ல" என்று சொன்னார்.

பிறகு அவர் ஒரு பெரிய சக்தியை அர்ச்சுனன்மீது ஏவினார். அர்ச்சுனன் மூன்று பாணங்களால் அதைத் தடுத்து விட்டான். பீஷ்மர் தங்கத்தால் அழகுபடுத்தப்பட்டிருந்த சக்தியையும் கேடயத்தையும் எடுத்துக்கொண்டு தேரிலிருந்து இறங்கப்போனார். அதற்குள் அர்ச்சுனன் அவருடைய கேடயத்தை உடைத்துவிட்டான். பீஷ்மருடைய தேகத்தில் சிறிதுகூட இடம் இல்லாதபடி அர்ச்சுனன் எய்த அம்புகள் துளைத்துவிட்டன. கிழக்கு முகமாக இருந்தபடியே தேரிலிருந்து பீஷ்மர் கீழே சாய்ந்தார். ஆயினும் அவருடைய உயிர் உடலைவிட்டுப் பிரியவில்லை. பீஷ்மர் சாய்ந்த

சமயத்தில் மேகம் நீர்த்துளிகளைப் பெய்தது; பூமியில் ஒருவித நடுக்கம் உண்டாயிற்று.

பாண்டவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் வீர கர்ஜனை செய்தார்கள். கௌரவர்களுக்கு ஒன்றுமே தெரிய வில்லை. அவர்கள் வாய்விட்டு அலறினார்கள். பொறி கலங்கித் திகைத்து நின்றார்கள்.

பீஷ்மர் சாய்ந்ததனால் இரு திறத்துப் படைவீரர்களும் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டு, மனக்கவலையுடன் இருந்தார்கள். சிலர் அங்கும் இங்கும் ஓடினார்கள். சிலர் மயக்க முற்றுக் கீழே விழுந்தார்கள். சிலர் அரச குலத்தை நிந்தித்தார்கள்.

துச்சாதனன் விரைந்து ஓடி, பீஷ்மர் வீழ்ந்துவிட்ட செய்தியைத் துரோணருக்குத் தெரிவித்தான். துரோணர் துணுக்குற்றுக் கீழே சாய்ந்தார். போரை நிறுத்திவிட்டுப் பீஷ்மரைக் காணச் சென்றார்.

போர் வீரர்கள் அனைவரும், பிரம்மதேவரிடம் தேவர்கள் செல்வதுபோல, பீஷ்மரிடம் சென்றார்கள். அவரை அணுகி, அவருக்குத் தங்கள் வணக்கத்தைச் செலுத்தினார்கள். தம்மை வணங்கி நிற்கும் பாண்டவர்களையும் கௌரவர்களையும் பீஷ்மர் கனிவோடு பார்த்தார். "வீரர்களே! உங்களுக்கு நல்வரவு! இது சமயம் உங்களைக் காண்பதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன்" என்று சொன்னார்.

பிறகு அவர் துரியோதனனை முதலானவர்களை நோக்கி "என் தலை தொங்குவதால் அதைத் தாங்க, தலையணை ஒன்று கொண்டு வாருங்கள்" என்று சொன்னார்.

உடனே அரசர்கள் மெல்லிய பல தலையணைகளை கொணர்ந்தனர். அவற்றை "வேண்டாம்" என்று மறுத்து விட்டு பீஷ்மர் பார்த்தனைப் பார்த்தார். "குழந்தாய்! என் தலை தொங்குகிறது. அதற்கு இப்போது ஏற்ற தலையணை ஒன்றை நீ கொடு" என்று சொன்னார்.

பீஷ்மர் இவ்வாறு சொன்னதும் அர்ச்சுனன் அவரை வணங்கினான்; கண்களில் நீர் ததும்ப, "குருகுலத் தோன்றலே! உமது அடிமை இதோ நிற்கிறேன். நான் இப்போது உமக்கு என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான்.

"அர்ச்சுனா! என் தலை ஆதாரமின்றித் தொங்குகிறது. அதற்கு ஏற்ற தலையணையை நீ ஆதாரமாகக் கொடு" என்று சொன்னார்.

அர்ச்சுனன் மூன்று அம்புகளை எடுத்து ஆதாரமாகக் கொடுத்து, அதில் பீஷ்மருடைய தலை நிற்கும்படி செய்தான்.

இதன் பின்னர் அவர் அங்கு நின்ற அரசர்களை நோக்கி "அரசர்களே! அர்ச்சுனன் செய்கையால் நான் அகமகிழ்ந்தேன். இப்பொழுது தட்சணாயன காலம். உத்ராயணம் வரும்வரை அம்புப் படுக்கையிலேயே நான் படுத்திருப்பேன். அதற்குள் என் உயிர் உடலைவிட்டுப் பிரியாது. அப்பொழுது உயிருடன் யார் யார் இருப்பீர்களோ அவர்கள் என்னை வந்து பார்க்கலாம்" என்று கூறினார்.

இதன் பின்னர் அரசர்கள் வலம் வந்து வணங்கிப் பீஷ்மரிடம் விடைபெற்றுக்கொண்டு, தத்தம் பாசறைகளுக்குத் திரும்பினார்கள்.

## தாக சாந்தி

மறு நாள் பொழுது புலர்ந்ததும் அரசர்கள் ஒன்று கூடி, பீஷ்மரைத் தரிசிக்கச் சென்றார்கள். பீஷ்மர் அம்புப் படுக்கையில் படுத்து இருந்தார். அரசர்கள் வணங்கி, நின்று பீஷ்மருக்குத் தங்கள் மரியாதையைத் தெரிவித்துக்கொண்டார்கள்.

ஆயிரக்கணக்கான கன்னியர்கள் வந்து சந்தனப் பொடி, பொரி, மலர்கள் ஆகியவற்றைப் பீஷ்மரைச் சுற்றிலும் வாரி இறைத்தார்கள்

கௌரவர்களும் பாண்டவர்களும் தங்கள் பகைமையை மறந்து வந்து, பீஷ்மரைச் சுற்றி அமர்ந்திருந்தார்கள்.

அம்புப் படுக்கையில் படுத்திருந்த பீஷ்மர், தமக்குத் தண்ணீர் வேண்டும் என்று அரசர்களிடம் தெரிவித்தார்.

பல வகையான பானங்களைக் கொணர்ந்து அரசர்கள் கொடுத்தார்கள். அவற்றை வேண்டாம் என்று சொல்லி விட்டு, பீஷ்மர், தாம் அர்ச்சுனனைப் பார்க்க விரும்புவதாகத் தெரிவித்தார்.

உடனே அர்ச்சுனன் வந்து, தன் பாட்டனாரை வணங்கி நின்று, "தங்களுக்கு நான் இப்பொழுது என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான்.

"அர்ச்சுனா! உனது பாணங்கள் தைத்த காரணத்தால்

எனது உடம்பு எல்லாம் எரிகிறது; வாய் உலர்கிறது; அருந்து வதற்கு எனக்குத் தண்ணீர் வேண்டும்'' என்று சொன்னார்.

உடனே அர்ச்சுனன் காண்டீபத்தை எடுத்து நாணேற்றி, பீஷ்மருக்கு வலப் பக்கத்தில் பூமிமீது ஓர் அம்பை விட்டான். பூமி பிளந்து, திவ்வியமான நீர் அதிலிருந்து பெருக்கு எடுக்கத் தொடங்கியது. அந்த நீரைப் பருகி, பீஷ்மர் தாக சாந்தி செய்துகொண்டார்.

பிறகு அவர் துரியோதனனை நோக்கி, ''துரியோதனா! கோபத்தை நீ விட்டுவிடு. அர்ச்சுனன் மகா திறமைசாலி; சகல அத்திரங்களையும் அறிந்தவன். எவராலும் அவனை வெல்ல முடியாது. பகைமை பாராட்டாமல் பாண்டவர் களுடன் நீ நட்புக்கொள். அர்ச்சுனன் உனது சேனையை அழிப்பதற்கு முன்னரே அவர்களுடன் சமாதானமாகப் போய்விடு. இந்தப் போர் என்னுடனேயே நின்று போகட் டும். நான் கூறும் இந்த அறிவுரைகள் உனக்கும் உன் குலத் துக்கும் நன்மையைப் பயக்கும். என்னுடைய முடிவு உங்கள் இருவரையும் இணைத்து வைக்கட்டும். எஞ்சியிருப்பவர்கள் உயிரோடு வாழட்டும். உன் உள்ளத்தில் கருணையைப் பெருக்கிக்கொள்; பாண்டவர்களுக்குப் பாதி இராஜ்யத்தைத் திருப்பிக் கொடுத்துவிடு. 'இழிந்தவன்' என்ற பழிச்சொல் உனக்கு ஏற்பட வேண்டாம். குடிமக்கள் அமைதியுடன் வாழ முயற்சி செய். உறவினர்கள் ஒருவரை ஒருவர் நெருங்கிப் பழக வாய்ப்பு ஏற்படட்டும்'' சொன்னார்.

இதன் பின்னர், யோகத்தில் மனத்தைச் செலுத்தி, பீஷ்மர் பேசாது இருந்துவிட்டார்.

துரியோதனனுக்குப் பீஷ்மர் சொன்ன அறிவுரைகள் பிடிக்கவில்லை. சாகப்போகிறவன் மருந்தை 'வேண்டாம்' என்று உதறித் தள்ளுவதைப்போல, பீஷ்மரின் அறிவுரை களைத் துரியோதனன் உதறித் தள்ளிவிட்டான்.

## பீஷ்மரும் கர்ணனும்

பீஷ்மர் படுகாயமுற்று அம்புப் படுக்கைமீது கிடக்கிறார் என்பது தெரியவந்ததும், கர்ணன் சிறிது பயந்துபோனான்; விரைவாக அவர் படுத்திருக்கும் இடத்தை அடைந்தான். கண்களை மூடிக்கொண்டு பீஷ்மர் படுத்து இருந்தார்.

இந்த நிலையில் அவரைக் கண்டதும் கர்ணனுக்குக் கண்

களில் நீர் மல்கியது; குரல் தடுமாற்றம் அடைந்தது. அவன் பீஷ்மரின் அடிக் கமலங்களை வணங்கி, "குருகுலச் செம்மலே! நான் இராதையின் புதல்வன்; குற்றமற்றவனாய் இருந்தும் காணும்பொழுது எல்லாம் உங்களால் வெறுக்கப்படுபவன்" என்று தன்னைத் தெரியப்படுத்திக்கொண்டான்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும், தந்தை மகனைத் தழுவிக்கொள்வதை ஒப்ப, கர்ணனைத் தம் கைகளால் தழுவிக் கொண்டார் பீஷ்மர். தமக்குப் பக்கத்தில் நின்றவர்களை அப்பால் போகச் சொல்லிவிட்டு, கர்ணனை நோக்கி, அன்பு ததும்ப அடியில் வருமாறு அவர் சொன்னார்:

"கர்ணா! என்னிடம் பகைமை பாராட்டுகிற உன்னிடம் எனக்கு வருத்தம் இல்லை. இப்பொழுது நீ வந்து என்னைப் பார்க்காது இருந்திருந்தால், உன் பெருமையை நீ இழந்திருப்பாய். நீ இராதையின் புதல்வன் இல்லை. குந்தியின் புதல்வன் என்று நாரதரும் வேதவியாசரும் எனக்குக் கூறி இருக்கிறார்கள். நீ காரணமின்றிப் பாண்டவர்களைப் பகைக்கிறாய். துரியோதனன் சொல்லைக் கேட்டு, தரும விரோத மான காரியங்களைச் செய்வதற்கு நீ துணிவுடன் முயல்கிறாய். எதிரிகள் தாக்குப்பிடிக்க முடியாத புயவலியுடையவன் நீ என்பதை நான் அறிவேன். அந்தணர்கள்பால் அன்பும் தானம் செய்வதில் விருப்பமும் உள்ளவன் நீ என்பது எனக்குத் தெரியும். உற்றார் உறவினர்களிடையே பகைமை வளர இடம் கொடுக்கலாகாது என்பதற்காகவே, கொடிய வார்த்தைகளால் உன்னை நான் நிந்திக்க நேர்ந்தது. வில் பயிற்சி, சுறுசுறுப்பு, தானம் செய்தல் ஆகியவற்றில் அர்ச்சுன னுக்கும் கண்ணபிரானுக்கும் சமமானவன் நீ. முன்பு உன் னிடம் கொண்டிருந்த கோபம் இப்பொழுது எனக்கு இல்லை. விதியை முயற்சியினால் வென்றுவிட முடியாது. பாண்டவர் கள் உனக்குத் தம்பியர்கள். எனக்குப் பிரியமான காரியத் தைச் செய்வதில் உனக்கு விருப்பமும் ஊக்கமும் இருந்தால், பாண்டவர்களுடன் நீ சேர்ந்துகொள். பகைமை என்னோடு ஒழிந்துபோகட்டும். அரசர்களும் அமைதியோடு வாழட்டும்" என்று சொன்னார்.

அதற்குக் கர்ணன், "பிதாமகரே! தாங்கள் கூறியவை அனைத்தையும் நான் அறிவேன்; நான் குந்தியின் புதல்வன் என்பதும் எனக்குத் தெரியும். குந்தி புறக்கணித்துத் தள்ளிய என்னைத் தேர்ப்பாகன் எடுத்து வளர்த்தான். துரியோதனன் எனக்குச் செய்துள்ள நன்மைகளை மறக்க நான் எண்ண வில்லை. அர்ச்சுனனுக்கு உதவக் கண்ணன் எப்படி ஊக்கத்

துடன் இருக்கிறாரோ, அதேபோல, என்னால் இயன்ற மட்டும் துரியோதனனுக்கு உதவ நான் ஊக்கத்துடன் இருப்பேன். உடல், பொருள், ஆவி, மனைவி, மக்கள், புகழ் அனைத்தையும் துரியோதனன் பொருட்டாக நான் துறக்கத் தயார். விதியை முயற்சியினால் தடுக்க முடியாது என்பதை நானும் அறிவேன். பாண்டவர்களையும் வாசுதேவனையும் மானிடர்கள் வெல்ல முடியாது என்பதும் எனக்குத் தெரியும். இருந்தும் அவர்களை எதிர்த்துப் போர்புரிய என் மனம் உறுதியுடன் இருக்கிறது. நீடித்து வளர்ந்து வந்துள்ள இந்தப் பகைமை உணர்ச்சியை என்னால் எளிதில் விட்டுவிட முடியாது. ஆகையால் தேவரீர் அவர்களுடன் போர்செய்ய எனக்கு அனுமதி கொடுக்க வேண்டும். தகாத சொற்களை அறியாமையால் நான் சொல்லியிருந்தாலும், விரோதமான காரியங்களை நான் செய்திருந்தாலும் அவற்றைத் தேவரீர் பொறுத்துக் கொள்ள வேண்டும்'' என்று பீஷ்மரை வேண்டிக்கொண்டான்.

''கர்ணா! நீடித்த நெடும் பகையைவிட முடியாது என்று நீ கருதினால் போர்செய்ய உனக்கு நான் அனுமதி அளிக்கிறேன். ஆனால், அரசகுல தருமத்துக்கு மாறுபட்ட முறையில் போர்செய்ய நீ முயலாதே. அர்ச்சுனனுடன் நீ போர்செய். அவனால் கிட்ட வேண்டிய உலகம் உனக்குக் கிட்டும். எங்கே தருமம் இருக்கிறதோ அங்கு ஜயம் நிச்சயம் ஏற்படும்'' என்று சொன்னார்.

கர்ணன், பீஷ்மரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, துரியோதனனிடம் போய்ச் சேர்ந்தான்.

# வியாசர்

அருளிய

# மகாபாரதம்

துரோண பருவம்

# வியாசர்

அருளிய

# மகா பாரதம்

## பீஷ்மரின் வாழ்த்து

பீஷ்மர் வீழ்ச்சியடைந்தார் என்பது தெரிந்த திருதராட்டிர மன்னன் அளவற்ற துக்கமுற்றான். இவ்வளவு துக்கமும் தனக்கு ஏன் நேருகிறது என்ற சிந்தனை அவனை வாட்டியது.

அவன் சஞ்சயனை நோக்கி, "பீஷ்மர் வீழ்ச்சியுற்ற பின்னர் கௌரவர்கள் என்ன செய்தார்கள்? பாண்டவர்கள் என்ன செய்தார்கள்? துரியோதனனுக்கு உதவியாக எந்த எந்த வீரர்கள் படையில் இருந்தார்கள்?" என்று கேட்டான்.

கௌரவர்கள் பீஷ்மர் சொல்லை அலட்சியம் செய்து விட்டுப் போருக்கு ஆயத்தமானார்கள். அப்போது கௌரவர்களின் படை விண்மீன்களற்ற வானம்போலவும், காற்றை இழந்த ஆகாயம் போலவும், பயிரை இழந்த நிலம்போலவும், இலக்கணத்தால் திருத்தமடையாத வாக்கைப்போலவும் கணவனை இழந்த கற்பரசிபோலவும், நீர் அற்று வறண்ட ஆறு போலவும், செந்நாய்களால் சூழப்பட்ட பெண்மான் போலவும் காட்சி அளித்தது. தத்தளித்து நின்ற கௌரவப் படையினர் தங்களைக் காப்பாற்றக்கூடியவன் கர்ணன்தான் என்பதை நினைந்து, "கர்ணா! கர்ணா!" என்று அலறினர். ஆபத்துக் காலங்களில் உறவினர்களின் உதவியை நாடுவதைப்போல, இப்போது கௌரவர்கள் கர்ணன் உதவியை நாடினார்கள்.

பத்து நாட்களாகப் போரில் கலவாமல் விலகியிருந்த கர்ணன் கௌரவர்களுக்கு உதவ முன்வந்தான். வில்லைக் கையில் ஏந்தி, நாண் ஒலி செய்துகொண்டு, கௌரவர்களைப் பார்த்து அவன் சொன்னான்:

"தைரியம், புத்தி, மனோதிடம், பராக்கிரமம், சத்தியம், நினைவாற்றல், பணிவு, இன்சொல், செய்யத்தகாத காரியத்தில் நாணமுடைமை இவற்றையுடைய வீரர் பீஷ்மரே தோல்வியடைந்தார். திட பிரமசாரியான அவரே தோல்வியுற்றாரானால், மற்றவர்களைப் பற்றிக் கேட்பானேன்?"

கர்ணன் இப்படிச் சொன்னதும் கௌரவர்கள் கதறி அழுது கண்ணீர் வடித்தார்கள். கர்ணன் அவர்களுக்கு ஆறுதல் சொன்னான்.

"உலகம் அநித்தியம். பீஷ்மரே அர்ச்சுனன் ஆற்றல் முன் நிற்க முடியாதபோது மற்றவர்கள் எம்மாத்திரம்? ஆயினும் தைரியமிழந்து வாடுகிற இந்தக் கௌரவ சேனையைப் பீஷ்மர் காத்ததுபோல நானும் காப்பேன். ஒன்று, பாண்டவர்களை வென்று புகழுடன் வாழ்வேன்; அல்லது போர்க்களத்தில் வீர மரணம் எய்துவேன். நண்பனுக்கு ஒருபோதும் துரோகம் செய்யலாகாது என்பதை அறிந்தவன் நான். ஆபத்துக் காலத்தில் எவன் உதவுகிறானோ அவனே நண்பன். ஆயுதங்களை நிறையக் கொண்டுவாருங்கள்; பேரிகைகளை முழக்குங்கள். பாண்டவர்கள் இருக்கும் இடத்துக்குத் தேர்களை ஓட்டுங்கள்" என்று உற்சாகப்படுத்தினான்.

இதன் பின்னர், கர்ணன் பீஷ்மரிடம் சென்று போரில் ஈடுபட, தனக்கு அனுமதி தருமாறு அவரை வேண்டினான். கர்ணன் அனுமதி கேட்டது குறித்துப் பீஷ்மர் அகமகிழ்ந்தார். 'கர்ணா! அரசனுக்குச் சமுத்திரத்தைப்போலவும், சூரியனுக்கு ஒளியைப்போலவும், சான்றோருக்குச் சத்தியத்தைப்போலவும், உயிர் இனங்களுக்கு நீரைப் பொழிகின்ற மேகம்போலவும், நீ நண்பர்களுக்கு ஆதாரமாய் இருக்கிறாய். இனிய கனிகள் நிறைந்த மரத்தைப் பறவைகள் அண்டி வாழ்வதைப் போல, நண்பர்கள் உன்னை அண்டி உன் ஆதரவைப் பெறட்டும். துரியோதனன் பொருட்டாக எத்தனையோ அரசர்களை வென்று நீ பெருமைபெற்று இருக்கிறாய். 'நீ நலம் அடைக' என்று உனக்கு நான் ஆசி கூறுகிறேன். சென்று பகைவர்களுடன் போர்செய்து, துரியோதனனுக்கு வெற்றியைத் தேடிக்கொடு. துரியோதனன் எனக்குப் பேரன் ஆவான்; அதேபோல நீயும் எனக்குப் பேரன் ஆவாய். சத்தியசீலனாக இருந்துகொண்டு, துரியோதனனுடைய படையைக் காப்பாற்று" என்று சொன்னார்.

பீஷ்மரின் அடிக்கமலங்களை வணங்கிக் கர்ணன் விடை பெற்றுக்கொண்டான். அவன் ஆயுதபாணியாய்ப் போர்க்

களத்துக்கு வந்தபோது, கௌரவ சேனையினர் ஆரவாரம் செய்து கர்ணனை வரவேற்றார்கள். துரியோதனன் முதலானவர்கள் மகிழ்ச்சி அடைந்து அவனுக்கு மரியாதை செய்தார்கள்.

## சேனாதிபதி துரோணர்

தேர்மீது கர்ணன் வருவதைக் கண்ட துரியோதனன் களிப்புற்றான். வந்ததும் அவனிடம், "கர்ணா! நீ வந்து சேர்ந்ததனால் சேனை நாதனுள்ளதாயிற்று. நமக்கு நன்மை பயக்கும் காரியங்களை நாம் நிச்சயித்துச் செய்ய வேண்டும்" என்று சொன்னான்.

அதற்குக் கர்ணன், "ஆடவர் திலகமே! சிறந்த அறிஞன், தலைவன் செய்ய வேண்டிய காரியத்தின் முக்கியத்துவத்தை அறிவதுபோல, மற்றவர்கள் அறிய மாட்டார்கள். இனி நாம் செய்யத்தக்கது எதுவோ அதைச் சொல்" என்று கூறினான்.

"கர்ணா! அறிவிலும் வயதிலும் பராக்கிரமத்திலும் பெரியவராக இருந்த பீஷ்மர் சேனாபதியாக இருந்தார். பத்து நாட்களாக நமது சேனையை அவர் நன்கு பாதுகாத்தார். செயற்கரும் செயல்களைப் புரிந்த அவர் இப்பொழுது அம்புப் படுக்கையில் படுத்திருக்கிறார். இனி யாரை நமது சேனைக்கு நாம் தலைவனாக ஆக்கலாம்? மாலுமியில்லாத நாவாய் கடலில் தத்தளிப்பதைப்போல, நாதனற்ற சேனை சிதறுண்டு தத்தளிக்கும். நீ யாரைச் சேனாபதி ஆக்கலாம் என்று கருதுகிறாயோ, அவரைச் சேனாபதியாக்கி நாம் போரைத் தொடங்கலாம்" என்று சொல்லிக் கர்ணனின் அபிப்பிராயத்தைத் துரியோதனன் கேட்டான்.

"இங்கே கூடியிருக்கும் அரசர்கள் அனைவருமே சேனாபதி பதவிக்கு அருகதையுடையவர்கள்; குலம், அறிவு, பலம், பராக்கிரமம், தைரியம், சாஸ்திர அறிவு ஆகிய அனைத்திலும் நம் பக்கலில் போர் புரியும் அரசர்கள் அனைவரும் சமமானவர்களாக இருக்கிறார்கள். ஆயினும் ஒரே சமயத்தில் அவர்கள் அனைவரையும் தலைவர்களாக ஆக்குதல் சாத்தியப்படாத காரியம். ஒருவனைத் தேர்ந்து எடுத்துச் சேனாபதி ஆக்கினால் மற்ற அரசர்களின் மனம் அதனால் புண்படும். மனக் குறை காரணமாக அவர்கள் ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் போர்புரிய மாட்டார்கள். ஆகையால், வயது முதிர்ந்தவ

ரான துரோணரையே நாம் சேனைபதியாக அபிஷேகம் செய்ய வேண்டும். அவர் போர்வீரர்களுக்கு ஆசிரியராக இருப்பவர் : ஆயுதம் ஏந்தியவர்களில் சிறந்தவர். அவருக்குச் சமதையான அரசகுலத்தான் ஒருவனை நாம் காண முடியாது. அசுரர்களை ஜயிக்க எண்ணிய தேவர்கள், சுப்பிரமணியரைச் சேனைபதியாக்கிக்கொண்டு போர் தொடுத்ததுபோல, நாம் துரோணரைச் சேனைபதி ஆக்கிக்கொண்டு போர் தொடுக்கலாம்" என்று சொன்னான்.

கர்ணன் சொன்ன யோசனையைத் துரியோதனன் அங்கீகரித்தான். சேனை நடுவே இருக்கும் துரோணரை நோக்கி, "குருவே! ஜாதி, குலம், சாஸ்திர அறிவு, வயது, புத்தி, வீர்யம், சாமர்த்தியம், அஸ்திரத் தேர்ச்சி ஆகியவற்றில் நீர் சிறந்தவராக விளங்குகிறீர். உமக்கு ஒப்பானவர்கள் அரசர்களிடையே கிடையாது. தேவர்களை இந்திரன் பாதுகாப்பது போல, எங்களை நீர் பாதுகாக்க வேண்டும். உம்மைச் சேனைபதியாகக் கொண்டு பகைவர்களை நாங்கள் வெல்ல விரும்புகிறோம்" என்று துரியோதனன் சொன்னான்.

துரியோதனன் இப்படிச் சொன்னதும் அரசர்கள் பெருத்த ஆரவாரம் செய்து, தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டார்கள். "வெற்றி! வெற்றி!" என்று முழங்கினார்கள்.

துரோணர் தம் சம்மதத்தைத் தெரிவித்தார். அவரைக் கௌரவ சேனைக்குச் சேனைபதி ஆக்கி, அபிஷேகச் சடங்கும் நடந்தது. வாழ்த்தொலிகளும் வாத்திய கோஷங்களும் முழங்கின.

இதனால் கௌரவ சேனையினர் பாண்டவர்களை வெற்றி கொண்டுவிட்டதாகவே களித்துக் கூத்தாடினர். பீஷ்மரைப் பற்றிய துக்கம் அவர்களைவிட்டு அகன்றது.

துரோணர் கௌரவ சேனையைச் சகட வியூகமாக வகுத்தார்; பாண்டவர்கள் கிரௌஞ்ச வியூகத்தை வகுத்துக் கொண்டார்கள். கௌரவ சேனைக்கு முன் அணியில் கர்ணன் நின்றான். பாண்டவ சேனைக்கு முன் அணியில் பார்த்திபன் நின்றான்.

போர் ஆரம்பமாயிற்று; ஒருவரை ஒருவர் பலமாகத் தாக்கிக்கொண்டார்கள். துரோணர், பாண்டவ சேனையைக் கூரிய அம்புகளால் தாக்கத் தொடங்கினார். திட்டத்துய்மனன் துரோணரை எதிர்த்தான்.

# உயிருடன் பிடிக்க வேண்டும்

தமக்குத் துரியோதனன் சேனாபதி பதவி அளித்தது குறித்துத் துரோணர் அகமகிழ்ந்தார். சேனைகளுக்கு நடுவே இருந்த அவர் துரியோதனனை நோக்கி, 'பரத குலத்தில் பிறந்தவனே! கௌரவமிக்க பீஷ்மருக்குப் பின்னர்ச் சேனாபதி பதவி தந்து என்னை நீ கௌரவித்தாய். அதற்கு பிரதியுபகாரமாக ஏதாவது ஒன்றை உனக்கு நான் செய்ய விரும்புகிறேன். விருப்பத்தைத் தெரிவி ; நிறைவேற்றி வைக்கிறேன்'' என்று சொன்னார்.

துரோணர் சொன்னதன் பேரில், கர்ணன், துச்சாதனன் முதலியவர்களுடன் துரியோதனன் இதுபற்றி யோசனை செய்தான். பிறகு துரோணசாரியிடம் "குருதேவரே! உத்தமன் யுதிட்டிரனை உயிருடன் பிடித்து, என் அருகில் கொணர்ந்து நிறுத்தினால், அதுவே எனக்குத் தாங்கள் அளிக்கும் வரமாக அமையும். அவன் தம்பியர்கள் பார்த்திருக்கத் தருமபுத்திரனை தாங்கள் என்பால் உயிருடன் பிடித்து வர வேண்டும். இதைத் தாங்கள் செய்து முடித்தால் நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைவேன்'' என்று கூறினான்.

துரியோதனன் கேட்ட வரம் துரோணருக்கு மகிழ்ச்சி தந்தது. "அரசனே! யுதிட்டிரனை வதம் செய்வதை ஒரு வரமாகக் கேளாமல், அவனை உயிருடன் பிடிப்பதை நீ வரமாகக் கேட்பதால், குந்தி மைந்தன் யுதிட்டிரன் பாக்கியசாலிதான். அவனுக்குப் பகைவன் இருக்க முடியாது என்பது நீ கேட்கும் வரத்தால் நிரூபணம் ஆகிவிட்டது. உங்கள் குலத்தை இந்த வரம் மூலம் நீ பாதுகாப்பவன் ஆகிறாய். உயிருடன் பிடித்த பின்னர், யுதிட்டிரனுக்கு உரிய இராஜ்ய பாகத்தைக் கொடுத்து, பாண்டவர்களுடன் நீ நேசனாகிவிடக் கருதுகிறாயா?'' என்று கேட்டார்.

அகத்தின் அழகு முகத்தில் தெரியும் அல்லவா? துரோணர் இவ்வாறு பாராட்டியதும், துரியோதனன் அகக் கருத்தை அவன் முகம் வெளிப்படுத்திவிட்டது. அவனும் வெளிப்படையாகவே, "ஆசாரியரே! யுதிட்டிரனைப் போரில் வதம் செய்வதை நான் ஒரு வெற்றியாகக் கருதவில்லை. யுதிட்டிரன் கொலையுண்டால் மற்றப் பாண்டவர்கள் எங்களை மிச்சம் வையாமல் கொன்றுவிடுவார்கள். அப்படியின்றி பாண்டவர்கள் அனைவரையுமே நாங்கள் கொன்றுவிடுவதாக

வைத்துக்கொள்வோம். அப்போது எங்களுக்கு வெற்றி இல்லை. இந்தப் பூமண்டலம் முழுவதையும் வென்று, திரௌபதிக்காவது குந்திக்காவது கிருஷ்ணன் வழங்கி விடுவார். சத்தியசீலனை யுதிட்டிரனை எப்படியாவது உயிருடன் பிடித்து வந்து, மீண்டும் சூதாடச் செய்தால், தோல்வியுற்றுப் பாண்டவர்கள் மீண்டும் காடு திரும்ப நேர லாம். இப்படிக் கிடைக்கும் வெற்றி நீடித்த வெற்றியாக இருக்கும். அதனால்தான் யுதிட்டிரனை உயிருடன் பிடிப்பதை நான் விரும்புகிறேன்'' என்று தன் உள்ளக் கருத்தை அப்படியே துரோணரிடம் துரியோதனன் வெளியிட்டான்.

துரியோதனின் கபட எண்ணத்தை அறிந்த துரோ ணர், ஓர் இழுக்கு வைத்து, அந்த வரத்தைக் கொடுத்தார். "துரியோதனா! போர்க்களத்தில் பார்த்தன் யுதிட்டிரனைக் காவாமல் இருந்தால், எளிதில் யுதிட்டிரனை உயிருடன் பிடித்துவிடலாம். அர்ச்சுனனைத் தோற்கச் செய்து, யுதிட் டிரனை உயிருடன் பிடிப்பது எளிதில் நடக்கக்கூடிய காரியம் அன்று. ஏதாவது தந்திரம் செய்து, அர்ச்சுனனைப் போர்க் களத்தில் சஞ்சரிக்காதபடி செய்துவிடவேண்டும். அர்ச்சுனன் விலகி இருக்கும் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி, யுதிட்டிரனை நான் உயிருடன் பிடித்துவிடுகிறேன். இது உறுதி' என்று சொன்னார்.

துரோணர் இப்படிச் சொன்னதும், யுதிட்டிரனை உயிருடன் பிடித்துவிட்டதாகவே கருதி, கௌரவர்கள் குதூகலம் அடைந்தார்கள்.

பாண்டவர்களிடத்தில் துரோணர் அன்புடன் இருக் கிறார் என்பதைத் துரியோதனன் சகுனத்தால் அறிந்து கொண்டான். ஆகையால், துரோணருடைய வர தானத்தை நிலைநிறுத்தும்பொருட்டு, யாவரும் அறிய அதைப் பகிரங்கப் படுத்தினன். அப்படிச் செய்தால் துரோணர் பின்வாங்க மாட்டார் என்பது துரியோதனன் கருத்து.

தன்னை உயிருடன் பிடிக்கத் துரோணரும் துரியோதன னும் திட்டமிட்டு இருக்கிறார்கள் என்பது ஒற்றர்கள் மூலம் யுதிட்டிரருக்குத் தெரிந்தது அவர் தன் காரியரிடமும் மற்ற வர்களிடமும் இது விவரத்தைத் தெரிவித்தார். ''தனஞ்சயா! துரோணரும் துரியோதனனும் போட்டுள்ள திட்டம் நிறை வேறாதபடி தடுக்க நீ எப்பொழுதும் என் பக்கத்தில் இருப்பா யாக'' என்று சொன்னார்.

''அவ்வாறே ஆகட்டும். என் உயிரை இழந்தா

இழப்பேனே யன்றி, உம்மைத் துரோணர் உயிருடன் பிடிக்க ஒருபோதும் நான் இடம் கொடேன். இது உறுதி" என்று சொன்னான் அர்ச்சுனன்.

இதன் பின்னர் இரு தரப்புச் சேனைகளும் போருக்கு ஆயத்தமாயின; வாத்தியங்களை முழக்கிக்கொண்டு ஒன்றை ஒன்று நெருங்கின.

## பதினோராம் நாள் போர்

பதினோராம் நாள் போரில் தமது ஆற்றல் முழுவதையும் காட்டி, பாண்டவ சேனையுடன், துரோணர் போர் செய்தார். உலர்ந்த காட்டை நெருப்புக் கொளுத்துவதுபோல, பாண்டவ சேனையைத் துன்புறுத்திக்கொண்டு சஞ்சரித்தார். பொன்மயமான தமது தேரை நாற்புறங்களிலும் செலுத்தி, படைகளுக்கு அழிவை உண்டாக்கினார். அவர் விடுத்த அம்புகள், குதிரைவீரர்கள், தேராளிகள், காலாட்கள் ஆகியோரை அபரிமிதமாக அழித்தன. போர்க்களத்தில் பயங்கரமான இரத்த ஆறு பெருகியோடத் தலைப்பட்டது.

இதுசமயம் யுதிட்டிரர் முதலானவர்கள் துரோணரை எதிர்த்து வந்தார்கள். இப்படி எதிர்த்து வரும் பாண்டவர்களைக் கௌரவ படையைச் சேர்ந்த வீரர்கள் தடுத்தார்கள்.

மாயச் சண்டை செய்வதில் வல்லவனான சகுனிக்கும் சகதேவனுக்கும் கடும் போர் நடந்தது. இருவருடைய தேர்களும் உடைந்தன; சாரதிகள் படுகாயமுற்றனர். உடனே சகுனி கதையை எடுத்துக்கொண்டு தேரிலிருந்து குதித்து, சகதேவனை எதிர்த்தான். அவனுடைய தேர்ப்பாகனைத் தேரிலிருந்து கீழே தள்ளினான். உடனே சகதேவனும் கதையை எடுத்துக்கொண்டு சகுனியை எதிர்த்தான். இரண்டு பெரிய மலைகள், ஒன்றை ஒன்று எதிர்ப்பதை ஒப்ப, இருவரும் போர் செய்தார்கள்.

திட்டத்துய்மனைத் துரோணர் கூரிய அம்புகளால் அடித்தார். அவனும் சளைக்காது பதிலுக்குத் துரோணரை அடித்தான். இருவரும் ஏவின கணைகள் ஆகாயத்தை மூடி மறைத்தன.

பீமசேனனும் விவிம்சதியும் ஒருவரை ஒருவர் அம்புகளால் அடித்தனர். பீமசேனன் அடித்ததைத் தாக்குப் விவிம்சதி அசையாமல் நின்றான்; பீமனையும்

வில்லையும் கொடியையும் குதிரைகளையும் இழக்கும்படி விவிம்சதி செய்துவிட்டான். அதற்காக, கௌரவப் படையினர் அவனைப் பெரிதும் பாராட்டினர். இதைப் பொறுக்காத பீமசேனன் கதாயுதத்தால் அடித்து, விவிம்சதியின் குதிரைகளைக் கொன்றுவிட்டான்.

நகுலனை அவன் மாமன் சல்லியன் எதிர்த்தான். தன்னை எதிர்த்து வரும் தன் மாமனுடைய குதிரை, கொடை, கொடி யாவற்றையும் சிரித்துக்கொண்டே உடைத்துத் தள்ளி, அவனுடைய தேர்ப்பாகனையும் காயப்படுத்தி, சங்கநாதம் செய்தான் நகுலன்.

திருஷ்டகேதுவைக் கிருபாசாரியார் தாக்கினர். அவன் கிருபரைக் காயப்படுத்தி, அவருடைய கொடியையும் இழக்கச் செய்தான். இதனால் சினமுற்ற கிருபர், அவனைக் கடுமையாகத் தாக்கினர்.

சாத்யகி கிருதவர்மாவைப் பலமாக எதிர்த்தான்; விராடன் கர்ணனை எதிர்த்தான்; துருபத ராஜன் பகதத்தனோடு போர் தொடுத்தான். பூரிசிரவசும் சிகண்டியும் பயங்கரமாக ஒருவரை ஒருவர் தாக்கிக்கொண்டார்கள்.

பௌரவன், அர்ச்சுனன் புதல்வன் அபிமன்யுவை எதிர்த்தான். பௌரவனுடைய குடை, கொடி, வில் ஆகியவற்றை அபிமன்யு கீழே தள்ளிவிட்டான்; குதிரைகளையும் தேர்ப்பாகனையும் தாக்கிக் காயப்படுத்தினன். பௌரவனுடைய தேரில் ஏறி, காலால் மிதித்துத் தேர்ப்பாகனைக் கொன்று, பௌரவனை, அவன் தலைமயிரைப் பற்றிப்பிடித்துக் கொண்டான். பௌரவன் மூர்ச்சித்துக் கீழே சாய்ந்தான்.

இதைக் கவனித்தபோது ஜயத்ரதனுக்கு ஆத்திரம் பொங்கிற்று. தேரிலிருந்து குதித்து அபிமன்யுவை அவன் எதிர்த்தான். அபிமன்யுவும் சளைக்காது, தன் தந்தையின் பரம விரோதியான ஜயத்ரதனைக் கடுமையாகத் தாக்கினன். வாட்போர் நடந்தபோது, ஜயத்ரதன் அபிமன்யுவின் வாளை உடைத்துவிட்டான். உடனே அபிமன்யு விரைந்து தேரில் ஏறிக்கொண்டு போர்செய்யத் தொடங்கினன்.

இது சமயம் மற்ற அரசர்களும் நாற்புறங்களில் சூழ்ந்துகொண்டு அபிமன்யுவைத் தாக்கத் தொடங்கினர்கள். சளைக்காது அவர்கள் அனைவரோடும் அபிமன்யு துணிந்து போர் செய்தான். இரும்பினால் செய்யப்பட்ட சிறந்த அத்திரம் ஒன்றை எடுத்து, அபிமன்யுவைச் சல்லியன் தாக்கினன். அந்த அத்திரத்தை, அபிமன்யு கையில் பிடித்துக்

கொண்டதைக் கண்டு, பாண்டவ வீரர்கள் ஆரவாரம் செய்தார்கள்.

இதன் பிறகு, அபிமன்யு அந்த அத்திரத்தைச் சல்லியன் மீது எவி, அவனைக் கீழே தள்ளினான். அவனுடைய தேர்ப் பாகனையும் வதம் செய்தான். விராடன், துருபதன், யுதிட்டிரன் முதலியோர் "நல்லது, நல்லது" என்று சொல்லி அபிமன்யுவைப் பாராட்டினர்.

தன் தேர்ப்பாகன் வதம் செய்யப்பட்டதைக் கண்ட சல்லியன் ஆத்திரமுற்று, அபிமன்யுவைக் கோரமாக எதிர்க்க முனைந்தான் கதாயுதத்தை எடுத்துக்கொண்டு அபிமன்யுவை அவன் தாக்கப் போவதைக் கவனித்த பீமன், தானும் கதாயுதத்தை எடுத்துக்கொண்டு சல்லியனை எதிர்க்கத் தொடங்கினான். சல்லியனை எதிர்க்க வேண்டாம் என்று அபிமன்யுவைத் தடுத்துவிட்டு, தானே சல்லியனை எதிர்த்தான். இருவரும் கதாயுதப் போரில் வல்லவர்கள்; ஆதலால் கடுமையாகவும் திறமையாகவும் இருவரும் போர்புரிந்தனர். சிறிது நேரத்துக்குப் பிறகு, சல்லியனுடைய கதையைப் பீமன் பொடிப் பொடியாக்கிவிட்டான். கதையால் அடிபட்ட அந்த இரு வீரர்களுக்கும் இரத்தக் காயங்கள் ஏற்பட்டன. போர் தீவிரமாக நடந்தபோதிலும், இருவரும் மலைகளைப் போல அசையாது நின்றார்கள். ஆயினும் தொடர்ந்து நடந்த கதாயுதப் போரில், சல்லியன் களைத்துப் போனான்; மூர்ச்சித்து விழுந்து, பாம்புபோல் தரையில் புரளத் தொடங்கினான்.

இதைக் கவனித்த கிருதவர்மா வேகமாக வந்து சல்லியனைத் தனது தேரில் தூக்கி வைத்துக்கொண்டு, போர்க்களத்தைவிட்டு அப்பால் போனான்.

இது குறித்து, கௌரவர்கள் அளவற்ற துயரம் அடைந்தார்கள்; பாண்டவர்களின் ஆற்றலை எதிர்க்க மாட்டாது பயந்து நாலா திசைகளிலும் மேகம்போல் சிதறியோடத் தலைப்பட்டார்கள் பாண்டவர்களோ மகிழ்ச்சியுடன் தங்கள் வாத்தியங்களையும் முரசங்களையும் முழக்கினார்கள்.

யுதிட்டிரரின் சேனை, கௌரவர்களின் சேனையைத் துரத்தித் துரத்தி அடிப்பதைக் கண்டு, துரோணர் கடுங் கோபம் கொண்டார். "வீரர்களே! ஓடாதீர்கள்!" என்று கௌரவ சேனையைத் தடுக்க முயன்றார். தமது பெரிய வில்லையும் அம்பையும் எடுத்துக்கொண்டு தம் தேர்ப்பாகனிடம், "சாரதியே! துரியோதனனுடைய சேனை சிதறி ஓடுகிறது.

யுதிட்டிரன் நிற்கும் இடத்துக்குத் தேரைச் செலுத்து; யுதிட்டிரனைத் தடுத்தாலல்லது, கௌரவ சேனை ஓடுவதைத் தடைப்படுத்தி நிறுத்த முடியாது'' என்றார்.

உடனே அவருடைய தேர்ப்பாகன் ஒரு மந்திரத்தை உச்சரித்து, குதிரைகளைத் தூண்டினான்.

பாஞ்சாலர்கள், மச்ச நாட்டினர், சேதி நாட்டினர், பாண்டவர்கள் ஆகியோர் ஒன்றுசேர்ந்து துரோணரைச் சூழ்ந்துகொண்டார்கள். சிவப்புக் குதிரைகள் பூட்டியுள்ள தேரில் சென்ற துரோணர், யுதிட்டிரரை விரைவில் அணுகினார். யுதிட்டிரர் அவரைப் பாணங்களால் அடித்தார் துரோணரும் பதிலுக்கு யுதிட்டிரரைப் பாணங்களால் தாக்கினார்.

திட்டத்துய்மனன் துரோணரைத் தடுத்தான். அதை ஒருபொருட்டாகக் கருதாமல் துரோணர், பாண்டவர்களையும் அவர்களைச் சார்ந்த அரசர்களையும் தாக்கலானார். யுதிட்டிரரைப் பிடிக்கும் நோக்கத்துடன் விரைந்தார். அப்போது பாஞ்சால நாட்டு வீரர்கள், இருவர்—வியாக்ரதத்தனும் சிம்மசேனனும் — துரோணரை எதிர்த்தார்கள். அவர்கள் இருவருடைய தலைகளையும் பாணத்தால் அறுத்து, துரோணர் கீழே தள்ளினார். பிறகு போர்க்களத்தில் காலன் நிற்பதுபோல யுதிட்டிரர் அருகில் அவர் நின்றார்.

இதைக் கவனித்த கௌரவப் படையினர், "யுதிட்டிரர் பிடிபட்டுவிட்டார்! யுதிட்டிரர் பிடிபட்டுவிட்டார்'' என்று பெருத்த ஆரவாரம் செய்தார்கள்; இந்தச் செய்தி போர்க்களம் முழுவதும் விரைவாகப் பரவியது.

அர்ச்சுனனுக்கு இந்தச் செய்தி எட்டியது. திசைகள் அனைத்தும் அதிரும்படி தனது தேரில் அர்ச்சுனன் யுதிட்டிரர் போர்புரியும் இடத்துக்குப் போனான். எலும்புகளும் தசைகளும் ஆயுதங்களும் இரத்தமும் எங்கே பார்த்தாலும் பரவிக் கிடந்தன. இவற்றை எல்லாம் கடந்து, அர்ச்சுனன் யுதிட்டிரரை அணுகினான். அம்புகளை வாரி இறைத்து, ஆகாயத்தை மூடினான். அதனால் போர்க்களம் முழுதும் இருள் பரவியது. ஒன்றுமே புலப்படவில்லை.

துரோணரும் துரியோதனனும் போரை நிறுத்தினார்கள். கௌரவப் படையினர் பயந்துபோய், போர்க்களத்திலிருந்து மெதுவாகப் பின்வாங்கத் தலைப்பட்டார்கள். உற்சாகம் குன்றித் தங்கள் பாசறைகளுக்குத் திரும்பினார்கள்.

பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் அளவற்ற ஆனந்தம்

அடைந்தார்கள். ரிஷிகள் பகலவனை வணங்குவதைப்போல, பார்த்தனை அவர்கள் துதித்தார்கள். அர்ச்சுனனும் மகிழ்ச்சியுடன் கண்ணனை அழைத்துக்கொண்டு, தனது பாசறைக்குத் திரும்பினான்.

## யுதிட்டிரரும் ஓடினார்

இரு திறத்துச் சேனைகளும் தத்தம் பாசறைகளுக்குத் திரும்பிவிட்டன. முன் தினம் நடந்த போரில் யுதிட்டிரரைத் தாம் உயிருடன் பிடிக்க முடியாது தோல்வியுற்றதைக் குறித்து, துரோணர் நாணமுற்றார். "அர்ச்சுனன் இருக்கும் பொழுது யுதிட்டிரனை உயிருடன் பிடிப்பது தேவர்களாலும் இயலாது. என்னிடம் வஞ்சனை இல்லை. ஏதாவது உபாயத்தால் அர்ச்சுனனை வேறு ஓர் இடத்துக்குப் போக வைக்க முடியுமானால் யுதிட்டிரனை உயிருடன் பிடிப்பது எளிது. வேறு ஒரு பகுதியில் போரைத் தொடங்கி, அர்ச்சுனனை அங்கே இழுத்துவிட்டால், அவன் இல்லாத சமயம் பார்த்து, சேனையைப் பிளந்து சென்று, யுதிட்டிரனை நான் பிடித்துவிடுவேன். யுதிட்டிரன் பயந்து ஓடாமல் இருக்க வேண்டும். அப்படியின்றி யுதிட்டிரன் பயந்து ஓடுவானாயின், அது உனக்கு ஒரு பெருத்த வெற்றியாகும்" என்று துரியோதனனிடம் சொன்னார் துரோணர்.

துரோணர் இவ்வாறு சொன்னதை, திரிகர்த்த நாட்டு மன்னன், சுசர்மா தன் சகோதரர்களுடன் கேட்டுக்கொண்டிருந்தான். அவன் துரியோதனனிடம், "அரசே! எங்களை அர்ச்சுனன் எப்பொழுதும் அவமதித்து வந்திருக்கிறான். அவனை எதிர்க்க எங்களுக்கு ஒரு சந்தர்ப்பம் நேர்ந்திருப்பது எங்களுடைய பெரும் பாக்கியம். ஒன்று, எங்களை அர்ச்சுனன் ஒழிக்கட்டும், அல்லது அர்ச்சுனனை நாங்கள் ஒழிக்கிறோம். இதற்கு நீர் எங்களுக்கு அனுமதி அளிக்க வேண்டும்" என்று சொன்னான்.

இப்படிச் சொல்லிவிட்டு, சுசர்மா தன் ஐந்து சகோதரர்களோடும் சேர்ந்து சபதம் எடுத்துக்கொண்டான். பெருஞ் சேனையைத் திரட்டிப் போருக்கு ஆயத்தமானான்; பதினாயிரக் கணக்கான தேராளிகளும் வீரர்களும் சபதம் எடுத்துக் கொள்ள ஓர் இடத்தில் திரண்டார்கள்.

எல்லாரும் செம்புல்லால் செய்த ஆடையைத் தரித்து, கவசம் பூண்டார்கள். அக்கினியை வணங்கி, தான தருமம்

களைச் செய்தார்கள். அக்கினி சாட்சியாக மன உறுதியுடன் சம்சப்தகம் என்னும் சபதத்தை அவர்கள் அனைவரும் எடுத்துக்கொண்டார்கள். "நாங்கள் அர்ச்சுனனைக் கொல்லாமல் இருந்தாலும், அல்லது புறங்காட்டி ஓடினாலும், மகா பாவங்களைச் செய்த ஒருவன் அடையும் உலகத்தை நாங்களும் அடைவோமாக! அப்படியின்றி, அர்ச்சுனனை நாங்கள் வென்றால், கிடைக்க வேண்டிய நல்ல உலகங்கள் எங்களுக்குக் கிட்டுமாக!" என்று சபதம் எடுத்துக்கொண்டார்கள்.

பின்னர், அவர்கள் போர்க்களத்தில் புகுந்தார்கள். "அர்ச்சுனா!" என்று கூவி, விஜயனைப் போருக்கு அழைத்தார்கள்.

அப்போது அர்ச்சுனன் தன் தமையனை நோக்கி, "அரசே! சம்சப்தகர்கள் என்னைப் போருக்கு அழைக்கிறார்கள். அவர்களுடன் போர் செய்ய எனக்கு அனுமதி கொடும்" என்று சொன்னான்.

அதற்கு யுதிட்டிரர், "அர்ச்சுனா! என்னை உயிருடன் பிடிக்கத் துரோணர் திட்டமிட்டு இருப்பதை நீ அறிவாய். துரோணர் யாராலும் வெல்ல முடியாத வீரர்; கௌரவ முன்னவர். இதை நீ எண்ணிப்பார்" என்று சொன்னார்.

"அரசே! பாஞ்சால இளவரசன் சத்தியசித்து உமக்குப் பாதுகாப்பாக இருப்பான். அவன் உயிருடன் இருக்கும் வரை, உமக்கு எத்தகைய ஆபத்தும் நேராது" என்று சொன்னான் அர்ச்சுனன்.

இதன் பேரில் யுதிட்டிரர், அர்ச்சுனனைக் கட்டித் தழுவிக் கொண்டு, ஆசீர்வதித்து விடை கொடுத்தார். திரிகர்த்தர்களை எதிர்க்க, அர்ச்சுனன் புறப்பட்டான்.

* * *

துரியோதனனுடைய சேனை யுதிட்டிரரை உயிருடன் பிடித்துவிடலாம் என்பதில் அளவற்ற ஆனந்தம் அடைந்தது. அதில் இருந்த வீரர்கள் யுதிட்டிரரைப் பிடிப்பதற்கு முனைப்புடன் ஈடுபட்டார்கள்.

அர்ச்சுனனும் மகிழ்ச்சி அடைந்தான். அவன் கண்ணனை நோக்கி, "தேவகி புதல்வரே! கவலைப்படவேண்டிய திரிகர்த்தர்கள் களிப்புடன் இருக்கிறார்கள், பாரும்" என்று சொல்லி விட்டு, அவர்கள் இருக்கும் இடத்தை அணுகினான். தேவதத்தம் என்னும் சங்கத்தை எடுத்து, திசைகள் எதிரொலிக்க ஊதினான்.

திரிகர்த்தர்கள் அர்ச்சுனன்மீது கணைகளை ஏவினார்கள். அவற்றை எல்லாம் அர்ச்சுனன் தடுத்தான். திரிகர்த்தர்கள் சளைக்கவில்லை. பூவுடன் இருக்கும் காட்டு மரங்களில் வண்டுகள் மொய்ப்பதை ஒப்ப, ஆயிரக்கணக்கிலும் லட்சக் கணக்கிலும், திரிகர்த்தர்கள் அர்ச்சுனன்மீது அம்புகளைப் பொழிந்தார்கள். இதை இலட்சியம் செய்யாமல் அர்ச்சுனன் அவர்களை எதிர்த்து அடித்தான். திரிகர்த்தர்களின் சேனை நடுக்கமுற்று, நான்கு திசைகளிலும் சிதறியோடத் தலைப் பட்டது

திரிகர்த்த நாட்டு மன்னன் அவர்களுக்குத் தைரிய மூட்டத் தொடங்கினான். "வீரர்களே! நீங்கள் பயந்து ஓடக் கூடாது பெருஞ்சேனையின் நடுவே நீங்கள் எடுத்துக்கொண்ட கோரமான சபதத்தை நீங்கள் மறக்கலாமா? துரியோதனனிடம் நீங்கள் என்ன சொல்லுவீர்கள்? உலக மக்களின் பழிப்புக்கு நீங்கள் ஆளாக வேண்டாம். ஒன்றுசேர்ந்து போர் புரிவோம், வாருங்கள்" என்று கூவி அழைத்தான்.

இதனால் உற்சாகமடைந்த போர்வீரர்கள் திரும்பி வந்து சங்கங்களை முழக்கினார்கள்; மீண்டும் போரில் ஊக்கத்துடன் ஈடுபட்டார்கள்.

திரிகர்த்த சேனை திரும்பிப் போர்க்களம் புகுந்து, தாக்குவதைக் கண்ட அர்ச்சுனன், "ரிஷிகேசரே! சபதம் எடுத்துக் கொண்டுள்ள சம்சப்தகர்கள் உயிருள்ளளவும் பயங்கரமாகப் போர் புரிவார்கள். அவர்களை முறியடிக்க வேண்டும், தேரைச் செலுத்தும்" என்று சொன்னான்.

அர்ச்சுனன் விரும்பியபடி எல்லாம் கண்ணன் தேரைச் செலுத்தினார். காண்டீபத்தைக் கையில் பிடித்துக்கொண்டு, அர்ச்சுனன் கடுமையாகப் போர் செய்தான்; ஒரு மந்திரத்தை அர்ச்சுனன் உச்சரித்தபோது அவனை ஒத்த வடிவங்கள் போர்க்களத்தில் ஆயிரக்கணக்கில் தோன்றின. சம்சப்தகர்கள் மயக்கமுற்றுத் தங்களையே ஒருவருக்கு ஒருவர் வதம் செய்துகொண்டார்கள். படுகாயமுற்று, வீரர்கள் இரத்தம் ஒழுக நின்ற கோலம், பூத்த பலாச மரத்தை நினைப்பூட்டியது.

மாண்டவர்கள் போக எஞ்சியிருந்த சம்சப்தகர்கள் அர்ச்சுனனை மூர்க்கத்தன்னியமாக எதிர்த்தார்கள். கணக்கிலாது அம்புகளைத் தொடுத்து, அர்ச்சுனனையும் அவனுடைய கொடி மரத்தையும் தேரையும் மூடினார்கள். அர்ச்சுனனும் கண்ணனும் இருப்பது யாருக்கும் தெரியவில்லை. அர்ச்சுனனும் கிருஷ்ணனும் கொல்லப்பட்டதாக எண்ணிக்கொண்டு,

ஆடைகளை வீசி எறிந்து மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தார்கள்; சங்கங்களை முழக்கினார்கள். சிங்கத்தைப்போல் பெரும் கர்ஜனை செய்தார்கள்.

கண்ணன் சிரமப்பட்டார்; உடம்பில் வியர்வை அரும்பியது. அவர், "அர்ச்சுனா! நீ எங்கு இருக்கிறாய்? நீ இருப்பது தெரியவில்லையே? நீ உயிருடன் இருக்கிறாயா?" என்று கேட்டார்.

இதைக் கேட்டதும் அம்புகளைப் பொழிந்துகொண்டு அர்ச்சுனன் வெளிப்பட்டான். யானை, குதிரை, தேர்களை எல்லாம் பாணங்களால் அடித்தான். பகைவர்கள் தாக்குப் பிடிக்க முடியாது சஞ்சலப்பட்டனர். ஆயிரக்கணக்கான வீரர்களை அர்ச்சுனன் அடித்துக் கொன்றான். கண்கள், கழுத்துகள், கைகள், கால்கள் இழந்து பகைவர்கள் தத்தளித்தார்கள்; ஆயுதங்களை இழந்து கூக்குரலிட்டார்கள். பூமியிலிருந்து கிளம்பிய புழுதி, உதிரப் பெருக்கால் அடங்கிப் போயிற்று.

இது சமயம் துரோணர் யுதிட்டிரர் இருக்கும் இடத்தை அடைந்தார்; அவரை உயிருடன் பிடிப்பதற்குப் போர்வீரர்கள் முனைந்தார்கள்; துரோணரும் அவரைப் பிடிப்பதற்குப் பிரயத்தனம் செய்தார். கருட வியூகம் வகுத்துத் தம்மை எதிர்க்க வருகின்ற துரோணரை, யுதிட்டிரர் எதிர் அணி வகுத்து எதிர்க்கத் தயாரானார்.

அவர் திட்டத்துய்மனனைப் பார்த்து, "வீரனே! துரோணர் என்னை அணுகாதபடி, நீ ஏற்பாடு செய்" என்று சொன்னார்.

"அரசே! நீர் பயப்பட வேண்டாம். என்னைத் துரோணர் வெல்ல முடியாது என்பதை நீர் அறிவீர் அன்றோ?" என்று பதில் சொன்னான் திட்டத்துய்மனன்.

இவ்விதம் சொல்லிவிட்டு, திட்டத்துய்மனன் துரோணரை எதிர்த்துப் போனான். திட்டத்துய்மனனைக் கண்டதும் துரோணர் சிறிது சஞ்சலமுற்றார். அவனை எதிர்க்க மனமின்றி, அவர் துருபதனை எதிர்க்கச் சென்றார்,

துரியோதனன் தம்பி துர்முகன் திட்டத்துய்மனனைத் தடுத்தான். துர்முகனுக்கும் அவனுக்கும் இடையில் கடும் போர் நிகழ்ந்தது. வெறிபிடித்த நிலையில் அவர்கள் இருவரும் போரிட்டார்கள்.

வெறிபிடித்த நிலையில் யுத்தம் இப்படி நடக்கும் பொழுது, துரோணர் யுதிட்டிரரை எதிர்த்து வந்தார். யுதிட்டிரரும் தைரியத்துடன் துரோணரை எதிர்த்தார்.

இது சமயம் சத்தியசித்து என்பவன் யுதிட்டிரரைப் பாதுகாக்கும் விருப்பத்துடன் துரோணரை எதிர்த்தான். மகாபலியும் இந்திரனும்போல, அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் எதிர்த்தார்கள். சத்தியசித்து எய்த பாணங்களால், துரோணருடைய சாரதி மூர்ச்சையுற்றான்; கொடியை அறுத்துக் கீழே தள்ளி, பாணங்களைப் பொழிந்து, துரோணர் இருப்பது தெரியாதபடி சத்தியசித்து மறைத்தான்.

இதைக் கண்டதும் பாண்டவர்கள் வெற்றி முழக்கம் செய்தார்கள்; ஆடைகளை வீசி ஆரவாரம் செய்தார்கள்.

இதனால் கோபமடைந்த துரோணர் சத்தியசித்தை அறுபது பாணங்களால் அடித்தார்; அவனுடைய சாரதியையும் குதிரைகளையும் கொன்றார்; பிறகு பிறைவடிவமுள்ள ஒரு பாணத்தை எய்து, சத்தியசித்தினுடைய தலையைத் துண்டித்தார். இவனுக்கு உதவியாக வந்த பாஞ்சால அரச குமாரன் விருகனையும் கொன்றார்.

சத்தியசித்து கொலையுண்டதைக் கண்ட யுதிட்டிரர் பயந்து போய் விலகிச் சென்றார்.

விராடனுடைய தம்பி சதாநீகன் என்பவன் துரோணரை எதிர்த்தான். அவனுடைய தேர்ப்பாகனையும் குதிரைகளையும் கொன்றான். தான் வெற்றியடைந்துவிட்டதாக நினைத்துப் பெருத்த ஆரவாரம் செய்தான்.

இதனால் கோபமுற்ற துரோணர், சதாநீகனுடைய தலையைக் குண்டலங்களுடன் கத்தியால் அறுத்துத் தள்ளினார். இதைக் கண்ட மச்ச நாட்டினர் துரோணரை எதிர்க்க வெகு வேகமாக ஓடி வந்தார்கள். அம்புகளைப் பொழிந்து, அவர்களை நடுங்கச் செய்தார் துரோணர். பாண்டவர்கள் சேனைக்குப் படுநாசத்தை விளைவித்துக்கொண்டே, அவர் யுதிட்டிரரை அணுகினார்.

துரோணர், தம்மை அணுகுவதைக் கண்டதும் யுதிட்டிரர் அவரிடமிருந்து விலகி ஓடினார்.

## கண்ணன் மெச்சினார்

பாண்டவர்களைச் சேர்ந்த வீரர்கள் துரோணரைக் கடுமையாக எதிர்த்தார்கள். வார்த்தசேமி, சாத்யகி, சுசித்ரன் ஆகியோர் துரோணரைப் பாணங்களால் அடித்தார்கள்.

துரோணர் சளைக்காது அவர்களை எதிர்த்தார். சுசித்திரனை அவனுடைய தேர்ப்பாகனோடும் குதிரைகளோடும் கொன்றார்.

இதனால் ஆத்திரமடைந்த பாஞ்சால நாட்டினர், "துரோணரைக் கொல்லுங்கள்! துரோணரைக் கொல்லுங்கள்!" என்று கூவினார்கள்.

இப்படிக் கூவுகிறவர்களைத் துரோணர் வன்மையாக எதிர்த்தார். அசுரர்களை எதிர்த்து வதம்செய்த இந்திரனைப் போல, பாஞ்சாலர்களையும் கேகயர்களையும் மச்ச நாட்டவர்களையும் துரோணர் வதம்செய்தார். துரோணரின் ஆற்றலைக் கண்டு, பாஞ்சால வீரர்கள் வெலவெலத்துப் போனார்கள்.

இதனால் மகிழ்ச்சியுற்ற கௌரவர்கள் பெருத்த ஆரவாரம் செய்தார்கள். முகத்திலே புன்னகை அரும்ப, படையின் நடுவே துரியோதனன் அமர்ந்திருந்தான். அவன் கர்ணனை நோக்கி, "ராதை மகனே! சிங்கத்தைக் கண்டு பயப்படும் அற்ப விலங்குகளைப் போல பாஞ்சாலர்கள் துரோணரைக் கண்டு பயந்து சாகிறார்கள். இனி அவர்கள் ஒருபோதும் போர்செய்ய விரும்பமாட்டார்கள். கோபத்துடன் இருக்கிற பீமசேனனை எனது படைவீரர்கள் சுற்றி வளைத்துப் பிடிப்பதைப் பார். துரோணருக்குப் பயந்து, இராஜ்யத்தைப் பெறும் ஆசையை யுதிட்டிரன் விட்டுவிடப் போகிறான். இது உறுதி" என்று உற்சாகத்துடன் சொன்னான்.

"அண்ணலே! அந்த எண்ணம் உமக்கு வேண்டாம். உடலில் உயிர் இருக்கும்வரை, போர்க்களத்தைவிட்டுப் பீமன் அகல மாட்டான். பாண்டவர்கள் போரில் ஒருபோதும் தோல்வி அடைய மாட்டார்கள். அரக்கு மாளிகை, சூதாட்டம், வனவாசம் இவற்றால் அல்லலுற்ற அவர்கள் வஞ்சம் தீர்த்துக்கொள்ளாமல் இருக்க மாட்டார்கள். வீரர்கள் பலரைப் பீமன் வதம் செய்யாமல் விடான். பாண்டவர்களுக்குச் சகாயமாக, பல அரசர்கள் இருக்கிறார்கள். நாராயணன் பாண்டவர்களுக்கு வழிகாட்டியாக இருந்து உதவுகிறார். பாண்டவர்களை நீ அவமதியாதே. துரோணரைக் காப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்; இல்லையேல் ஒன்றுகூடி, துரோணரை எளிதில் வதம்செய்து விடுவார்கள் பாண்டவர்கள். துரோணரிடம் பெரும் பொறுப்பை ஒப்படைத்து இருப்பதால், அவருக்கு உதவியாக நாம் செல்லவேண்டும். இல்லையேல் ஓநாய்கள் பல ஒன்றுகூடி, பெரிய யானையைக் கொல்வதை ஒப்ப, துரோணரைப் பாண்டவர்கள் கொன்றுவிடுவார்கள்" என்று எச்சரித்தான்.

கர்ணன் இப்படிச் சொன்னதும், துரியோதனன் தன் தம்பியர்களை அழைத்துக்கொண்டு துரோணர் இருக்கும் இடத்துக்கு விரைந்தான்.

சூரியனை மேகங்கள் மறைப்பதுபோல, துரோணரைப் பாண்டவர்கள் சுற்றி வளைத்துக்கொண்டார்கள். எங்கே பார்த்தாலும் ஒரே புழுதி மயம். பாண்டவர்கள் எளிதில் துரோணரை விடமாட்டார்கள் என்று கௌரவர்கள் பயந்தார்கள்.

தன் சார்பில் போராடும் அரசர்களை நோக்கி, "வீரர்களே! உங்கள் திறமையையும் ஆற்றலையும் காட்டி, பாண்டவர்களுடன் போர் தொடுங்கள்" என்று சொல்லி, தன் சேனையையும் அரசர்களையும் துரியோதனன் உற்சாகப் படுத்தினான்.

இரு தரப்புப் போர்வீரர்களுக்கும் இடையில் கைகலந்த யுத்தம் நடந்தது.

பீமசேனனை, திருதராஷ்டிரன் மைந்தன் துர்மர்ஷணன் எதிர்த்தான். சாத்யகியைக் கிருதவர்மா எதிர்த்தான். சத்திரவர்மாவை ஜயத்ரதன் எதிர்த்தான். யுதிஷ்டிரரைச் சல்லியன் எதிர்த்தான். பாஹ்லீகனைத் துருபத மன்னன் எதிர்த்தான். விராடனை விந்தன், அனுவிந்தன் ஆகிய இருவரும் எதிர்த்தார்கள். சிகண்டியை விகர்ணன் எதிர்த்தான். கடோத்கசனை அலம்புசன் என்னும் அரக்கன் எதிர்த்தான்.

துரோணரை வதம் செய்ய விரும்பிப் பாண்டவர்களைச் சேர்ந்தோர் முயற்சியுடன் போர் செய்தார்கள்; அவரைப் பாதுகாப்பதில் கௌரவர்களைச் சேர்ந்தவர்கள் முனைப்புடன் இருந்தார்கள்.

போர் மிக மிகப் பயங்கரமாக நடந்தது; இவ்வளவு குரூரமான கொடிய போரை அதுவரை யாரும் பார்த்திருக்க மாட்டார்கள்.

தனித் தனியே ஒருவருடன் ஒருவர் போர்புரிந்த சமயம், ஒரு முறை துரியோதனன் பீமனை எதிர்க்க முன்வந்தான். யானைப் படையுடன் தன்னை எதிர்த்துவரும் துரியோதனனை, பீமசேனன் விரைந்து எதிர்த்து, யானைப் படையைப் பிளந்தான். யானைகள் சிதறியோடின.

துரியோதனனும் பீமசேனனும் அம்பு மழைகளைப் பொழிந்து ஒருவரை ஒருவர் தாக்கினார்கள். துரியோதனனைக் கடுமையாகப் பீமன் தாக்குவதை அறிந்த பகதத்தன், துரியோதனனுக்கு உதவ முன்வந்தான். பதினாயிரம் யானைப்

பலம்கொண்ட சுப்ரதீபகம் என்னும் யானையைக்கொண்டு பகதத்தன் பீமனை எதிர்த்தான்.

அந்த யானை பீமனைக் கடுமையாக எதிர்த்தது: பீமனுடைய தேரையும் குதிரைகளையும் துவைத்துப் பொடி செய்துவிட்டது. தன் துதிக்கையைத் தூக்கிச் சுழற்றி, பீமனையும் அடிக்க முயன்றது.

துதிக்கைப் பிடிப்பிலிருந்து பீமன் விடுபட்டுக்கொண்டான். ஆயினும் படைவீரர்கள், "யானையினால் பீமன் மாண்டான்!" என்று கூச்சலிட்டார்கள்.

இந்த அலறலைக் கேட்டதும், பாண்டவ சேனை பீமன் போர்செய்யும் இடத்துக்கு விரைந்தது.

பீமன் இறந்துபோய்விட்டதாகவே யுதிஷ்டிரர் எண்ணினார். பாஞ்சால மன்னனைத் துணைசேர்த்துக்கொண்டு யுதிஷ்டிரர், பகதத்தனை எதிர்த்தார்.

வயது முதிர்ந்தவனான மலைநாட்டு மன்னன் பகதத்தன் சளைக்கவில்லை. பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் விரட்டி விரட்டி அடித்தான். யானைமீது ஏறிக்கொண்டு பலரைச் சாடினான். அவனுடைய யானை, தேர்களையும் குதிரைகளையும் பொடிப் பொடியாக நசுக்கித் துவைத்தது. பகதத்தனுடைய அந்த ஒரு யானை செய்த அட்டகாசம் நூறு யானைகள் போர்க்களத்தில் புகுந்து அட்டகாசம் செய்கிறதோ என்று எண்ணும்படி இருந்தது. பகதத்தனுடைய யானையை எதிர்க்க மாட்டாது, பாண்டவ வீரர்கள் கதறிக்கொண்டு சிதறி ஓடினார்கள்.

வேறு புறத்தில் சம்சப்தகர்களுடன் போர் செய்துகொண்டிருந்தான் அர்ச்சுனன். யானையினுடைய போரொலியைக் கேட்டு அவன் திரும்பிப் பார்த்தான். ஆகாயம் ஒரே புழுதி மயமாய் இருந்தது. அவன் கிருஷ்ணனை நோக்கி "மதுசூதனரே! பகதத்தன் தன் யானையுடன் போர்க்களம் புகுந்துவிட்டான் என்று தோன்றுகிறது. இப்பொழுது நம் செவியில் விழுவது பகதத்தனுடைய யானையின் சப்தம் என்பதில் சந்தேகம் இல்லை போர் செய்வதில் பகதத்தன் இந்திரனை நிகர்த்தவன் யானையைச் செலுத்திப் போர் செய்வதில் வல்லவன். அவனுடைய யானையோ பராக்கிரமம் பொருந்திய யானை. பாண்டவ சேனைக்குள் புகுந்து அந்த யானை படுநாசம் விளைவிக்கிறது. ஆகையால் எனது தேரை, பகதத்தனுடைய யானை அட்டகாசம் செய்கிற இடத்துக்குச் செலுத்தும்" என்று சொன்னான்.

அதன்படி பகதத்தன் போர்புரியும் இடத்துக்குக் கிருஷ்ணன் தேரைச் செலுத்தினார்.

இது சமயம் பதினாலாயிரம் சம்சப்தகர்கள் இரு பிரிவாகப் பிரிந்து, பதினாயிரம் வீரர்கள் அர்ச்சுனனையும் நாலாயிர வீரர்கள் கிருஷ்ணனையும் போருக்குக் கூவி அழைத்துப் பின் தொடர்ந்தனர்.

அர்ச்சுனனுடைய மனம் பேதலித்தது. "இங்கு நின்று சம்சப்தர்களுடன் போர் செய்யலாமா? அல்லது பகதத்தன் போர்புரியும் இடத்துக்குச் செல்லலாமா? எது இப்பொழுது செய்யத்தக்கது?" என்று அர்ச்சுனன் சிந்தித்தான்.

இது சமயம் சம்சப்தகர்களை எதிர்ப்பதே நலம் என்ற முடிவுக்கு வந்து, அவர்களை அர்ச்சுனன் எதிர்த்தான். சம்சப்தகர்கள் சளைக்காது இலட்சம் பாணங்களை அர்ச்சுனன்மீது பொழிந்து அவனை எதிர்த்தார்கள்.

கிருஷ்ணனும் அர்ச்சுனனும் இருப்பது புலப்படவில்லை; தேரும் குதிரைகளும் தென்படவில்லை. கண்ணன் மூர்ச்சித்து விட்டார்; உடலும் வியர்த்துவிட்டது.

பார்த்தன் பிரம்மாஸ்திரத்தை ஏவி, சம்சப்தகர்களில் பெரும்பாலோரைக் கொன்றான்; குதிரைகள் பாகர்களுடன் தரையில் விழுந்து உயிர்நீத்தன; யானைகள் மாவுத்தர்களுடன் தரையில் விழுந்து பிணமாயின.

அர்ச்சுனன் போர்செய்யும் திறமையைக் கவனித்த கண்ணன், அவனைப் பெரிதும் மெச்சினார். கரம் குவித்து அவனை வணங்கவும் செய்தார்: "பார்த்தா! இந்திரன், யமன், குபேரன் மூவரும் சேர்ந்து செய்ய இயலாத பெரும் காரியத்தை இந்தப் போரில் நீ செய்திருக்கிறாய். சம்சப்தகர்கள் ஆயிரக்கணக்கில் உனது அம்புக்கு இரையாகி, பூமியில் புரள்வதை நான் பார்க்கிறேன்" என்று சொன்னார்.

எஞ்சியிருந்த சம்சப்தகர்களையும் வதம் செய்தான் அர்ச்சுனன். பிறகு கண்ணனை நோக்கி, "பகதத்தன் போர் செய்யும் இடத்துக்குத் தேரைச் செலுத்தும்" என்று ஏவினான் அர்ச்சுனன்.

## பகதத்தன் வதம்

அர்ச்சுனன் கட்டளைப்படி கண்ணன் தேரைச் செலுத்தினார். சுசர்மா தன் சகோதரர்களுடன் விடாது அவர்களைப்

பின்தொடர்ந்தான். தங்களுடன் வந்து போர் செய்யுமாறு அர்ச்சுனனை அழைத்தான்.

உடனே அர்ச்சுனன் கண்ணனை நோக்கி, "அச்சுதரே! வட புறத்தில் நமது படையைப் பகைவர்கள் பிடிக்கிறார்கள். இங்கே சம்சப்தகர்கள் என்னைப் போருக்கு அழைக்கிறார்கள். இப்பொழுது முதலில் நாம் செய்யத்தக்கது எது? சம்சப்தகர்களைக் கொல்லலாமா? அல்லது, நமது படையைப் பாது காக்கப் புறப்படலாமா? எதை முதலில் செய்தால் நமக்கு நன்மையாக இருக்கும்?" என்று கேட்டான்.

அர்ச்சுனன் இப்படிக் கேட்டதும் கண்ணன் தேரைச் சுசர்மாவை நோக்கித் திருப்பினார்.

அர்ச்சுனன் சுசர்மாவைப் பாணங்களால் அடித்தான்; அவனுடைய கொடியையும் வில்லையும் அறுத்துத் தள்ளினான். மற்றோர் அம்பை எய்து, அவன் தம்பியரில் ஒருவனை எமன் உலகுக்கு அனுப்பினான். சுசர்மாவும் மூர்ச்சையுற்று, திரும்பிவிட்டான்.

பிறகு கௌரவர் படையைப் பிடித்துக்கொண்டு அர்ச்சுனன் புறப்பட்டான். அர்ச்சுனன் வந்த தேர் பகதத்தனை அணுகியது. நல்லோரைக் காப்பதற்கு எந்த வில்லை அர்ச்சுனன் முன்பு பயன்படுத்தினானோ, அதே வில்லை இப்பொழுது சூதாட்டத்தில் விருப்பமுள்ள துரியோதனனையும் அவனைச் சார்ந்த அரசர்களையும் எதிர்க்கப் பயன்படுத்த லானான். இதனால் கௌரவ சேனை, கலக்கமுற்றுத் தவித்தது.

இதைக் கவனித்த பகதத்தன் தனது யானையை அர்ச்சுனனை நோக்கிச் செலுத்தினான்.

அர்ச்சுனன் அவனைத் தேரில் இருந்தபடி எதிர்த்தான். பகதத்தன் யானைமீது அமர்ந்தபடி அம்புமாரி பொழிந்து அர்ச்சுனனைத் தாக்கினான். யானையை ஏவி, கண்ணனையும் அர்ச்சுனனையும் ஒரே சமயத்தில் தாக்கலானான்.

தங்களைத் தாக்க எமன்போல வருகின்ற அந்த யானையை அச்சுதர் கவனித்தார். தேரை விரைவாகச் செலுத்தி, எதிர்க்க வந்த யானையைப் புறங்காட்டி நிற்குமாறு செய்து விட்டார்.

அந்த யானையை அர்ச்சுனன் அம்பு எய்து கொன்று இருப்பான்; ஆயினும் அர்ச்சுனன் அவ்வாறு செய்யவில்லை. புறங்காட்டி நிற்கும் யானையை அம்பால் அடிப்பது போர் விதிகளுக்கு முரண் என்று கருதியதால், அந்த யானையை அடிக்க அர்ச்சுனன் துணியவில்லை.

அர்ச்சுனன் கண்ணன் இருவரையும் அம்புகளால் ஓயாது பகதத்தன் அடித்தான் கண்ணனுக்குக் காயத்தை உண்டாக்கி, அம்புகள் பூமியில் புகுந்தன.

அர்ச்சுனன், ஒரு பாணத்தை ஏவி, பகதத்தனுடைய யானையின் கவசத்தை உடைத்தான்; குடையையும் கொடியையும் அம்புகளால் அறுத்துத் தள்ளினன்; அம்புகளால் அவனையும் தாக்கினன்.

இதனல் கோபமுற்ற பகதத்தன் தோமரத்தைப் பிரயோகித்து, அர்ச்சுனனின் கிரீடத்தைத் திருப்பிவிட்டான். கிரீடத்தைச் சரிப்படுத்தி வைத்துக்கொண்டு, "பகதத்தா! உலகத்தை நன்றகப் பார்" என்று பார்த்தன் கேலி செய்தான.

சீற்றங்கொண்டு அர்ச்சுனன் கண்ணன் இருவரையும் பகதத்தன் தாக்கினன். நாராயணஸ்திரம் என்னும் மந்திரத்தை உச்சரித்து, ஓர் அங்குசத்தை எடுத்து, அதை அர்ச்சுனன் மீது ஏவினன்.

கொடிய தன்மைவாய்ந்த அந்த அத்திரத்தைக் கண்ணன் தம் மார்பில் தாங்கிக்கொண்டார்; உடனே அந்த அத்திரம், தெய்வ உலகத்து மலர்களாலான வைஜயந்தம் என்னும் மாலையாக மாறியது; அந்த மாலை தம் கழுத்தில் தொங்க, கண்ணன் அழகுடன் விளங்கினர்.

இதைக் கண்டதும் அர்ச்சுனன் துணுக்குற்றன்; அவன் உள்ளம் கவலையால் நிரம்பியது. அவன் கிருஷ்ணனை நோக்கி, "மாதவரே! உங்களுக்காக நான் போர்புரிய மாட்டேன்; ஆனல் சாரத்தியம் செய்வேன் என்று முன்பு நீர் வாக்களித்தீரே. அதன்படி நீர் நடக்க வேண்டாமா? போர் புரிகிற எனக்கு ஊக்கமோ ஆற்றலோ குறையவில்லை. அப்படி இருக்கும்போது பகைவன் ஏவிய கணையை உம் மார்பில் நீர் தாங்கிக்கொண்டது முறையன்று" என்று சொன்னன்.

"பார்த்தா! பகதத்தன் ஏவிய நாராயண அத்திரமானது மகா மகிமை வாய்ந்தது என்னைத் தவிர்த்து வேறு எவராலும் இந்த அத்திரத்தைத் தாங்கிக்கொள்ள முடியாது. இந்திரன், உருத்திரன் முதலான தேவர்களையும் அழிக்கும் தன்மை வாய்ந்தது இந்த அத்திரம். அதனல்தான் பகதத்தன் ஏவிய அந்த அத்திரத்தை நான் தாங்கிக் கொண்டேன். சிறந்த ஆயுதத்தை இழந்திருக்கும் பகதத்தனைச் சீக்கிரம் நீ கொல்" என்று அர்ச்சுனனைக் கண்ணன் துரிதப்படுத்தினர்.

உடனே அர்ச்சுனன், பகதத்தனையும் அவனுடைய யானையையும் தாக்கினான். யானையின் நெற்றியில் அம்பால் அடித்தான்.

பகதத்தன் செலுத்தியபடி செல்லாமல் யானை தயங்கியது; வறிஞனுடைய மனைவி கணவனை மதிக்காததுபோல, யானையும் பகதத்தனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவில்லை. அத்திரத்தின் வேகம் தாங்காது, துள்ளிக் குதித்து, யானை தன் உயிரைவிட்டது.

யானை இறந்த பின்னர், கண்ணன் அர்ச்சுனனிடம், "பார்த்தா! இந்தப் பகதத்தன் மேன்மை பெற்றவன்; வயோதிகன்; மடித்த சதைகள் நெருங்கும் கண்கள் உள்ளவன்; இவனை வெல்வது எளிதன்று; கண்கள் தெரியும் பொருட்டு, பட்டுத் துணியால், சதைகளைத் தூக்கிக் கட்டியிருக்கிறான்" என்று சொன்னார்.

கண்ணன் குறிப்பாக உணர்த்தியவுடன், அர்ச்சுனன், அம்பு எய்து அந்தப் பட்டுத் துணியைத் துண்டித்தான்: அதனால் சதைகள் கண்கள்மீது தொங்கி, பகதத்தனுடைய பார்வையை மறைத்துவிட்டன. பார்வை இழந்து தத்தளித்த பகதத்தனை, ஒரு பாணத்தை ஏவி, அர்ச்சுனன் கொன்றான். பெரிய மரமானது காற்றினால் ஒடிக்கப்பட்டு, மலையுச்சியிலிருந்து விழுவதை ஒப்ப, இந்திரனுடைய நண்பனான பகதத்தன் உயிர்பிரிந்து பூமியில் சாய்ந்தான்.

பன்னிரண்டாம் நாள் நடந்த இந்தப் போரில், "துரோணரைக் கொல்லுங்கள். துரோணரைக் கொல்லுங்கள்" என்று பாண்டவர்கள் தரப்பினர் முழக்கம் செய்தனர்.

"துரோணரைக் கொல்ல இடம் கொடோம்! இடம் கொடோம்!" என்று கௌரவர்கள் தரப்பு வீரர்கள் எதிர் முழக்கம் செய்தனர்.

கைகலந்த போர் வெகு மும்முரமாக நடந்தது.

சம்சப்தகர்களை வென்ற பின்னர், துரோணர் போர் செய்யும் இடத்துக்கு அர்ச்சுனன் வந்தான். வானரக் கொடி பறக்கப் புறப்பட்டு வந்த அர்ச்சுனன், கௌரவ வீரர்களைக் கடுமையாகத் தாக்கினான்.

தாக்குப் பிடிக்க முடியாமல் கௌரவ வீரர்கள் கதறினார்கள். 'கர்ணா! எங்களைக் காப்பாற்று! கர்ணா! எங்களைக் காப்பாற்று!" என்று கூவினார்கள்.

"பயப்படாதீர்கள்?" என்று ஆறுதல் சொல்லி, கர்ணன் அர்ச்சுனனை எதிர்க்க முனைந்தான். நெருப்புக் கணையை ஏவி அர்ச்சுனனைக் கர்ணன் தாக்கினான். நீர்க் கணையை ஏவி அர்ச்சுனன் அதை அவித்தான்; கர்ணன், எதிரிலேயே கர்ணனுடைய தம்பியர் மூவரை, அர்ச்சுனன் வதம் செய்தான்.

திருஷ்டத்துய்மனன், சாத்யகி முதலியவர்களும் கர்ணனைத் தாக்கினார்கள். கர்ணனுடைய வில்லை, சாத்யகி அம்பினால் அறுத்துவிட்டான்; பிறகு, மூன்று பாணங்களை ஏவி, கர்ணனுடைய மார்பிலும் கைகளிலும் அடித்தான்.

இது சமயம் துரியோதனன், துரோணர், ஜயத்ரதன் ஆகியோர் வந்து, கர்ணனைக் காப்பாற்றினார்கள்.

## பத்ம வியூகம்

பொழுது சாய்ந்தது; இரு தரப்புச் சேனையினரும் தத்தம் பாசறைகளுக்குத் திரும்பினர். அடிபட்ட காயங்களுடன் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு இரத்தம் சொட்ட அவர்கள் போனார்கள். பார்த்தனுடைய திறமையைப் பாராட்டி, மற்றவர்கள் பேசுவதைச் செவிமடுத்த கௌரவ வீரர்கள், மனம் புழுங்கினார்கள்; ஊமையர்கள்போல் ஒன்றும் சொல்லாமல் இருந்தார்கள்.

பதின்மூன்றும் நாள் பொழுது புலர்ந்தது. மிகுந்த கோபத்துடன் இருந்த துரியோதனன் துரோணரை நோக்கி, "அந்தணர்களில் சிறந்தவரே! அருகில் வந்த யுதிட்டிரனை நீர் உயிருடன் பிடியாமல் விட்டுவிட்டீர். உண்மையாகவே யுதிட்டிரனைப் பிடிக்கும் விருப்பம் உமக்கு இருந்திருக்குமாயின், தேவர்களாலும் உம்மைத் தடுத்து இருக்க முடியாது. பிடித்துத் தருவதாக வாக்களித்துவிட்டு, இப்பொழுது வேறு விதமாக நடக்கிறீர். பெரியோராய் இருப்பவர்கள், தங்கள் பக்தர்களுக்கு விரோதமாக ஒரு போதும் நடக்க மாட்டார்கள். எப்படியாவது நாங்கள் ஒழிந்துபோகட்டும் என்ற கருத்து உமக்கு ஏற்பட்டு விட்டது போலும்" என்று அன்பும் அபிமானமும் தொனிக்கச் சொன்னான்.

கௌரவ தரப்புப் படைவீரர்கள் அனைவரும் கேட்டுக்கொண்டிருக்க, பேசுவதில் திறமைசாலியான துரியோதனன்,

துரோணரிடம் இவ்வாறு கூறியதும், துரோணர் மிகுந்த நாணமுற்றார்.

அவர் துரியோதனனை நோக்கி, "அரசே! உனக்கு நன்மை செய்வதில் நாட்டமுள்ள என்னை நீ குறைகூறுவது உன் தகுதிக்கு அடுக்காது அரக்கர்கள், இயக்கர்கள், கந்தர்வர்கள், நாகர்கள், தேவர்கள் யாவரும் சேர்ந்து எதிர்த்தாலும் அர்ச்சுனனை வெல்ல முடியாது. முக்கண் உள்ள சிவபெருமான் ஒருவரைத் தவிர்த்து, வேறு எவராலும் சேர்ந்திருக்கும் கண்ணனையும் அர்ச்சுனனையும் சாடுதல் சாத்தியப்படாது. அரசனே! நான் கூறுவதைக் கேள். தேவர்களாலும் உடைக்க முடியாத ஒரு வியூகத்தை வகுத்து, மாவீரன் ஒருவனை இன்று நான் அவசியம் மாய்ப்பேன். இது நடைபெறுவது உறுதி. அதற்கு ஆவன செய்கிறேன். எதாவது ஓர் உபாயம் செய்து, இன்றைய போரில் அர்ச்சுனன் கலந்துகொள்ள முடியாதபடி செய்துவிட வேண்டும். பல ஆசிரியர்களிடம் அர்ச்சுனன் போர்க்கலையைத் திறமையாகக் கற்றவன்; போர்க்களத்தில் அவனுக்குச் சாத்தியப்படாதது, சாதிக்க முடியாதது எதுவுமே இல்லை" என்று சொன்னார்.

இவ்வாறு சொல்லிவிட்டு, துரோணர் பத்ம வியூகத்தை வகுத்தார்; பார்ப்பதற்கு அந்த வியூகம் தாமரை மலரை ஒத்து இருந்தது; அரசர்களும் அரச குமாரர்களும் தகுந்த இடங்களில் நின்றார்கள். எல்லாரும் சிவப்பு உடை அணிந்து, சிவப்பு அணிகலன்கள் பூண்டிருந்தார்கள்; அவர்களுடைய கொடிகள் சிவப்பு நிறத்தில் இருந்தன.

துரியோதனன் சேனையின் நடுவில் நின்றான். கர்ணன், துச்சாதனன், கிருபர் முதலியோர் அவனைச் சூழ்ந்து நின்றார்கள்; சேனையின் முன் அணியில் துரோணர் கம்பீரமாக நின்றார்; சிந்துநாட்டு மன்னன் ஜயத்ரதன் மேருமலைபோல் நிமிர்ந்து நின்றான்.

துரோணர் இவ்வாறு அணிவகுத்துக் காத்து நின்ற சேனையை, பாண்டவர்கள் தரப்பு வீரர்கள் பீமசேனனை முன்விட்டுக்கொண்டு எதிர்த்தார்கள். சாத்யகி, சேகிதானன், திட்டத்துய்மனன், குந்திபோஜன், துருபதன், அபிமன்யு, நகுலன், சகதேவன், கடோத்கசன், சிகண்டி ஆகியோர் துரோணரை எதிர்க்க விரைந்தார்கள்.

சிறிதும் பரபரப்புக் கொள்ளாமல், திறமைசாலியான துரோணர், அம்பு வெள்ளத்தால் எதிரிகளைத் தடுத்தார்.

உடைக்க முடியாத மலையை அடுத்துப் பெருகிய பெருவெள்ளம், தடைப்பட்டு நிற்பதுபோல, பாண்டவர்கள் தரப்பு வீரர்கள் தடைப்பட்டு நின்றனர். துரோணரை எதிர்த்துத் தாக்க முடியாது அவர்கள் தவித்தனர்.

துரோணர் தடுத்ததுடன் அமையாது, அதிகக் கோபத்துடன் எதிர்த்து முன்னேறி வருவதைக் கவனித்த யுதிட்டிரர் ஏதாவது ஓர் உபாயம் செய்து, துரோணரைத் தடைப்படுத்த எண்ணினர். அளவற்ற ஆற்றல் வாய்ந்த அபிமன்யுவை—அர்ச்சுனனுக்கும் கர்ணனுக்கும் நிகரான மாபெரும் வீரன் அபிமன்யுவை,—சுபத்திரையின் அருமந்த புதல்வனை, யுதிட்டிரர் நோக்கினர். "குழந்தாய்! அர்ச்சுனன் திரும்பியதும் நம்மை நிந்திக்காமல் இருக்கும் வகையில் நாம் நடந்து கொள்ள வேண்டும். இப்பொழுது துரோணர் வகுத்துள்ள பத்ம வியூகத்தை நாங்கள் அறியோம். நீ, அர்ச்சுனன், கர்ணன், பிரத்யும்னன் * ஆகிய நால்வருக்கு மட்டுமே அந்த வியூகத்தை உடைக்கும் திறமை உண்டு. ஆகவே, அபிமன்யு துரோணர் வகுத்துள்ள வியூகத்தை உடைக்க ஏற்பாடு செய் எங்களையும் படைகளையும் உறவினர்களையும் நீ காப்பாற்று" என்று சொன்னர்.

"தந்தையே! தங்கள் சொற்படி செய்கிறேன். இந்த வியூகத்தினுள் புகும் விதத்தை என் தந்தை எனக்குக் கற்றுத் தந்திருக்கிறார். ஆகையால் துரோணர் வகுத்துள்ள இந்த வியூகத்துள் நான் புகுந்துவிடுவேன். அங்கே ஏதாவது ஆபத்து எனக்கு நேருமாயின், வியூகத்தை விட்டு வெளிப்படுவதற்கு என்னால் முடியாது" என்று அபிமன்யு தெரிவித்தான்.

"திறமையாகப் போர் புரியத் தெரிந்தவனே! வியூகத்தை உடைத்து எங்களுக்கு வழிபண்ணிக்கொடு; நாங்கள் உன்னைத் தொடர்ந்து வருகிறோம். அர்ச்சுனனுக்கு நிகராகப் போர் புரியும் ஆற்றல் பெற்றவன் நீ" என்று சொன்னர் யுதிரட்டிரர்.

உடனே பீமன், "நான் உன்னைப் பின்தொடர்ந்து வருகிறேன். திட்டத்துய்மனன், சாத்யகி முதலியவர்களும் பின் தொடர்வார்கள். நீ வியூகத்தை உடைத்ததும் நாங்கள் உட்புகுந்து, பகைவரைச் சிதறடித்து அழிப்போம்" என்று சொன்னன்.

---

* பிரத்யுமனன்—கண்ணனுடைய புதல்வன்; ருக்மணிக்குப் பிறந்தவன்.

"நெருப்பில் விட்டில் பூச்சி புகுவதைப் போல, இந்த வியூகத்துள் நான் புக முயல்கிறேன். அதனால் என் மாமனும் என் தந்தையும் என் செய்கையைப் பாராட்டுவர். சிறுவனான என்னால் பகைவர்கள் சேனை படுநாசம் அடைவதை நீங்கள் காண்பீர்கள். இவ்வாறு செய்யாது போனால் அர்ச்சுனருக்கு நான் புதல்வனும் ஆகேன்; சுபத்திரை பெற்ற பிள்ளையும் ஆகேன்" என்று வஞ்சினம் உரைத்தான் அபிமன்யு.

"குழந்தாய்! துரோணருடைய வியூகத்தை உடைக்க நீ ஊக்கம் காட்டுவது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். அதற்கு உரிய ஆற்றல் உன்னிடம் வளர்க!" என்று அபிமன்யுவை வாழ்த்தினார் யுதிட்டிரர்.

இதன் பின்னர் அபிமன்யு தன் சாரதியை நோக்கி, "பாகனே! போர்க்களத்தை நோக்கித் தேரைச் செலுத்து" என்று ஏவினான்.

## மேலான வீரன்

யுதிட்டிரருடைய கட்டளைப்படி அபிமன்யு, தேரில் அமர்ந்து, துரோணரின் போர்க்களத்தை நாடிச் சென்றான். அப்போது தேர்ப்பாகன் அபிமன்யுவை நோக்கி, "நீடித்த ஆயுள் உடையவரே!* பாண்டவர்கள் பெரும் பொறுப்பை உம்மிடம் சுமத்தி இருக்கிறார்கள். சிறிது இதுபற்றி நீர் சிந்தித்து, பிறகு போர்க்களத்தில் புகுவது நன்மை பயக்கும். ஆசாரியர் துரோணர் அத்திரப் பயிற்சியில் கைவந்தவர்; அனுபவசாலி; வயது முதிர்ந்தவர். நீரோ இளம் பிராயத்தினர்; போதிய அத்திரப் பயிற்சி இல்லாதவர். ஆகையால் இப்பொழுது போரில் நீர் இறங்க வேண்டாம்" என்று சொன்னான்.

தேர்ப்பாகன் எச்சரித்ததைக் கேட்டு, அபிமன்யு சிரித்தான். "பாகனே! துரோணரையும் மற்ற அரசர்களையும் நான் ஒரு பொருட்டாகக் கருதவில்லை. தேவகணங்களுடன் சேர்ந்து இந்திரனே ஐராவதத்தின்மீது வந்து என்னை எதிர்த்தாலும் நான் சளைக்காது போர் செய்வேன். அப்படியிருக்கும்போது இந்தத் துரோணரும் அரச குலத்தவரும் எனக்கு எம்மாத்திரம்? விஷ்ணுவுக்கு மருமகனும் அர்ச்சு

* சாரதி தலைவனை விளிக்கும் பொழுது, இப்படிக் கூறுவது மரபு.

னருக்கு மைந்தனும் இருக்கும் நான் இதற்கு எல்லாம் அஞ்சலாமா?'' என்று சொன்னான்.

''போருக்குப் போக வேண்டாம்'' என்று சொல்லி, தேர்ப் பாகன் பல முறை தடுத்துப் பார்த்தான்.

அவன் சொன்னதைத் தன் காதில் அபிமன்யு வாங்கிக் கொள்ளவில்லை. ''துரோணருடைய படை நிற்கும் இடத்துக்குத் தேரைச் செலுத்து'' என்று துரிதப்படுத்தினான்.

சாரதி கவலையுடன் தேரைச் செலுத்தினான். மூன்று வயது நிரம்பிய, அலங்கரிக்கப்பட்ட, குதிரைகள் தேரை விரைவாக இழுத்துச் சென்றன.

அபிமன்யு போருக்கு ஆயத்தமாக வருவதைக் கண்ட கௌரவ வீரர்கள் துரோணரை முன்னிட்டுக் கொண்டு அவனை எதிர்த்தார்கள்.

பாண்டவ வீரர்கள் அபிமன்யுவைப் பின்தொடர்ந்தார்கள்; சிங்கக்குட்டி ஒன்று யானைகளை எதிர்ப்பதை ஒப்ப, அபிமன்யு, துரோணர் முதலான மாபெரும் வீரர்களைத் தைரியமாக எதிர்த்தான்.

வியூகத்தை உடைத்து, அபிமன்யு உட்புகுந்து விடாதபடி கௌரவ வீரர்கள் பாதுகாத்தார்கள். போர் கடும் வேகத்துடன் நடந்தது. அர்ச்சுனனுடைய திருமகன் அபிமன்யு, துரோணர் பார்த்து இருக்கும்போதே, அவர் வகுத்து இருந்த வியூகத்தைப் பிளந்துவிட்டான். அவமதிக்க முடியாத, ஜயிக்க முடியாத, உடைக்க முடியாத, துரோணருடைய அந்த வியூகத்தைப் பிளந்துகொண்டு, வீரன் அபிமன்யு உள்ளே புகுந்தான்.

உடனே ஆயுதம் ஏந்திய நால்வகைச் சேனைகளும் அபிமன்யுவைச் சூழ்ந்துகொண்டன; போர்ப் பறைகள் முழங்கின; ''நில், நில்'' ''போகாதே'' ''என்னை நோக்கி வா'' ''பகைவனே! இதோ இருக்கிறேன்'' என்று கூவிக்கொண்டு, பூமி அதிரும்படி கௌரவ சேனையினர் போருக்கு முனைந்தார்கள்; பலர் கூடி அபிமன்யுவை எதிர்க்க முற்பட்டார்கள்.

இவர்கள் எல்லாரையும் அர்ச்சுனன் புதல்வன் சளைக்காது அம்புகளால் அடித்தான்; நெருப்பை அணுகிய விட்டில் பூச்சி பூமியில் விழுவதைப் போல, கௌரவ வீரர்கள் அம்பால் அடிபட்டுப் பூமியில் விழுந்தார்கள். எங்கு பார்த்தாலும் போர்க்களத்தில் கௌரவ வீரர்களின் முண்டங்களும் தலைகளும், கைகளும், கால்களும் கிடந்தன.

தோள்வளையங்கள் அணிந்து, சந்தனம் பூசி, போர்க்கருவி களைப் பிடித்துக்கொண்டிருந்த கரங்கள், பூமியில் அறு பட்டுக் கிடந்தன. அழகிய முகவிலாசமும் இன்சொல் பேசும் வாயும் பெற்று, இரத்தினம் இழைத்த மணிமுடியை அணிந் திருந்த தலைகள், ஆயிரக்கணக்கில் துண்டிக்கப்பட்டுப் பூமி யில் கிடந்தன; குடல் சரிந்து, உயிர் இழந்து, யானைகளும், குதிரைகளும் இரத்தத்தைப் பெருகவிட்டுக்கொண்டு துடித் தன.

அந்தப் போர்க்களத்தில், திருமாலைப்போல், அபிமன்யு நிகரற்று விளங்கினான்; தேவசேனைபதி சுப்பிரமணியர், அசுர சேனையை நாசம் செய்ததைப்போல, கௌரவ சேனையை, அபிமன்யு நாசம் செய்தான்; போர் புரிவதில் உற்சாகம் குன்றி, ஒருவரை ஒருவர் கூவி அழைத்துக்கொண்டு, கௌரவ வீரர்கள் ஓடத் தலைப்பட்டார்கள்.

தன் சேனை அபிமன்யுவினால் நாசமடைவது கண்டு ஆத் திரமுற்ற துரியோதனன், தானே முன்வந்து அபிமன்யுவை எதிர்த்தான்.

இதைக் கவனித்த துரோணர், போர்வீரர்களை நோக்கி "அபிமன்யு மிகுந்த ஆற்றல் பெற்றவன்; ஆகவே நாற்புறங் களிலும் சூழ்ந்துகொண்டு, அரசனைக் காப்பாற்றுங்கள்" என்று ஏவினான்.

துரோணர், அசுவத்தாமா, கிருபர், கர்ணன், கிருத வர்மா, சகுனி, சல்லியன் ஆகியோர் சேர்ந்து அபிமன்யுமீது அம்புமாரி பொழிந்து, துரியோதனனைக் காப்பாற்றினார்கள். இதனால் கோபமடைந்த அபிமன்யு சீற்றங்கொண்டு, இவர் கள் அனைவரையும் கடுமையாக எதிர்த்தான்; ஒருவனாக இருந்தும் ஊக்கத்துடன் எதிர்த்தான்.

தனித்து நின்று போர் செய்யும் அபிமன்யுவை, கௌரவ தரப்பு வீரர்கள் பலர் சேர்ந்து எதிர்த்தார்கள்; துச்சாதனன் கிருபர், துரோணர், கிருதவர்மா, அசுவத்தாமா, பூரிசிரவஸ், சல்லியன், சகுனி ஆகியோர் அம்புமாரிகளைப் பொழிந்து அபி மன்யுவைத் தாக்கினார்கள்.

அபிமன்யு மேன்மையான சனை ஒன்றை எடுத்துக் கர்ண னைத் தாக்கினான்; அந்த அம்பு கர்ணனுடைய கவசத்தை உடைத்து, தேகத்தைப் பிளந்துகொண்டு பூமிக்குள் புகுந் தது. கர்ணன் இதனால் தளர்வுற்று, போர்க்களத்தில் அசைந் தாடி நின்றான்.

தன்னை எதிர்த்துவந்த சல்லியனை, அபிமன்யு சடுதியில்

தாக்கினான்; மூர்ச்சையுற்று, தேர்த்தட்டின் நடுவில் சல்லியன் உட்கார்ந்தான்.

இதனால் கலக்கமுற்ற கௌரவ சேனை, புறமுதுகு காட்டி ஓடத் தலைப்பட்டது. துரோணர் பார்த்துக்கொண்டிருந்தார். வீரமிக்க வாலிபன் அபிமன்யு காட்டிய தீரத்தைப் பலரும் பாராட்டினார்கள்.

தன் தமையன் சல்லியன் அபிமன்யுவினால் அடிக்கப்பட்டு மூர்ச்சையுற்று இருப்பதைக் கண்டதும், சல்லியன் தம்பி அதிக ஆத்திரமடைந்தான். 'நில் நில்' என்று சொல்லிக் கொண்டு வந்து, அபிமன்யுவைத் தாக்க முற்பட்டான்.

இவனை அர்ச்சுனனின் அருமந்த மைந்தன் வெகு எளிதில் வதம் செய்துவிட்டான்; புயலால் தாக்குண்ட பெரிய மரம் ஒன்று வேரோடும் தூரோடும் பெயர்ந்து விழுவதை ஒப்ப, சல்லியன் தம்பி பூமியில் சரிந்து விழுந்தான்.

இதைக் கண்ணுற்ற கௌரவப் படை வீரர்கள் வெகுண்டு எழுந்தனர்; 'உன்னை உயிருடன் விடப்போவதில்லை'' என்று கூவிக்கொண்டு அபிமன்யுவை எதிர்த்து வந்தனர்.

நகைத்துக் கொண்டே அவர்களை அபிமன்யு பதிலுக்குத் தாக்கினான். அவனுடைய ஆற்றலைக் கண்ட வீரர்கள் அஞ்சி நடுங்கிப் புறங்காட்டி ஓடினார்கள்.

அபிமன்யுவின் போர்த் திறத்தைக் கண்டு துரோணர் களிப்படைந்தார். மகிழ்ச்சியால் அவருடைய கண்கள் மலர்ந்தன. அவர் கிருபரை நோக்கி, ''சுபத்திரையின் புதல்வன் பாலன் அபிமன்யுவின் ஆற்றலைப் பாரும். உற்றார் உறவினர்களையும் மற்றவர்களையும் பெற்றோரையும் அவன் செயல் மகிழ்ச்சிக் கடலில் திளைக்கச் செய்கிறது. இவனுக்கு நிகரான வில்லாளியை இதுவரை நான் கண்டது இல்லை விரும்பினால் சேனை முழுவதையும் படுநாசப்படுத்தும் ஆற்றல் அபிமன்யுவுக்கு உண்டு. எக்காரணத்தாலோ அதை அவன் இதுவரை செய்யாமல் இருந்து வருகிறான்'' என்று சொன்னார்.

துரோணர் இப்படிப் பாராட்டியதும் அபிமன்யுமீது கோபத்துடன் இருந்த துரியோதனன், துரோணரைப் பார்த்து நகைத்தான். கர்ணன், துச்சாதனன், சல்லியன் முதலிய மகா வீரர்களை நோக்கி, ''அரசர்கள் அனைவர்க்கும் வில்லாசிரியராக இருந்த துரோணர், மூடனை அபிமன்யுவைக் கொல்ல விருப்பமில்லாமல் இருந்து வருகிறார். ஆயுதத்தை எடுத்துப் போர் செய்ய முனைந்தால், இவரை எதிர்க்க யமன்கூட அஞ்ச

வான். தன் சீடன் என்ற கருத்தினால், அபிமன்யுவைத் துரோணர் காக்க விரும்புகிறார். இதனால்தான் தன்னை வெகு சமர்த்தனாக எண்ணிக்கொண்டு, அபிமன்யு அகந்தையுடன் போர் புரிகிறான். ஆகையால் அவனைக் கொல்ல முந்துங்கள்'' என்று துரியோதனன் சொன்னான்.

'துரியோதனன் இப்படி ஏவியதும், எல்லாரும் அபிமன்யுவை எதிர்க்க முனைந்தார்கள். அப்போது துச்சாதனன் தன் தமையனை நோக்கி, ''அரசே! பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் பார்த்திருக்கும்பொழுதே அபிமன்யுவை நான் அழிப்பதைப் பாருங்கள். சூரியனை இராகு விழுங்குவதைப் போல, இவனை நான் விழுங்கிவிடுகிறேன். அதைக் கேள்வியுற்று, அர்ச்சுனன், கண்ணன் மற்றப் பாண்டவர்கள் அனைவரும் ஒரே தினத்தில் இந்த மண்ணுலக வாழ்வை நீப்பர். இது உறுதி'' என்று சொன்னான்.

இவ்வாறு சொல்லிவிட்டு, பெரு முழக்கம் செய்து கொண்டு, அபிமன்யுவைத் துச்சாதனன் எதிர்த்தான்.

தன்னை எதிர்த்த துச்சாதனனை, அபிமன்யு இருபத்தாறு பாணங்களால் அடித்தான் திறமையாகத் தேரைச் செலுத்தி, இருவரும் கடும் போர் புரிந்தார்கள்.

## தந்தையை நிகர்த்தவன்

போர் மும்முரமாக நடந்தது துச்சாதனனுடைய வில்லை அபிமன்யு அறுத்துத் தள்ளினான். அம்புமாரி பொழிந்து துச்சாதனன் உடம்பில் நான்கு பக்கங்களிலும் படுகாயங்களை உண்டுபண்ணினான். துச்சாதனனை நோக்கி, ''கருடத்தில் பிடிப்பு இல்லாத உனக்குப் பிறரை நிந்திப்பதில் பிரியமுள்ள உனக்கு, இந்தக் கதி நேர வேண்டியதுதான். போர்க்களத்தில் புறமுதுகு காட்டி நீ ஓடாமல் இருப்பாயாயின் உனது உடம்பில் உயிர் தரியாது'' என்று அபிமன்யு சொன்னான்.

இப்படிச் சொல்லிவிட்டு, இருபத்து நான்கு பாணங்களால் துச்சாதனனை அபிமன்யு அடித்தான். துச்சாதனன் சோர்ந்து தேரின் நடுவே உட்கார்ந்தான்; தாக்குப்பிடிக்க முடியாமல் மூர்ச்சையுற்றான்.

இதைக் கவனித்த தேர்ப்பாகன். துச்சாதனனைப் போர்க்களத்தை விட்டு, அப்பால் அகற்றிச் சென்றான். இதைக்

கண்ட பாண்டவ வீரர்கள் பெருத்த ஆரவாரம் செய்தார்கள். வாத்தியங்களை முழக்கித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டார்கள்; துச்சாதனனை நோக்கி நகைக்கவும் செய்தார்கள்.

பாஞ்சாலர்களும் கேகயர்களும் யுதிட்டிரரை முன்னிட்டுக் கொண்டு துரோணர் பாதுகாக்கும் அணியை உடைக்க முயன்றார்கள்: அங்கே பெரும் போர் நிகழ்ந்தது,

இது சமயம் துரியோதனன் கர்ணனை நோக்கி, "அபிமன்யு துச்சாதனனைத் தீவிரமாக எதிர்க்கிறான். பாண்டவர் அபிமன்யுவுக்கு உதவ விரைகிறார்கள்" என்று சொன்னான்.

உடனே கர்ணன் மிகுந்த கோபங்கொண்டு, கூரிய அம்புகளால் அபிமன்யுவைத் தாக்கினான். அபிமன்யுவுக்கு உதவ ஓடி வருகிறவர்களைத் தடுத்தான். எவ்வளவு கூரிய பாணங்களால் கர்ணன் அடித்தும் அபிமன்யு தளர்ச்சி அடையவில்லை.

கர்ணனையும் அவனுடைய தேர்ப்பாகனையும் குதிரைகளையும் அபிமன்யு பாணங்களால் அடித்தான்; கர்ணனுடைய வில்லை அறுத்துக் கீழே தள்ளினான்.

இதைக் கண்ட பாண்டவ வீரர்கள் ஆரவாரம் செய்து, பேரிகைகளை முழக்கி, தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார்கள்; அபிமன்யுவைப் புகழ்ந்தார்கள்.

இதனால் ஆத்திரமுற்ற கர்ணன் தம்பி, அபிமன்யுவைக் கடுமையாக எதிர்த்தான்: இதை அபிமன்யு பொறுக்கவில்லை. வில்லை வளைத்து, அம்பு எய்து கர்ணன் தம்பியின் தலையைத் துண்டித்தான்; இதைக் கண்டு கௌரவர்கள் மனம் நொந்து வருந்தினார்கள்.

கர்ணன் திரும்பவும் வந்து அபிமன்யுவை எதிர்த்தான்; அபிமன்யு அவனுடைய படையைச் சிதற அடித்துவிட்டான். கர்ணனும் காயமுற்று, போர்க்களத்தைவிட்டுப் புறமுதுகு காட்டி ஓடினான்.

"கர்ணா! துரியோதனா! கிருபரே! நில்லுங்கள்! நில்லுங்கள்" என்று சொல்லி, துரோணர் அவர்களைக் கூவி அழைத்தார். சிந்து நாட்டு மன்னன் ஜயத்ரதனைத் தவிர்த்து, மற்ற வீரர்கள் போர்க்களத்தை விடுத்து அப்பால் போய்விட்டார்கள்.

யுதிட்டிரன், பீமன், சிகண்டி, திட்டத்துய்மனன், துருப

தன், விராடன் முதலியோர் அபிமன்யுவுக்கு உதவ விரைந் தார்கள்; அவர்களை ஜயத்ரதன் எதிர்த்துத் தடுத்தான்.

ஜயத்ரதனுடைய தேரை, சிந்து நாட்டில் பிறந்த சிறந்த குதிரைகள் இழுத்து வந்தன. அவனுடைய தேரின் உச்சியில் பன்றிக்கொடி பறந்துகொண்டிருந்தது. அம்பு மாரி பொழிந்து, அபிமன்யு பிளந்த வியூகத்தை அம்புமாரி களாலே ஜயத்ரதன் அடைத்துவிட்டான். அபிமன்யுவுக்கு உதவி செய்ய வந்தவர்களைப் பாணங்களால் அடித்து அடித்து அணியின் அருகே செல்லாதபடி தடுத்தான்.

இதைக் கவனித்த யுதிட்டிரர், அம்பு எய்து ஜயத்ரதனு டைய வில்லை அறுத்துத் தள்ளினார். சடுதியில் வேறு வில்லைக் கையில் எடுத்து, ஜயத்ரதன் யுதிட்டிரரை அடித்தான்; பீமனுடைய வில்லையும் கொடியையும் அறுத்துத் தள்ளினான்.

உடனே பீமன் தன் தேரிலிருந்து கீழே குதித்து, சாத்யகி யின் தேரில் சிங்கம் பாய்வதுபோல் பாய்ந்து ஒரு நொடியில் ஏறிக்கொண்டான்.

மகர மீன் கடலைக் கலக்குவதைப்போல அபிமன்யு, தனித்து நின்று கௌரவ சேனையைக் கலக்கினான்; பல வீரர் களை அம்பு எய்து கொன்றான். போர்க்களத்தில் எங்கே பார்த் தாலும் தலைகளும் முண்டங்களும் கால்களும் கைகளும் கிரீடங் களும் ஆயுதங்களும் யானைகளும் குதிரைகளும் குடைகளும் பூமாலைகளும் சிதறிக் கிடந்தன. பார்ப்பதற்கு இது அதி பயங் கரமாய் இருந்தது. கூற்றுவன் சஞ்சரிப்பதுபோல, போர்க் களத்தில் அபிமன்யு சஞ்சரித்தான்.

"வீரர்களே! பயப்படாதீர்கள். அபிமன்யுவை ஒரு வீர னாகக் கருதி நீங்கள் அஞ்ச வேண்டாம். நான் சென்று அவனை உயிருடன் பிடிக்கப் போகிறேன்" என்று சல்லியன் புதல்வன் ருக்மரதன் என்பவன் வீரவாதம் பேசினான்.

பிறகு தேரைச் செலுத்திச் சென்று, அபிமன்யுவை அம்பு களால் அடித்தான். வீரவாதம் பேசிவந்த அவனை அபிமன்யு, தலை வேறு, முண்டம் வேறு, கால் வேறு கைவேறாகத் துண் டித்து ஒரு நொடியில் வதம் செய்துவிட்டான். ஐந்து ஆண்டு கள் நிரம்பிய பழுக்கும் தருவாயிலுள்ள மாநந்தோப்பைப் பெரும் புயல் அழிப்பதைப்போல, கௌரவ சேனையை அபிமன்யு அழித்தான்.

தன்னைச் சேர்ந்தவர்களில் மாபெரும் வீரர்கள் பலர் அபி மன்யு ஒருவனாலே கொல்லப்பட்டதைக் கண்டு துரியோ

தனன் பயந்து போனான். ஆகவே தானே முனைந்து அபிமன்யுவை எதிர்த்தான்.

சளைக்காது துரியோதனனை அபிமன்யு எதிர்த்தான். தாக்குப்பிடிக்க முடியாது சிறிது நேரத்தில் துரியோதனன் போர்க்களத்திலிருந்து விலகிப்போய்விட்டான்.

துரியோதனன் புதல்வன் இலக்குமணன் அபிமன்யுவை எதிர்த்து வந்தான். சிங்கக்குட்டியும் புலிக்குட்டியும் எதிர்த்து ஒன்றுடன் ஒன்று சண்டை செய்வதை ஒப்ப, அபிமன்யுவும் இலக்குமணனும் போர் செய்தார்கள். "இதோ உன்னை யமன் உலகு அனுப்புகிறேன் பார்" என்று சொல்லிப் பாம்பை நிகர்த்த கணை ஒன்றை அவன்மீது அபிமன்யு ஏவினான். அந்த அம்பு இலக்குமணனின் தலையைத் துண்டித்தது.

இளவரசன் இலக்குமணன் வதைபட்டதைக் கண்டு கௌரவப் படையினர், "ஆ! ஆ" என்று அலறினர்.

"அபிமன்யுவைக் கொல்லுங்கள்!" என்று துரியோதனன் அரசர்களை ஏவினான்.

துரோணர், கிருபர், கர்ணன், அசுவத்தாமா, பிருகத்பலன், கிருதவர்மா ஆகிய அறுவரும் அரசன் சொல்லைக் கேட்டு, அபிமன்யுவைச் சூழ்ந்துகொண்டார்கள். கடுமையான போர் நடந்தது. இந்தப் போரில் கோசல நாட்டு மன்னன் பிருகத்பலனை அபிமன்யு வதம் செய்து விட்டான்.

## அபிமன்யு வதம்

இதன் பின்னர், கர்ணனுக்கும் அபிமன்யுவுக்கும் இடையில் கடும் போர் நடந்தது. அநேகக் காயங்களை உண்டு பண்ணி, கர்ணன் தேகத்தில் குருதி சொட்டும்படி அபிமன்யு போர் செய்தான்.

இது சமயம் துச்சாதனன் புதல்வன் முன்வந்து அபிமன்யுவைத் தாக்கினான். அபிமன்யு அவனைப் பதிலுக்கு அடித்தான். "உன் தந்தை அற்பன்போல, போரில் புறமுதுகு காட்டி ஓடிவிட்டான். போர் செய்யத் தெரிந்துள்ள உன்னை நான் விடப்போவது இல்லை" என்று சொல்லி அபிமன்யு அவனைத் தாக்கினான். தாக்குப் பிடிக்க முடியாமல் துச்சாதனன் புதல்வன் போர்க்களத்தை விட்டு விலகினான்.

இதன் பின்னர், சகுனியை அபிமன்யு தாக்கினான்; சகுனியும் மூன்று பாணங்கள் விடுத்து அபிமன்யுவை எதிர்த்தான். அவன் துரியோதனனை நோக்கி, "நாம் ஒன்றுகூடி அபிமன்யுவைக் கொல்ல வேண்டும். இல்லையேல் தனித்தனி ஒவ்வொருவராக இவன் கொன்றுவிடுவான்" என்று எச்சரித்தான்.

கர்ணன் துரோணரை நோக்கி, "ஆசாரியாரே! இவனை வதம் செய்வதற்குரிய மார்க்கத்தை எங்களுக்குக் கூறுங்கள். இல்லையேல் எல்லாரையும் இவன் வதம் செய்து விடுவான்" என்று சொன்னான்.

அதற்குத் துரோணர், "அர்ச்சுனன் புதல்வனான இவன் அர்ச்சுனனைப் போலவே திறமையாகப் போர் செய்கிறான். என்னை இவன் பலவாறு தாக்கியபோதிலும் இவனுடைய திறமையைப் பாராட்டாமல் என்னால் இருக்க முடியவில்லை" என்று சொன்னார்.

மறுபடியும் துரோணரிடம் கர்ணன், "ஆசிரியர் அவர்களே! அபிமன்யு விடும் பாணங்கள் என்னைத் துளைக்கின்றன. விலகிச் செல்ல விரும்பாமல் நிற்கிறேன்" என்று சொன்னான்.

கர்ணன் இப்படிச் சொன்னதும், துரோணர் மெல்லச் சிரித்தார். அவர் கர்ணனிடம், "இவன் இளம் பிராயத்தினன்; இவனுடைய கவசத்தை உடைக்க முடியாது; கவசம் பூணும் வித்தையை இவன் தந்தைக்கு நான் கற்றுக் கொடுத்து இருக்கிறேன்; இந்த அபிமன்யுவுக்கு அதைத்தும் தெரியும்; முடியுமானால் குறிதப்பாத பாணங்களைத் தொடுத்து நாண், கடிவாளம், குதிரைகள், சாரதி ஆகிய அனைத்தும் நாசமுறச் செய்யலாம். நேரே நின்று தாக்காமல் பின்புறமாக நின்று தாக்கு; கையில் வில்லை வைத்திருக்கும்வரை அபிமன்யுவைத் தேவர்களாலும் வெல்ல முடியாது, அவனுடைய தேரையும் வில்லையும் இழக்கச்செய்ய நீ முயன்று பார்" என்று சொன்னார்.

துரோணர் சொன்ன உபாயப்படி பின்புறமாகச் சென்று அபிமன்யுவின் வில்லை கர்ணன் அடித்தான். துரோணர் குதிரைகளைக் கொன்றார்; இரு பக்கங்களிலும் இருக்கும் தேர்ப்பாகர்கள் இருவரையும் கிருபர் வதம் செய்தார்.

வில் இழந்து, தேர் இழந்து, பாகர்கள் இழந்து நிற்கும் அபிமன்யுமீது மற்ற வீரர்கள் அம்புமாரி பொழிந்தார்கள். போர் செய்யத் தொடங்கினான். துரோணர் அபிமன்யுவின்

கத்தியைத் துண்டித்தார்; கர்ணன் கேடயத்தைச் சிதறடித் தான்.

உடனே அபிமன்யு சக்கரத்தை எடுத்துக்கொண்டு துரோணரை எதிர்த்தான். கண்ணனை நிகர்த்து அவன் காரியங்களைச் செய்தது பார்க்க வெகு பயங்கரமாய் இருந்தது.

அரசர்கள் பலர் சூழ்ந்துகொண்டு அபிமன்யுவைத் தாக்கினார்கள். "சக்கரத்தை அபிமன்யு பிரயோகித்தால், அது தப்பாது எதிரியைத் அழித்துவிடும். ஆகையால் பொடி செய்வது அவசியம்" என்று கருதி, அரசர்கள் அந்தச் சக்கரத் தைப் பொடி செய்துவிட்டார்கள்.

இதன் பின்னர் அபிமன்யு பெரிய கதாயுதத்தை எடுத் துக்கொண்டு அசுவத்தாமாவைச் சாடினான். அசுவத்தாமா விலகிக்கொண்டார். அபிமன்யுவோ கதையால் அடித்து அஸ்வத்தாமாவின் சாரதிகளையும் குதிரைகளையும் கொன்றான். மகா வீரர்களை எல்லாம் தனித்து எதிர்த்த காரணத்தால் அபிமன்யு மயக்கமுற்றான்.

துச்சாதனனுடைய குமாரன் வந்து அபிமன்யுவைக் கதாயுதத்தால் தாக்கினான். 'நில்; நில்" என்று சொல்லி வந்து, போர் செய்யலானான். இருவரும் கதையினால் மொத்திக்கொண்டு, பூமியில் விழுந்து புரண்டார்கள்.

துச்சாதனன் புதல்வன் உடனே எழுந்து, கதையை எடுத்து அபிமன்யுவின் தலையில் ஓங்கி அடித்தான். மயக்கமுற்றுக் கிடந்த அபிமன்யு, வேடர்கள் பலரால் கொல்லப்பட்ட யானைபோல, உயிரை இழந்து பூமியில் கிடந்தான்.

கௌரவர்கள் இதனால் களிப்புற்று, உரக்க முழங்கினார் கள்; மற்ற வீரர்களோ கண்ணீர் உகுத்து அழுதார்கள். "துரோணர், கர்ணன் முதலியவர்கள் ஆறு பேர் சேர்ந்து அநியாயமாக அபிமன்யுவை வதம் செய்துவிட்டார்கள்" என்று ஆகாயத்தில் சஞ்சரிக்கும் ஜீவராசிகள் அலறின.

அபிமன்யு வதம் செய்யப்பட்டதை அறிந்ததும் பாண்டவ சேனை ஓடத் தலைப்பட்டது. யுதிட்டிரர் ஓடுகின்ற வீரர்களை நோக்கி, "திரும்பாமல் நின்று போர் செய்த அபிமன்யு வீர சொர்க்கம் அடைந்தான். நீங்கள் பயப்பட வேண்டாம். திடமாக நில்லுங்கள்; பகைவர்களை வெல் வோம்" என்று சொன்னார்.

யுதிட்டிரர் ஆறுதல் சொன்னதும் பாண்டவர் தரப்பு வீரர்கள் துக்கம் அகன்று இருந்தனர்.

பகைவர்களைக் கடுமையாக எதிர்த்து, படுநாசத்தை விளைவித்த பின், அர்ச்சுனன் புதல்வன் அபிமன்யு வீர சொர்க்கம் எய்தினான்: பதினாயிரம் வீரர்களைத் தனி ஒருவனாக நின்று வதம் செய்தான்; கோசல நாட்டு மன்னன் பிருகத்ரதனை அழித்தான். வீரர்கள் செய்யத்தக்க காரியத்தைச் சிறக்கச் செய்து அபிமன்யு வீர சொர்க்கம் அடைந்தான்.

சூரியன் அஸ்தமித்தான், போர்க்களத்தைப் பார்த்துக் கொண்டே கௌரவ வீரர்கள் மெல்ல மெல்லச் சென்றார்கள்; யானைகளும் குதிரைகளும் மனிதர்களும், பூமியில் பிணங்களாய்க் கிடந்ததால் நடக்க இடம் இல்லை. நாகங்கள் பற்கள், நரம்புகள், கண்கள் முதலிய தெறித்துச் சிதறி, போர்க்களம் பார்ப்பதற்குப் பயங்கரமாய் இருந்தது. நாய்கள், நரிகள், காக்கைகள், கொக்குகள், பருந்துகள், செந்நாய்கள், சிறுத்தைகள் முதலியன, பிணங்களின் தோல்களைக் கிழித்து, குருதி, இறைச்சி, மூளை ஆகியவற்றைத் தின்றன. பல பறவைகள் வீரர்களின் ஈரலைப் பிடுங்கித் தின்று சிரித்தன, பாடின. இரத்த ஆறு போர்க்களத்தில் பெருகி ஓடிக்கொண்டிருந்தது. அந்த இரத்தத்தைப் பருகி, பிசாசுகள் கூச்சலிட்டன; நரிகளும் நாய்களும் மிகுந்த ஆவலுடன் அங்கே கிடந்த பிணங்களைத் தின்றன.

இந்திரனை நிகர்த்த அபிமன்யு, பதின்மூன்றாம் நாள் போரில் உயிர் துறந்து, போர்க்களத்தில் பொலிவு குன்றிக் கிடந்தான். அவனைப் பார்த்துக்கொண்டே போர்வீரர்கள், மெல்ல மெல்லப் போர்க்களத்தைவிட்டு அப்பால் போயினர்.

## எப்படிச் சமாதானம் சொல்வேன்?

சுபத்திரையின் புதல்வன் தேர்ப்படை வீரன் அபிமன்யு வீர மரணம் எய்தியது தெரியவந்ததும், தம் கையில் இருக்கும் வில் நழுவிக் கீழே விழ, தத்தம் தேரிலிருந்து இறங்கி, வீரர்கள் யுதிட்டிரரை அணுகினர். அவர்களின் நெஞ்சத்தில் எல்லாம் அபிமன்யுவைப்பற்றிய நினைப்பே நிறைந்திருந்தது. அவர்கள் வாட்டமுற்ற முகத்துடன் யுதிட்டிரர் அருகே அமர்ந்தனர்.

அபிமன்யு வீர மரணம் எய்தியது குறித்து யுதிட்டிரர் புலம்பிப் புலம்பி அழுதார்.

"கிருபர், துரோணர், சல்லியன், துரியோதனன், அசுவத்தாமா முதலிய மாபெரும் வீரர்களை எல்லாம் எதிர்த்து வீர

மரணம் எய்தி இருக்கிறான் அபிமன்யு. யாராலும் உடைக்க முடியாத பத்ம வியூகத்தை உடைத்து, சிங்கக் கூட்டத்தினிடையே பசு ஒன்று புகுவதை ஒப்ப அபிமன்யு புகுந்தான். அணியில் நின்று திறமையாகப் போர்புரிந்தான். அவனை எதிர்த்து நிற்க மாட்டாது எத்தனையோ வீரர்கள் புறங்காட்டி ஓடினார்கள். இத்தகைய அடல் வீரன் துச்சாதனன் புதல்வனால் உயிர் துறந்தான்.

"அபிமன்யுவைப் பறிகொடுத்த நான் அர்ச்சுனன் முகத்தில் எவ்வாறு விழிப்பேன்? சுபத்திரைக்கு எவ்வாறு ஆறுதல் சொல்லுவேன்? கண்ணனுக்கு எப்படிப் பதில் உரைப்பேன்? நன்மை செய்வதில நாட்டம்கொண்டு காரியத்தில் இறங்கச் செய்தேன்; தீமையாய் அது முடிந்துவிட்டது. ஆசையுள்ளவனுக்குத் தீமை இருப்பது தெரியாது; ஆசையுள்ளவன் அறியாமையால் தவிப்பான். ஆசை காரணமாக, பேராபத்து இருப்பதை நான் அறியாது போனேன். வாலிபன் அபிமன்யுவைப் போருக்கு அனுப்பி, அர்ச்சுனனுடைய கோபத்துக்கு ஆளாகப் போகிறேன். இந்திரனை நிகர்த்த அர்ச்சுனன் என்ன சொல்வானோ? என்ன செய்வானோ? அவனுடைய அருமந்த புதல்வனின் உயிரைக் காக்க நாம் தவறிவிட்டோம். அபிமன்யு வீர மரணம் எய்திய பின்னர் நாட்டிலும் வெற்றியிலும் பதவியிலும் எனக்குச் சிஞ்சித்தும் விருப்பம் உண்டாகவில்லை" என்று சொன்னார்.

இவ்வாறு சோகத்தால் யுதிட்டிரர் புலம்பியபொழுது, வியாச மகரிஷி அங்கே வந்தார். முகவாட்டத்துடன் இருக்கும் யுதிட்டிரர் ஆசனம் கொடுத்து அவரை உபசரித்தார். அபிமன்யுவின் வதத்தினால் மனம் வெதும்பி இருந்த அவர், வியாச மகரிஷியிடம் தமது துக்கத்தைத் தெரிவித்துக் கொண்டார். "அதருமத்தில் நாட்டமுள்ள தேராளிகள் ஒன்றுகூடி அபிமன்யுவை வதம் செய்துவிட்டார்கள். அவனுக்கு உதவச் சென்ற எங்களைச் சிந்துராஜன் தடுத்துவிட்டான். முயன்றும் ஆறுதல் அடைய முடியாது தவிக்கிறேன்" என்று சொன்னார்.

அதற்கு வியாச மகரிஷி, "யுதிட்டிரா! விதியைக் கடக்க யாராலும் முடியாது. தேவர்கள், அசுரர்கள், கந்தர்வர்கள் யாராய் இருந்தாலும் சாவு என்பது நிச்சயம் உண்டு. ஆகையால் புத்திரசோகத்தால் ஏற்பட்டிருக்கும் துக்கத்தை விட்டுவிடு; உயிருடன் இருப்பவன் விஷயத்தில் இனிச் சிந்தையைச் செலுத்து; சொர்க்கம் அடைந்தவன் விஷயத்தில் நீ துக்கப்படாதே. துக்கப்படப்பட, துக்கந்தான் மேன்மேலும்

அதிகரிக்கும். ஆகையால் துக்கத்தை விட்டுவிட்டு, நலம் பயக்கும் காரியங்களில் நாட்டத்தைச் செலுத்து. நான் விடைபெற்றுக்கொள்கிறேன்" என்று சொல்லி அந்த இடத்திலே மறைந்துவிட்டார்.

வியாசர் ஆறுதல் சொல்லி, மறைந்தவுடன் யுதிஷ்டிரர் துக்கத்தை மறந்து இருந்தார். மீண்டும் அவரிடம் துக்கம் தலைகாட்டத் தொடங்கியது. "அர்ச்சுனனை திரும்பிய பின் எவ்வாறு சமாதானம் சொல்லுவேனோ?" என்ற கவலை மீண்டும் அவர் உள்ளத்தை உறுத்தியது.

## தந்தை செய்த சபதம்

அபிமன்யு கௌரவர்களுடன் போர் செய்துகொண்டிருந்த சமயம் வேறு ஓர் இடத்தில் சம்சப்தகர்களுடன் அர்ச்சுனன் போர் புரிந்துகொண்டிருந்தான். அவன் சம்சப்தகர்களை வதம்செய்து முடித்துவிட்டு, மாலை நேரத்தில், வானரக் கொடி பறக்க, தனது தேரின்மீது ஏறிக்கொண்டு, பாசறையை நோக்கித் திரும்பினான். அப்போது அவன் கண்ணனை நோக்கி, தழுதழுத்த குரலில், கண்களில் நீர்மல்கி நிற்க, "கேசவரே! என்ன காரணத்தாலோ என் மனம் பதறுகிறது. நாக்குத் தடுமாறுகிறது. தேரில் உறுதியாக நிற்க முடியவில்லை. அவயவங்கள் சோர்கின்றன. ஏதோ பெரிய துயரம் சம்பவித்து இருக்கிறது என்பதை இவை அறிவிக்கின்றன. அரசர் யுதிஷ்டிரர் ஆபத்தில் சிக்காமல் நலத்துடன் இருப்பாரா? எனக்கு மிகுந்த அச்சமாய் இருக்கிறது" என்று சொன்னான்.

"அர்ச்சுனா! கவலைப்படாதே! அரசர் யுதிஷ்டிரருக்கு எவ்வித ஆபத்தும் உண்டாகாது. வேறு ஏதாவது ஒரு சிறு துயர நிகழ்ச்சி ஏற்பட்டு இருக்கலாம்" என்று சொல்லி அர்ச்சுனனைக் கண்ணன் தேற்றினார்.

இருவரும் அர்ச்சுனனுடைய பாசறையை அடைந்தார்கள்; பாசறை பொலிவு இழந்து தோன்றியது. அர்ச்சுனன் கண்ணனை நோக்கி "ஜனார்த்தனரே! பாசறை பொலிவு இழந்து இருக்கிறது; இன்னிசை கேட்கவில்லை. வந்திகள் பாடி வரவேற்கவில்லை; என்னைக் கண்டதும் போர்வீரர்கள் தலைகுனிந்து திரும்புகிறார்கள். அபிமன்யு மகிழ்ச்சியுடன் வந்து, என்னை வரவேற்கக் காணோமே" என்று சொன்னான்.

இவ்வாறு பேசிக்கொண்டு இருவரும் பாசறைக்குள் நுழைந்தார்கள்; அங்கு மறப் பாண்டவர்கள் ஒளிகுன்றி மயங்கிய நிலையில் இருந்தார்கள். அபிமன்யுவைக் காண வில்லை. உடனே அர்ச்சுனன் அவர்களை நோக்கி, 'இன்சொல் கூறி வரவேற்காமல் நீங்கள் வாட்டத்துடன் இருக்கிறீர்கள். அபிமன்யுவைக் காணோம். துரோணர் வகுத்த பதும வியூகத்தைப் பிளக்கும்படி அவனை ஏவினீர்களா? வியூகத்தைப் பிளக்க அபிமன்யுவுக்கு நான் கற்றுக் கொடுத்து இருந்தேன்; ஆனால், வெளிப்படும் மார்க்கத்தை அவனுக்கு நான் கற்றுக் கொடுக்கவில்லை. அபிமன்யு போரில் கொலைப்பட்டானோ? நடந்ததைத் தெரிவியுங்கள். என் அருமந்த புதல்வனை வதம் செய்தவன் யார்? அபிமன்யுவை நான் பார்க்கவில்லை யானால் என் உயிரை நான் விட்டுவிடுவேன். பெரியோர் சொல்லுக்கு அடங்கி நடந்து, புன்சிரிப்புத் தவழ எப்பொழுதும் இன்சொலே பேசும் என் மைந்தனை, நான் காணாவிடில் நான் உயிர் தரியேன். என்னைக் காட்டிலும் திறமையாகப் போர் செய்யும் ஆற்றல் படைத்தவனை அச்சுதருக்கு மருமானை, சுபத்திரையின் அருமந்த மைந்தனை, நான் காணா விடில் உயிர் தரியேன். உத்தமமான பெண்மணிகள் சூழ்ந்திருக்க, அழகாக, பஞ்சசயனத்தில் தூங்கும் அபிமன்யுவை இப்பொழுது அமங்களமான நரிகள் சூழ்ந்துகொண்டு கத்துகின்றன" என்று பலவாறு பன்னிப் பன்னி அர்ச்சுனன் புலம்பினான்.

கண்ணன் அர்ச்சுனனுக்கு ஆறுதல் சொன்னார்: "அர்ச்சுனா! அரசர் குலத்தில் பிறந்தவர்களின் வாழ்வு ஆயுதத்தைப் பயன்படுத்துவதைப் பொறுத்து இருக்கிறது. பின் வாங்காமல் போர் செய்பவர்களுக்கு மரணம் ஏற்படாமல் திராது. அபிமன்யு வீர மரணம் எய்தி இருக்கிறான். வீரனுக்கு வீர மரணம்தான் பெருமை தருவது. நீ இது பற்றித் துக்கப் படாதே. நீ கவலைப்பட்டால், உன் உற்றார் உறவினர்களும் அதிகக் கவலைப்படுவார்கள். ஆகையால் துக்கப்படுவதைத் தவிர்" என்று சொன்னார்.

கண்ணன் சொன்ன இந்த வார்த்தைகளால் அர்ச்சுனன் சிறிது ஆறுதல் அடைந்தான். அவன் தன் சகோதரர்களை நோக்கி, "என் புதல்வனைக் கொன்றவனை யானைகளோடும் குதிரைகளோடும் நான் கட்டாயம் வதம் செய்வேன். ஆயுதம் ஏந்திய நீங்கள் பார்த்திருக்க என் புதல்வன் மரணமடைந்தது ஆச்சரியத்திலும் ஆச்சரியம். என் புதல்வனைக் காப்பாற்ற முடியாத உங்களுக்குக் கவசம் ஏன்? ஆயுதம் ஏன்? வீணே

அவற்றை ஏன் நீங்கள் தரித்துக்கொண் டிருக்கிறீர்கள்?'' என்று கோபத்துடன் கேட்டான்.

பிறகு வாளை உருவிக் கையில் வைத்துக்கொண்டு கடுங் கோபத்துடன் நின்றான். யுதிட்டிரரையும் வாசுதேவரையும் தவிர்த்து மற்றவர்கள் அவனைப் பார்ப்பதற்கே நடுங்கினார் கள்; பெருமூச்சு விட்டுக்கொண்டு, கண்களிலே நீர்த்ததும்பி நிற்க; அர்ச்சுனன் யமன்போல் நின்றான்.

இப்படி நிற்கும் அர்ச்சுனனை நோக்கி, பின்வருமாறு யுதிட்டிரர் சொன்னார்:

''புயவலி மிக்கவனே! சம்சப்தகர்களுடன் நீ போர் செய்யப் போய்விட்டாய். என்னைப் பிடிப்பதற்குத் துரோணர் பெருமுயற்சி செய்தார். நாங்களும் அணிவகுத்துக் கொண்டு துரோணரை வெகு மையாக எதிர்த்தோம். எங்களால் அவரைச் சமாளிக்க முடியவில்லை. ஆகவே அபிமன்யுவிடம் 'துரோணர வகுத்துள்ள வியூகத்தை உடை' என்று நான் ஏவினேன். நீ கற்றுக்கொடுத்த வித்தையைப் பயன்படுத்தி அபிமன்யு வியூகத்தை உடைத்துவிட்டான். அவனைப் பின் தொடர்ந்து செல்ல நாங்கள் முயன்றோம். உள்ளே புக வொட்டாது ஜயத்ரதன் எங்களைத் தடுத்துவிட்டான். பிறகு துரோணர், கிருபர், கர்ணர், அசுவத்தாமா, பிருகத்பலன், கிருதவர்மா ஆகிய அறுவரும் சேர்ந்து, வீரன் அபிமன்யுவை தாக்கினார்கள். அதனால் தன் தேரை இழந்து அபிமன்யு தரையில் நின்றான். அவனை, துச்சாதனன் புதல்வன் கதையை எடுத்துச் சாடினான். அவனுக்கும் அபிமன்யுவுக்கும் இடையில் கதாயுதப் போர் கடுமையாக நடந்தது. சோர்ந்து இரு வரும் பூமியில் விழுந்துவிட்டார்கள். பிறகு மூர்ச்சை தெளிந்த துச்சாதனன் புதல்வன் கதையை எடுத்து, அபிமன் யுவின் தலையில் அடித்துவிட்டான். அதனால் அபிமன்யு வீர மரணம் எய்தினான். அவன் வீணே உயிர் துறக்கவில்லை. எண்ணற்ற வீரர்களையும் பிருகத்பலன் முதலானவர்களையும் வதம் செய்த பின்னர்தான், அவன் வீர சொர்க்கம் எய்தினான். நாங்கள் அடைந்த துயரம் கொஞ்சநஞ்சமன்று'' என்று சொன்னார்.

யுதிட்டிரர் இப்படிச் சொன்னதும், ''மைந்தா!'' என்று அலறிக்கொண்டு அர்ச்சுனன் பூமியில் சாய்ந்தான். எல்லா ரும் அவனைச் சூழ்ந்துகொண்டு இமைகொட்டாமல் பார்த் தார்கள்

பிறகு அர்ச்சுனன் மூர்ச்சை தெளிந்து எழுந்தான்

கோபத்தால் பெருமூச்சுவிட்டான்; பற்களை நறநற வென்று கடித்தான்; கையைப் பிசைந்துகொண்டான். புருவங்களை நெறித்தான். கோபத்தால் கண்கள் சிவக்கப் பைத்தியம் பிடித்தவனைப் போலப் பேசினான்:

"அரசே! நாளை நான் ஜயத்ரதனைக் கொல்வேன்: இது சபதம். தங்களை அல்லது கிருஷ்ணரை அவன் சரண் அடைந்தால் அல்லது, அவனை நான் நாளைய தினம் கொல்லாமல் விடேன் என் மைந்தன் வதத்துக்குக் காரணனாய் இருந்த அவனை அவசியம் நாளை நான் கொல்வேன். அவனைக் காப்பாற்றத் துரோணர், கிருபர் முதலியோர் முன்வந்தாலும் அவர்களையும் அம்பால் அடிப்பேன். இதை நான் செய்து முடிக்காது போனால், வீரர்களுக்குக் கிட்ட வேண்டிய புண்ணிய உலகங்கள் எனக்குக் கிட்டாது போகட்டும்.

"தாயைக் கொன்றவன், தந்தையைக் கொன்றவன், குரு பத்தினியை அணைந்தவன், எப்பொழுதும் கோள் சொல்பவன் சான்றோரை வெறுப்பவன், பிறரைப பழிப்பவன், அடைக்கலப் பொருளை அபகரிப்பவன், நம்பிக்கை மோசம் செய்பவன், தான் அணைந்து அனுபவித்த பெண்ணைப் பிறகு நிந்திப்பவன், பிராமணர்களைக் கொன்றவன், பசுவதை செய்தவன் இவர்களுக்கு எந்த உலகம் கிட்டுமோ அந்த உலகம் நாளை ஜயத்ர தனைக் கொல்லாவிடில் எனக்குக் கிட்டுக!

"பொய் சொல்லுகிறவன், வஞ்சகன், மனச்சாட்சிக்கு விரோதமாக நடப்பவன், வீணை தற்புகழ்ச்சி செய்பவன், லஞ்சம் வாங்குபவன், விருந்தினரை நன்றாக உபசரியாதவன், மனைவி, மக்கள், பணியாட்கள் இவர்களுக்கு உரிய பாகத்தைக் கொடாமல், தான் மட்டும் நல்ல உணவை அருந்துபவன், அற்பன் ஆகிய இவர்களுக்கு எந்தக் கதி உண்டோ, அந்தக் கதி, ஜயத்ரதனை நாளை நான் கொல்லாவிடில் எனக்கு நேரட்டும்.

"அரசே! நாளை சூரிய அஸ்தமனத்துக்குள் ஜயத்ரதனை நான் வதம் செய்யாவிடில், நெருப்பில் விழுந்து என் உயிரை நான் மாய்த்துக்கொள்வேன். இது உறுதி; உறுதி" என்று அர்ச்சுனன் சபதம் செய்தான்.

இவ்வாறு சபதம் செய்துவிட்டு, காண்டீவத்தைத் தனது இடக் கரத்தாலும் வலக்கரத்தாலும் அர்ச்சுனன் சுண்டினான். அப்போது அந்த வில்லின் ஒலி விண் மட்டும் எட்டியது.

அர்ச்சுனன் செய்த சபதத்தைச் செவிமடுத்த கண்ணன்

தனது பாஞ்சசன்யத்தை முழக்கினார். தேவதத்தம் என்னும் தனது சங்கத்தை அர்ச்சுனன் மிக்க கோபத்துடன் ஊதினான்.

இந்த இரண்டு சங்கங்களின் முழக்கத்தைக் கேட்டதும் உலகமே கிடுகிடுத்தது.

அர்ச்சுனன் செய்த சபதத்தைக் கேட்டதும் பீமன் முதலியவர்கள் அவனைப் பெரிதும் பாராட்டினார்கள்.

## அபயம்

பாண்டவர்கள் செய்த முழக்கத்தைக் கேட்டு, சிந்து நாட்டு அரசன் பயந்துபோனான்; சாரணர்களால் விவரத்தை அறிந்து சோகமுற்றுத் தவித்தான். அகன்ற ஆழிய கடலில் மூழ்கித் தத்தளிக்கும் ஒருவன் எப்படிக் கவலைப்பட்டுத் தவிப்பானோ, அதேபோல ஆழ்ந்த துயரத்துடன், அரசர்கள் இருக்கும் சபையை ஜயத்ரதன் அணுகினான். அர்ச்சுனனுக்குப் பயந்து, வெட்கத்தால் வாட்டமுற்று இருந்த அவன், அளவற்ற துயரத்துடன் அரசர்களிடம் சென்று புலம்பினான்.

“காமுகனான இந்திரனுக்கு, பாண்டுவின் மனைவி வயிற்றில் பிறந்தவன், மதிகெட்ட அர்ச்சுனன், என்னை யமன் உலகு அனுப்பச் சபதம் எடுத்துள்ளானாம். உயிர் வாழ வேண்டும் என்ற விருப்பம் எனக்கு இருப்பதால் நான் வீடுபோய்ச் சேருகிறேன். இல்லையேல் அர்ச்சுனனுடைய அம்புக்கு இரையாகாமல் என்னை நீங்கள் காப்பாற்றுங்கள். துரோணர், துரியோதனன், கிருபர், கர்ணன், சல்லியன், பாகலீகர், துச்சாதனன் ஆகியோர், யமனால் பிடிக்கப்பட்டவர்களையும் காப்பாற்றும் ஆற்றல் பெற்றவர்கள். ஆகையால் என்னை நீங்கள் காப்பாற்றுவீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. பாண்டவர்கள் செய்த சபதத்தைக் கேட்டு எனக்கு மிகுந்த அச்சம் ஏற்படுகிறது; உயிரே போய்விட்டதுபோல் எனது அவயங்கள் சோர்வடைகின்றன. அர்ச்சுனன் செய்த சபதத்தினால், தங்களுக்கு ஏற்பட்டு இருக்கும் துக்கத்தையும் மறந்து பாண்டவர்கள் களிப்புடன் இருக்கிறார்கள். சபதம் நிறைவேறாதபடி அர்ச்சுனனை யாராலும் தடுக்க முடியாது. ஆகவே நான் உங்களிடம் விடைபெற்றுக்கொள்கிறேன்; எனக்கு அனுமதி கொடுங்கள்” என்று ஜயத்ரதன் புலம்பினான்.

தன்னலத்தில் நாட்ட மிகுதியுள்ள துரியோதனன், மனம் கலங்கிப் புலம்பும் ஜயத்ரதனுக்கு ஆறுதல் சொல்லி, அவனுடைய பயத்தைப் போக்கினான்.

"ஆண்மை மிக்கோய்! நீ பயப்படக் கூடாது. அரசர்களின் நடுவே இருக்கின்ற உன்னை எவனும் வதம் செய்ய முடியாது. இவர்களைக் கண்டால் இந்திரனே பயப்படுவான்; நான், கர்ணன், சல்லியன், பூரிசிரவஸ், விகர்ணன், துர்முகன், துச்சாதனன், விந்தன், அநுவிந்தன், சகுனி, துரோணர், அசுவத்தாமா, அலம்புசன் ஆகியவர்களும் இன்னும் மற்ற அரசர்களும் படைகளுடன் உன்னைக் காக்கத் தயாராக இருக்கிறோம். மனக்கவலை அகன்று நீ தைரியமாய் இரு. மேலும் நீயும் சிறந்த வீரர்களுள் ஒருவன்; திறமையாகப் போர் புரியத் தெரிந்தவன்; எனது படைகளும் உன்னைக் காக்க ஊக்கத்துடன் இருக்கின்றன. பயப்படாதே" என்று ஆறுதல் சொன்னான்.

இதன் பின்னர், துரியோதனனும் ஜயத்ரதனும் இரவில் துரோணரைக் காணச் சென்றார்கள். துரோணரின் அடியினை வணங்கி அவருக்கு அருகே ஜயத்ரதன் உட்கார்ந்தான். மிகுந்த பணிவுடனும் அடக்கத்துடனும் அவரை நோக்கி, "ஆசானே! இலட்சியத்தை அடிப்பது, துரிதமாகப் பாணத்தை விடுவது, வெகு தூரம்வரை விடுவது, உறுதியாக இலட்சியத்தை அடிப்பது, இவற்றில் எனக்கும் அர்ச்சுனனுக்கும் இடையில் காணக் கிடக்கும் வேற்றுமைகளைத் தாங்கள் விளக்க வேண்டும்" என்று கேட்டான் ஜயத்ரதன்.

அதற்குத் துரோணர், "வீரனே! உனக்கும் அர்ச்சுனனுக்கும் வேற்றுமையின்றி அஸ்திரக் கலையைப் பயிற்றுவித்தேன். பயிற்சியினாலும், இன்னல் இடுக்கண்களைச் சமாளித்த தன் பயனாலும், உன்னைக்காட்டிலும் அர்ச்சுனன் வில்வித்தையில் மேம்பட்டு விளங்குகிறான். அதற்காக நீ பார்த்தனுக்குப் பயப்பட வேண்டாம். உன்னை நான் பாதுகாப்பேன்; இதை நீ உறுதியாக நம்பலாம். நான் முன்னின்று காக்கும் மனிதனுக்குத் தேவர்களாலும் தீங்கிழைக்க முடியாது. அர்ச்சுனனால் உடைக்கமுடியாத வியூகம் ஒன்றை இப்பொழுது நான் வகுக்கப்போகிறேன். நீ பயப்படாமல் போர் செய்; அரசகுல தருமத்தைக் காப்பாற்று. நீ வேள்விகள் பல இயற்றியவன்; வேதங்களை அத்தியயனம் செய்தவன்; அழலை ஓம்பியவன்; இத்தகைய உனக்கு இழி மரணம் நேராது. மானிடர்களால் அடைய முடியாத பெரும் பாக்கியம் உனக்குக் கிட்ட இருக்கிறது. தவம் செய்வோர், தவம் செய்து அடையும்

பேறுகளை, அரசகுலத்தில் பிறந்தவன் அரசகுல தருமத்தை அனுஷ்டிப்பதனால், அடைகிறான்" என்று ஜயத்ரதனுக்குத் துரோணர் ஆறுதல் சொன்னார்.

இதனால் ஜயத்ரதனுக்கு அர்ச்சுனனிடம் ஏற்பட்ட பயம் நீங்கியது. மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, போர் செய்ய விரைந்தான். விவரம் தெரிய வந்து படையினர் மகிழ்ச்சி அடைந்தனர்; ஜயத்ரதனும் மகிழ்ச்சி அடைந்தான்.

அர்ச்சுனன் எடுத்துக்கொண்ட சபதத்தினால் கௌரவர்களின் பாசறையில் ஏற்பட்டு இருக்கும் மனப்போக்குகளையும் ஏற்பாடுகளையும் ஒற்றர்கள் மூலம் கிருஷ்ணன் தெரிந்து கொண்டார். அவர் அர்ச்சுனனை நோக்கி, "நீ என்னை ஆலோசியாமல் 'நாளை நான் ஜயத்ரதனைக் கொல்வேன்' என்று சபதம் எடுத்துக்கொண்டுவிட்டாய். உலகத்தாருடைய பழிப்புக்கு நாம் ஆளாகாமல் இருக்க வேண்டும். கௌரவர்கள் விவரம் தெரிந்து ஜயத்ரதனைக் காப்பாற்றுவதில் முனைப்புடன் இருக்கிறார்கள். கர்ணன், பூரிசிரவஸ், அஸ்வத்தாமா, சல்லியன், கிருபர், விருஷசேனன் ஆகிய அறுவரும் ஜயத்ரதனுக்குப் பக்க பலமாக வருகிறார்கள். பாதி சகட வியூகமாகவும் பாதி பத்ம வியூகமாகவும் துரோணர் வியூகத்தை அமைத்துள்ளார். வியூகத்தை உடைக்காமலும், ஆறு வீரர்களை ஜயிக்காமலும், ஜயத்ரதனை ஜயிப்பது இயலாத காரியம். இது பற்றி நன்கு யோசித்து, முடிவு செய்ய வேண்டும்" என்று கிருஷ்ணன் எச்சரித்தார்.

கிருஷ்ணன் செய்த எச்சரிக்கையைச் செவிமடுத்த அர்ச்சுனன், "வாசுதேவரே! இந்த அறு வீரர்களையும் எதிர்க்கும் வல்லமை எனக்கு உண்டு. சிந்து ராஜனுடைய தலையை நான் நாளை அறுத்துப் பூமியில் தள்ளுவதை அவசியம் நீர் காண்பீர். அகில உலகமே திரண்டு வந்து ஜயத்ரதனைக் காப்பாற்றினாலும், ஜயத்ரதன் தலை அறுபட்டு, நாளை பூமியில் விழுவதை நீர் காணலாம். எதிர்க்கின்ற வீரர்களை எல்லாம் பிரமாஸ்திரத்தைக் கொண்டு நான் முறியடிப்பேன். கையில் இருப்பது காண்டீவம்; போர் செய்பவன் அர்ச்சுனன்; சாரத்தியம் செய்பவர் கிருஷ்ணன்; இவற்றை எல்லாம் மீறும் ஆற்றல் எவனுக்காவது உண்டா? ஒருபோதும் இல்லை. சந்திரனில் களங்கமும், சமுத்திரத்தில் நீரும் நிலைத்திருப்பது எப்படி நிச்சயமோ அதேபோல, நான் எடுத்துக்கொண்ட சபதமும் நிச்சயம் நிறைவேறும். ஜயத்ரதனைக் கொல்வதற்கான உதவிகள் அனைத்தும் உம்மிடமிருந்து அவசியம் எனக்குக் கிடைக்கும். அதனால் நாளை ஜயத்ரதன் மாள்வது திண்ணம்"

என்று சொல்லிவிட்டு "கிருஷ்ணா! பொழுது புலர்ந்ததும் போருக்குத் தேரைச் சித்தம் செய்யுங்கள்; நான் எடுத்துக் கொண்ட சபதம் நிறைவேற உதவி புரியவேண்டும்" என்று சொன்னான் அர்ச்சுனன்.

அந்த இரவு முழுவதும் அர்ச்சுனனும் கிருஷ்ணனும் கவலையால் உறங்கவில்லை; உலகிலுள்ள உயிர் இனங்கள் அனைத்தும் அர்ச்சுனன் சபதத்தால் என்ன நேருமோ என அஞ்சின.

## தமையன் சொன்ன ஆறுதல்

அர்ச்சுனன் பின்னர்க் கண்ணனிடம், "மாதவரே! நீர் தான் உம் தங்கை சுபத்திரைக்கும் அவள் மருமகளுக்கும் மற்றவர்களுக்குப் ஆறுதல் சொல்ல வேண்டும்; இதமான வார்த்தைகள் சொல்லி அவர்களுக்குள்ள சோகத்தை அகற்ற வேண்டும்" என்று வேண்டினான்.

கிருஷ்ணன் தன் தங்கையிடம் சென்றார்; புதல்வனை இழந்து சோகத்தால் வாடும் சுபத்திரையை அணுகி "விருஷ்ணி குலத்தில் பிறந்தவளே! காலத்தைக் கடக்க முடியாது. எல்லா உயிர்களுக்கும் நிச்சயம் முடிவு காலம் உண்டு. உன் புதல்வன் வீர மரணம் எய்தி இருக்கிறான் தவம், பிரமசரியம், வேதாத்தியயனம், ஞானம் இவற்றினால் சாதுக்கள் எந்தக் கதியை அடைகிறார்களோ, அந்த கதியை உன் அருமைப் புதல்வனும் வீர மரணம் எய்தியதனால் அடைந்திருக்கிறான். நீ வீரனைப் பெற்றவள்; வீரனுக்குப் பிறந்தவள்; வீரனுடைய மனைவி; வீரர்களை உறவினர்களாக அடைந்தவள்; ஆகவே, உன் புதல்வன் வீர மரணம் எய்தியதற்காக நீ வருந்தக்கூடாது தான் செய்த செயலுக்குத் தக்க பலனை ஜயத்ரதன் நாளைக் கட்டாயம் அனுபவிப்பான்; உன் மைந்தனைக் கொன்றவன் தலை நாளை உன் காலடியில் இருப்பதைக் காண்பாய். ஆயிரக்கணக்கான வீரர்களை வதம் செய்த பின்னர்தான் உன் புதல்வன் அபிமன்யு வீர மரணம் எய்தினான். ஆகவே வருத்தப்படாதே; உன் மருமகளுக்கு ஆறுதல் சொல்லி, அவளைச் சமாதானப்படுத்து. அர்ச்சுனன் எடுத்துக் கொண்ட சபதம் ஒருபோதும் வீணாகாது; ஜயத்ரதன் அவசியம் இறப்பான். இது உறுதி" என்று சொன்னார்.

கேசவர் ஆறுதல் கூறியும், சுபத்திரைக்குத் துயரம் தணியவில்லை. "குழந்தாய்! தந்தைக்குச் சமதையான ஆற்றல்

பெற்ற நீ எவ்வாறு போர்க்களத்தில் மடிந்தாய்? உத்தம நங்கையரால் சூழப்பட்டு இருந்த நீ இப்பொழுது நரிகளால் சூழப்பட்டுப் போர்க்களத்தில் கிடப்பது எவ்வாறு தகும்? உற்றார் உறவினர் அனைவரும் வீரர்களும் சூரர்களுமாய் இருக்க நீ எவ்வாறு அநாதைபோலக் கொல்லப்பட்டாய்? உன் அழகிய முகத்தை நான் எப்பொழுது காண்பேன்? பார்க்கப் பார்க்கத் தெவிட்டாமல் இருக்கும் உன்னைப் பிரிந்து நான் உயிர் தரியேன். இப்பொழுதே நமன் உலகு நண்ணுவேன். போர்க்களத்தில் உன்னைக் காப்பாற்றச் சக்தியற்றுப் போன பீமசேனனை நிந்திக்க வேண்டும்; விஜயனை நிந்திக்க வேண்டும். பாஞ்சாலர்களின் படையை நிந்திக்க வேண்டும். உன் அருமந்த அழகிய மனைவி உத்தரைக்கு நான் எவ்வாறு ஆறுதல் கூறுவேன். அவளை நான் எவ்வாறு காப்பாற்றுவேன்? கேசவரின் உதவியிருந்தும் போர்க்களத்தில் நீ உயிர் துறந்தது, பெரிய புதிராக இருக்கிறது; தெய்வத்தின் போக்கு தெரிய முடியாததாய் இருக்கிறது; வேள்வி செய்தவர்கள், தானம் செய்தவர்கள், தூய உள்ளம் படைத்த அந்தணர்கள், நன்றி மறவாதவர்கள், உதார குணமுடையவர்கள், குரு பணிவிடை செய்பவர்கள் ஆகியோர் அடையும் நற்கதியை நீயும் அடைக'' என்று சுபத்திரை பலவாறு புலம்பினாள்; மூர்ச்சித்துக் கீழே சாய்ந்தாள்.

கிருஷ்ணனுக்கும் துயரம் தாங்க முடியவில்லை. முகத்தில் நீரைத் தெளித்து, கண்ணன் ஆறுதல் சொன்னார், "சுபத்திரை! நீ இப்படித் துயரப்படலாகாது பாஞ்சாலி! நீ உத்தரைக்கு ஆறுதல் சொல். அரச குலத்தில் பிறந்த அபிமன்யு, அந்தக் குலத்தினர் பெருமைப்படத் தக்க நற்கதியை அடைந்துள்ளான். தனித்து நின்ற உன் புதல்வன் செய்த செயலை நாங்கள் சேர்ந்து செய்யப் போகிறோம்'' என்று சொல்லி ஆறுதல் அடையச் செய்துவிட்டு அர்ச்சுனனிடம் திரும்பினார்.

பிறகு அர்ச்சுனனுக்கும் மற்ற அரசர்களுக்கும் அனுமதி கொடுத்துவிட்டு, அந்தப்புரத்துக்குப் போய்விட்டார்.

அர்ச்சுனனும் மற்றவர்களும் தத்தம் இருக்கை திரும்பினர்.

## அரசரைக் காப்பாற்று

இதன் பின்னர், மாதவர் அர்ச்சுனனிடம், "பார்த்தா! நீ தூங்கலாம்; மங்களம் உண்டாகட்டும்'' என்று சொல்லி

அனுமதித்துவிட்டு, ஆயுதம் தாங்கியவர்களை வாயிலில் காவலுக்கு நிறுத்திவிட்டு, தமது சேனை இருக்கும் இடத்துக்குத் திரும்பினார் அவரைப் பின்தொடர்ந்து அவருடைய சாரதி தாருகன் வந்தான்.

பாசறையை அடைந்து, வெண்மையான படுக்கையில் கண்ணன் படுத்தார்; அர்ச்சுனனுக்கு எவ்வாறு தாம் உதவலாம் என்பது பற்றிய சிந்தனையில் அவர் மனம் இலயித்து இருந்தது.

அன்று இரவு பாண்டவர்கள் பாசறையில் ஒருவராவது தூங்கவில்லை; 'நாளை சிந்துராஜன் ஜயத்ரதனை வதம் செய்வதாக அர்ச்சுனன் சபதம் செய்திருக்கிறான். இது எளிதில் நிறைவேறக் கூடிய சபதமா?'' என்று பலரும் பலவாறு யோசித்தனர்.

''மகனை இழந்த துயரத்தினால் அர்ச்சுனன் பெரும் சபதம் எடுத்துக்கொண்டுள்ளான். மிகுந்த பிரயாசை எடுத்துக் கொண்டால்தான் இந்தச் சபதத்தை நிறைவேற்ற முடியும். நான்கு பக்கங்களிலும் ஜயத்ரதனுக்குப் படைகள் காவல் இருக்கின்றன சபதத்தை நிறைவேற்றி, அர்ச்சுனன் வெற்றியுடன் திரும்பினால் அது நாம் செய்த பெரும் பாக்கியம்'' என்று மற்றும் சிலர் பேசிக்கொண்டார்கள்.

''தான் எடுத்துக்கொண்ட சபதம் நிறைவேறாவிட்டால், ஜயத்ரதனை நாளைக் கொல்லாவிட்டால், தீயில் மூழ்கி அர்ச்சுனன் இறந்துபோவான்; அதன் பிறகு தருமர் உயிர் தரியார். நிலைமை எப்படி எப்படி ஆகுமோ? புண்ணிய பலத்தினால்தான் அர்ச்சுனன் வெற்றிபெற வேண்டும்'' என்று மற்றும் சிலர் பேசிக்கொண்டார்கள்

பாண்டவர்களின் பாசறையில் இருந்தவர்கள் இவ்வாறு உரையாடிக்கொண்டு அன்றைய இரவுப் பொழுதைக் கழித்தார்கள்.

கண்ணனும் தூங்கவில்லை; அர்ச்சுனன் எடுத்துக் கொண்ட சபதம் நிறைவேறத் தாம் யாது செய்யலாம் என்ற சிந்தனையில் அவர் மூழ்கி இருந்தார் அவர் தம் சாரதி தாருகனை நோக்கி, ''அர்ச்சுனன் எடுத்துக்கொண்ட சபதம் நிறைவேற என்னாலான உதவியை நான் செய்ய வேண்டும். உற்றார் உறவினர் மனைவி மக்கள் ஆகியோரை நேசிப்பதை விட அர்ச்சுனனை நான் அதிகமாக நேசிப்பவன்; அர்ச்சுனன் இல்லாத உலகத்தை என்னால் ஒரு கணம்கூடப் பார்க்க இயலாது. அர்ச்சுனனைப் பகைப்பவன் என்னைப் பகைப்

பவன்; அர்ச்சுனனை நேசிப்பவன், என்னை நேசிப்பவன். நாளை போர்க்களத்தில் அர்ச்சுனன் பொருட்டு என்னால் இயன்றதை எல்லாம் நான் செய்வேன். பொழுது புலர்ந்ததும் தேரைச் சித்தம் செய்துகொண்டு வா; ஆயுதங்களைத் தேரில் எடுத்து வை; தேரில் கருடக்கொடி பறப்பதற்கு ஏற்பாடு செய். வலாகம், மேகபுஷ்பம், சைப்பியம், சுக்ரீவம் என்னும் சிறந்த நான்கு குதிரைகளையும் தேரில் பூட்டு. பாஞ்சசன்யத்தின் முழக்கம் கேட்டதும் என்னிடம் வந்து சேர். நாளை ஜயத்ரதனை அர்ச்சுனன் கொல்வதற்கு என்னால் இயன்ற முயற்சிகளையெல்லாம் நான் செய்ய வேண்டும்” என்று சொன்னார்.

“அண்ணலே! தங்கள் கட்டளைப்படி யாவற்றையும் சித்தம் செய்து வைக்கிறேன். தாங்கள் சாரத்தியம் செய்வதால் அர்ச்சுனனுக்குத் தோல்வி ஒருபோதும் ஏற்படாது” என்று தாருகன் பதில் சொன்னான்.

தாருகனும் கிருஷ்ணனும் உரையாடிக்கொண்டிருக்கும் பொழுதே பொழுது புலர ஆரம்பித்தது. வந்திகளும் மாகதர்களும் வந்து, பாடல்களைப் பாடி, யுதிட்டிரரைத் துயில் எழுப்பினார்கள். இசைவாணர்கள் குரு வம்சத்தினரின் பெருமைகளைக் கூறும் பாடல்களைப் பாடினார்கள், இன்னிசைக் கருவிகள் மனத்தை மகிழ்விக்கும் முறையில் ஒலித்தன.

இந்த இன்னிசை முழக்கங்களையும் பாடல்களையும் கேட்டு யுதிட்டிரர் துயில் எழுந்தார்; காலைக் கடன்களை முடித்துக்கொண்டு நீராடச் சென்றார். தங்கச் செம்புகளில் நீர் கொணர்ந்து நூற்றெட்டு வாலிபர்கள் யுதிட்டிரரை நீராட்டி வைத்தார்கள். தரும நந்தனர் தலையைத் துடைத்து, நீரைப் போக்கிக்கொண்டார். பிறகு செஞ்சந்தனத்தை உடம்பில் பூசிக்கொண்டார்; தூய ஆடைகள் தரித்துக் கொண்டார்; கிழக்கு முகமாக அமர்ந்து, கைகூப்பி வணங்கி, ஜபதபங்களை முடித்துக்கொண்டு வெளியே வந்தார்.

யுதிட்டிரர் அரண்மனையின் இரண்டாவது கட்டுக்கு வந்ததும் ஆயிரத்து எட்டு அந்தணர்கள் ஆசிர்வாதம் சொல்லி யுதிட்டிரரை வரவேற்றார்கள். அவர்களுக்குக் கொடுக்க வேண்டிய தட்சிணை முதலியவற்றை யுதிட்டிரர் கொடுத்தார்.

பிறகு, பணியாட்கள் கொணர்ந்து கொடுத்த ஆபரணங்

களைப் பூட்டிக்கொண்டார்; வந்திகள் வந்து பாடினார்கள்; பலர் சாமரங்களை எடுத்து வீசினார்கள்.

சில சமயம் சங்கு ஒலி, தேர் ஒலி, குதிரைக் குளம்புகளின் ஒலி முதலியன கேட்டன. வாயில் காப்போன் ஒருவன் விரைந்துவந்து யுதிட்டிரரை வணங்கினான். "கேசவர் தங்களைக் காண வந்திருக்கிறார்" என்று யுதிட்டிரரிடம் தெரிவித்தான்.

"மாதவருக்கு நல்வரவு கூறி, என்னிடம் அழைத்து வாருங்கள்; சிறந்த ஆசனமிட்டு அவரைக் கௌரவியுங்கள்" என்று யுதிட்டிரர் சொன்னார்.

கிருஷ்ணன் அந்தப்புரத்தில் நுழைந்தார். தரும நந்தனர் அவரை வரவேற்று உபசரித்தார். "மதுசூதனரே! இரவுப் பொழுது நன்றாகக் கழிந்ததா?" என்று கேட்டார்.

"ஆம். சுகமாகக் கழிந்தது" என்று கண்ணன் தெரிவித்தார்.

இது சமயம் தேர்ப்பாகன் ஒருவன் வந்து யுதிட்டிரரிடம், "அரசே! சடையினர் வந்திருக்கின்றனர்" என்று தெரிவித்தான்

"அவர்கள் உள்ளே வரட்டும்" என்று யுதிட்டிரர் அனுமதி கொடுத்தார்.

விராடன், பீமசேனன், திட்டத்துய்மனன், சாத்யகி, திருஷ்டகேது, துருபதன், சிகண்டி, நகுலன், சகதேவன் ஆகியவர்களும் மற்றவர்களும் வந்து யுதிட்டிரரைச் சந்தித்தார்கள். யுதிட்டிரரை வணங்கி, தகுந்த ஆசனங்களில் அமர்ந்தார்கள். கிருஷ்ணனும் யுயுதானனும்* ஒரே ஆசனத்தில் அருகே அருகே அமர்ந்தார்கள்.

பிறகு யுதிட்டிரர் கண்ணனை நோக்கி, "விருஷ்ணி குலத் தோன்றலே! தேவர்கள் இந்திரனை அடுத்து இருப்பதுபோல, உம்மை நாங்கள் அடுத்து இருக்கிறோம். உம் உதவியால்தான் வெற்றியும் இன்பமும் எங்களுக்குக் கைகூட வேண்டும். அர்ச்சுனன் எடுத்துக்கொண்டுள்ள சபதம் இன்று நிறைவேற நீர் அருள்புரிய வேண்டும். கௌரவ சேனை என்ற கடலைக் கடக்கும் கப்பலாக இருந்து, நீர் எங்களுக்கு உதவ வேண்டும். நாரதர் உமது பெருமைகளையெல்லாம் எங்களுக்குக் கூறியிருக்கிறார்" என்று சொன்னார்.

அதற்குக் கிருஷ்ணன், "அர்ச்சுனனை விஞ்சிய வில்லாளி எவனும் இல்லை. புயவலிமிக்க அர்ச்சுனன் உம் பகைவர்களை

* யுயுதானன—சாத்யகி

யெல்லாம் அழிப்பான்; நானும் இயன்றதைச் செய்வேன்; விறகை நெருப்பு எரிப்பதுபோல, கௌரவ சேனையை அர்ச்சுனன் எரிக்கப்போகிறான். இன்று ஜயத்ரதனை அர்ச்சுனன் வதம் செய்வது நிச்சயம். அவனுடைய தசையைக் கழுகுகளும் பருந்துகளும் நரிகளும் இன்று பிய்த்துத் தின்னப் போகின்றன. ஆகவே கவலை வேண்டாம்" என்று சொன்னார்.

எல்லாரும் இப்படி உரையாடிக்கொண்டிருந்த சமயம் தனஞ்சயன் அங்கு வந்து சேர்ந்தான். அவனைக் கண்டதும் யுதிட்டிரர் எழுந்து, தம் கைகளால் கட்டித் தழுவிக் கொண்டார்; புன்சிரிப்புடன் அவனுக்கு ஆசிகூறினார். "வீரனே! போரில் நீ வெற்றி பெறுவாய்; கண்ணன் உதவி உனக்குக் கிடைக்கும்" என்று சொன்னார்.

இதன் பின்னர் எல்லாரும் மகாதேவரை வழிபட்டு விட்டு, போருக்குப் புறப்பட்டார்கள். யுயுதானன், அர்ச்சுனன், கண்ணன் ஆகிய மூவரும் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டார்கள். அர்ச்சுனனின் இருக்கையை அடைந்து தேர் முதலியவற்றைச் சித்தம் செய்துகொண்டார்கள்; வானரக் கொடியைப் பறக்கவிட்டு, அர்ச்சுனனுடைய தேரை, கிருஷ்ணன் தயார் செய்தார். "தேர் தயாராக இருக்கிறது" என்று அர்ச்சுனனிடமும் தெரிவித்தார்.

அர்ச்சுனன் பொற்கவசம் பூண்டுகொண்டான்; வில்லையும் அம்பையும் கையில் எடுத்துக்கொண்டான்; வலம் வந்து வணங்கி, தேரில் ஏறிக்கொண்டான். பெரியவர்கள், "வெற்றி பெறுக!" என்று வாழ்த்தினார்கள். யுயுதானனும் கண்ணனும் தேரில் ஏறிக்கொண்டார்கள். விருத்திரனைக் கொல்ல இந்திரன் புறப்பட்டபோது, மாதலி குதிரைகளின் கடிவாளத்தைப் பிடித்ததுபோல், கிருஷ்ணன் குதிரைகளின் கடிவாளத்தைப் பிடித்தார்.

வாத்தியங்கள் முழங்கின, மாகதர்கள் துதிபாடினர்; அர்ச்சுனன் புறப்பட்டான்; வெற்றியை அறிவிக்கின்ற நல்ல சகுனங்கள் தோன்றின. அப்போது அர்ச்சுனன் யுயுதானனை நோக்கி 'சினி குலத் தோன்றலே! வெற்றி நிச்சயம் என்பதில் ஐயம் இல்லை; என் வல்லமை எதிர்பார்த்து இருக்கும் ஜயத்ரதனை அணுகி, அவனை யமன் உலகு அனுப்பப் போகிறேன். ஜயத்ரதனை வதம் செய்வது எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் அரசர் யுதிட்டிரரைப் பாதுகாப்பதும். புயவலி மிக்கவனே! நீ யுதிட்டிரரைப் பாதுகாக்க வேண்டும். வாசுதேவரை நிகர்த்த உன்னை இந்திரனாலும் வெல்ல

முடியாது. நான் ஒருவனே ஜயத்ரதனை வதம்செய்வேன்! எனக்குப் பக்க பலமாக கிருஷ்ணரும் இருக்கிறார். ஆகையால் நீ சென்று, அரசர் யுதிட்டிரரை விழிப்புடன் இருந்து காப்பாற்று" என்று சொன்னான்.

"ஆகட்டும்" என்று சொல்லி, தேரிலிருந்து இறங்கி, சாத்யகி யுதிட்டிரரிடம் சென்றான்.

## துச்சாதனன் ஓட்டம்

பொழுது புலர்ந்தது; சேனாபதி துரோணர் படையை அணிவகுக்கத் தொடங்கினார். சக்ர வியூகத்தை நடுவில் கொண்ட சகட வியூகத்தை வகுத்தார். சகட வியூகத்துக்குப் பின்புறத்தில் பத்ம வியூகத்தை வகுத்தார்; அதன் நடுவே ஊசி வியூகத்தை அமைத்தார்.

கௌரவ வீரர்கள் போருக்கு ஊக்கத்துடன் நின்றனர். "அர்ச்சுனன் எங்கே? கோவிந்தன் எங்கே? பீமன் எங்கே? இவர்களின் நண்பர்கள் எங்கே?" என்று கூவி, பாண்டவ தரப்பு வீரர்களைக் கௌரவ வீரர்கள் போருக்கு அழைத்தார்கள்.

அப்போது துரோணர் ஜயத்ரதனை நோக்கி, "நீ, சோமதத்தன் மகன், கர்ணன், அசுவத்தாமா, சல்லியன், விருஷசேனன், கிருபர் ஆகியோர் என்னை அணுகாமல், ஆறு குரோசத்துக்கு அப்பால் விலகி நில்லுங்கள். இலட்சம் குதிரைகள், அறுபதினாயிரம் தேர்கள், மதப்பெருக்குள்ள பதினாயிரம் யானைகள், இருபத்தோராயிரம் காலாட்கள் உங்களுக்குப் பக்க பலமாக இருக்கும்" என்று சொன்னார்.

சேனாபதி சொன்னபடி ஜயத்ரதன் செய்தான். துர்மர்ஷணன் சேனையின் முன் அணியில் நின்றான். துச்சாதனன், விகர்ணன் இருவரும் முன் அணியில் நின்றார்கள் துரோணர் வகுத்த சகட வியூகம் நாற்பத்தெட்டு மைல் நீளமும் இருபது மைல் அகலமும் கொண்டதாய் இருந்தது.

ஊசி வியூகத்தின் முனையில், கிருதவர்மா நின்றான். அவனுக்குப் பின்புறத்தில் ஜலசந்தனும் கம்போஜனும் நின்றார்கள். அவர்களை அடுத்து, துரியோதனனும் கர்ணனும் நின்றார்கள். அவர்களுக்குப் பின்புறத்தில், பெரிய சேனையினால் சூழப்பட்டு ஜயத்ரதன் நின்றான். துரோணர் சகட வியூகத்தின் முனையில் நின்றார். துரோணர் வகுத்திருந்த

இந்தச் சகட வியூகம் பார்ப்பதற்கு அதி பயங்கரமாய் இருந்தது.

வியூகம் வகுத்து முடிந்ததும், இன்னிசைகள் முழங்கின; படைகள் பெருத்த ஆரவாரம் செய்தன. இது சமயம் போர்க்களத்தில் அர்ச்சுனன் தோன்றினான்.

திட்டத்துய்மனனும் சதாநீகனும் பாண்டவ சேனையை அணிவகுத்தார்கள். சகல படைகளுக்கும் முன்னதாக நின்ற துர்மர்ஷணன் மிகுந்த ஊக்கம் காட்டினான். "காண்டீவத்தைக் கையில் பிடித்துள்ள அர்ச்சுனனைத் தடுத்து நிறுத்துகிறேன். கல்லில் போட்ட மண்குடம் உடைவதை ஒப்ப, என்னிடம் தனஞ்சயன் தோல்வியுறப் போவதை நீங்கள் காணுங்கள்; இங்கே திரண்டு நிற்கும் பகைவர்களை நான் ஒருவனே எதிர்க்கிறேன், பாருங்கள்" என்று சொன்னான்.

தனது சங்கத்தை ஊதிக்கொண்டு, அர்ச்சுனன் போர்க்களத்துக்கு வந்தான். கண்ணன் தனது பாஞ்சசன்யத்தை ஊதினார்.

இரண்டு சங்கங்களின் முழக்கத்தைக் கேட்டு, போர் வீரர்கள் நடுங்கி மூர்ச்சையுற்றார்கள்; சிலர் பயந்து நடுங்கிக் கொண்டு இருந்தார்கள்; யானைகளும் குதிரைகளும் மலஜலங்களைச் சொரிந்தன.

கௌரவப் படைகளும் தமது சங்கங்களையும் வாத்தியங்களையும் முழக்கின. அர்ச்சுனன் கிருஷ்ணனிடம், "கேசவா! துர்மர்ஷணன் இருக்கும் இடத்துக்கு இந்தத் தேரைச் செலுத்தும். யானைப் படையைப் பிளந்துகொண்டு பகைவனின் படையில் நுழையலாம்" என்று சொன்னான்.

அதன்படி, துர்மர்ஷணன் இருக்கும் இடத்துக்குக் கண்ணன் தேரை ஓட்டினார். அர்ச்சுனன் தனித்து நின்று கௌரவப் படையைத் தாக்கினான். அம்பு மழையைப் பொழிந்து பகைவர்களை எதிர்த்தான்; பகைவர்களும் பதிலுக்கு அர்ச்சுனன்மீதும் கிருஷ்ணன்மீதும் பாணங்களைப் பொழிந்தார்கள்.

பழுத்த பனம்பழம் மரத்திலிருந்து பூமியில் விழும்போது எப்படி ஓசை உண்டாகுமோ, அதேபோல, போர்வீரர்களின் தலைகளும் பூமியில் விழுந்தபோது ஓசை உண்டாக்கின. தலையில்லா முண்டமானது எழுந்து, அம்புடன் கூடியவில்லை இழுத்து நாண் ஒலி உண்டாக்கிற்று; மற்றொரு முண்டம் கத்தியை உருவியபடி நின்றது; வேறு ஒரு முண்டம்

மற்றொருவனுடைய தலைமயிரைப் பிடித்துக்கொண்டு கூத்தாடியது. போர்வீரர்கள் பயத்தினால் பிதற்றலானார்கள்; சில வீரர்கள் ஒருவரை ஒருவர் கொன்றுகொண்டார்கள்; சிலர் தம்மையே கொன்றுகொண்டார்கள். பயத்தினால், கண்டவற்றை எல்லாம் பார்த்தனாகவே கருதினார்கள். சில போர்வீரர்கள் உற்றார் உறவினர்களைக் கூவி அழைத்தார்கள்.

அர்ச்சுனன் அம்புகளால் யானைகளைப் பிளந்தான்; குதிரைகளைப் பிளந்தான்; ஆட்களைப் பிளந்தான். தன் எதிரே வந்த அனைத்தையும் பாணங்களால் அர்ச்சுனன் அடித்துக் கொன்றான்,

கௌரவசேனை பயந்து நாலா பக்கமும் சிதறி ஓடிற்று. திரும்பிப் பார்ப்பதற்கே அது விரும்பவில்லை. குதிரைகளை விரட்டித் தட்டிக்கொண்டு ஓட்டம் பிடித்தார்கள். கௌரவ சேனையில் மனக் குழப்பமும் உற்சாகம் இன்மையும் நிலவின.

படை நிலைகுலைந்து சிதறுவதைக் கண்ட துச்சாதனன் அர்ச்சுனனை எதிர்த்தான். யானைப் படையால் அர்ச்சுனனைச் சுற்றி வளைத்துக்கொண்டு தாக்கினான். அர்ச்சுனன் யானைகளை அம்புகளால் பிளந்தான். அம்புகளால் அடிபட்டு பூமியில் விழுந்து யானைகள் கதறின. சேனை புறங்காட்டி ஓடவே, துச்சாதனனும் அதனுடன் சேர்ந்து ஓடினான். "நில், நில்; இழிந்த வார்த்தைகளைப் பேசுகின்ற நீ ஏன் தப்பி ஓடுகிறாய்? வந்து போர் செய்" என்று கூவினான்.

துச்சாதனனோ அதைக் காதில் வாங்கிக்கொள்ளாமல் துரோணரை நாடி விரைந்தான்.

## பார்த்தசாரதி

துச்சாதனனைத் தோற்கடித்துவிட்டு, ஜயத்ரதனை எதிர்க்க விரும்பி, துரோணர் படை அருகே விரைந்தான் அர்ச்சுனன். கண்ணனுடைய அனுமதி பெற்றுக்கொண்டு துரோணரை அணுகினான். அவரைக் கைகூப்பி வணங்கி, "அந்தணரே! உம் அனுமதியின் பேரில் படையைப் பிளந்து கொண்டு உட்புக விரும்புகிறேன்; உம் புதல்வனாகவே பாவித்து என்னை நீர் நடத்த வேண்டும். ஜயத்ரதனை இன்று கொல்ல எண்ணங்கொண்டு போர்க்களத்துக்கு நான் வந்துள்ளேன். எனது சபதம் நிறைவேற நீர் அருள்பாலிக்க வேண்டும்" என்று இறைஞ்சினான்.

இப்படி அர்ச்சுனன் சொன்னதும் துரோணர் "அர்ச்சுனா! என்னை வெல்லாமல், ஜயத்ரதனை நீ வெல்ல முடியாது" என்று பதில் சொன்னார். பிறகு அர்ச்சுனன்மீது, துரோணர் அம்புகளை இறைத்தார்.

பதிலுக்குத் துரோணரை அர்ச்சுனன் அம்புகளால் அடித்தான். துரோணர் அர்ச்சுனனின் நாண் கயிற்றை அறுத்துவிட்டார். தாமதியாது வேறு நாணைச் சடுதியில் பூட்டி, அம்புகளைத் தொடுத்தான் அர்ச்சுனன்.

அர்ச்சுனனையும் வாசுதேவரையும் பாணங்களால் தொடர்ந்து துரோணர் அடித்தார். துரோணருடைய திறமையைக் கண்ணன் வியந்தார். "துரோணரை வெல்வது அர்ச்சுனனுக்கு எளிதில் இயலாது" என்று கருதினார்.

அர்ச்சுனன் கலக்கமடைந்தான். அப்போது கிருஷ்ணன் "பார்த்தா! இந்த அந்தணரை விட்டுவிட்டு, தாமதம் செய்யாமல் நாம் அப்பால் செல்லலாம். இவர் களைப்படையாது போர் தொடுக்கிறார்" என்று சொன்னார்.

"அவ்வாறே செய்யலாம்" என்று அர்ச்சுனன் சம்மதித்தான். துரோணரை வலம் செய்துவிட்டு, கௌரவ சேனையைத் தாக்கிக்கொண்டே அர்ச்சுனன் விலகிச் சென்றான்.

"பாண்டவா! நில். பகைவனை எதிர்க்காமல் திரும்புவது சரியா?" என்று துரோணர் கேட்டார்.

அதற்கு அர்ச்சுனன், "தாங்கள் எனக்கு ஆசிரியர். தங்களை நான் பகைவனாகக் கருதுவது தகாது. உம்மைத் தோற்கடிக்க எந்த மானுடனாலும் ஆகாது" என்று அர்ச்சுனன் பதில் சொன்னான்.

பிறகு கௌரவ சேனையைத் தாக்குவதில் முனைப்புடன் ஈடுபட்டான்.

கௌரவ சேனை சிதறி ஓடுவதையும், பல வீரர்கள் அர்ச்சுனனால் அடியுண்டு மாள்வதையும் அறிந்த துரியோதனன், துரோணரிடம் வந்தான். "பெரிய படையைப் பிளந்துகொண்டு அர்ச்சுனன் உள்ளே புகுந்துவிட்டான். அர்ச்சுனனை வதைக்க நீர் தகுந்த ஏற்பாடு செய்ய வேண்டும். ஜயத்ரதனை வதைக்க, நாம் இடங்கொடுத்தல் கூடாது. தாங்கள் உம்மையே கதி என்று கருதி இருக்கிறோம். துரோணரை வெல்ல அர்ச்சுனனால் ஒருபோதும் முடியாது என்று அரசர்கள் உறுதியாக நம்புகிறார்கள். ஆயினும் அர்ச்சுனன் படையைப் பிளந்துகொண்டு உள்ளே புகுந்து

விட்டான். படைக்கே பெரும் ஆபத்து நேர்ந்திருக்கிறது. பாண்டவர்களுக்கு நன்மைபுரிவதில் உமக்கு நாட்டம் உண்டு என்பதை நான் அறிவேன். என்றால் இயன்ற அளவு உம்மை நான் ஆதரித்து வந்திருக்கிறேன். இருந்தும் எங்கள்மீது உமக்குப் பிரியம் இல்லை. உம்மை நம்பி நான் மோசம் போனேன். உம்மை நம்பி ஜயத்ரதனை நான் போரில் இறங்கச் செய்தேன். இப்பொழுது அவனுடைய உயிர் ஊசலாடுகிறது. ஜயத்ரதனை நீர் காப்பாற்றும். துயரத்தால் புலம்புகின்ற என்மீது நீர் கோபப்படக் கூடாது'' என்று சொன்னான்.

அதற்குத் துரோணர், ''அரசே! நீ சொல்வதைக் கேட்டு நான் கோபப்படவில்லை. என் புதல்வன் அசுவத்தாமாவைப் போலவே, உன்னையும் நான் நேசிக்கிறேன். நான் கூறுவது உண்மை. அர்ச்சுனனுக்குத் தேர் ஓட்டும் கண்ணன் மகா திறமைசாலி; அர்ச்சுனனுடைய குதிரைகளும் சிறந்தவை; அர்ச்சுனனும் கைதேர்ந்த வில்லாளி. நானோ வயது முதிர்ந்தவன்; யுதிஷ்டிரனைப் பிடிப்பதாக நான் சபதம் செய்திருப்பதால் போர்க்களத்தைவிட்டு, நான் அகல விரும்பவில்லை. ஒத்த குலத்தில் பிறந்துள்ள நீ, பயப்படாமல் அர்ச்சுனனோடு போர்செய். பாண்டவர்களுடன் பகைமையை வளர்த்துக் கொண்டுள்ள நீ, பயப்படாமல் அவர்களுடன் போர்செய்'' என்று சொன்னார்.

''ஆசிரியர் அவர்களே! தங்களையும் மீறி, அர்ச்சுனன் போர்க்களத்தில் புகுந்துவிட்டான். ஆயினும் போர்புரிவதற்கு இது தக்க சமயம் என்று தாங்கள் கருதினால் கட்டளையிடுங்கள். உடனே கீழ்ப்படிந்து, அர்ச்சுனனோடு நான் போர் புரிகிறேன்'' என்று சொன்னான் துரியோதனன்.

''குருகுலத் தோன்றலே! நீ கூறுவதுபோல் அர்ச்சுனனை எளிதில் வெல்ல முடியாது என்பது உண்மைதான். ஆயினும் அவனுடைய எதிர்ப்பைத் தாங்கும் ஆற்றல் உனக்கு உண்டாகுமாறு நான் செய்யப்போகிறேன். பாணங்களால் உடைக்க முடியாத ஒரு கவசத்தை உனக்கு நான் பூட்டுகிறேன். முன்பு விருத்திரனை இந்திரன் எதிர்த்த காலத்தில் அவன் அணிந்திருந்த கவசம் இது. இதை அணிந்திருப்பவன் தேவர்கள், இயக்கர்கள், அசுரர்கள், ஆகிய அனைவரையும் பயமின்றி எதிர்க்கலாம்'' என்று சொல்லி, அந்தக் கவசத்தைத் துரியோதனனுக்குப் பூட்டி, அவனைப் போருக்கு அனுப்பினார்.

கடல்போல் பெரிய சேனை தன்னைச் சூழ்ந்து வர, துரியோதனன் அர்ச்சுனனை எதிர்க்கப் புறப்பட்டான். இதைக் கண்டதும் கௌரவ சேனையில் பெருத்த ஆரவாரம் உண்டாயிற்று.

இரு தரப்புச் சேனைகளும் ஒன்றோடொன்று பொருதின; கோரமாகப் போர் நடந்தது. திட்டத்துய்மனன் துரோணரை எதிர்த்தான்; கடுமையாகவும் திறமையோடும் எதிர்த்தான். அது அதி ஆச்சரியமாய் இருந்தது. எதிர்த்து அடித்து, திட்டத்துய்மனனுடைய சாரதியைத் துரோணர் கொன்றார். இதுசமயம் சாத்யகி உதவிக்கு வந்து, திட்டத்துய்மனனைக் காப்பாற்றினான்; பிறகு பாஞ்சால வீரர்கள் திட்டத்துய்மனனை அப்பால் அழைத்துப் போனார்கள்.

இதன் பின்னர் துரோணருக்கும் சாத்யகிக்கும் இடையில் கடும் போர் நடந்தது. இடைவிடாது இருவரும் கடிதில் அம்புகளைத் தொடர்ந்து தொடுத்தபடியால், ஆகாயமே தெரியவில்லை. எங்கும் இருள் பரவத் தொடங்கியது. மற்றவர்கள் சண்டையிடுவதை நிறுத்திவிட்டு, துரோணரும் சாத்யகியும் கடுமையாகவும் திறமையாகவும் போர் செய்வதைக் கவனித்தார்கள்; கண் இமையாமலும் ஆவலோடும் கவனித்தார்கள்; தேவர்களும் உரகர்களும் இந்த ஆச்சரியமான போரைக் கவனித்தார்கள்.

துரோணருடைய வில்லையும் அம்பையும் சாத்யகி அறுத்தான்; துரோணர் புதுப் புது வில்லை, நாண் ஏற்ற ஏற்ற, நூற்று ஒரு விற்களை, சாத்யகி அறுத்தான். "சாத்யகி திறமையாகப் போர்புரிகிறான். ராமர், தனஞ்சயன், கார்த்தவீரியன், பீஷ்மர் இவர்களிடம் காணப்படும் போர் ஆற்றல் சாத்யகியிடமும் காணக் கிடக்கிறது" என்று தம் மனத்திலுள்ளே துரோணர் அவனைப் பாராட்டினார்.

ஒரு பக்கத்தில் போர் இவ்வாறு நடந்துகொண்டு இருக்கும்பொழுது அர்ச்சுனனும் வாசுதேவரும் ஜயத்ரதன் போர்புரியும் பக்கம் சென்றார்கள். அர்ச்சுனன் அம்பினால் வழிசெய்து கொடுத்தான்; வாசுதேவர் அந்த வழியாகத் தேரைச் செலுத்தினார். பகல் பொழுது மெதுவாகக் கடந்து கொண்டிருந்தது.

அவந்தி நாட்டு அரச குமாரர்கள் விந்தனும் அனுவிந்தனும் அர்ச்சுனனை எதிர்த்தார்கள். விந்தனுடைய தலையை உடலிலிருந்து அர்ச்சுனன் அம்பால் வேறுபடுத்தினான். அவன் தம்பி அனுவிந்தனையும் ஆறு அம்புகள் எய்து கொன்றான்,

அர்ச்சுனனின் தீரத்தைக் கண்டு கௌரவர்கள் பயந்தார்கள். ஆயினும் அர்ச்சுனன் களைப்படைந்திருப்பதை அறிந்து, அவனைக் கடுமையாகத் தாக்கினார்கள். அதற்காக அர்ச்சுனன் சோர்ந்துவிடவில்லை. அவன் கண்ணனை நோக்கி, அம்புகளால் அடிபட்டுக் குதிரைகள் களைப்படைந்து இருக்கின்றன. இப்பொழுது தங்கி, குதிரைகளுக்குச் சிறிது ஓய்வு கொடுக்கலாமா? உம் கருத்து என்ன? அதன்படி நடக்கிறேன்” என்று மெதுவாகக் கேட்டான்.

“அவ்வாறே செய்யலாம்” என்று கேசவர் தெரிவித்தார்.

உடனே அர்ச்சுனன் தேரிலிருந்து இறங்கிக்கொண்டான். வில்லைக் கையில் பிடித்துக்கொண்டு மலைபோல் அசையாது நின்றான். தேரைவிட்டு இறங்கி நிற்கும் அர்ச்சுனனைக் கௌரவ வீரர்கள் தாக்கத் தொடங்கினார்கள். அர்ச்சுனன் தனியாக நின்று, அவர்கள் எல்லாரையும் தடுத்தான்.

அப்போது கிருஷ்ணன் அர்ச்சுனனிடம், “போர்க்களத்தில் குதிரைகள் குடிப்பதற்குப் போதிய தண்ணீர் இல்லை. இங்குள்ள தண்ணீரைக் குதிரைகள் குடிக்க மறுக்கின்றன” என்று சொன்னார்.

உடனே அர்ச்சுனன் ஒரு அம்பை எய்து ஒரு தடாகத்தை உண்டாக்கினான். தெளிந்த தண்ணீர் அதில் நிரம்ப இருந்தது. அன்னங்கள், நீர்க்காக்கைகள், சக்ரவாகங்கள், ஆமைகள், தாமரை மலர்கள் ஆகியன அந்தக் குளத்துக்கு அழகைத் தந்தன. இந்தத் தடாகத்தைப் பார்க்க நாரத மகரிஷி அங்கு வந்து சேர்ந்தார். இதன் பின்னர் அம்புகளாலான ஒரு கூடத்தை அர்ச்சுனன் அமைத்தான். கண்ணன் அந்தக் கூடத்தைப் பார்த்து, “நல்லது நல்லது” என்று சொல்லி அவனைப் பாராட்டினார்.

குளமும் கூடமும் உண்டானவுடன், வாசுதேவர் தேரிலிருந்து இறங்கிக்கொண்டார். அம்புகளால் அடிபட்டிருந்த குதிரைகளைத் தேரிலிருந்து அவிழ்த்துவிட்டார். புன்சிரிப்புடன் குதிரைகள் மண்ணில் புரளவிட்டார்; புரண்டு குதிரைகள் எழுந்ததும், தன் இரு கைகளாலும் குதிரைகளைக் கண்ணன் துடைத்தார்; பிறகு குதிரைகளுக்குத் தண்ணீர் காட்டினார்; குதிரைகளைக் குளிப்பாட்டித் தீனி வைத்தார். குதிரைகளுக்குள்ள பசியையும் தாகத்தையும் சோர்வையும் போக்கிய பின், தேரில் பூட்டினார்.

தேர் புறப்பட்டது; சேனைகளைக் கடந்துகொண்டு

அர்ச்சுனனும் கிருஷ்ணனும் விரைந்து சென்றார்கள். சூரியன் மெதுவாக மேற்கு நோக்கிச் சென்றுகொண்டிருந்தான்.

ஜயத்ரதனை எதிர்க்க விரைகின்ற அர்ச்சுனனைத் துரியோதனன் எதிர்த்தான்.

## சாத்யகி

பதினான்காம் நாளன்று பிற்பகலில், கடந்த போரில் துரோணரைக் கொல்லும் முனைப்புடன் பாஞ்சாலர்கள் இருந்தார்கள். உற்சாகம் கொப்பளிக்க, அம்புமாரி பொழிந்து துரோணரை அடித்தார்கள்.

யுதிரட்டிரரும் பாணங்களால் துரோணரைத் தாக்கினார். பதிலுக்குத் துரோணரும் யுதிட்டிரரை இருபத்தைந்து பாணங்களால் அடித்தார்; அவருடைய வில்லையும் அறுத்தார். அம்பு மழைகளைப் பொழிந்து, யுதிட்டிரர் இருப்பதே தெரியாதபடி செய்துவிட்டார். சிலர் இதனால், 'யுதிட்டிரர் மாண்டார்' என்று கருதினர்; சிலர் 'புறமுதுகு காட்டி யோடி விட்டார்' என்று கூறினர்.

யுதிட்டிரரோ அறுந்துபோன வில்லுக்குப் பதிலாகவேறு ஒரு வில்லை எடுத்துக்கொண்டு, போர் தொடுத்தார். யுதிட்டிரருக்கும் துரோணருக்கும் இடையில் கடும் போர் நடந்தது. அவருடைய தேர். வில், கொடி, குதிரை அனைத்தையும் துரோணர் அழித்துவிட்டார். 'அரசரைத் துரோணர் பிடித்துக்கொண்டார்' என்று ஜனங்கள் கூக்குரலிட்டார்கள். யுதிட்டிரரோ சகதேவனுடைய தேரில் ஏறிக்கொண்டு, விலகி அப்பால் போய்விட்டார்.

அலம்புசன் என்னும் அரக்கன், பகனுடைய சகோதரன், பீமனைக் கடுமையாக எதிர்த்தான். "நான் இல்லாத சமயத்தில் என் சகோதரனை நீ வதம் செய்தாய்; என்னிடத்தில், உன் வல்லமை பலிக்காது" என்று சொல்லி, பீமனைத் தாக்கினான். பலவிதமான வடிவங்களை எடுத்துக்கொண்டு, பீமனோடு அவன் போர்செய்தான். இவனுடைய வல்லமையைக் கண்டு, பாண்டவர்கள் பயந்தார்கள். கௌரவர்கள் ஆரவாரம் செய்தார்கள். ஆயினும் ஆத்திரத்துடன் போராடி அலம்புசனை ஓடும்படி செய்துவிட்டான் பீமன்; துரோணர் போர் புரியும் பக்கமாக அலம்புசன் ஓட்டம் எடுத்தான்.

இது சமயம், கடோத்கசன் துரோணரை எதிர்த்து வந்தான்; உடனே அலம்புசன் ஒரு தேரில் ஏறிக்கொண்டு கடோத்கசனை எதிர்த்தான். இருவரும் உக்கிரமாகப் போராடினர்; இருவரும் செய்த போர் இராமரும் ராவணனும் செய்த போரை நிகர்த்ததாய் இருந்தது. ரிஷியசிங்கரின் புதல்வனை அலம்புசன் சளைக்காது கடோத்கசனுடன் போராடினன்; தத்தம் மாயைகளைக் காட்டி, இருவரும் போராடினர். கடைசியாக, கடோத்கசன், அலம்புசனை மேலே தூக்கி, மட்குடத்தைக் கல்லில் போட்டு உடைப்பதைப்போல், தரையில் போட்டான். எலும்புகள் நொறுங்கி, அலம்புசன், கீழே விழுந்து உயிரைவிட்டான். இதைக் கண்டதும் பாண்டவ தரப்பினர் பெருக்க ஆரவாரம் செய்தனர். அலம்புசன் என்ற அந்த அரக்கன் கீழே விழுந்த அதிர்ச்சியினால் பத்துத் தேராளிகளும் யானைகளும் உயிர் துறந்தன.

சாத்யகியும் துரோணரும் போர் தொடுத்தனர். சாத்யகிக்கு உதவியாகப் பல வீரர்களை யுதிட்டிரர் அனுப்பினர். திட்டத்துய்மனைப் பார்த்து, "வீரனே! சாத்யகியைத் தாக்கும் துரோணரைத் தடைப்படுத்து. நானும் உன்னைத் தொடர்ந்து வருகிறேன்" என்று சொன்னர்.

பிறகு யுதிட்டிரர் துரோணரை எதிர்த்துச் சென்றார். தன்னை எதிர்த்து வருகின்ற வீரர்களை எல்லாம் துரோணர் சிரித்தபடி வரவேற்றார்; இருபத்தைந்து பாஞ்சால வீரர்களை அம்பு எய்து கொன்றார்.

இது சமயம் கண்ணனும் அர்ச்சுனனும் ஜயத்ரதனை எதிர்க்கச் சென்று இருந்தார்கள். அந்தப் போர்க்களத்தில் பாஞ்சசன்யத்தின் ஒலி மட்டும் கேட்டது; ஆனால் காண்டீவத்தின் ஒலி கேட்காமல் இருந்தது. இதனால் யுதிட்டிரர் மனம் குழம்பினர். அர்ச்சுனனுக்கு ஏதும் ஆபத்து நேர்ந்து விட்டதோ என யுதிட்டிரர் அஞ்சினர். கண்களில் நீர் மல்கியது. பேச முடியாமல் நா தடுமாறியது. அவர் உடனே சாத்யகியை நோக்கி, "சினிகுலத் தோன்றலே! கண்ணன் பாண்டவர்களுக்கு உதவ ஊக்கத்துடன் இருப்பதுபோல, நீயும் பாண்டவர்களுக்கு உதவ ஊக்கத்துடன் இருப்பவன். அர்ச்சுனன் சங்கடத்தில் சிக்கிக்கொண்டிருப்பானே என நான் சந்தேகிக்கிறேன். ஆகவே, அர்ச்சுனனுக்கு உதவியாகச் செல். கைகுவித்து உன்னை நான் வேண்டுகிறேன். அர்ச்சுனனைக் காக்க உன்னைத் தவிர வேறு யாரும் இல்லை. அர்ச்சுனன் உயிர் துறந்தால் நான் உயிர் தரியேன். ஆகையால் நீ சென்று

அர்ச்சுனனைக் காப்பாற்று" என்று வேண்டினார்.

யுதிட்டிரர் இப்படிச் சொன்னதும், "தருமம் தவறாத அரசே! ஜயத்ரதனை வதம் செய்யும்வரை தங்களைக் காப் பாற்ற வேண்டிய பொறுப்பை அர்ச்சுனன் என்னிடம் ஒப்படைத்துச் சென்று இருக்கிறார். 'யுதிட்டிரரைப் பிடிப்ப தாகத் துரோணர் சபதம் செய்திருப்பதை நீ அறிவாய். ஆகையால் கவனமாய் இரு!' என்று சொல்லிவிட்டு. ஜயத்ரதனை எதிர்த்துச் சென்று இருக்கிறார். ஆகையால் உம்மைப் பாதுகாக்க ஒருவனை நியமியாமல் நான் போதல் கூடாது. தாங்கள் யோசித்துச் சொல்லுங்கள். தங்கள் கட்டளைப்படி நடக்கிறேன்" என்று சாத்யகி சொன்னான்.

"வீரனே! நீ அர்ச்சுனன் இருக்கும் இடத்துக்குச் செல்; பீமசேனன் எனக்குப் பாதுகாவலாக இருப்பான். கடோத் கசன், விராடன், துருபதன் முதலியவர்களும் என்னைக் காப்பார்கள். கோபங்கொண்டு எதிர்த்துவரும் துரோண ரைத் தடுக்கும் ஆற்றல் திட்டத்துய்மனனுக்கு உண்டு. துரோணரை அழிக்கும்பொருட்டே அக்கினியிலிருந்து பிறந் தவன் அவன். ஆகையால், என் பொருட்டாகக் கவலைப் படாமல் நீ அர்ச்சுனனிடம் செல்" என்று சொன்னார் யுதிட்டிரர்.

"அரசே! உம் கட்டளைப்படி நான் செய்கிறேன். பயந்து சென்றேன் என்ற அவச்சொல் நேரக் கூடாது என்பதற்காகத் தான் யோசித்தேன். அபிமன்யுவைக் கொன்ற ஜயத்ரதன் மூன்று யோசனை தூரத்தில் இருக்கிறான். துரியோதனனுக்குச் சார்பாக இருப்பவர்கள் அனைவரையும் எதிர்த்து, நான் வதம் செய்வேன்; ஆகவே, எனக்குத் தேரைச் சித்தம் செய்யச் சொல்லுங்கள். சூரியன் அஸ்தமிப்பதற்குள் நான் அர்ச்சு னனை அடைவேன்" என்று சொன்னான் சாத்யகி.

தேரைத் தயார் செய்து, சாத்யகிக்குத் தேர்ப்பாகன் தெரிவித்தான். அந்தணர்கள் ஆசி சொல்ல, யுதிட்டிரரிடம் விடைபெற்றுக்கொண்டு சாத்யகி, தேரில் ஏறினான். மரியாதை செய்து, பாண்டவ வீரர்கள் சாத்யகியை அனுப்பினார்கள். பீமசேனனும் பின்தொடர்ந்தான். அப்போது சாத்யகி பீமசேனனை நோக்கி, "பீமசேனரே! நீர் அரசரைக் காப்பாற் றும். நான் படையைப் பிளந்துகொண்டு புகுகிறேன். எனது பலத்தை நீர் அறிவீர்; உமது பலத்தை நான் அறிவேன். எனக்கு நல்லது செய்யக் கருதினால் நீர் திரும்பிவிடும்" என்று சொன்னான்.

பிறகு சாத்யகி அங்கிருந்து புறப்பட்டான். மான் கூட்டத்தை நோக்கும் புலிபோல, சாத்யகி கௌரவ சேனையை நோக்கினான்; அர்ச்சுனனை அடையும் எண்ணத்துடன் கௌரவ சேனையைச் சாத்யகி தாக்கத் தொடங்கினான்.

அர்ச்சுனனிடம் செல்லும் சாத்யகியைத் துரோணர் தடுத்தார். சாத்யகியும் கடுமையாகத் துரோணரை எதிர்த்தான். துரோணரை அலட்சியப்படுத்திவிட்டு, படையைப் பிளந்துகொண்டு சாத்யகி புகுந்தான்; துரோணர் அவனைப் பின்தொடர்ந்தார்.

சாத்யகியோ, கிருதவர்மாவினால் பாண்டவ சேனை துன்புறுத்தப்படுவதைக் கண்டு, கிருதவர்மாவைத் தாக்கினான். அவனை வென்று சென்றுகொண்டிருந்த சாத்யகியைக் கௌரவ வீரர்கள் தாக்கினார்கள்.

மகத நாட்டு மன்னன் ஜலசந்தன் என்பவன் முன்வந்து சாத்யகியைத் தாக்கினான். சாத்யகி மூன்று பாணங்கள் எய்து, ஜலசந்தனை வதம் செய்தான்.

இதைக் கண்டதும் நிலைகுலைந்து, கௌரவ சேனை புறமுதுகு காட்டி ஓடிற்று.

உடனே, துரோணர் கிருதவர்மாவைப் பாண்டவ சேனையை எதிர்க்கச் சொல்லிவிட்டு, சாத்யகியை நோக்கி விரைந்தார்.

திருதராட்டிரன் புதல்வர்கள் பலர் கூடி, சாத்யகியை எதிர்த்தார்கள். துர்மர்ஷணன், துஸ்ஸஹன், விகர்ணன், துர்முகன், துச்சாதனன், சித்திரசேனன் ஆகியோர் முன் வந்து சாத்யகியைத் தாக்கினார்கள். தனியனாக நின்று, தீரத்துடன் சாத்யகி எதிர்த்தான்.

துரியோதனனுக்கும் சாத்யகிக்கும் இடையில் கடும் போர் நடந்தது. தாக்குப்பிடிக்க முடியாது ஓடி, சித்திரசேனனுடைய தேரில் துரியோதனன் ஏறிக்கொண்டான்.

கௌரவ சேனையை இடைவிடாது தாக்கிக்கொண்டே அர்ச்சுனனை நாடிச் சாத்யகி முன்னேறினான். கௌரவப் படையினர் நிலைகுலைந்து ஓட்டம் பிடித்தனர். படைத் தலைவர்களுமே ஓட்டம் பிடிக்கலாயினர்; துச்சாதனனும் தாக்குப் பிடிக்க முடியாமல் ஓட்டம் பிடித்தான்.

அப்போது சேனாபதி துரோணர் துச்சாதனனை நோக்கி, "துச்சாதனா! படைகள் சிதறியோடக் காரணம் என்ன? துரியோதனன் எப்படி இருக்கிறான்? ஜயத்ரதன் எப்படி

இருக்கிறன்? அரசனுக்குத் தம்பியான நீ போர்முனையில் பயந்து ஓடலாமா? பாண்டவர்களையும் திரௌபதியையும் அவமதித்துப் பேசிய நீ இப்போது தைரியத்துடன் போர் முகத்தில் நிற்காமல் பயந்து ஓடுவது முறையா? இது உன் தகுதிக்கு அடுக்குமா? சாத்யகியைக் கண்டு இப்படிப் பயந்து ஓடுகிற நீ, காண்டீவத்தை வில்லாகப் பெற்ற அர்ச்சுனனைக் கண்டதும் என்ன செய்வாயோ? நீ எங்கு ஓடினுலும் உன்னை விடாது அவர்கள் துரத்துவார்கள்; ஆகவே மீண்டும் காந்தாரியின் வயிற்றில் பதுங்கி, புகலிடம் தேடிக்கொள். பாண்டவர்களுக்கு ராஜ்யத்தைத் திருப்பிக் கொடுத்து இருந்தால் இந்த அவல நிலைக்கு இடம் ஏது? உன் குருதியைக் குடிக்க, பீமசேனன் சபதம் எடுத்து இருப்பதை நீ அறிவாய். உன்னை எளிதில் அவன் விட மாட்டான். ஆகையால் துணிந்து நின்று போர் செய். அதுதான் ஆண்மைக்கு அழகு" என்று சொன்னார்.

துரோணர் இவ்வாறு நிந்தித்ததைக் கேட்டு, துச்சாதனன் மறுமொழி ஒன்றும் சொல்லவில்லை; சாத்யகியுடன் அவன் போர் செய்ய முனைந்தான்.

துரோணர் போர் செய்து பாஞ்சால குலத்தில் பிறந்த வீரகேது என்பவனை வதம் செய்தார். இதனால் கோபமடைந்த பாஞ்சாலர்கள் துரோணரைக் கடுமையாகத் தாக்கினார்கள்; திட்டத்துய்மனன் துரோணரை எதிர்த்தான். துரோணர் சளைக்காது போர் செய்தார். புயல் வீசும்பொழுது மரத்தில் இருக்கும் மலர்கள் பொலபொல வென்று உதிர்வதைப்போல, அரச குமாரர்களின் தலைகளைத் துரோணர் அம்புகளால் அறுத்துத் தள்ளினார்.

இதைக் கண்டதும் திட்டத்துய்மனன் கண்ணீர் உகுத்தான்; கோபமுண்டு துரோணரை எதிர்க்க, கடிதில் தேரைச் செலுத்தச் செய்து, துரோணரை அணுகினன். தொண்ணூறு பாணங்களால் துரோணர் மார்பில் அடித்தான்.

மூர்ச்சையுற்று, தேர்த்தட்டில் துரோணர் உட்கார்ந்தார். உடனே திட்டத்துய்மனன் வில்லைக் கீழே போட்டுவிட்டு, கத்தியை எடுத்துக்கொண்டு ஓடி, துரோணர் தலையை வெட்டப் போனன். மூர்ச்சை தெளிந்து, ஒரு வில்லை எடுத்து, திட்டத்துய்மனனைத் துரோணர் தடுத்துவிட்டார். எனவே திட்டத்துய்மனன் திரும்பித் தன் தேரில் ஏறிக்கொண்டான். போர் நடந்தது. திட்டத்துய்மனன் தேர்ப்பாகன் தலையை, பக்குவமான பழத்தை மரத்திலிருந்து விழச்

செய்வதுபோல எளிதாக, இஷ்டப்படி செய்தார் துரோணர். அவரை எதிர்க்க யாருக்கும் துணிவு உண்டாகவில்லை.

துச்சாதனனுக்கும் சாத்யகிக்கும் போர் நடந்தபோது, துச்சாதனனால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. ஆகவே, துரியோதனன் மூவாயிரம் திரிகர்த்தர்களை அனுப்பி, சாத்யகியை எதிர்க்கச் செய்தான். அந்த மூவாயிரம் திரிகர்த்தர்களையும் சாத்யகி அடித்து வீழ்த்திவிட்டான். மற்ற வீரர்கள் பயந்து போய் துரோணரை நாடிச் சென்றார்கள். துச்சாதனனும் தேர் இழந்து, பாகன் இழந்து, அம்பு இழந்து, தோற்றுப் போனான். அவனைத் திரிகர்த்த நாட்டு மன்னன், தனது தேரில் ஏற்றிக்கொண்டு திரும்பினான். சாத்யகியோ தனஞ்சயனை நாடிச் சென்றுகொண்டிருந்தான்.

இது சமயம் துரோணர் போர்க்களத்தில் துரிதமாகக் காரியங்களைச் செய்தார். கேகய நாட்டு மன்னன் பிருகத்சத்திரனை வதம் செய்தார்; சிசுபாலன் புதல்வன் திருஷ்டகேதுவை வதம் செய்தார்; ஜராசந்தன் புதல்வனை அம்புகளால் அடித்துக் கொன்றார்.

இதனால் அல்லலுற்றுத் தவித்த பாஞ்சால வீரர்கள் பீமசேனனையும் திட்டத்துய்மனையும் உதவிக்குக் கூவி அழைத்தார்கள். அழைப்பது காதில் விழுந்ததும் பீமன் யுதிட்டிரரை நோக்கி, "அரசே! துரோணர் நம பக்கத்து வீரர்களுக்குப் பெருந் தொல்லை கொடுக்கிறார்" என்று கூறினான்.

நானூறு வயதை அடைந்துள்ள துரோணர் பதினாறு வயது வாலிபனைப் போல் மிடுக்குடன் போர் செய்தார்.

## துரியோதனன் ஓட்டம்

துரியோதனன் எதிர்த்து வருவதைக் கண்ணன் கவனித்தார். அவர் அர்ச்சுனனை நோக்கி "பார்த்தா! மிக்க பலசாலியும் திறமைசாலியுமான துரியோதனன் நம்மை எதிர்த்துவருகிறான். பாண்டவர்களிடம் பகைமை கொண்டுள்ள இவனுடன் போர் செய்ய இது தகுந்த சமயம்; அம்பால் எய்து அவன் உயிரை வாங்கு. செல்வச் செருக்கு மிக்க இவனை நாசம் செய்ய வேண்டும். உங்கள் ராஜ்யத்தைச் சூதாட்டத்தின் மூலம் கபடமாகக் கவர்ந்துகொண்டவன் இவன்;

திரௌபதியை அவமானப்படுத்த முன்வந்தவன்; தாமத மின்றி அம்பு எய்து இவனைக் கொல்" என்று சொன்னார்.

"தேரைத் துரியோதனன் பக்கம் செலுத்தும். அவன் தலையை அறுத்து நான் பூமியில் தள்ளுகிறேன். கூந்தலைப் பற்றி இழுக்கச் செய்து, திரௌபதியை அவமானப்படுத்திய இவனை எளிதில் விடக் கூடாது" என்று அர்ச்சுனன் சொன்னான்.

கண்ணன் துரியோதனனை நோக்கி தேரைச் செலுத்தினார். இருவரும் வந்து தன்னைத் தாக்கப் போகிறார்கள் என்பதை அறிந்தும் துரியோதனன் கொஞ்சமும் அஞ்சவில்லை. "பார்த்தா! உன்னுடைய அத்திரத் திறமையை எல்லாம் நீ என்னிடம் காட்டலாம். உன் ஆண்மையைக் காட்டலாம். பெரிய பெரிய காரியங்களை நீ சாதித்து இருப்பதாக ஜனங்கள் சொல்லுகிறார்கள்; இதுவரை அவற்றை பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது இல்லை. ஆகையால் உன் வல்லமையைக் காட்டு பார்க்கலாம்" என்று முழங்கினார் துரியோதனன்.

பிறகு மூன்று பாணங்களால் அர்ச்சுனனை அடித்தான்; பத்துப் பாணங்களால் வாசுதேவரையும் அடித்தான்; அரைப் பிறை வடிவமுள்ள பாணத்தால், வாசுதேவர் பிடித்திருந்த சவுக்கை அறுத்துத் தள்ளினான்.

அர்ச்சுனன், பதிலுக்குப் பதினான்கு பாணங்களால் துரியோதனனை அடித்தான். அவை கவசத்தைத் தாக்கிக் கீழே விழுந்தன; மீண்டும் பதினான்கு பாணங்களால் அர்ச்சுனன் அடித்தான். அவையும் வீணாகிக் கீழே விழுந்தன.

இதைக் கவனித்த வாசுதேவர் அர்ச்சுனனை நோக்கி, "பார்த்தா! நீ எய்த இருபத்தெட்டுப் பாணங்களும் பயனின்றிக் கீழே விழுந்துவிட்டன. உனது கைப்பிடியும் தோள்வலியும் தளர்ச்சியுறாமல் இருக்கின்றனவா? காண்டீவம் முன்போல் உறுதியாக வேலை செய்கிறதா? உனது பாணங்கள் பயனின்றிக் கீழே விழுவதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டார்.

அதற்கு அர்ச்சுனன், "கிருஷ்ணா! உடைக்க முடியாத கவசம் ஒன்றைப் பூட்டி, துரோணர் துரியோதனனை அனுப்பி இருக்கிறார் யாவற்றையும் அறிந்த நீர் இதுபற்றி என்னை ஏன் கேட்கிறீர்? முயன்று இந்தக் கவசத்தை உடைக்கிறேன் பாரும்" என்று சொல்லி, ஒரு பாணத்தை எடுத்து, மந்திரத்தை ஜபித்து, அர்ச்சுனன் விட்டான்.

அந்த அம்பை அசுவத்தாமா தூரத்தில் இருந்தபடியே வேறு ஒரு அம்பால் தடுத்துவிட்டார். இதைக் கவனித்த அர்ச்சுனன் ஆச்சரியமுற்றான். அவன் கேசவரை நோக்கி, "இந்த அம்பை இரண்டு முறை பிரயோகித்தால், பிரயோகித்தவனையே இந்த அம்பு கொன்றுவிடும்" என்று தெரிவித்துக் கொண்டான்.

இது சமயம் அர்ச்சுனன், கிருஷ்ணன் இருவரையும் துரியோதனன் தாக்கினான். துரியோதனன் மேனியை அர்ச்சுனன் கவனித்துப் பார்த்தான்; கவசம் இல்லாத உறுப்பே உடம்பில் தென்படவில்லை. ஆகவே, முதலில் துரியோதனனுடைய குதிரைகளையும் தேர்ப்பாகனையும் அடித்தான். இவற்றை இழந்து நிற்கும் துரியோதனனின் கையுறைகளை அடித்துப் பொடி செய்தான்; பிறகு அவனுடைய உள்ளங்கையையும் நகக் கணுக்களையும் குறிவைத்து, பாணத்தை ஏவினான்.

வேதனை தாங்காது துரியோதனன் ஓட்டம் பிடித்தான், அவனைக் காப்பாற்ற பூரிசிரவஸ், சலன், கர்ணன், விருஷசேனன், ஜயத்ரதன், கிருபர், சல்லியன், அசுவத்தாமா ஆகிய எட்டுப் பேரும் ஓடிவந்தார்கள்.

## அர்ச்சுனனைப் பார்த்து வா

பாண்டவ தரப்புச் சேனையைத் துரோணர் நிலை கலங்கச் செய்துகொண்டிருப்பதைக் கவனித்த யுதிஷ்டிரர், "இனி என்ன என்ன நேருமோ?" என்று பயந்தார். பார்த்தனையோ கண்ணனையோ, சாத்யகியையோ அவர் காணவில்லை. அதனால் மனம் கலங்கி அவர் தவித்தார். "பார்த்தனைப் பார்க்கும் பொருட்டு, சாத்யகியை அனுப்பினேன். அர்ச்சுனனுடைய நிலையைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஒரு கவலை மட்டும்தான் அப்போது எனக்கு இருந்தது. சாத்யகியையும் தேடித்தெரிந்துகொள்ள வேண்டிய நிலை இப்போது ஏற்பட்டு இருப்பதால், எனது கவலை இரட்டித்துவிட்டது. சாத்யகியைத் தேடாமல், அர்ச்சுனனைத் தேட முயன்றால் அதனால் உலகம் என்னைப் பழிக்கும். ஆகவே சாத்யகியைக் காணும் பொருட்டு, பீமசேனனை அனுப்பலாம். அர்ச்சுனனை நேசிப்பதைப் போலவே, சாத்யகியையும் நான் நேசிக்கிறேன். எனது மனத்திலுள்ள கவலையை அகற்றிக்

கொல்ல, பீமசேனனை அனுப்பினால்தான் முடியும். எத்தகைய ஆபத்தும் அவனை ஒன்றும் செய்ய முடியாது" என்று யுதிரட்டிரர் தனக்குத் தானே சிந்தித்தார்.

பிறகு தன் தேர்ப்பாகனிடம் "பீமன் இருக்கும் இடத்துக்குச் செல்" என்று சொன்னார்.

அதன்படி தேர்ப்பாகன் தேரை பூட்டிக்கொண்டு பீமனிடம் போய்ச் சேர்ந்தான்.

யுதிரட்டிரர் மனம் குழம்பிப் போய் இருந்தார். அவர் பீமனை நோக்கி, "தனியாக நின்று தேவர், அசுரர், கந்தர்வர் முதலியவர்களை வென்ற உன் தம்பி, அர்ச்சுனனுடைய கொடி தென்படவில்லை" என்று சொன்னார்.

அதற்குப் பீமன், "அரசே! மனக்கலக்கத்துடன் நீர் பேசியதை இதுவரை நான் கேட்டது இல்லை. உமக்கு இப்பொழுது நான் செய்ய வேண்டியதைக் கட்டளையிடும். கவலைப்பட வேண்டாம்" என்று சொன்னான்.

தருமருடைய கண்களில் நீர் மல்கியது; முகம் வாட்டமுற்று இருந்தது. அவர் பெருமூச்சுவிட்டுப் பொருமினார். "பீமா! கண்ணனுடைய பாஞ்சசன்யம் மட்டும் கேட்கிறது. அர்ச்சுனன் வதையுண்டு பூமியில் கிடப்பதால், கண்ணன் மட்டும் போர் செய்கிறார் என்பது இதன் பொருள். ஜயத்ரதனை வதம் செய்யச் சென்ற அர்ச்சுனன் திரும்பக் காணோம். அவனைத் தேடும் பொருட்டு, சாத்யகியை அனுப்பினேன். அவனும் இன்னும் திரும்பக் காணோம். நான் கவலைப்படக் காரணம் இதுதான். அவர்கள் இருவரும் உயிருடன் இருப்பதை அறிந்து வா. அவர்கள் இருப்பதைக் கண்டதும், அதைச் சிம்மநாதம் மூலம் எனக்குத் தெரிவி" என்று சொன்னார்.

"அர்ச்சுனனுக்கும் கிருஷ்ணனுக்கும் எந்த ஆபத்தும் நேராது. நீர் கவலைப்பட வேண்டாம். இதோ புறப்பட்டுச் சென்று, அவர்கள் இருப்பதை அறிந்து, உமக்கு நான் தெரிவிக்கிறேன்" என்று சொன்னான் பீமன்.

பிறகு அவன் திட்டத்துய்மனை நோக்கி, "வீரனே! அரசர் சாத்யகியையும் அர்ச்சுனனையும் தேடிச் செல்லும்படி எனக்குக் கட்டளை இட்டிருக்கிறார். நீ அரசரைக் காப்பாற்று. யுதிட்டிரரைப் பிடிக்கும் எண்ணத்தில் துரோணர் இருப்பதால் கவனிப்புடனிருந்து அரசரைக் காப்பாற்ற வேண்டும். யாவற்றிலும் இதுதான் முக்கிய காரியம்" என்று சொன்

"பரத குலத்தில் உதித்தவனே! நீ விரும்பியபடியே செய்கிறேன். திட்டத்துய்மனன் உடலில் உயிர் இருக்கும் வரை துரோணர் யுதிட்டிரரை ஒன்றும் செய்ய முடியாது" என்று பதில் சொன்னான் திட்டத்துய்மனன்.

அதன்பேரில் திட்டத்துய்மனன் பொறுப்பில் யுதிட்டிரரை ஒப்படைத்துவிட்டு, அவரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, அர்ச்சுனனைத் தேடிப் புறப்பட்டான் பீமன். மஞ்சள், சிவப்பு, வெள்ளை, கறுப்பு ஆகிய நிறத்தில் ஆடை அணிந்து தேரில் ஏறி, பீமசேனன் அலங்காரமாகப் புறப்பட்டான்.

சீக்கிரமாகச் சென்று அர்ச்சுனனையும் சாத்யகியையும் காணும்படி யுதிட்டிரர் பீமசேனனை அவசரப்படுத்தினார்.

பாஞ்சாலர்களும் சோமகர்களும் தன்னைப் பின் தொடர்ந்து வர, பீமசேனன் புறப்பட்டான்; விசோகன் என்பவன் தேரை நடத்திச் சென்றான்.

துச்சாதனன், விகர்ணன் முதலிய கௌரவர்கள் பீமசேனனை எதிர்த்தார்கள்; இவர்களில் பலரைப் பீமசேனன் எளிதில் கொன்றான்; திருதராட்டிரன் புதல்வர்கள் பதினொரு பெயர்களை யமன் உலகு அனுப்பினான். தாக்குப்பிடிக்க முடியாது திருதராட்டிரனின் மற்ற புதல்வர்கள் ஓட்டம் பிடித்தார்கள்.

பீமசேனன் துரோணரை நாடிச் சென்றான். பீமசேனனையும் அவனுடன் வருகிற வீரர்களையும் துரோணர் தடுத்தார். அர்ச்சுனன் தன்னை மரியாதை செய்ததுபோல, பீமனும் தன்னை மதிப்பான் என்று கருதிய துரோணர், "பீமசேனா! என் அனுமதி பெற்றுத்தான் அர்ச்சுனன் படைக்குள் புகுந்தான்" என்று கூறினார்.

துரோணர் சொன்னதைக் கேட்டுப் பீமன் கோபம் கொண்டான்; கண்கள் சிவந்துவிட்டன. பெருமூச்சுவிட்டபடியே துரோணரை நோக்கி, "உமது அனுமதிபெற்று, அர்ச்சுனன் போரில் இறக்கவில்லை. யாராலும் அர்ச்சுனனை வெல்ல முடியாது. அர்ச்சுனன் உம்மை மதிப்பான்; நான் உம்மை என் பகைவனாக கருதுகிறேன். முன்பு எங்களுக்கு நீர் குருவாக இருந்தீர்; தந்தைபோலவும் உறவினர்போலவும் எங்களை நடத்தினீர். அதனால் வணங்கி உமக்கு நாங்கள் மரியாதை செய்தோம். அப்போது நீர் எங்களுடைய பகைவர். இதோ என் கைவன்மையைப் பாரும்" என்று

சொல்லி, கதாயுதத்தைச் சுழற்றி, துரோணர் மீது எறிந்தான்; அதனால் துரோணருடைய தேர் பொடிப் பொடியாக நொறுங்கிவிட்டது; துரோணர் வேறு ஒரு தேரில் ஏறிக் கொண்டார்.

துரோணருக்கும் பீமசேனனுக்கும் இடையில் கடும் போர் நடந்தது; மழைத் தாரைகளைக் காளை ஏற்றுக்கொள்வதைப்போல, துரோணர் எய்த அம்புகளைப் பீமசேனன் களிப்புடன் ஏற்றுக்கொண்டான். துரோணருடைய தேரின் ஏர்க்காலைப் பிடித்துத் தூக்கி எறிந்து எறிந்து, எட்டுத் தேர்களைப் பீமன் பொடிப் பொடியாக்கிவிட்டான். இந்த அரிய செயலைக் கௌரவர்கள் ஆச்சரியமுற்று கண் இமையாமல் பார்த்தார்கள்.

பற்பல படைப் பகுதிகளை எல்லாம் கடந்து பீமசேனன் சென்றான்; பெருங் காற்றானது மரங்களை ஒடிப்பதுபோலவும், பெரிய ஆறானது வேரோடு மரங்களைத் தள்ளுவதுபோலவும், தள்ளிக்கொண்டு பீமன் சென்றான். சென்றவன் போர் செய்துகொண்டிருக்கிற சாத்யகியையும் அர்ச்சுனனையும் கண்டான். கண்டதும் பெரும் சப்தம் போட்டு, அர்ச்சுனனைக் கூவி அழைத்தான்.

பீமன் செய்யும் முழக்கத்தைக் கேட்டு, அர்ச்சுனனும் கண்ணனும் பதிலுக்கு முழக்கம் செய்தார்கள். பீமசேனன் அர்ச்சுனன் இவர்களின் சப்தம் காதில் விழுந்ததும் யுதிஷ்டிரர் களிப்புற்றார்; அர்ச்சுனன் போரில் வெற்றி பெறட்டும் என்று ஆசி கூறினார்.

"அர்ச்சுனனும் சாத்யகியும் உயிருடன் இருப்பது நாம் செய்த பாக்கியம். புதல்வனை இழந்த துயரத்தினால் நலிவுற்று இருக்கும் பார்த்தன், தான் எடுத்துக்கொண்ட சபதப்படி, சூரிய அஸ்தமனத்துக்குள் ஜயத்ரதனை வதம் செய்வானா? தனது சபதத்தை நிறைவேற்றித் திரும்பும் அர்ச்சுனனைக் காணும் பேறு எனக்குக் கிடைக்குமா? பீஷ்மர் ஒருவர் ஒழிந்ததுடன் நம்மிடையே நிலவும் பகை ஒழியுமா? துரியோதனன் மற்றவர்களை மதித்து, நம்முடன் சமாதானம் செய்து கொள்ள இசைவானா?" இவ்வாறு யுதிஷ்டிரர் சிந்தித்தார்.

இது சமயம் பயங்கரமான போர் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது.

# கர்ணனும் பீமனும்

பலசாலியான பீமன் செய்யும் அட்டகாசத்தைச் சகியாது கோபம்கொண்டு, கர்ணன் அவனை எதிர்த்தான். இருவரும் அம்புகளை ஏவிக் கடுமையாகப் போர் செய்வதைக் கண்டு, அனைவரும் நடுங்கினர். கர்ணன் மார்பிலிருந்து குருதி கொட்டியது. கர்ணனுடைய சாரதியையும் நான்கு குதிரைகளையும் பீமன் வதம் செய்துவிட்டான்.

உடனே கர்ணன் விருஷசேனனுடைய தேரில் ஏறிக் கொண்டான்.

கர்ணனைப் பீமன் வென்றுவிட்டதாகப் படையில் பெருத்த ஆரவாரம் உண்டாயிற்று? அர்ச்சுனன் காண்டீவத்தை நாண் ஒலி செய்தான்; பார்த்தசாரதி பாஞ்சசன்யத்தை ஊதினார். பீமனுடைய கர்ஜனையானது இவை இரண்டையும் மிஞ்சி ஒலித்தது.

ரதம் இழந்து நிற்பதைக் கண்ட துரியோதனன் தன் தம்பி துச்சலனை நோக்கி, "கர்ணன் தேரிழந்து நிற்பதால் உன் தேரை அவனுக்குக் கொடு" என்று சொன்னான்.

உடனே துச்சலன் தேரை ஓட்டிக்கொண்டு, கர்ணனிடம் போனான்; கர்ணன் அந்தத் தேரில் ஏறிக்கொண்டான்.

போர் நடந்தது. துச்சலன் தலையைப் பீமசேனன் துண்டித்துவிட்டான்.

சேனை நிலைகலங்கித் தவித்தது; அர்ச்சுனன், சாத்யகி பீமன் ஆகிய மூவரும் ஜயத்ரதனை நாடிச் சென்றார்கள்.

இந்த நடப்பை எல்லாம் கவனித்த துரியோதனன், விரைவாகச் செல்லும் தேர் ஒன்றில் ஏறிக்கொண்டு, துரோணரிடம் சென்றான். "பிராமண உத்தமரே! பகைவரை அழிப்பவரே! அர்ச்சுனன், பீமன், சாத்யகி மூவரும் சேனைகளைக் கடந்து, ஜயத்ரதனை அணுகிவிட்டார்கள். இப்பொழுது அங்கே போர்புரிந்துகொண்டிருக்கிறார்கள். அர்ச்சுனன் உம்மை மீறிச் செல்ல முடியும் என்று வைத்துக்கொண்டாலும், பீமனும் சாத்யகியும் உம்மை எவ்வாறு மீறிச் சென்றார்கள்? நீர் இவர்களிடம் தோல்வியடைந்தது ஆச்சரியத்திலும் ஆச்சரியம். நீர் அடைந்துள்ள தோல்வி நம்பத்தக்கதாய் இல்லை. எனக்கு அழிவு நிச்சயம் என்பதும் சந்தேகம் இல்லை" என்று பரபரப்புடன் சொன்னான்.

அதற்குத் துரோணர் "நடந்ததைப் பற்றி இனிப் பேசுவதில் பயனில்லை; இனி நடக்க வேண்டியதைப்பற்றி யோசனை செய்" என்று சொன்னார்.

"அந்தணரே! ஜயத்ரதனைக் காப்பதற்கு வேண்டிய காரியங்களை நாம் விரைவில் செய்ய வேண்டும்" என்று துரியோதனன் சொன்னான்.

"வீரம்செறிந்த அரசனே! பல விஷயங்களை நாம் யோசிக்க வேண்டும். நம் படைக்கு முன்னேயும் பின்னேயும் பாண்டவ வீரர்கள் இருப்பதால், பெருத்த அபாயம் நேர்ந்திருக்கிறது என்பது உறுதி. ஆயினும் அர்ச்சுனனும் கிருஷ்ணனும் இருக்கும் இடத்தில்தான் அபாயம் அதிகம். சகுனி ஆடிய மாயச் சூதுதான் இந்தப் போருக்குக் காரணம். அவன் ஆடிய பாய்ச்சிகைகளே இப்பொழுது அம்புகளாக மாறியிருக்கின்றன; சிந்து நாட்டு அரசன் உயிர் ஊசலாடும் நிலையில் இருக்கிறது. அதைக் காப்பது நம் கடன். நான் இங்கே இருக்கிறேன். ஜயத்ரதன் இருக்கும் இடத்துக்கு விரைந்து சென்று அவனை நீ காப்பாற்று. அதுவே இப்பொழுது செய்யத்தக்கது" என்று சொன்னார்.

துரோணரின் கட்டளைப்படி, துரியோதனன் புறப்பட்டான். பாஞ்சால அரச குமாரர்கள் இருவர் அவனை எதிர்த்தார்கள். துரியோதனனுடைய தேர்ப்பாகனையும் குதிரைகளையும் அவர்கள் கொன்றார்கள். உடனே துரியோதனன் சல்லியனுடைய தேரில் ஏறிக்கொண்டான்.

பீமன் அர்ச்சுனனையும் கிருஷ்ணனையும் நாடிச் செல்வதைக் கர்ணன் கேலி செய்தான். "பீம! அர்ச்சுனனைக் காணப் போவதாகச் சொல்லி ஏன் புறமுதுகு காட்டி ஓடுகிறாய்? இது உன் தகுதிக்கும் பெருமைக்கும் அடுக்குமா?" என்று குத்தலாகச் சொன்னான்.

இதைப் பொறுக்காது, பீமன் கர்ணனை எதிர்த்தான்; கர்ணன் சிரித்துக்கொண்டே பீமனுடைய தாக்குதல்களை எல்லாம் சமாளித்தான். கடுமையான போருக்குப் பின்னர், தேரை இழந்து கர்ணன் நிற்கும்படி பீமன் செய்துவிட்டான். கர்ணன் நாணமுற்று வேறு தேரை நாடி ஓடினான்: தேரில் ஏறிக்கொண்டு திரும்பி வந்து, பீமனை எதிர்த்தான்.

மதம்கொண்ட இரு யானைகள் ஒன்றை ஒன்று தாக்குவதுபோல, இருவரும் நெடு நேரம் போர் செய்தார்கள். இரண்டாவது முறையாக, கர்ணனுடைய சாரதியையும் குதிரைகளையும் பீமன் கொன்றுவிட்டான்.

உடனே துரியோதனன் தன் தம்பி துர்ஜயனைக் கர்ண னுக்கு உதவிசெய்ய அனுப்பினன். அவனை ஒரு நொடியில் பீமசேனன் யமன் உலகுக்கு அனுப்பிவிட்டான். பாம்புபோல் பூமியில் கிடந்து புரள்கின்ற துர்ஜயனைப் பார்த்து, கர்ணன் கண்ணீர் உகுத்தான்.

இதன் பிறகு வேறு ஒரு தேரில் ஏறிக்கொண்டு, பீமனைக் கர்ணன் எதிர்த்தான். இது சமயமும் கர்ணன் தேரையும் குதிரைகளையும் சாரதியையும் பீமன் நாசம் செய்து விட்டான்.

விவரம் தெரிய வந்ததும், தன் தம்பி துர்முகனைக் கர்ண னுக்கு உதவியாகத் துரியோதனன் அனுப்பினன். அவனையும் பீமன் ஒரு நொடியில் வதம் செய்துவிட்டான்.

இதைக் கண்டதும் கர்ணன் கண்ணீர் உகுத்தான். சிறிது நேரம் போர் செய்யாமல் திகைத்து நின்றன். பீமனை எதிர்த்து நிற்க மாட்டாது போர்க்களத்தைவிட்டு ஓடினன்.

கர்ணன் தோல்வியுற்றதைக் கண்டதும் துர்மர்ஷணன், துஸ்ஸஹன், துர்மதன், துர்த்தரன், ஜயன் என்ற ஐவரும் பீமனை எதிர்த்தார்கள். இந்த ஐவரையும் வெகு விரைவில் பீமன் வதம் செய்துவிட்டான்.

இதன்பின்னர், துரியோதனன்தம்பியரில் எழுவர் சித்ரன், உப சித்ரன், சித்ராக்கன், சாரு சித்ரன், சராஸனன், சித்ராயு தன், சித்ரவர்மா முதலியோர் பீமசேனனை எதிர்த்தார்கள். அவர்களைப் பீமன் விரைவில் கொன்றன். பேய்க் காற்றில் விழும் மரங்கள்போல, அவர்கள் கீழே விழுந்தார்கள்.

இதைக் கண்டதும் கர்ணன் கண்ணீர் உகுத்தான். விதுரர் முன்பு கூறின அறிவுரைகள் அவன் நினைவுக்கு வந்தன. ஆயினும் கர்ணன் போர் செய்வதை நிறுத்தவில்லை. பீமனை அவன் விரைவில் எதிர்த்தான்.

கர்ணனுக்கு உதவ மற்றும் எழுவர்-துரியோதனன் தம்பியர் விரைந்தனர். சத்துருஞ்சயன், சத்ருஹஸன், சித்ரகன், சித்ராயுதன், திர்டன், சித்ரசேனன், விகர்ணன் ஆகிய எழுவரும் பீமனை எதிர்த்துச் சென்று, அம்பால் அடி பட்டு உயிர் துறந்தார்கள். விகர்ணன் தன் அம்புக்கு இரை யானதைக் கண்டு, பீமன் அதிகம் வருந்தினன்

"விகர்ணு! என் சபதம் நிறைவேறிவிட்டது. அரசகுல தர்மப்படி போர்செய்ய வந்து, போர்க்களத்தில் நீ மாண் டாய். எங்கள் நன்மையில், குறிப்பாக, எங்கள் அரசர் யுதிட்

டிரரின் நன்மையில் நாட்டம் அதிகமுள்ள நீ, போரில் என்னால் கொல்லப்பட்டாய்! போர் கொடிது என்பதற்கு வேறு என்ன சான்று வேண்டும்? பிருகஸ்பதிக்குச் சமமானவரும் சிறந்த அறிஞருமான பீஷ்மரும் போரில் உயிர்துறக்க நேர்ந்துவிட்டது. போர் கொடிது என்பதில் ஐயமே இல்லை" என்று சொல்லி வருந்தினான்.

பிறகு தான் வெற்றி பெற்றதற்கு அறிகுறியாக, பீம சேனன் சிங்கநாதம் செய்தான்; அதைக் கேட்டு யுதிட்டிரர் அகமகிழ்ந்தார். துரோணரை எதிர்ப்பதற்கு அவர் விரைந் தார்.

இந்தப் போரில் துரியோதனன் தம்பியர் முப்பத்து ஒரு வர் வதம் செய்யப்பட்டனர்; இதை அறிந்து துரியோதனன் வருந்தினான்; விகர்ணனும் சித்ரசேனனும் நல்லவர்கள்; அவர் களும் இந்தப் போரில் கொலையுண்டார்கள்.

கர்ணனுக்கும் பீமனுக்கும் இடையில் கடுமையாகப் போர் நடந்தது. இருவரும் திறமையாகப் போர்புரிவதைக் கண்டு, தேவர்கள், ரிஷிகள், சித்தர்கள், கந்தர்வர்கள் ஆகி யோர் "நல்லது, நல்லது" என்று சொல்லி இருவரையும் பாராட்டினார்கள்; வித்யாதரர்கள் பூமாரி பொழிந்தார்கள்.

கர்ணன் அம்பு எய்து பீமனுடைய குதிரைகளைக் கொன் றான்; சாரதியை அடித்தான்; சாரதி பயந்து ஓடி, யுதாமன்யு வின் தேரில் ஏறிக்கொண்டான். பீமனுடைய நாண், வில், அம்புறாத் தூணி ஆகியவற்றையும் கர்ணன் பொடிப் பொடி யாக்கிவிட்டான்.

தேரையும் வில்லையும் இழந்த பீமன் போர்க்களத்தை விட்டு அகலாமல் போர்செய்யும் எண்ணத்துடன் உறுதியாக நின்றான். தன்னைக் காப்பதற்காக, அடிபட்ட யானை ஒன்றைத் தூக்கிக்கொண்டு நின்றான்; போர்க்களத்தில் கிடக்கும் பொருள்களை எல்லாம் எடுத்துக் கர்ணன்மீது அடித்தான். அவற்றை எல்லாம் அம்புகளால் கர்ணன்மீது அடித்தான். கர்ணனைக் கொல்வதற்கு வல்லமையுடையவனாய் இருந்தும், அர்ச்சுனன் செய்துள்ள சபதத்தை நினைத்து, கர்ணனைப் பீமன் கொல்லாமல் விட்டுவிட்டான்.

ஆயுதம் இழந்து நிற்கும் பீமனை, கர்ணன் தன் வில்லினால் குத்தினான்; அந்த வில்லைப் பிடுங்கி, கர்ணன் தலையில் அடித்தான் பீமன். இதனால் கர்ணன் கடுங்கோபம் கொண் டான். "அட மடையா! பெருந்தீனி தின்பவனே! உனக்கு அஸ்திரப் பயிற்சி தெரியாது. போர்க்களத்தில் புகுந்து போர்

செய்ய உனக்கு அருகதை கிடையாது. ஆகாரம் நிறையக் கிடைக்கும் இடத்தில் இருக்க வேண்டியவன் நீ; கனிகள், மலர்கள், கிழங்குகள் இவற்றை உண்டு, துறவிபோல் காட்டில் வாழவேண்டியவன் நீ; ஆகவே, போர்க்களத்தை விட்டு, காட்டுக்குப் புறப்பட்டுப் போ. சமையல்காரர்களையும் சிப்பந்திகளையும் அடிமைகளையும் அடிப்பதற்குத்தான் உனக்கு அருகதை உண்டு; போர்க்களத்தில் போர்செய்ய உனக்கு அருகதை போதாது'' என்று குத்தலாகப் பல முறை சொல்லி, பீமனைக் கர்ணன் பழித்தான்.

கர்ணன் இவ்வாறு பழித்ததும், ''தீயவனே! உன்னை நான் பல முறை இன்று நடந்த போரில் வென்றேன். வீணாக ஏன் தற்புகழ்ச்சி செய்துகொள்ளுகிறாய்? இந்திரன் முதலிய தேவர்களும் வெற்றி தோல்விக்கு உரியவராகளதான் என்னுடன் மற்போர் செய். கீசகனை ஒழித்தது போல, உன்னையும் நான் ஒழித்துவிடுகிறேன்'' என்று பலரும் கேட்க, பீமன் பதில் சொன்னான்.

பிறகு அர்ச்சுனனும் கண்ணனும் இருக்கும் இடத்துக்குப் பீமன் போய்விட்டான். தேரிழந்து வரும் பீமனைப் பார்த்த கண்ணன், அர்ச்சுனனிடம், ''அர்ச்சுனா! பீமனைக் கர்ணன் துன்புறுத்தியிருப்பதைப் பார்'' என்று சொன்னார்.

உடனே அர்ச்சுனன் கோபங்கொண்டு, கர்ணன்மீது பாணத்தைத் தொடுத்தான்; பீமனைத் தாக்காதபடி கர்ணனைத் தடுத்தான்.

பீமன் சாத்யகியினுடைய தேரில் ஏறிக்கொண்டான்.

## பூரிசிரவஸ்

கௌரவர் படையைக் கலக்கி நிலைகுலையச் செய்து கொண்டு, அர்ச்சுனன் இருக்கும் இடத்துக்குச் சாத்யகி சென்றான். இதை வாசுதேவர் கவனித்துவிட்டார். அவர் அர்ச்சுனனிடம், ''வீரனே! உன் சீடனும் நண்பனுமான சாத்யகி, இதோ உன்னை நாடி வருகிறான். கௌரவப் படையினருக்குப் பயங்கரமான துன்பங்களைச் செய்துவிட்டு முன்னேறி வருகிறான். யுதிட்டிரர் நம்மைப் பார்த்து வரும்படி சாத்யகியை அனுப்பி இருக்கிறார்'' என்று சொன்னார்.

''புயவலி மிக்கவரே! சாத்யகி என்னிடம் வருவதை நான் விரும்பவில்லை; யுதிட்டிரருக்குப் பாதுகாப்பாக அவனை நான்

பத்துவிட்டு வந்தேன். இப்பொழுது யுதிட்டிரர் என்ன நிலையில் இருக்கிறாரோ? அரசரைக் காப்பாற்ற வேண்டிய அவன், அவரை விட்டுவிட்டு, எதற்காக என்னை நாடி வருகிறான்? ஜயத்ரதனை இன்னும் வதம்செய்து முடிக்கவில்லை. சூரியனும் சாய்ந்துகொண்டு இருக்கிறான். தருமராஜர் இவனை இங்கே அனுப்பியதால் தவறு செய்துவிட்டார்'' என்று கூறினான் அர்ச்சுனன்.

அர்ச்சுனனை நாடிச்செல்கின்ற சாத்யகியைப் பூரிசிரவஸ் எதிர்த்தான். அவன் சாத்யகியை நோக்கி, "எனது பாக்கியத்தினால் இன்று உன்னை எதிர்க்கும் பேறு கிடைத்தது. உன்னை வதம்செய்து துரியோதனனுக்கு ஆனந்தத்தை நான் உண்டு பண்ணப் போகிறேன். என் பாணத்தால் நீ மடிவதை அர்ச்சுனனும் கிருஷ்ணனும் இன்று பார்க்கப் போகிறார்கள். உன்னை இங்கே அனுப்பின யுதிட்டிரன் நீ வதமான செய்தி கேட்டு நாணம் அடையப் போகிறான்'' என்று சொன்னான்.

பூரிசிரவஸ் சொன்னதைக் கேட்டு, சாத்யகி சிரித்தான். "கௌரவனே! வீணாகப் பிதற்றாதே. உனது திறமையைப் போரில் காட்டு. உன்னுடன் போர்செய்ய எனக்கு விருப்பம் தான்'' என்று சொன்னான்.

சோமதத்தன் குமாரன் பூரிசிரவஸும் சாத்யகியும் அம்பு மாரிகளைப் பொழிந்து, ஒருவரை யொருவர் தாக்கிக்கொண்டார்கள், நெடுநேரச் சண்டைக்குப் பிறகு, ஆயுதம் இழந்து சாத்யகி நிற்பதைக் கண்ணன் கவனித்துவிட்டார். அவர் அர்ச்சுனனிடம் "சாத்யகி போர்செய்து களைத்துப்போய் ஆயுதம் இழந்து நிற்கிறான். இவனைக் கொடைவீரன் பூரிசிரவஸ் கடுமையாக எதிர்ப்பதைப் பார்'' என்று சொன்னார்.

இப்படிக் கண்ணன் சொன்ன சமயம் பூரிசிரவஸ் சாத்யகியைத் தூக்கிப் பூமியில் போட்டான். இதைக் கண்டு படை வீரர்கள் பெருத்த ஆரவாரம் செய்தார்கள். உடனே கண்ணன் அர்ச்சுனனிடம், "வீரனே! களைப்படைந்திருக்கும் சாத்யகியை நாம் விரைந்து காப்பாற்ற வேண்டும்'' என்று சொன்னார்.

யானையைச் சிங்கம் இழுப்பதுபோல, சாத்யகியைப் பூரிசிரவஸ் போர்க்களத்தில் இழுத்தான். அர்ச்சுனன் கண்ணனிடம், "விருஷ்ணிகுல வீரனோடு குரு வீரன் விளையாடுவதைப் பாரும். சாத்யகியை நான் பூரிசிரவஸிடமிருந்து விடுவிக்கிறேன். ஆயினும் பூரிசிரவஸைக் கொல்ல எனக்கு மனம் வரவில்லை; அவன் என்னை எதிர்க்கவில்லை. இருந்தும்

சாத்யகியைக் காப்பது கடன். என் உயிரை ஈந்தாவது அவனை நான் காப்பேன்" என்று சொன்னான்.

சாத்யகியை இழுத்துக்கொண்டே யிருந்த பூரிசிரவஸ், வாளைக் கையில் எடுத்துக்கொண்டு, சாத்யகியின் குடுமியைப் பிடித்துத் தூக்கி அவன் மார்பில் உதைத்தான். இதைக் கண்டதும் பாண்டவ தரப்பு வீரர்கள் பதைபதைத்தார்கள்.

உடனே அர்சுனன் ஓர் அம்பை ஏவினான். அது, வாள் பிடித்திருந்த பூரிசிரவஸின் வலக்கையை அறுத்துப் பூமியில் தள்ளிற்று; தோள்வளைகள் அணிந்த, தான தருமங்கள் பல செய்து புகழ்பெற்ற, அந்தக் கை அறுந்து கீழே விழுந்தது.

தனது கை இவ்வாறு பயனற்றதாகச் செய்யப்பட்டதைக் கண்டு, சாத்யகியைப் பூரிசிரவரஸ் விட்டுவிட்டான்; கோப மடைந்து குந்தியின் புதல்வன் அர்ச்சுனனை அவன் நிந்திக்கத் தொடங்கினான்; சிறகு இழந்த ஒரு பறவையைப்போலவும் ஒரு சக்கரமுள்ள தேர்போலவும் நின்றுகொண்டு, பார்த்தனை அவன் நிந்தித்தான்.

"அந்தோ! குந்தி மைந்தா! கொடுமையான ஒரு காரியத்தை நீ செய்துவிட்டாய். உன்னைப் பாராமலும் மற்றொருவனுடன் போர்புரிந்து கொண்டும் இருக்கிற என் கையை நீ துண்டித்தது முறையன்று; அரசகுல தருமத்துக்குப் புறம்பான செயல் இது. தருமபுத்திரனிடம் எனது கையைத் துண்டித்ததை ஒரு பெருமையாக எடுத்துக் கூறும் துணிவு உண்டாகுமா? இந்த மாதிரி அம்பு எய்யலாம் என்று உனக்கு யார் கற்றுக் கொடுத்தார்கள்? கிருபரா? துரோணரா? இந்திரனா? ருத்திரரா? அஸ்திர முறைகளை அறிந்தவன் முறை பிசகி இப்படி அம்பு எய்யான் மயங்கினவன், பயந்தவன், தேர் இழந்தவன், கவலையுடன் இருப்பவன், கெஞ்சுபவன் இவர்களைக் கற்றறிந்தோர் பாணத்தால் அடிக்கமாட்டார்கள். இழிந்தோர் தீயோர் செய்யும் காரியத்தை நீயும் துணிந்து செய்து விட்டாய்; நல்லோர்கள் இத்தகைய பாப காரியத்தை ஒரு போதும் செய்யமாட்டார்கள். உத்தமனாக இருக்க விரும்புபவன் சிறந்த காரியங்களையே செய்ய வேண்டும்; இழிந்த காரியத்தை ஒரு போதும் செய்யலாகாது. குரு வம்சத்தில் பிறந்த நீ முறை பிசகி நடப்பது முறையா? வாசுதேவனின் தூண்டுதல்பேரில்தான் இந்த இழிந்த காரியத்தை நீ துணிந்து செய்து இருக்கிறாய். நீ இப்பொழுது புரிந்த செய்கை உன் இயல்புக்கு முற்றும் மாறானது. விருஷ்ணிகளும் அந்தகர்களும் இழிந்த செயல்கள் புரிவதில் விருப்ப

முன்னவர்கள்; அவர்கள் வழியை நீ ஏன் மேற்கொண்டாய்?" என்று கடிந்து உரைத்தான்.

பூரிசிரவஸ் தன்னை இவ்வாறு நிந்திப்பதைச் செவி மடுத்த அர்ச்சுனன், "பூரிசிரவஸ்! உடம்பில் மனிதனுக்கு ஊனம் ஏற்பட்டுவிட்டால் அதன் பயனாய் மனிதனுக்கு மூளையும் ஊனப்பட்டுவிடுகிறது. பயனற்ற வார்த்தைகளை நீ சொல்லுகிறாய். யாவற்றையும் அறிந்த நீ வேண்டும் என்றே என்னையும் கேசவரையும் நிந்திக்கிறாய். நான் அதருமம் செய்யவில்லை. எங்களுக்காக உயிரையும்விடத் துணிந்த என் சீடன் சாத்யகியை நான் காப்பது பிசகா? தன்னைப் பாது காப்பதைக் காட்டிலும் தன்னைப் பாதுகாப்பவனை ஒருவன் முதலில் பாதுகாப்பது கடமை. கண்ணனுடன் சேர்ந்திருப் பதற்காக என்னை நீ பழிக்கிறாய். அவருடைய சேர்க்கையை எவன் விரும்பமாட்டான்? என்னோடு போர் புரிந்து இருந்த சாத் யகியை நீ வென்றாய்? நீதான் தருமம் தவறி நடந்து இருக் கிறாய். அதனால் உன்னையே நீ நிந்தித்துக்கொள். என் சீடன் சாத்யகியைக் கத்தியால் துண்டிக்க முயன்ற உன் கையை நான் துண்டித்தேன். இது நிந்தனைக்கு உரிய செயல் அன்று. ஆயுதத்தை இழந்த, சோர்வுற்று இருந்த, அபிமன்யுவை வதம் செய்தது தருமத்தின்பாற்பட்ட செயலா?" என்று கேட்டான்.

அர்ச்சுனன் இப்படிச் சொன்னதும், தருமங்கள் பல செய்த பூரிசிரவஸ், புகழுள்ள பூரிசிரவஸ், சாத்யகியை விட்டுவிட்டான். இடக் கையினாலே அம்புகளைப் பரப்பி யோகம் செய்யலானான்; மனத்தைப் பிரம்மத்தினிடம் செலுத்தினான்.

கௌரவர்கள் இதற்காக அர்ச்சுனனையும் கிருஷ்ணனை யும் பலவாறு நிந்தித்தார்கள்; பூரிசிரவஸைப் புகழ்ந் தார்கள். அர்ச்சுனனும் கிருஷ்ணனும் இந்த நிந்தனைகளுக் குப் பதில் சொல்லவில்லை; பூரிசிரவஸும் மகிழ்ச்சி அடைய வில்லை; ஆயினும் அர்ச்சுனன் பூரிசிரவஸை நோக்கி, "என்னைத் தாங்கள் நிந்திக்கலாகாது. அறத்தை அறியாமல் பிறரை நிந்திப்பது நியாயமன்று. அபிமன்யுவைப் பிறர் அநியாயமாகக் கொன்றார்களே. அதை நீங்கள் ஏன் நிந்திக்க வில்லை. அற்பனான துரியோதனனுக்கு உடந்தையாக இருந்து தாங்கள் உதவுவது நியாயமாகுமா? என்னை அண்டினவர்களைக் காப்பது என் கடமை" என்று சொன்னான் அர்ச்சுனன்.

இப்படிச் சொல்லியும் அர்ச்சுனன் மனது சிந்தனையில்

ஆழ்ந்தது. அவன் பூரிசிரவஸை நோக்கி, "குருகுல விளக்கே! நீர் சிறந்தவர்; அடுத்தவர்களுக்கு அபயம் கொடுப்பவர்; அத்தகைய நீரே போரில் துன்புற்றதால் அரச குல தருமந்தான் நிந்தனைக்கு உரியது" என்று சொல்லி வருந்தினான்.

பார்த்தன் இப்படிச் சொன்னதும் புகழ்பெற்ற பூரிசிரவஸ், பூமியைத் தன் தலையால் தொட்டான்; பிறகு தனது இடக்கையால் வலக்கையை எடுத்து, அர்ச்சுனன் எதிரில் போட்டான். பதில் ஒன்றும் சொல்லாமல் மௌனமாக இருந்தான்.

அர்ச்சுனன் மீண்டும் பூரிசிரவஸை நோக்கி, "சலனுக்கு மூத்தவரே! யுதிட்டிரர், பீமன் நகுலன், சகதேவன் ஆகியோரிடம் எனக்கு எவ்வளவு அன்பு உண்டோ அவ்வளவு உம்மிடத்திலும் எனக்கு உண்டு. பல தருமங்களைச் செய்த, சிபி அடைந்த நல்லுலகங்கள் உமக்குக் கிட்டுக" என்று வாழ்த்தினான்.

பிறகு வாசுதேவர் அவனை நோக்கி, "தேவர்களைப் பூசித்த செம்மலே! கருடன் மீது ஏறி, எனது உலகங்களை அடையும் பேறு பெறுக" என்று வாழ்த்தினார்.

பூரிசிரவஸ் விட்டதும், சாத்யகி சிறிதுநேரம் களைப்பாறினான். துதிக்கை அறுபட்டு யானைபோல் கிடக்கும் பூரிசிரவஸை அணுகினான். கத்தியை எடுத்துக்கொண்டு சென்ற சாத்யகியை அர்ச்சுனன், கண்ணன், பீமன் முதலிய பலரும் தடுத்தார்கள். சாத்யகி அதைப் பொருட்படுத்தாது சென்று, பூரிசிரவஸின் தலையை வாளால் அறுத்தான்.

இதற்காகச் சிலர் சாத்யகியைப் பழித்தார்கள்; சிலர் பாராட்டினார்கள். சிலர் வெறுத்தார்கள்; சிலர் வருந்தினார்கள்.

இவற்றுக்குச் சாத்யகி பதில் சொல்ல முன்வந்தான். "புத்திக் கட்டையானவர்களே! தருமமாகிய அங்கியை அணிந்துகொண்டு, தருமம் பேசுவதால் யாது பயன்? அபிமன்யுவை நீங்கள் வதம் செய்தபொழுது நீங்கள் பிதற்றும் தருமம் எங்கே போயிற்று? என்னைக் காலால் உதைத்து, போர்க்களத்தில் அவமதித்தவன், மகரிஷியாய் இருப்பினும் கொல்லப்படத்தக்கவனே! தருமம் தவறி நான் நடக்கவில்லை. என்னை நீங்கள் நிந்திப்பது அற்பமானது" என்று சாத்யகி பதில் சொன்னான்.

சாத்யகி சொன்னதைக் கௌரவர்கள் மனத்திலுள்ளே பாராட்டினார்கள். பூமியில் தனது புகழ் நிலைநிற்கும்படி செய்துவிட்டு, பூரிசிரவஸ், விண்ணுலகு சென்றான்.

# ஜயத்ரதன் வதம்

பூரிசிரவஸ் விண்ணுலகு எய்தியதும், புயவலி மிக்க அர்ச்சுனன் கண்ணனை நோக்கி, "அச்சுதரே! ஜயத்ரதன் இருக்கும் இடத்திற்குத் தேரை வேகமாகச் செலுத்தும். நான் எடுத்துக்கொண்டுள்ள சபதத்தை நிறைவேற்றியாக வேண்டும். பொழுது சாயப்போகிறது. கௌரவ வீரர்கள் பலர் சூழ்ந்துகொண்டு ஜயத்ரதனைப் பாதுகாக்கின்றனர். பொழுது சாய்வதற்குள் ஜயத்ரதனை நான் வதம் செய்ய வேண்டும். அதற்கு ஏற்பக் குதிரைகளை வேகமாக நடத்தும்" என்று சொன்னான்.

அதன்படி கண்ணன் தேரைச் செலுத்தினார். துரியோதனன், கர்ணன், விருஷசேனன், சல்லியன், அசுவத்தாமா, கிருபர் ஆகியோர் அர்ச்சுனனை எதிர்த்தார்கள்; ஜயத்ரதனும் எதிர்த்தான்.

அர்ச்சுனன் அவனைக் கோபத்துடன் பார்த்தான். கர்ணன், சாத்யகியை எதிர்த்தான். இதைக் கவனித்த அர்ச்சுனன், "தேவகி புதல்வரே! கர்ணன் சாத்யகியை எதிர்க்கப் போகிறான். பூரிசிரவஸ் வதத்தைப் பொறுக்காது கர்ணன் ஆத்திரத்துடன் செல்லுகிறான். நாம் தடுக்கா விட்டால், பூரிசிரவஸுக்கு நேர்ந்த கதிதான் சாத்யகிக்கும் நேரும்" என்று சொன்னான்.

அதற்குக் கிருஷ்ணன், "பார்த்தா! சாத்யகி ஒருவனே கர்ணனை வெல்வான்; இது சமயம் நீ கர்ணனுடன் போர் புரியக்கூடாது. இப்பொழுது அவன் இந்திரன் கொடுத்த சக்தியாயுதத்தை வைத்துக்கொண்டு இருக்கிறான். நம்மை வெல்லும் ஆற்றல் இப்போது கர்ணனுக்கு உண்டு. கவனக் குறைவும் கருணையும்தான் அவனிடம் காணப்படும் பெரும் குறைபாடு. தீயவனை கர்ணனுடைய முடிவு காலத்தை நான் அறிவேன். ஜயத்ரதனை வதம் செய்த பிறகு, கர்ணனோடு போர் புரியலாம்" என்று சொன்னார்.

தேரை இழந்து நின்ற சாத்யகிக்குக் கண்ணன் தனது

தேரைக் கொடுத்தார்; தாருகன் என்ற தேர்ப்பாகன் சாரத்தியம் செய்த அந்தத் தேரில், ஏறிக்கொண்டு, சாத்யகி கர்ணனை எதிர்த்தான். நெடு நேரம் போர் நடந்த பிறகு கர்ணனுடைய குதிரைகளையும் பாகனையும் கொன்று, அவனைத் தேரிழந்தவனாகச் செய்துவிட்டான் சாத்யகி.

இதனால் வருத்தமடைந்த கௌரவ வீரர்கள் கர்ணன் புதல்வன் விருஷசேனன், சல்லியன், அசுவத்தாமா முதலியோர் சாத்யகியை நாற்புறத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். கர்ணன் பெருமூச்சு விட்டவாறே துரியோதனனுடைய தேரில் ஏறிக்கொண்டான். முதலில் நடந்த சூதாட்டத்தில் திருதராட்டிரன் புத்திரர்களை வதம் செய்வதாகப் பீமன் சபதம் செய்திருந்தான்; மறுமுறை நடந்த சூதாட்டத்தில் கர்ணனை வதம் செய்வதாக அர்ச்சுனன் சபதம் செய்திருந்தான்; அதனால் இவர்களைச் சாத்யகி கொல்ல முன்வரவில்லை.

இது சமயம் பீமன் தன் தம்பியை நோக்கி, "அர்ச்சுனா! நீ பார்த்துக்கொண்டு இருக்கும்போதே, தீயவன் கர்ணன் என்னைப் பலவாறு ஏசுகிறான். 'மடையா!' 'பெருந்தீனி தின்பவனே!' 'ஆயுதப் பயிற்சி அற்றவனே!' என்று எல்லாம் என்னை ஏசுகிறான். இவனை நான் கொல்ல ஆசைப்படுகிறேன். ஆயினும் நீ சபதம் செய்திருப்பதால் அவனை நான் கொல்லவில்லை. இதை நினைவில் வைத்துக்கொண்டு அவனுடன் போர் செய்" என்று சொன்னான்.

பீமன் இப்படிச் சொன்னதும் அர்ச்சுனன் கர்ணன் அருகில் சிறிது நெருங்கி, "கர்ணா! தேரோட்டி மகனே! தற்புகழ்ச்சிக்காரனே! நான் சொல்வதைக் கேள். வெற்றி தோல்வி என்பது எத்தகைய அடல்வீரனுக்கும் ஏற்படுகிற ஒரு பொது நிலை. இந்திரனேயாயினும் இந்த உண்மை பொருந்தும். பலமுறை நீ போரில் தோற்று ஓடியவன்; பீமசேனரிடமும் தோற்றவன். அப்படியிருக்கும்போது ஏன் தற்புகழ்ச்சி செய்துகொண்டு பிறரை இழிவாகப் பேசுகிறாய்? பீமசேனருடைய உயர் குடிப்பிறப்பையும் மகிமையையும் அறியாமல் நீ பிதற்றுகிறாய். ஒரு போதும் பீமன் உன்னை நிந்தித்துப் பேசியது இல்லை. களைத்துச் சோர்ந்து போயிருக்கும் உன்னை நான் வதம் செய்யவேண்டும் என்பதற்காகவே சாத்யகி விட்டுவைத்து இருக்கிறான். நான் இல்லாத சமயத்தில் நீங்கள் பாலன் அபிமன்யுவை வதம் செய்துவிட்டீர்கள். நீ பார்த்துக்கொண்டு இருக்கும்பொழுதே உன் புதல்வன்

விருஷசேனனை நான் கொல்லப்போகிறேன் பார்" என்று முழங்கினான்.

அர்ச்சுனன் செய்த சபதத்தைக் கேட்டு, கௌரவ வீரர்கள் அதிர்ச்சி அடைந்தார்கள். சூரியனும் வெம்மை தணிந்து மெல்ல மெல்ல அஸ்தமன கிரியை அடைந்துகொண்டு இருந்தான். அர்ச்சுனனும் ஜயத்ரதனை நோக்கிச் சென்றான்.

அப்போது துரியோதனன் கர்ணனிடம், "அண்ணலே! போர் செய்ய வேண்டிய சமயம் இது. ஜயத்ரதனை அர்ச்சுனன் வதம் செய்யாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். பகல் சென்றுவிட்டால் வெற்றி நமக்கே. சூரிய அஸ்தமனம் ஆகும் வரையில் ஜயத்ரதனை நாம் காப்பாற்றிவிட்டால், சபதம் நிறைவேறாது, அர்ச்சுனன் தீயில் மூழ்கி இறப்பான்; அவனை இழந்த பின், அவன் சகோதரர்கள் ஒரு கணம்கூட உயிர் தரித்து இரார்கள். அதன் பின்னர் இந்தப் பூமண்டலம் முழுவதையும் நாமே அனுபவித்து ஆளலாம். புத்தி விபரீதமாய்ப் போன காரணத்தால்தான் அர்ச்சுனன் இப்படி வீண் சபதம் செய்து இருக்கிறான். நீ உயிருடன் இருக்கும்பொழுது, ஜயத்ரதனை அர்ச்சுனன் கொல்வது நடவாத காரியம். சல்லியன், கிருபர், அசுவத்தாமா, நான், துச்சாதனன் ஆகியோர் பாதுகாக்கும்போது, அர்ச்சுனனால், ஜயத்ரதனை வதம்செய்ய முடியுமா? பொழுது சாய்ந்துவிட்டது. ஜயத்ரனை அர்ச்சுனனால் இனி வதம் செய்ய முடியாது. எங்களுடன் சேர்ந்து, பார்த்தனை நீ தாக்கு" என்று சொன்னான்.

அதற்குக் கர்ணன், "பகைவரின் கொட்டத்தை அடக்குபவனே! பீமன் அடித்த பாணங்களால் அங்கமெல்லாம் புண்ணாகிவிட்டன. நிற்க வேண்டும் என்பதற்காக நான் போர்க்களத்தில் நிற்கிறேன். ஆயினும் இயன்றவரை நான் போர்புரிவேன். உன் பொருட்டே நான் உயிர்வாழ்கிறேன். ஜயத்ரதனை அர்ச்சுனன் இன்று கொல்லாதபடி நான் கவனித்துக்கொள்கிறேன். பக்தியுடனும் விசுவாசத்துடனும் இதை நான் செய்கிறேன். அரசே! வெற்றி நம்மைப் பொறுத்து இல்லை; அதிர்ஷ்டத்தைப் பொறுத்து இருக்கிறது" என்று பதில் சொன்னான்.

இது சமயம் அர்ச்சுனன் கௌரவப் படையைத் தாக்கினான். குதிரை தேர், காலாள், யானை இவற்றை எல்லாம் இரண்டு மூன்று துண்டுகளாக அம்பு எய்து எய்து அறுத்தான். உலர்ந்த காட்டை நெருப்பு எரிப்பதுபோல, கௌரவ சேனையை அவன் எரித்தான். சிறிது நேரத்தில் போர்க்

களத்தில் இரத்தம் பீறிட்டுப் பாய்ந்தது. கௌரவ சேனையைப் பலவாறு துன்புறுத்திக்கொண்டே அர்ச்சுனன் ஜயத்ரதனை நெருங்கினான். பீமனும் சாத்யகியும் அவனுக்குப் பக்க பலமாகச் சென்றார்கள்.

துரியோதனன், கர்ணன், விருஷசேனன், சல்லியன், அசுவத்தாமா, கிருபர் ஆகியோர் ஜயத்ரதனைக் காத்து நின்றார்கள். அர்ச்சுனனை நாற்புறமும் சூழ்ந்துகொண்டார்கள். சூரியன் அஸ்தமனம் அடையும் தருவாயில் இருந்தான்; ஜயத்ரதனைத் தங்களுக்குப் பின்புறம் நிற்கச் செய்து, மற்ற வீரர்கள் முன் அணியில் நின்றார்கள்; அர்ச்சுனனையும் வாசுதேவரையும் கொல்ல எண்ணி, அம்புகளைப் பொழிந்தார்கள்; சூரிய அஸ்தமனத்தை எதிர்பார்த்துக்கொண்டே அர்ச்சுனனையும் கண்ணனையும் தாக்கினார்கள். அர்ச்சுனன், சாத்யகி, பீமன் ஆகிய மூவர் தாக்குதலைத் தனியாக நின்று கர்ணன் சமாளித்தான்.

அர்ச்சுனனும் கர்ணனும், ஒருவரை ஒருவர் அதட்டிக்கொண்டு, அட்டகாசம் செய்து போர் புரிந்தார்கள். வில்லை அறுத்து, தேரையும் இழக்கும்படி செய்ததால், கர்ணனை அசுவத்தாமா தமது தேரில் ஏற்றிக்கொண்டார். பிறகும் இருவருக்கும் இடையில் போர் நடந்தது. அர்ச்சுனன் கடும் போர் செய்தான். பன்னிரண்டு ஆண்டுகள் தாங்கள் அனுபவித்த துன்பங்களை எல்லாம் நினைந்து நினைந்து, அம்புகளைப் பொழிந்து, பகைவர்களை நடுங்கச் செய்தான்.

அர்ச்சுனன் ஜயத்ரதனை அணுகி அவனை அறுபது பாணங்களால் அடித்தான்; அர்ச்சுனனுடைய போக்கைக் கண்ட கௌரவ வீரர்கள், ஜயத்ரதன் இனி தப்பமுடியாது என்ற எண்ணத்துடன் போர் செய்வதை நிறுத்திவிட்டார்கள். அர்ச்சுனனை எதிர்த்தவர்கள் எல்லாரும் உயிர் நீத்து, பிணமாய் விழுந்தார்கள்.

பன்றிக் கொடியுடைய ஜயத்ரதன், பதிலுக்கு அர்ச்சுனனைத் தாக்கினான். இதைப் பொறுக்காத அர்ச்சுனன் ஜயத்ரதனுடைய சாரதியைக் கொன்றான்; அவனுடைய பன்றிக் கொடியை அறுத்துக் கீழே தள்ளினான். இது சமயம் அர்ச்சுனன், தன் கடைவாய்களை நக்கிக்கொண்டு சூரியனைப் பார்த்தான்.

அப்போது கிருஷ்ணன் அர்ச்சுனனிடம், "பாண்டவா! பலம் பொருந்திய தேராளிகளுக்கு மத்தியில் இருப்பதால் ஜயத்ரதனை உன்னால் எளிதில் வதம் செய்ய முடியாது.

அவனைப் பாதுகாக்கும் ஆறு வீரர்களையும் அடிக்காமல் எவ் வளவுதான் முயன்றாலும் ஜயத்ரதனை உன்னால் வெல்ல முடியாது. ஆகவே ஓர் உபாயம் செய்து சூரியனை நான் மறைக்கப் போகிறேன். அதனால் சூரியன் அஸ்தமித்துவிட்ட தாக எண்ணிக்கொண்டு ஜயத்ரதன் மகிழ்ச்சியுடன் வெளியே வருவான். உன்னை அழிக்கும் பொருட்டு வேகமாக அந்தத் தீயவன் வருவான். அந்தச் சமயத்தை பயன்படுத்திக் கொண்டு, ஜயத்ரதனை நீ வதம் செய்" என்று சொன்னார்.

இவ்வாறு சொல்லிவிட்டு, தமது யோகசக்தியால் எங் கும் இருள் பரவும்படி கண்ணன் செய்தார். இதைக் கண்டு பாண்டவர்கள் துயரடைந்தார்கள். கௌரவர் ஆனந்த மிகுதியால் ஆர்ப்பரித்தார்கள்; அண்ணாந்து, ஆகாயத்தைப் பார்த்தார்கள்.

ஜயத்ரதனும் அண்ணாந்து ஆகாயத்தைப் பார்த்தான். அப்போது கேசவர் அர்ச்சுனனிடம் "சிந்து ராஜன் சூரியனை அண்ணாந்து பார்க்கிறான்; அவன் தலையை ஓர் அம்பினால் துண்டி" என்று ஏவினார்.

அதன்படி அர்ச்சுனன் ஓர் அம்பை ஏவினான். அது அவ னுடைய தலையைத் துண்டித்தது. அந்தத் தலை கீழே விழுவதற் குள்ளாக, கண்ணன் அர்ச்சுனனிடம் "இந்தத் தலை பூமியில் விழாதபடி பார்த்துக்கொள்; பிறகு காரணத்தைத் தெரிவிக் கிறேன்" என்று சொன்னார்.

கீழே விழாதபடி, தலையை ஆகாயத்திலேயே அர்ச்சுனன் சஞ்சரிக்கச் செய்தது. அது ஆச்சரியமாக இருந்தது. ஜயத்ர தனுடைய தலை ஆகாயத்தில் குறுக்கும் நெடுக்குமாகப் பல முறை வந்து போய்க்கொண்டு இருந்தது.

பிறகு அர்ச்சுனன் "இந்தத் தலையை எந்த இடத்தில் தள்ளச் செய்ய வேண்டும்? சொல்லுங்கள்" என்று கேச வரைக் கேட்டான்.

"பார்த்தா! ஜயத்ரதன் தந்தை பெயர் விருத்தக்ஷத் திரன். கடுமை தவம் செய்து ஜயத்ரதனை அவன் புதல்வனாகப் பெற்றான். அப்போது ஓர் அசரீரி 'அரசனே! உன் புதல் வன் நற்குணங்களால் சிறந்து விளங்குவான். அரச குலத்தாரி டையே மிகப் பிரசித்தி பெற்ற ஒருவன், பகைவனாகி, உன் புதல்வன் தலையை அறுப்பான்" என்று சொல்லிற்று. அப் போது விருத்தக்ஷத்திரன் தன் உறவினர்களை நோக்கி, என் புதல்வன் தலையை எவன் பூமியில் தள்ளுவானோ, அவன் தலை

று துண்டுக்குகளாகச் சிதறக் கடவது' என்று சொல்லி னுக்கிருன். அவன் தந்தை இப்பொழுது சமந்த பஞ்சகத் துக்கு அருகே கோரமான தவத்தைச் செய்துகொண்டு இருக்கிருன். அவன் மடியில் ஜயத்ரதனுடைய தலை விழும்படி செய். அப்படியின்றி அது பூமியில் விழுமாயின் உன் தலை சுக்கு நூருக வெடித்துப் போகும்'' என்று சொன்னர்.

அதன்படி அர்ச்சுனன் செய்தான். கறுத்த மயிர்களும் குண்டலங்களுடன் கூடியதுமான ஜயத்ரதன் தலை தவம் செய்துகொண்டு இருக்கும் விருத்தசட்திரன் மடியில் போய் விழுந்தது.

தலை விழுந்ததைக் கவனியாது அந்த மன்னன் சந்தியா வந்தனம் செய்வதற்காக எழுந்தான். அவன் மடியில் கிடந்த தலை பூமியில் விழுந்ததால், விருத்தசட்திரன் தலை சுக்கு நூருக வெடித்துச் சிதறிவிட்டது.

இதைக் கண்டு எல்லோரும் ஆச்சரியம் அடைந்தனர்.

கண்ணன் அர்ச்சுனனை இதற்காகப் பெரிதும் பாராட்டி ஞர். தான் ஏவிய பாசுபதத்தை மந்திரங்களைச் சொல்லி, அர்ச்சுனன் திரும்பி அழைத்துக்கொண்டான்.

இதைக் கண்ட கௌரவர்கள் கண்ணீர் உகுத்துக் கதறி ஞர்கள்.

சிந்துராஜன் வதம் நடைபெற்ற பிறகு, இருள் அகன்று, எங்கும் வெளிச்சம் உண்டாயிற்று. 'இது கண்ணன் செய்த மாயை' என்று கௌரவர்கள் சொன்ஞர்கள்.

பிறகு அர்ச்சுனன், சாத்யகி, பீமன், கேசவர் ஆகியோர் தங்கள் தங்கள் சங்கங்களை முழக்கிஞர்கள். 'ஜயத்ரதன் கொல்லப்பட்டான்; அர்ச்சுனன் சபதம் நிறைவேறிற்று' என்று யுதிட்டிரர் மகிழ்ச்சி அடைந்தார். இன்னிசைகள் முழங்க, போர்க்களத்தில் அவரும் புகுந்தார். ஜயத்ரதன் கொல்லப்பட்டதனுல் ஊக்கமடைந்து பாண்டவ வீரர்கள், துரோணரை எதிர்த்தார்கள்.

## ஆனந்தக் கண்ணீர்

ஜயத்ரதன் கொல்லப்பட்டதை அறிந்த கிருபாச் சாரியார், அர்ச்சுனன்மீது கடும் கோபங்கொண்டார். அம்பு களை எய்து அர்ச்சுனனைத் தாக்கிஞர்! அசுவத்தாமாவும்

தேரின் மீது ஏறிக்கொண்டு, அர்ச்சுனனை எதிர்த்தார். இரு வீரர்களும் எய்த பாணங்களால் அர்ச்சுனன் துன்பம் அடைந்தான்.

தம் குருவையும் குருவின் புதல்வனையும் கொல்லும் துணிவு அர்ச்சுனனுக்கு உண்டாகவில்லை. பெயரளவில் எளிய பாணங்களையே அவர்கள் இருவர்மீதும் பிரயோகித்தான். பல பாணங்களை ஏவிய காரணத்தால் இருவரும் அதிக துன்பம் அடைந்தார்கள் கிருபர் மூர்ச்சை அடைந்து, தேரின் மத்தியில் உட்கார்ந்துவிட்டார் இதனால் அவர் மாண்டு விட்டதாகவே அவருடைய தேர்ப்பாகன் நினைத்தான். ஆகவே தேரை வேறு இடத்துக்கு அவன் ஓட்டிச்சென்றான். அசுவத்தாமாவும் அர்ச்சுனனைவிட்டு விலகிச் சென்றார்.

கிருபர் மூர்ச்சை அடைந்திருப்பதை அறிந்த அர்ச்சுனன் அதற்காகத் தன்னைத் தானே கடிந்துகொண்டான். கண்களில் நீர் மல்கியது. "பாவியான துரியோதனன் பிறந்தவுடனே 'இவனால் கௌரவ குலத்துக்குப் பெரிய அழிவு உண்டாகும்' என்று வியாசர் எச்சரித்தார், அவர் அன்று சொன்ன சொல் இன்று மெய்யாகிவிட்டது என் குரு அம்புப் படுக்கையில் படுத்து இருக்கிறார். அரச குலத்தாரின் போக்கும் ஆண்மையும் பலமும் நிந்திக்கத் தக்கன. புத்ர சோகத்தின் வயப்பட்டு இருந்ததால், என் குருவையும் அம்புகளால் நான் அடித்துவிட்டேன். எனக்கு வில்வித்தை கற்பித்த இவர் 'குருகுலச் செம்மலே! ஆசாரியன்மீது அம்பு எய்வது கூடாது' என்று போதித்தார். அப்படிப் போதித்த உத்தமர் மீதே அம்பு எய்யும் இழிநிலை எனக்கு ஏற்பட்டுவிட்டது. அந்தோ கொடிது, கொடிது" என்று சொல்லி, அர்ச்சுனன் கண்ணனிடம் புலம்பினான்.

இப்படிப் புலம்பிய அர்ச்சுனனைக் கண்ணன் கட்டித் தழுவிக்கொண்டார். "வீரனே! உனது சபதத்தை நீ வெற்றிகரமாக நிறைவேற்றிவிட்டாய். விதிவசத்தால் ஜயத்ரதனை நீ வென்றாய். உன்னை நிகர்த்த வீரனை எந்த உலகத்திலும் காணமுடியாது. தீயவனான கர்ணனையும் நீ வதம் செய்துவிட்டால், பெரிய காரியத்தை நீ நிறைவேற்றியவனாவாய்" என்று கண்ணன் அர்ச்சுனனைப் பாராட்டினார்.

"மாதவரே! உம் அருளினால்தான் நான் எடுத்த சபதம் நிறைவேறிற்று. யாருக்கு நீர் வழிகாட்டுகிறீரோ அவர்கள் வெற்றி பெறுவது முக்காலும் உறுதி. உமது கருணையினால் இந்தப் பூமண்டலம் முழுவதையும் யுதிட்டிரர் அடைவார்

என்பது திண்ணம். இப்பொழுது பெற்ற வெற்றி, உமது வெற்றியே. நாங்கள் உம்முடைய ஊழியர்கள்தாம்'' என்று சொன்னான் அர்ச்சுனன்.

இதன் பின்னர், தேரை மெதுவாக ஓட்டி, படுகளத்தை அர்ச்சுனனுக்குக் கண்ணன் காட்டினார். ''வெற்றியையும் புகழையும் நாடிவந்த எத்தனையோ அரசர் உனது அம்பினால் அடிபட்டு மண்ணில் மாண்டு கிடப்பதைப் பார். ஆபரணங்களும் ஆயுதங்களும் சிதறிக் கிடப்பதைப் பார். நீ போர் புரிந்த யுத்தகளம், இந்திரன் போர் செய்த யுத்தகளம்போல் விளங்குகிறது'' என்று சொன்னார்.

பிறகு கண்ணன் தனது பாஞ்சசன்யத்தை எடுத்து ஊதினார்; எல்லாரும் சேர்ந்து யுதிட்டிரரிடம் சென்றார்கள். கண்ணன் யுதிட்டிரரை அணுகி, அர்ச்சுனனுல் ஜயத்ரதன் வதம் செய்யப்பட்ட விவரத்தைத் தெரிவித்தார்.

யுதிட்டிரரை அணுகியதும் கண்ணன் முதலில் வணக்கம் செலுத்தினார். ''அண்ணலே! மேன்மைவாய்ந்த அரசே! பகைவர்களை வென்று நீர் மேன்மையடைந்து வருகிறீர். உம் தம்பி அர்ச்சுனன் தனது சபதத்தை நிறைவேற்றி, வெற்றிகண்டு இருக்கிறான்'' என்று கூறினார்.

கண்ணன் சொன்னதைச் செவிமடுத்ததும் யுதிட்டிரர் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். தேரிலிருந்து குதித்து, கண்ணனையும் அர்ச்சுனனையும் கட்டித் தழுவிக்கொண்டார். ''தாமரைக் கண்ணா! நீர் சொன்ன வார்த்தையைக் கேட்டு நான் புளகாங்கிதம் அடைந்தேன். அர்ச்சுனன் ஜயத்ரதனைக் கொன்றது நம்முடைய பாக்கியம். உம்மை அடுத்து இருப்பவர்களுக்கு இது எல்லாம் அரிது அன்று. பெரிய மகான்களும் மகரிஷிகளும் உம்மைத் தெய்வம் என்றே கூறுகிறார்கள். எங்களுக்கு நீர்தான் நாதர்'' என்று சொன்னார்.

''பரதகுலச் செம்மலே! உமது கடும் தவம், பொறுமை, தருமம், வஞ்சகமின்மை இவை நான்கும்தான் பாவி ஜயத்ரதனை வெல்லக் காரணமாய் இருந்தவை. அர்ச்சுனனுக்குக் கவசமாய் அமைந்து வெற்றியைத் தேடித் தந்தவை'' என்று மதுசூதனர் பதில் சொன்னார்.

இதன் பின்னர் யுதிட்டிரர் அர்ச்சுனனை மீண்டும் தழுவிக் கொண்டு அவன் முகத்தைத் தடவினார். ''பகைவரை வதைப்பவனே! இந்திரனோடு கூடிய தேவர்களாலும் சாதிக்க முடியாத ஒரு பெரும் காரியத்தை நீ சாதித்து இருக்கிறாய். ஜயத்ரதனை வதம் செய்து உனது சபதத்தை நிறைவேற்றி

முடித்தாய்" என்று சொல்லி, தமது கையால் அர்ச்சுனனுடைய முதுகை அவர் தடவிக் கொடுத்தார்.

சாத்யகியும் பீமனும் இதன் பின்னர், தருமபுத்திரரைக் கைகூப்பி வணங்கி நின்றார்கள். யுதிஷ்டிரர் மகிழ்ந்து, அவர்கள் இருவரையும் பாராட்டினார்; இருவரையும் தழுவிக் கொண்டு, ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்.

## தெய்வத்தின் கட்டளை

ஜயத்ரதன் வீழ்ந்துபட்டதும், நச்சுப் பல் உடைந்த பாம்புபோல, துரியோதனன் ஏங்கி ஏங்கி வருந்தினான். கண்கள் நீரால் நிறைந்துவிட்டன. அவனுடைய கர்வம் அடங்கிப் போயிற்று. நிறம் மாறி ஒளி இழந்து, அவன் தளர்ந்து போனான். "அர்ச்சுனனுக்கு நிகரான போர்வீரன் இந்த அவனியில் கிடையாது. துரோணர், கர்ணன், அசுவத்தாமா, கிருபர் ஆகியோர்கூட அவனை எதிர்க்க முடியவில்லை. கர்ணன் பலத்தை நம்பித்தான் நாம் போரில் குதித்தோம். அவனுமே தோல்வியுற்றான். சமாதானத்தை நாடி வந்த கண்ணனை, எவனுடைய பலத்தை நம்பி நான் துரும்பு என நினைத்து உதாசீனம் செய்தேனோ, அவனும் போரில் தோல்வியுற்றான்" என்று துரியோதனன் வருந்தினான்.

பிறகு அவன் துரோணரைக் காணச் சென்றான். தங்களுக்கு நேரவிருக்கும் ஆபத்தையும் அழிவையும் பற்றி அவரிடம் சொன்னான். "ஆசாரியரே! அரசர்களுக்கு நேர்ந்துள்ள அழிவைப் பாரும். நம் வீரன் ஜயத்ரதனை அர்ச்சுனன் வதம் செய்துவிட்டான். எனக்காக நடக்கும் போரில் இறங்கிய எத்தனையோ அரசர்கள் உயிர் இழந்து, பூமியில் கிடக்கிறார்கள். ஆயிரம் அசுவமேத யாகம் செய்தாலும், இத்தனை அழிவுக்கும் அது பிராயச்சித்தம் ஆகாது. போர் செய்து பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் வெல்வேன்; இல்லையேல் போரில் மடிந்து, என்னைச் சார்ந்தவர்கள் சென்ற உலகத்துக்கு நானும் செல்வேன். என்னை அடுத்தவர்கள் உயிர்நீத்த பின், நான் உயிர் வாழ்வதால் யாது பயன்?" என்று சொன்னான்.

துரியோதனன் சொன்ன இந்த வார்த்தைகளைத் துரோணர் வருத்தத்துடன் செவிமடுத்தார். சிறிது நேரம் இதுபற்றிய சிந்தனையில் மூழ்கி இருந்தார். "துரியோதனா!

அர்ச்சுனனை யாராலும் வெல்ல முடியாது என்று பல முறை உன்னிடம் சொல்லி இருக்கிறேன். பீஷ்மர் வீழ்ச்சி அடைந்த அன்றே, கௌரவ சேனையும் அழிந்துவிட்டது என்று சொல்லலாம். சகுனி உருட்டிய சூதுக்காய்களே இன்று அம்பு களாக மாறியுள்ளன என்பதை நீ தெரிந்துகொள். விதுரர் சொன்ன நல்வார்த்தைகள் அப்பொழுது உனது செவியில் ஏறவில்லை. நன்மை கூறும் நண்பர்களை அவமதித்து நடப் பவன், பின்னர் அநேக இன்னல்களை அநுபவிப்பான் என்பது திண்ணம். நல்ல குலத்தில் பிறந்த திரௌபதியைச் சபைக்கு இழுத்து வந்து அவமதித்ததின் பயனை இப்பொழுது நீ அனுபவிக்கிறாய். துச்சாதனன் கோபத்தை மூட்டினான்; கர்ணன் அதை அதிகப்படுத்தி வளர்த்தான். அதன் பயனை இப்பொழுது நீங்கள் அனுபவிக்கிறீர்கள். நாம் எல்லோரும் முயன்று காத்தும், ஜயத்ரதனை நாம் ஏன் இழந்தோம்? ஆயினும் போர்க்களத்தில் இறங்கி, நான் போர் செய்கிறேன். நீயும் படைகளைக் காப்பாற்று'' என்று சொன்னார்.

துரோணர் சொன்னதைக் கேட்டு, துரியோதனன் கோப மடைந்தான். போர் செய்வதில் நாட்டத்தைச் செலுத்தி னான். ''கர்ணா! நீ பார்த்திருக்கும்பொழுதே மாபெரும் வீரர்கள் பலரை அர்ச்சுனன் வதம் செய்துவிட்டான். துரோணர் இடம் கொடுத்து அலட்சியமாய் இருந்ததனாலே, வியூகத்தை அர்ச்சுனனால் உடைக்க முடிந்தது. ஆசாரியர் துரோணர் அர்ச்சுனனிடம் எப்பொழுதுமே பரிவு காட்டு பவர். துரோணர் போரில் கலவாமல் இருந்திருந்தால் ஜயத்ரதன் உயிருடன் இருந்திருப்பான்'' என்று சொன்னான்.

அதற்குக் கர்ணன் ''அண்ணலே! ஆசாரியரை நிந்திக்க லாகாது. தம் சக்திக்கும் வயதுக்கும் ஏற்ப, துரோணர் போர்புரிகிறார். அவரையும் மீறி வியூகத்தை அர்ச்சுனன் பிளந்துவிட்டான்; ஆசாரியர் முதியவர்; அர்ச்சுனன் வாலிப மிடுக்குள்ளவன். வெற்றி தோல்வி என்பது நம் வசத்திலுள்ள பட்டதன்று. அது தெய்வத்தின் கட்டளை. அதிர்ஷ்டசாலி செய்கிற காரியத்துக்குத் தெய்வம் அநுகூலமாய் இருக் கிறது; அதிர்ஷ்டயீனன் செய்கிற காரியங்களைத் தெய்வம் அழித்துவிடுகிறது. பாண்டவர்களை நீ வஞ்சித்தாய். அரக்கு மாளிகையை எரிக்கச் செய்தாய்; சூதாட்டத்தில் வென்றாய்; காட்டுக்கு ஓட்டினாய். அவை யாவும் இப்பொழுது வீணாய்விட்டன. ஆகவே செய்ய வேண்டிய காரியத்தை முயற்சியுடன் செய். நன்மை தீமைகளுக்குத் தெய்வம்தான் காரணம் என்பதை அறிந்து, காரியத்தில் இறங்கு. பெரும்

படையை உடைய நீ சிறு படையை உடைய பாண்டவர்களிடம் தோல்வியுற்றாய். இதைத் தெய்வத்தின் கட்டளை என்றல்லாமல் வேறு என்ன சொல்வது?'' என்று சொன்னான்.

இத்துடன் பதினான்காம் நாள் பகல் போர் முடிந்தது.

## பதினான்காம் நாள் இரவுப் போர்

இப்படி இவர்கள் உரையாடிக்கொண்டிருந்த சமயத்தில் பாண்டவ சேனை போர்க்களத்தில் புகுந்தது. கௌரவ சேனை நான்கு புறங்களிலும் சூழ்ந்துகொண்டு அதைத் தாக்கியது. ஜயத்ரதன் வதத்தினால் மிகவும் வருத்தமுற்று இருந்த துரியோதனன், இறந்து போகவேண்டும் என்ற துணிவுடன் போர்க்களத்தில் புகுந்தான். பாண்டவர்களை மூர்த்தன்யமாக எதிர்த்தான். நன்றாக மலர்ந்திருக்கிற தாமரைக் குளத்தை யானை கலக்குவதுபோல, பாண்டவ சேனையை, துரியோதனன் கலக்கினான். தனி ஒருவனாக நின்று, தன்னை எதிர்த்து வருகின்றவர்கள் அனைவரையும் கடுமையாக அவன் தாக்கினான்.

துரியோதனனுக்கும் யுதிட்டிரருக்கும் இடையில் கடும் போர் நடந்தது. தவிர்க்க முடியாத கொடிய ஓர் அம்பை எடுத்து, யுதிட்டிரர் துரியோதனன்மீது எய்தார். மூர்ச்சித்து, தேரின் மத்தியில் துரியோதனன் உட்கார்ந்தான். "அரசன் கொல்லப்பட்டான்" என்று பாண்டவ சேனையினர் ஆரவாரம் செய்தார்கள்.

இது சமயம் துரோணர் போர்க்களத்துக்கு விரைந்தார். மூர்ச்சை தெளிந்து வில்லை எடுத்துக்கொண்டு, "நில்; நில்" என்று சொல்லி யுதிட்டிரரை எதிர்த்தான் துரியோதனன்.

துரோணர் போர்க்களத்துக்கு வந்ததும் பாண்டவ தரப்பு வீரர்கள், சாத்யகி, யுதிட்டிரர், பீமன், நகுலன், சகதேவன், திட்டத்துய்மனன், துருபதன், காடாத்கசன் ஆகியோர் துரோணரை எதிர்த்தார்கள்.

இராப்பொழுது தொடங்கியது. நரிகள் பயங்கரமாக ஊளையிட்டன; கோட்டான்களும் கூவின. யானைகள், குதிரைகள் இவற்றின் ஒலிகள் குழப்பத்துடன் கேட்டன. இருளும் புழுதியும் வியாபித்துப் பரவி இருந்ததால், ஆட்களை அடையாளம் தெரியவில்லை.

இரவின் ஆரம்பத்தில் நடந்த இந்தப் போரில் துரோணர் போர் செய்து, சிலரைப் புறமுதுகு காட்டி யோடும்படி செய்தார்; சிலரை யமன் உலகு அனுப்பினர். யானைகளையும் குதிரைகளையும் ஆயிரக்கணக்கில் வதம் செய்தார்.

அன்று இரவு நடந்த போரில் துர்மதன், துஷ்கர்ணன் ஆகிய துரியோதனன் தம்பியரைப் பீமன் கொன்றான்.

பூரிசிரவஸை வதம்செய்த சாத்யகியைச் சோமதத்தன் சாடினன். அவனுக்கும் சாத்யகிக்கும் கடும் போர் நடந்ததில் சோமதத்தன் மூர்ச்சையுற்றான். இதைக் கண்ட துரோணர், சாத்யகியை எதிர்த்தார். பஞ்சுக் குவியலை நெருப்பு எரிப்பது போல, பாண்டவ சேனையைத் துரோணர் தாக்கித் துன்புறுத்தினர். பாண்டவ சேனை நிலைகுலைந்து சிதறி யோடியது.

இதைக் கவனித்த அர்ச்சுனன் தனது தேரை, துரோணர் போர்புரியும் திசைக்குச் செலுத்துமாறு கோவிந்தரிடம் சொன்னான். வெள்ளி, பசும்பால், குருக்கத்தி மலர், சந்திரன் ஆகியவற்றைப்போல் பிரகாசிக்கின்ற குதிரைகளை, துரோணர் பக்கம் கோவிந்தர் திருப்பினர். பார்த்திபன் தேர் திரும்புவதைக் கவனித்த பீமனும், தன் தேரைத் துரோணர் பக்கம் திருப்பச் சொன்னான்.

அசுவத்தாமாவும் சாத்யகியை எதிர்ப்பதற்கு வந்தார். இதைக் கவனித்த கடோத்கசன், தனது அரக்க சேனையுடன் வந்து, அசுவத்தாமாவைத் தடுத்தான்.

கடோத்கசன் போட்ட கர்ஜனையைக் கேட்டதும் கௌரவப் படை கதிகலங்கிற்று; யானைகள பயந்து மூத்திரத்தைச் சொரிந்தன. மனிதர்கள் கிடுகிடுத்து நடுங்கினர்கள். கர்ணன் முதலிய வீரர்களுமே பயந்து நாலா பக்கமும் சிதறி ஓடினர்கள். அசுவத்தாமா ஒருவர் மட்டுமே அஞ்சாது நின்றார். கடோத்கசனைப் பலமாகத் தாக்கினர்.

கடோத்கசன் புதல்வன் அஞ்சனபர்வா என்பவன் வந்து, அசுவத்தாமாவைத் தாக்கினன். அசுவத்தாமா அவனை எதிர்த்துத் தாக்கிக் கொன்றுவிட்டார். இதனல் கோபமுற்ற கடோத்கசன் அசுவத்தாமாவை எதிர்த்தான. "துரோணா மகனே! உம்மை நான் உயிருடன் விடப்போவது இல்லை; சண்முகர் கிரவுஞ்ச கிரியைப் பிளந்ததுபோல, உம்மை நான் பிளக்கப்போகிறேன்" என்று கூவி அழைத்தான்.

அதற்கு அசுவத்தாமா, "குழந்தாய்! தேவதையை நிகர்த்த பலம் வாய்ந்தவனே! மற்றவர்களிடம் சென்று நீ

யுத்தம் செய். தந்தையைத் தனயன் துன்புறுத்துவது நியாயம் அன்று. உனக்கு நான் தந்தை போன்றவன் அல்லவோ! உன்மீது எனக்குக் கோபம் இல்லை. நீ அப்பால் போ" என்று சொன்னார்.

"துரோண புத்திரா! பாமரன்போல் போருக்கு நான் பயந்தவன் அல்லன். வார்த்தைகளால் என்னைப் பயப்படுத்த நினைப்பது பிசகு. நான் பெரிய கௌரவ வம்சத்தில் பிறந்தவன்; போரில் புறங்காட்டாத பாண்டவர்களுக்குப் புதல்வன். அரக்கர்களுக்கு அரசன். பலத்தில் இராவணனுக்கு ஒப்பானவன். உனது ஊக்கத்தை நான் சிதறடித்து. உன்னை நான் வதம்செய்யப் போகிறேன்' என்று பதில் சொன்னான் கடோத்கசன்.

பிறகு, யானையைச் சிங்கம் எதிர்ப்பதுபோல, துரோண புத்திரரைக் கடோத்கசன் எதிர்த்தான். அசுவத்தாமா பதிலுக்கு அரக்கர் சேனையைப் படுநாசம் செய்துகொண்டு இருந்தார்.

பதினான்காம் நாள் இரவு தொடர்ந்து போர் நடந்தது. துரோணரும் அசுவத்தாமாவும் போரை நிறுத்த முயன்றார்கள். கைகூடவில்லை; வீரர்கள் வெருண்டு போரை நடத்தினார்கள்.

## நாவை அறுப்பேன்

போர் இவ்வாறு நடந்துகொண்டிருந்தபோது, துரியோதனன் கர்ணனை நோக்கி, "நண்பர்களிடத்துப் பாசம் உள்ளவனே! வெற்றியின் பெருமிதத்தினால் பாண்டவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் அட்டகாசம் செய்வதைப் பார். முயன்று கௌரவ சேனையைக் காப்பாற்று" என்று சொன்னான்.

"அரசே! இந்திரனே வந்து பார்த்தனைப் பாதுகாத்தாலும், போர்செய்து பாண்டவர்களை நான் வதம் செய்வேன். இது உறுதி. உம் மனத்தைத் திருப்தியுறச் செய்வதற்கே இந்த மண்ணுலகில் நான் வாழ்கிறேன். பார்த்தனை வதம்செய்து விட்டால் மற்றவர்கள் பயந்து காட்டுக்குப் போய்விடுவார்கள். பாண்டவர்களையும் அவர்களைச் சார்ந்தவர்களையும் வென்று இந்த மண்ணுலகத்தை உமக்கு நான் வழங்குவேன்.

இது முக்காலும் உறுதி" என்று கர்ணன் பெருமையடித்துக் கொண்டான்.

கர்ணன் இப்படிப் பெருமையடித்துக்கொண்டதும், கிருபர் புன்னகை புரிந்தார், "இராதை புதல்வனே! நீ உரைத்தபடி யாவும் நடந்தேறக் கூடுமானால், குருகுலச் செம்மல், துரியோதனன் பாக்கியசாலிதான். ஆயினும் இப் பொழுது நீ சொல்லியது வெறும் தற்புகழ்ச்சிதான். பயன் ஒன்றையும் காணேம். நீ பாண்டவர்களைப் பல முறை எதிர்த்தாய். எதிர்த்தபோது எல்லாம் தோல்விதான் அடைந்தாய். திருதராட்டிரன் புதல்வனைக் கந்தர்வன் கவர்ந்த காலத்தில் நீ முந்தி ஓடிவிட்டாய். விராட நகரத்தில் மாட்டுமந்தை சம்பந்தமாக நடந்த போரில் நீ தோல்வியுற்றாய். பார்த்தன் ஒருவனை வெல்ல உன்னால் முடியவில்லை. அப்படியிருக்கும்போது கண்ணனுடன் சேர்ந்திருக்கும் பாண்டவர்களை நீ எவ்வாறு வெல்வாய்? வாய்வீச்சு வேண்டாம்; உன் ஆற்றலைக் காரியத்தில் காட்டு. பார்த்தனைப் பார்ப்பதற்கு முன்னரே முழங்க வேண்டியதை எல்லாம் முழங்கி முடித்துவிடு; பார்த்தனைப் பார்த்த பின்னர், உன்னால் முழங்க முடியாது போகலாம். க்ஷத்திரியர்கள் கைவன்மையில் சூரர்கள்; பிராமணர்கள் வாக்கில் வீரர்கள்; பார்த்தன் வில்லில் வீரன்; கர்ணன் எண்ணுவதில் வீரன். பரமசிவனை மகிழ்வித்த பார்த்தனை எதிர்க்கும் ஆற்றல் படைத்தவனும் பூதலத்தில் இருக்கிறானா?" என்று கேட்டார்.

கிருபர் குத்தலாகச் சொன்னதைக் கேட்டுக் கர்ணன் கோபமுற்றான்.

"அந்தணரே! போரில் கலந்துகொண்டு, போராடுகின்ற ஒருவன் தற்புகழ்ச்சி செய்துகொள்வது குற்றமாகாது. பாரத்தைச் சுமக்க முயற்சியுடன் இருப்பவனுக்குத் தெய்வம் உதவிசெய்யும். பொறுப்பை ஏற்று, காரியத்தில் இறங்கி, 'பாண்டவர்களை வதைப்பேன்' என்று நான் முழங்குவதில் என்ன குற்றம் இருப்பதை நீர் கண்டீர்? தம் வல்லமையை அறிந்தவர்கள், கர்ஜிக்கத்தான் செய்வார்கள். கண்ணன், பாண்டவர்கள், சாத்யகி இவர்களை வதம்செய்து, துரியோதனனுக்குப் பூமியை நான் நிச்சயம் கொடுப்பேன்" என்று சொன்னான்.

அதற்குக் கிருபர், "தேரோட்டி மகனே! கிருஷ்ணனுடன் சேர்ந்திருக்கும் பாண்டவர்களை யாராலும் ஜயிக்கமுடியாது. தர்மபுத்திரன் சான்றோரை அடுத்து இருப்பவன்; புலன்

அடக்கமுடையவன்; சத்தியசீலன்; அறத்தில் நாட்டமும் பிடிப்பும் உள்ளவன்; ஆயுதப்பயிற்சியில் வல்லவன்; அன்புள்ளவன்; சகோதர வாஞ்சையுடையவன்; அனேகரின் அபிமானத்தைப் பெற்றவன். அவன் ஒருபோதும் தோல்வியடைய மாட்டான். ஆகையால் உனது விருப்பம் எல்லாம் எண்ண அளவில் சாத்தியமாகவாம்; காரியத்தில் ஒருபோதும் பலிக்காது" என்று சொன்னார்.

கிருபர் இப்படிச் சொன்னதும் கர்ணன் உரக்கச் சிரித்தான். "அந்தணரே! நீர் கூறுவது உண்மைதான். ஆயினும் நான் பாண்டவர்களை இந்திரன் தந்த சத்தியாயுதத்தைக் கொண்டு எதிர்ப்பேன். அதனால் அர்ச்சுனனை நான் கொல்வேன். அர்ச்சுனன் இறந்துவிட்டால் பூமியை ஆளும் அருகதை பாண்டவர்களுக்கு அற்றுப்போகும். அந்தணரே! வயதுமுதிர்ந்து போனபடியாலும், பாண்டவர்களிடத்தில் உமக்கு அன்பு இருப்பதாலும், நீர் என்னை இவ்வாறு அவமதித்துப் பேசுகிறீர். நியசிந்தையுள்ளவரே! இன்னும் ஒருமுறை இப்படி நீர் என்னை அவமதித்துப் பேசினால் உம் நாவை நான் அறுப்பேன். சேனையிலுள்ளோர் பீதியை அடையும் பொருட்டு, பாண்டவர்களை நீர் வீணே துதிக்கிறீர்" என்று சொன்னான் கர்ணன்.

தம் மாமன் கிருபரை அவமதித்த கர்ணனைக் கொல்லும் பொருட்டு, கத்தியை எடுத்துக்கொண்டு அசுவத்தாமா வேகமாகப் பாய்ந்தார். கோபமுற்ற சிங்கம் மதயானை ஒன்றை எதிர்க்கப்போவதை ஒப்ப, கர்ணனை எதிர்க்க முயன்றார். துரியோதனன் எதிரிலேயே கர்ணனை நோக்கி, "இழிந்தவனே! என் மாமனை நீ வெருட்டுகிறாய். ஜயத்ரதனை அர்ச்சுனன் வதம் செய்தபொழுது உன் வீரியம் எங்கே போயிற்று? மகாதேவரையே எதிர்த்துப் போர்புரிந்து அவரை மகிழ்வித்தவன் அர்ச்சுனன். மாதவரின் உதவியும் பெற்றவன் அவன். அவனை உன்னால் ஒருபோதும் ஜயிக்க முடியாது. இழிந்தவனே! இதோ உன் தலையைத் துண்டிக்கிறேன் பார்" என்று கர்ஜித்தார்.

அசுவத்தாமாவைத் துரியோதனனும் உத்தமரான கிருபரும் தடுத்தார்கள். அதற்குக் கர்ணன் துரியோதனனை நோக்கி, "கௌரவ குலச் செம்மலே! பிராமணனாகப் பிறந்துள்ள இந்த அதமனை விட்டுவிடும். என்னை எதிர்க்கும் இவன் கதியைப் பிறகு பாரும்" என்று சொன்னான்.

அதற்கு அசுவத்தாமா, "ஏ கர்ணா! நீ கொழுப்புடன்

பேசுகிறாய். நான் பொறுத்துக் கொண்டேன். உனது கொழுப்பையும் துடுக்கையும் அர்ச்சுனன் அடக்குவான்'' என்று சொன்னார்.

உடனே துரியோதனன், ''உத்தமரே! எங்களுக்காக, கர்ணன் பேசியதை நீர் பொறுத்தருள வேண்டும். துரோணர் கிருபர், சல்லியன், சகுனி, தாங்கள் ஆகியோரிடத்தில் பெரும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டு இருக்கிறது. பாண்டவர்கள் போர்க் கோலத்துடன் நெருங்கி வருகிறார்கள். இது சமயம் இத்தகைய கோபம் கூடாது'' என்று நயந்து வேண்டினான்.

அரசன் வேண்டியதால் கோபம் தணிந்து, அசுவத்தாமா சாந்தமடைந்தார்.

கிருபரும் கர்ணனை நோக்கி, ''சூதன் மகனே! நீ செய்த குற்றத்தை நான் பொறுத்துக்கொண்டேன். உனது கொழுப்பையும் கர்வத்தையும் அர்ச்சுனன் அடக்குவான்'' என்று சொன்னார்.

## புலியால் தாக்குண்ட யானை

தன் பின்னர், பாண்டவர்களுக்கும் கர்ணனுக்கும் இடையில் கடும் போர் தொடங்கிற்று. ''கர்ணா! நில். எங்களுடன் எதிர்த்துப் போர் செய்' என்று கூவி அழைத்தார்கள்.

சிலர் கோபத்தால் கண்கள் சிவக்க, கர்ணனைப் பார்த்தார்கள். ''இந்தக் கர்ணன் கர்வம்கொண்டவன்; அற்ப புத்தியுடையவன்; பாண்டவர்களை எப்பொழுதும் பகைப்பவன்; துரியோதனனுடைய போக்குக்கு இணங்கி, இவன் ஊக்கம் கொடுத்து வருவதுதான், இவ்வளவு அனர்த்தத்துக்கும் காரணம். அதனால் இவனைக் கொல்வது அவசியமாகும்'' என்று சொன்னார்கள்.

பிறகு எல்லாரும் கர்ணனை ஒருமுகமாக எதிர்த்தார்கள். பயமோ மனவருத்தமோ கொள்ளாமல் அவர்கள் எல்லாரையும் கர்ணன் எதிர்த்தான். தங்கள் பொருட்டாகக் கர்ணன் முழுமூச்சுடன் போராடுவதைக் கண்ட துரியோதனன் அகமகிழ்ந்தான். அவன் அசுவத்தாமாவை நோக்கி, ''கர்ணன் அரசர்களை எதிர்த்துப் போர்புரிகிறான். அர்ச்சுனன் கர்ணனைக் கொல்லும் எண்ணத்துடன் போர்புரிவதால், கர்ணனைக் காப்பது நம் கடமை'' என்று சொன்னான்.

ஆகவே, அசுவத்தாமா, கிருபர், சல்லியன், கிருதவர்மா ஆகியோர் கர்ணனைக் காக்கும் பொருட்டு, பார்த்தனை எதிர்த்தார்கள். கடும் போர் நடந்தது. கர்ணனும் பார்த்தனும் சளைக்காது போர் செய்தனர்.

கர்ணனுடைய தேர்ப்பாகனையும் குதிரைகளையும் அர்ச்சுனன் வதம் செய்துவிட்ட காரணத்தால், தன் தேரைவிட்டு இறங்கி, கிருபருடைய தேரில் ஏறிக்கொண்டான் கர்ணன். கர்ணன் தோல்வியுற்றதைக் கண்ட அரசர்கள், பயந்துபோய், பத்துத் திக்குகளிலும் சிதறி யோடினார்கள்.

இதைக் கவனித்த துரியோதனன் பயந்து ஓடுகின்ற அரசர்களைக் கூவி அழைத்தான். "வீரர்களே! பயந்து ஓடாதீர்கள். போர்புரிந்து பார்த்தனை நானே கொல்கிறேன். எனது பராக்கிரமத்தைப் போர்க்களத்தில் பாருங்கள். பார்த்தனை நான் வெல்வது உறுதி; பயப்பட வேண்டாம்" என்று சொன்னான்.

பிறகு பெரிய சேனை தன்னைச் சூழ்ந்து வர, பார்த்தனை எதிர்க்கத் துரியோதனன் சென்றான். இதைக் கவனித்த கிருபர் அசுவத்தாமாவிடம், "புயவலிமிக்க துரியோதனன் அர்ச்சுனனோடு போர்புரியக் கிளம்பி இருக்கிறான். பார்த்தனை எதிர்ப்பதற்கு முன்னர், துரியோதனனைத் தடுத்துவிடு. நாம் எல்லாரும் இருக்கும்பொழுது, அரசன் துரியோதனன் தனித்துப் போர்புரிவது சரியன்று. புலியால் தாக்குண்ட யானை பிழைப்பது அரிது; அதுபோல, அர்ச்சுனனால் எதிர்க்கப்படும் துரியோதனனும் உயிர்தப்புவது அரிது" என்று சொன்னார்.

தம் மாமன் கூறியதைச் செவிமடுத்த துரோண புத்திரர் "கௌரவகுலச் செம்மலே! உன் நன்மையில் நாட்டமுடைய நான் உயிருடன் இருக்கும் காலத்தில் நீ போர் செய்ய வேண்டாம். பார்த்தனை வெல்வதற்கு நீ அவசரப்பட வேண்டாம். நான் போர்புரிகிறேன்" என்று கூறினார்.

அதற்குத் துரியோதனன், "பாண்டவர்களை ஆசாரியர் தம் புதல்வர்களாகவே கருதி நடக்கிறார். அவர் இப்படி நடப்பதற்குரிய காரணம் எனக்குப் புலப்படவில்லை. எனது பாக்கியக் குறைவா? அல்லது யுதிட்டிரன்மீது அவருக்கு இருக்கும் பிரியமா? யாது என்பதை நான் அறியேன். நீரும் ஊக்கத்துடன் போர் செய்யவில்லை. உம் உதவியால்தான் மிகுதியுள்ள பகைவர்களை நாம் வெல்ல வேண்டும். பாஞ்சாலர்களை அழிப்பதற்கென்றே பிறந்தவர் நீர். பார்த்த

னுடைய அம்புகளால் அடிபட்டுப் பயந்து ஓடுகிற நம் சேனையைத் தடுத்து நிறுத்தும்" என்று நயந்து வேண்டினான்.

"துரியோதனா! நீர் கூறுவது உண்மைதான்; எனக்கும் என் தந்தைக்கும் பாண்டவர்களிடம் பிரியம் உண்டுதான். ஆயினும் அவர்களுக்கு விட்டுக்கொடுத்து நானும் என் தந்தையும் போர் செய்யவில்லை. நாங்கள் இல்லாது இருந்தால், அரைக் கணத்தில் பாண்டவர்கள் கௌரவ சேனையை நாசம்செய்து இருப்பார்கள். அரசே! நீ பேராசைக்காரன்; வஞ்சனையில் பண்டிதன்; எல்லோரையும் சந்தேகிப்பவன்; அகந்தையும் செருக்கும் உடையவன். அதனால்தான் எங்கள் அனைவரையும் நீ சந்தேகிக்கிறாய். உனக்காக இப்பொழுது நான் ஊக்கத்துடன் போர்புரிவதைக் காண்பாய்! என்னை எதிர்ப்பவர்கள் தப்ப முடியாது" என்று அசுவத்தாமா சொன்னார்.

இப்படிச் சொல்லிவிட்டு, போர்க்களத்தில் புகுந்து, அசுவத்தாமா பகைவர்களை எதிர்த்தார்; பாஞ்சாலர்களைக் குறிவைத்து அடித்தார்; தேனை விரும்பிய வண்டுகள் பூத்திருக்கும் மரத்தை மொய்ப்பதுபோல, தங்கு தடையின்றி, அசுவத்தாமாவின் கரங்களிலிருந்து அம்புகள் புறப்பட்டு, எதிரிகளைத் தாக்கின. அவர் திட்டத்துய்மனை நோக்கி, "திட்டத்துய்மனே! நில். என்னுடன் எதிர்த்து நின்று போர் செய்" என்று சொல்லி, பாணங்களால் அவனை அடித்தார்.

இதற்கு அவன், "அந்தணரே! எதற்காக நான் பிறந்திருப்பவன் என்பதை அறிவீர். துரோணரை வதம்செய்ய வேண்டுவது, நான் செய்யவேண்டிய முதல் காரியம். அதற்காகவே யாகவேதியிலிருந்து பிறந்தவன் நான். அந்தக் காரியம் முடிந்த பிறகு உம்மை நான் கொல்கிறேன். இரவு விடிவதற்குள் உம் தந்தையைக் கொல்வேன்; பிறகு உம்மையும் யமன் உலகு அனுப்புவேன். பிராமணருக்கு உரிய தொழிலை விட்டுவிட்டு, க்ஷத்திரியர் தொழிலை மேற்கொண்டு இருக்கும் உம்மைக் கொல்வது குற்றமாகாது" என்று சொன்னான்.

இதைக்கேட்டு அசுவத்தாமா கடுங்கோபம் கொண்டார். தீ எழ விழித்து, அவன்மீது அம்புகளைப் பொழிந்தார். இருவரும் சமநிலையில் நெடுநேரம் போர் செய்தார்கள். அசுவத்தாமா செய்த போரினால் பாண்டவ சேனைக்கு அழிவு நேர்ந்திருப்பதைக் கண்டு பாண்டவர்கள் வருந்தினார்கள்;

கௌரவர்கள் அசுவத்தாமாவைப் பெரிதும் பாராட்டினார்கள்.

மற்றோர் இடத்தில் சாத்யகிக்கும் சோமதத்தனுக்கும் இடையில் போர் நடந்தது; அம்புகளின் அடியினால் இருவர் உடம்புகளிலும் இரத்தம் பெருகி வழிந்தது. நெடுநேரம் நடந்த சண்டைக்குப் பிறகு, சாத்யகியின் அம்பினால் சோமதத்தன் உயிர் துறந்தான்.

யுதிட்டிரருக்கும் துரோணருக்கும் இடையில் தீவிரமான போர் நடந்தது. அடி தாங்காது துரோணர் மூர்ச்சித்து, ஒரு முறை தேர்த்தட்டில் உட்கார்ந்துவிட்டார்.

இது சமயம் வாசுதேவர் யுதிட்டிரரை நோக்கி, "அண்ணலே! அரசே! நீர் துரோணருடன் யுத்தம் செய்வதை நிறுத்திவிடும். உம்மைப் பிடிக்கும் எண்ணத்துடன் துரோணர் போர் செய்கிறார். இவருடன் நீ போர் செய்ய வேண்டாம். துரோணரைக் கொல்வதற்கு என்றே பிறந்துள்ளவன் அவரை வதம் செய்யட்டும். நீர் சென்று துரியோதனனுடன் போர் புரியும். அரசராய் இருப்பவர் அரசருடன் போர் புரிவதுதான் உசிதம்" என்று சொன்னார்.

அதன்படி யுதிட்டிரர் துரியோதனனை நாடிச் சென்றார்.

## போர் வெறி

எங்கும் இருள் பரவியபடியால், போர் வீரர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ள முடியவில்லை. அனுமானத்தால் மட்டுமே ஒருவருடன் ஒருவர் சண்டையிட்டுக்கொண்டார்கள். இனம் தெரியாமல் ஒருவரை ஒருவர் வெட்டிச் சாய்த்தார்கள். இரு பக்கத்துச் சேனைகளிலும் குழப்பம் நிலவியது.

முன் அணியில் துரோணரும், பின் அணியில் சல்லியனும் நின்று சேனையை ஊக்கினார்கள். அணிவகுப்பைப் பார்வையிட்ட துரியோதனன் தன் பக்கத்துப் போர்வீரர்களை நோக்கி, இனிய குரலில், "ஆயுதங்களை வைத்துவிட்டு, எல்லாரும் தீவட்டிகளைப் பிடியுங்கள்" என்று ஏவினான்.

அதன்படி போர்வீரர்கள் தீவட்டிகளைப் பிடித்தார்கள். வாகனங்களிலும் விளக்குகளை ஏற்றி வைத்தார்கள். யானை மீது ஐந்து, தேர்மீது மூன்று, குதிரைமீது ஒன்று என,

கௌரவர்களும் பாண்டவர்களும் விளக்குகளை ஏற்றி வைத்தார்கள். ஆயுதங்களின் ஒளி, விளக்குகளின் ஒளி, ஆபரணங்களின் ஒளி இவை எல்லாம் சேர்ந்து, போர்க்களத்தில் மிகுந்த பிரகாசத்தை உண்டுபண்ணின.

அப்போது துரியோதனன் தன் பக்கத்து வீரர்களை நோக்கி, "ஆசாரியர் துரோணர் மிகுந்த முயற்சியுடன் போரில் இறங்கியுள்ளார். பாண்டவர்களும் தீவிரமாக இருக்கின்றனர். ஆசாரியாரை நாம் முயற்சியுடன் காக்க வேண்டும். திட்டத்துய்மனனிடம் சிக்கிக் கொள்ளாமல் ஆசாரியரை நாம் காப்பாற்ற வேண்டும். அப்படி நாம் செய்தால், திட்டத்துய்மனனை அசுவத்தாமா வதம் செய்வார். கர்ணன் அர்ச்சுனனை வதம் செய்வான். பீமனை நான் வெல்வேன். இதன் பயனாய், பாண்டவ சேனை சிதறிப் போகும் நாம் அடையப் போகும் இந்த வெற்றி நீடித்த காலம் நிலைத்து நமக்குப் புகழைத் தரும்" என்று சொன்னான்.

இதன் பின்னர் இரு பக்கத்துச் சேனைகளும் ஒன்றை ஒன்று கடுமையாகத் தாக்கின. இப்படிப் போர் நடந்ததை இதுவரை யாரும் கண்டதில்லை என்னும் அளவில், அன்று இரவு கடுமையாகவும் கோரமாகவும் போர் நடந்தது.

யுதிட்டிரர் தம் பக்கத்து வீரர்களை நோக்கி, "துரோணரை வதைக்க முந்துங்கள்" என்று ஏவினார்.

கிருதவர்மாவுக்கும் யுதிட்டிரருக்கும் இடையில் நடந்த போரில் தேர் இழந்து, குதிரை இழந்து, கவசம் உடைந்து, யுதிட்டிரர் தோற்றுப் போனார். அதன் பயனாய், போர்க்களத்தைவிட்டு யுதிட்டிரர் ஓடும்படி ஏற்பட்டது.

அசுவத்தாமாவுக்கும் அரக்கன் கடோத்கசனுக்கும் இடையில் பெரும் போர் நிகழ்ந்தது. இருவரும் ஊக்கத்துடன் போராடினர். கடோத்கசன் பத்துப் பாணங்களால் அசுவத்தாமாவின் மார்பில் அடித்ததால், காற்றால் அடிக்கப்பட்ட மரம்போல் அவர் நடுங்கினார். மூர்ச்சையடைந்து கொடி மரத்தில் சாய்ந்தார். துரோண புத்திரர் மாண்டுவிட்டார் என்றே அரசர்கள் கருதினார்கள்.

மூர்ச்சை தெளிந்து, அசுவத்தாமா கடோத்கசனைத் திருப்பி அடித்தார். அவர் விடுத்த அம்பு கடோத்கசனின் மார்பைப் பிளந்ததால், அவன் மூர்ச்சை யுற்றான். அதனால் அவனுடைய சாரதி அவனை வேறு ஓர் இடத்துக்குக் கொண்டு போனான்.

பீமசேனனுக்கும் துரியோதனனுக்கும் போர் நடந்தது. பீமன் தனது கதாயுதத்தைச் சுழற்றித் துரியோதனன்மீது எறிந்ததால், துரியோதனனின் குதிரைகளும் தேரும் நாசமாயின; தேர்ப்பாகனும் உயிர் நீத்தான்.

தேர் இழந்த துரியோதனன் வேறு ஒரு தேரில் ஏறிக் கொண்டான். 'அரசன் மாண்டு விட்டான்' என்று போர் வீரர்கள் எண்ணினார்கள். "ஆ ஆ" என்று கூச்சலிட்டு அலறினார்கள். துரியோதனன் மாண்டுவிட்டதாகக் கருதி, யுதிட்டிரர் பீமனிடம் வந்தார்.

துரோணரை எதிர்த்து வருகின்ற சகதேவனைக் கர்ணன் தடுத்தான். அவனுடைய ஆயுதங்களை எல்லாம் அறுத்து எறிந்தான். தாக்குப் பிடிக்க முடியாமல், போர் செய்வதைச் சகதேவன் நிறுத்திக் கொண்டான். கர்ணன் அவனைத் தொடர்ந்து சென்று, "பயந்தவனே! மேம்பட்ட போர் வீரர்களுடன் போர் புரிய ஆசைப்படாதே. உனக்குச் சமமான அருகதையுள்ளவர்களுடன் நீ போர் புரி!" என்று சொல்லி, சகதேவனைத் தனது அம்பினால் குத்தினான். சகதேவனை வதம் செய்வதற்கு வாய்ப்பு இருந்தும், குந்தியின் வார்த்தைகளை மனத்தில் கொண்டு அவனைக் கர்ணன் கொல்லாது விட்டு விட்டான்.

கர்ணனுடைய சொல்லம்பினாலும் வில்லம்பினாலும் துன்புற்ற சகதேவன் மனம் நொந்து வருந்தினான். தன் உயிர்மீதே வெறுப்புற்றான்.

விராடனும் சல்லியனும் ஒருவரை யொருவர் தாக்கிக் கொண்டார்கள். விராடன் மூர்ச்சையுற்றதால் தேர்ப்பாகன் அவனை அப்பால் கொண்டு போனான். பாண்டவ சேனை நிலை குலைந்து ஓடத் தலைப்பட்டது. இதைக் கவனித்த வாசுதேவரும் அர்ச்சுனனும் சல்லியனிடம் விரைந்தார்கள்.

இது சமயம் அலாயுதன் என்னும் அரக்கன் அர்ச்சுனனை எதிர்த்தான். அர்ச்சுனன் வில்லால் அடித்து, அவனைப் புறங் காட்டி ஓடும்படி செய்துவிட்டான்.

போர் தீவிரமாக நடந்தது; வெறியுடன் நடந்தது. இருள் பரவிய இரவில் நடந்தபடியால் ஒருவரை யொருவர் அறியாமல் வதம் செய்துகொண்டார்கள். தந்தை மகனைக் கொன்றான்; மகனைத் தந்தை கொன்றான்; மாமனை மருமகன் கொன்றான்; மருமகனை மாமன் கொன்றான். நண்பனா பகைவனா என்பதைக்கூட அறிந்துகொள்ள முடியாமல், ஒருவரை ஒருவர் தாக்கி, அந்தப் போர்க்களத்தில் மடிந்தார்கள்.

# கடோத்கசன் போர் செய்யட்டும்

தொடர்ந்து போர் கோரமாக நடந்தது. துரோணரைத் திட்டத்துய்மனன் எதிர்த்தான். துரோணரும் பதிலுக்குத் திட்டத்துய்மனனை எதிர்த்தார். போர் தீவிரமாக நடந்ததால், துரோணர் உயிருக்குத் தீங்கு நேரிடலாம் என்று வீரர்கள் கருதினார்கள். 'துரோணருக்கு மங்களம், துரோணருக்கு மங்களம்' என்ற வாழ்த்து ஒலியை எழுப்பினார்கள்.

கர்ணன், துரியோதனன், அசுவத்தாமா, சல்லியன், சகுனி, துச்சாதனன், துரோணர் ஆகிய எழுவரும் ஒரே சமயத்தில் திட்டத்துய்மனனைத் தாக்கினார்கள். மனங்கலங்காமல் அவர்கள் எழுவரையும் திட்டத்துய்மனன் எதிர்த்தான். கர்ணனுடைய வில்லையும் அம்பால் அறுத்து எறிந்தான். வால் அறுபட்ட சிங்கம்போல, கர்ணன் உள்ளம் குமைந்து குமுறினான். வேறு ஒரு வில்லை எடுத்து, திட்டத்துய்மனனை எதிர்த்தான்.

இது சமயம் திட்டத்துய்மனனுக்கு உதவியாகச் சாத்யகி வந்து சேர்ந்தான். காண்டீபத்தின் ஒலியும் போர்க்களத்தில் மிகுதியாகக் கேட்டது.

அப்போது கர்ணன் துரியோதனனிடம், "பார்த்தன் வெற்றி வீரனாகத் திகழ்கிறான். நிலைபெற்று நின்று போராடாமல் சேனை நிலைகலங்கி ஓடுகிறது. சாத்யகி நம்மை எதிர்த்துப் போர் புரிகிறான். திட்டத்துய்மனன் துரோணரை எதிர்த்து நிற்கிறான். இவர்கள் இருவரையும் வென்றால் வெற்றி நமக்கு எளிதில் கைகூடும். சாத்யகியை நாம் சூழ்ந்து கொண்டிருப்பது பார்த்தனுக்குத் தெரியாதபடி படையினரை அனுப்பிப் பார்த்தனைத் தடுக்க வேண்டும்; சாத்யகியை வதம் செய்வதற்கான ஏற்பாட்டைச் சடுதியில் செய்ய வேண்டும்" என்று யோசனை சொன்னான்.

இதற்குத் துரியோதனன் உடன்பட்டான். தன் மாமன் சகுனியை நோக்கி, "மாமா! பதினாயிரம் யானை, பதினாயிரம் தேர்கள் சூழ்ந்து வர, நீங்கள் பார்த்தனை எதிர்க்கப் புறப்படுங்கள். பஞ்ச பாண்டவர்களையும், கிருஷ்ணனையும் வதம் செய்யுங்கள். தாமதம் வேண்டாம்" என்று சொன்னான்.

துரியோதனன் சொன்னபடி படையுடன் சகுனி புறப்பட்டுச் சென்றான். கர்ணன் சாத்யகியை எதிர்த்தான். கௌரவப் படையினர் நாற்புறமும் சூழ்ந்துகொண்டு

சாத்யகியை எதிர்த்தார்கள். புயவலிமிக்க சாத்யகி தனியனாக அப்பெரும் படையைச் சமாளித்தான். அனேக பாணங்களை ஏவி, பெரும் பகுதியை வதம் செய்தான். அடி தாங்க மாட்டாது படையினர் அலறினார்கள். எங்கும் அந்தகாரம் சூழ்ந்து பயங்கரமாய் இருந்தது. கோரமான அலறலைச் செவிமடுத்த துரியோதனன் தன் தேர்ப்பாகனிடம், "அலறல் வருகின்ற திசையில் தேரைத் திருப்பு" என்று சொன்னான்.

அதன்படி, பாகன் சாத்யகியின் தேர் நிற்கும் பக்கமாகத் துரியோதனனின் தேரைத் திருப்பினான். சாத்யகிக்கும் துரியோதனனுக்கும் இடையில் போர் நடந்தது. துரியோதனன் சாத்யகியிடம் தோல்வியுற்று, கிருதவர்மாவின் தேரில் ஏறிக்கொண்டான்.

அர்ச்சுனனைச் சுற்றி வளைத்துக்கொண்டு சகுனி போர் தொடுத்தான். அர்ச்சுனன் அவனை எதிர்த்து அடித்தான். சகுனியையும் அவனுடன் வந்திருந்த சேனையையும் அர்ச்சுனன் சிதறடித்துவிட்டான்.

சேனை சிதறுண்டு ஓடுவதைக் * கண்டு துரியோதனன் வருத்தமுற்றான். கர்ணனும் துரோணரும் இருக்கும் இடத்தை அடைந்தான். "ஆற்றல் மிக்கவர்களாய் இருந்தும், நீங்கள் இருவரும் பாண்டவர்களை எதிர்க்காமல் இருக்கிறீர்கள் எனது சேனை சிதறி ஓடுவதைக் கண்டும் அலட்சியமாக இருக்கிறீர்கள். இந்த எண்ணம் முன்பே உங்களுக்கு இருக்குமானால் 'பாண்டவர்களை நாங்கள் நாசம் செய்வோம்' என்று என்னிடம் வீரவாதம் பேசி இருக்க வேண்டாம். நானும் பாண்டவர்களைப் பகைத்துக்கொண்டு இருக்க மாட்டேன். என்னைக் கைவிடும் எண்ணம் உங்களுக்கு உண்மையிலேயே இல்லையாயின் அர்ச்சுனனை ஊக்கத்துடன் தாக்குங்கள்" என்று சொன்னான்.

இப்படித் துரியோதனன் வெகுண்டு கூறியதும் கர்ணனும் துரோணரும் தங்கள் திறமை எல்லாம் காட்டிப் போர் செய்தார்கள் பாஞ்சாலர் சேனைக்குத் துரோணர் பெருத்த அழிவை உண்டு பண்ணினார். பயந்து அவர்கள் ஓட்டமெடுத்தார்கள்.

இதைக் கவனித்த கண்ணன் அர்ச்சுனனிடம் விவரத்தைத் தெரிவித்தார். இருவரும் ஓடுகின்ற பாண்டவ சேனையை நோக்கி, "வீரர்களே! பயந்து ஓடாதீர்கள். நாங்கள் இருவரும் துரோணரையும் கர்ணனையும் எதிர்க்கிறோம்" என்று சொன்னார்கள்.

இது சமயம் ஓடுகின்ற பாண்டவ சேனையை மடக்கித் திருப்பி வந்தான் அர்ச்சுனன். இதைக் கண்டு கண்ணன் மகிழ்ச்சி அடைந்தார். பீமனும் அர்ச்சுனனும் கௌரவ சேனையைத் தாக்கினார்கள்.

பதிலுக்குக் கர்ணன் பாண்டவ சேனையைத் தாக்கினான். அந்தச் சேனை, சிங்கத்தால் விரட்டப்படும் பெண் மான்கள் போல, நாலா பக்கமும் சிதறி ஓடியது. யானைகளிலிருந்தும், குதிரைகளிலிருந்தும் அம்புகளால் அடிபட்டு, வீரர்கள் உயிரிழந்து கீழே விழுந்தார்கள். பாண்டவ சேனை பயந்து ஓடுவதை யுதிஷ்டிரர் கவனித்தார். தாமும் ஓட விரும்பினார். அப்போது அவர் பார்த்தனை நோக்கி, "கர்ணனின் போர்த் திறமையைப் பார். அவன் விடும் அம்புகளால் துன்புற்று, பாண்டவ சேனை கதறிக்கொண்டு ஓடுவதைக் கவனி. தாமதியாது கர்ணனை நாம் வதம் செய்யாவிட்டால், நாம் அழிந்தோம்" என்று சொன்னார்.

உடனே அர்ச்சுனன், "மாதவரே! கர்ணனுடைய வீரத்தைக் கண்டு அரசர் யுதிஷ்டிரர் பயந்துவிட்டார். நமது படை நிலைகுலைந்து சிதறி ஓடுகிறது. கர்ணன் போர்க்களத்தில் புரிகின்ற அட்டகாசத்தைப் பொறுத்துக்கொண்டிருக்க என் மனம் ஒப்பவில்லை. ஆகையால் தேரைக் கர்ணன் பக்கம் திருப்பும். ஒன்று அவனை நான் கொல்கிறேன். அல்லது அவன் என்னைக் கொல்லட்டும்" என்று சொன்னான்.

அதற்கு வாசுதேவர், 'குந்தி மைந்தனே! கர்ணன் திறமையாகப் போர் புரிபவன்; உன்னையும் கடோத்கசனையும் தவிர்த்து வேறு எவராலும் கர்ணனை எதிர்க்க முடியாது. இது சமயம் கர்ணனை நீ எதிர்க்க வேண்டாம். இந்திரன் கொடுத்த சிறந்த சக்தியாயுதம் ஒன்றை உன்னைக் கொல்லும் பொருட்டுக் கர்ணன் வைத்திருக்கிறான். ஆகவே, இப்போது கர்ணனைக் கடோத்கசன் எதிர்த்துச் செல்லட்டும். அவன் சிறந்த பராக்கிரமசாலி; பீமனுக்கு மைந்தன். உங்களுக்கு நன்மை செய்வதில் எப்பொழுதும் நாட்டமுள்ள அவன், கர்ணனை வெல்வான் என்பதில் ஐயம் இல்லை" என்று சொன்னார்.

அர்ச்சுனன் உடனே கடோத்கசனைத் தன்பால் அழைத்தான். கடோத்கசன் வந்து கண்ணனையும் அர்ச்சுனனையும் வணங்கினான். பிறகு கண்ணனிடம், "நான் வந்துவிட்டேன்; செய்ய வேண்டியதைக் கட்டளையிடுங்கள்" என்று சொல்லிக் கேட்டான்.

கடோத்கசன் இப்படிக் கேட்டதும் கண்ணன் சிரித்தார். அவர், "கடோத்கசா! உனது ஆற்றலை வெளிப்படுத்த வாய்ப்பு ஏற்பட்டு இருக்கிறது. போரில் ஈடுபட்டு இருக்கும் உன் உறவினர்களுக்கு உதவி செய். அரக்கர்களின் மாயையைக் காட்டுவதற்கு இதுதான் ஏற்ற சமயம். மற்ற விலங்குகளைச் சிங்கம் துரத்தி அடிப்பதுபோலப் பாண்டவர் சேனையைக் கர்ணன் துரத்தி அடிப்பதைப் பார். உன்னைத் தவிர்த்து வேறு எவராலும் கர்ணனைத் தடுத்து நிறுத்த முடியாது. போரில் ஈடுபட்டுள்ள பாண்டவர்களை நீ கரையேற்ற வேண்டும். இரவு நேரத்தில் அரக்கர்களுக்கு ஆற்றல் அதிகம். ஆகையால் உனது மாயையைக் காட்டி, கர்ணனைக் கொல்" என்று சொன்னார்.

கண்ணன் இப்படிச் சொன்ன பிறகு, அர்ச்சுனன் கடோத்கசனை நோக்கி, "உன்னையும் சாத்யகியையும் நான் பெரிதும் மதிப்பவன்; இரவில் கர்ணனுடன் போர் புரிய வேண்டும். தாரகாசுரனை, சுப்பிரமணியர் வதம் செய்வதைப்போல், கர்ணனை நீ வதம் செய்" என்று சொன்னான்.

"புயவலி மிக்கவரே! தங்கள் கருத்துப்படி நடக்க நான் சித்தமாய் இருக்கிறேன். கர்ணனையும் துரோணரையும் மற்ற வீரர்களையும் கொல்ல எனக்குப் போதிய ஆற்றல் உண்டு. அரக்கர் குலமுறையைப் பின்பற்றி, நான் என்னை எதிர்ப்பவர்களை வதைப்பேன். இது உறுதி" என்று சொல்லி, போர் செய்ய விரைந்தான் கடோத்கசன்.

## அலாயுதன்

கர்ணனுடன் போர் தொடுக்க வரும் கடோத்கசனைத் துரியோதனன் கவனித்துவிட்டான். அவன் தன் தம்பி துச்சாதனனை நோக்கி, "கர்ணனை எதிர்ப்பதற்கு அரக்கன் விரைகிறான். அவனைத் தடுத்து நிறுத்து. பெரிய படையை அழைத்துக்கொண்டு, கர்ணனிடம் செல்" என்று சொன்னான்.

இது சமயம் சடாசுரன் புதல்வன் துரியோதனனை அணுகி, "அரசே! நீர் கட்டளையிட்டால், உம் பகைவர்கள் பாண்டவர்களை அவர்கள் துணைவர்களுடன் வதம் செய்கிறேன். என் தந்தையின் மரணத்துக்கு இவர்கள் காரணமாயிருந்தவர்கள்; ஆகையால் அவர்களை வதம் செய்து, அவர்களின் சதை

யாராலும், குருதியாலும் என் தந்தையை மகிழ்விக்க நான் விரும்புகிறேன்'' என்று சொல்லி வேண்டினான்.

''கர்ணன், துரோணர் முதலியவர்களின் உதவியினாலே பகைவர்களை நான் வெல்ல முடியும். நீ சென்று அரக்கன் கடோத்கசனுடன் போர் செய்து, அவனைக் கொல்'' என்று சொன்னான் துரியோதனன்.

பருத்த சரீரமுள்ள அவன் ''ஆகட்டும்'' என்று சொல்லிப் புறப்பட்டான்.

கடோத்கசனுக்கும் அலம்பலன் என்ற அந்த அரக்கனுக்கும் இடையில் கடும் போர் நடந்தது. சாக்குச் சப்தமிட்டுக் கொண்டு, அலம்பலனுடைய தேரையும் குதிரைகளையும் தேர்ப் பாகனையும் கடோத்கசன் அழித்தான். இதனால் கோபமுற்ற அலம்பலன் கடோத்கசனைக் கையால் குத்தினான். இரண்டு கைகளாலும் அவனைப் பிடித்து இழுத்து, தூரத்தில் வீசி எறிந்தான் கடோத்கசன். இந்திரனும் மகாபலியும் போல, இருவரும் போர்செய்தார்கள். பல மாயைகள் காட்டி நடந்த பெரும் போருக்குப் பிறகு, அலம்பலனைத் தூக்கி, கடோத்கசன் பூமியில் ஓங்கி அடித்தான். அலம்பலன் அலறிக் கொண்டு பூமியில் கிடந்தான்.

உடனே கடோத்கசன் வாளை உருவி, விகாரமாகக் கத்தும் அந்த அலம்பலன் தலையை உடலிலிருந்து துண்டித்தான். பிறகு அந்தத் தலையை மயிர்களால் பிடித்துத் தூக்கிக் கொண்டு, துரியோதனனுடைய தேரை நாடிப் போனான்; தலையிலிருந்து இரத்தம் ஒழுகிக்கொண்டிருந்தது.

கடோத்கசன் தேரை அணுகி, அந்தத் தலையைத் துரியோதனனின் தேர்மீது வைத்தான். ''உன் உறவினன் கொல்லப் பட்டான். அவன் வல்லமையை நீ தெரிந்துகொள். அவனுக்கு ஏற்பட்ட முடிவுதான் உனக்கும் கர்ணனுக்கும் ஏற்படப் போகிறது. அரசனைப் பார்க்கும்போது வெறுங் கையோடு பார்க்கக் கூடாது என்பது விதி'' என்று சொன்னான்.

இவ்வாறு சொல்லிவிட்டு, கர்ணனைக் கடோத்கசன் எதிர்த்தான். கர்ணன் உரக்கச் சிரித்துக்கொண்டு, கடோத்கசனைத் தடுத்தான். யானையை எதிர்த்து யானையும், காளையை எதிர்த்துக் காளையும் போர்செய்வதுபோல் இருவரும் போர் செய்துகொண்டார்கள். நகங்களால் போர் செய்துகொள்ளும் புலிகளைப் போலவும் தந்தங்களால்

போரிட்டுக்கொள்ளும் யானைகள் போலவும் இருவரும் சண்டையிட்டுக்கொண்டார்கள்.

இருவரும் நெடுநேரம் சமமாகவே போர் செய்தார்கள். பிறகு கடோத்கசனை மீற முடியாத நிலை ஏற்பட்டதும், கர்ணன் தேவலோகத்து அஸ்திரங்களைப் பயன்படுத்தத் தொடங்கினான். கடோத்கசனோ அரக்கர்களுக்கு உரிய பெரிய மாயைகள் எல்லாம் காட்டிப் போர் செய்தான். அம்பு எய்து அந்த மாயைகளைக் கர்ணன் அழித்தான்.

போர் இப்படி நடந்த சமயம் அலாயுதன் என்னும் அரக்கன் துரியோதனனை அணுகினான். இவன் பகன், இடிம்பன் கிர்மிரன் இவர்களுக்கு உறவினன். பீமனிடம் நெடு நாளாகப் பகைமை கொண்டிருப்பவன்; பீமனையும் அவன் உறவினர்களையும் கொல்ல விருப்பம் உள்ளவன். அவன் துரியோதனனை நோக்கி, "அரசே! என் உறவினர்களான பகன், இடிம்பன், கிர்மிரன் ஆகிய அரசர்களைப் பீமன் கொன்றான். இடிம்பியை அனுபவித்தான். எங்களை அலட்சியப் படுத்திய பீமனையும் இடிம்பியின் புதல்வனையும் கொல்லும் பொருட்டு நான் வந்திருக்கிறேன். கண்ணன் முதலாகப் பாண்டவர்கள் அனைவரையும் கொன்று, நான் தின்னப் போகிறேன். எனக்கு அனுமதி கொடு" என்று சொன்னான்.

"அரக்கனே! நீ முன்னே சென்று, போர் செய் நாங்களும் தொடர்ந்து வந்து போர்செய்கிறோம்" என்று துரியோதனன் சொன்னான்.

தன் பரிவாரத்தினரை அழைத்துக்கொண்டு அலாயுதன் கடோத்கசனை எதிர்த்தான்.

அலாயுதன் தங்கள் சார்பாகப் போர்புரிய வந்ததைக் குறித்து, கௌரவர்கள் ஆனந்தம் அடைந்தார்கள்.

கர்ணன் கடோத்கசனுடன் போர்புரிந்துகொண்டு இருந்தான். இரவு நேரத்தில் அரக்கனை எதிர்க்கக் கூடாது என்ற காரணத்தால், அசுவத்தாமா, கிருபர், துரோணர், சல்லியன், கிருதவர்மா ஆகியோர் கர்ணனுக்கு உதவியாகக் கடோத்கசனை எதிர்த்துப் போர்புரியவில்லை. கடோத்கசனைச் சமாளிக்க முடியாது கர்ணன் தத்தளித்தான்.

ஆகவே, துரியோதனன் அலாயுதனிடம் "வீரனே, கடோத்கசனோடு கர்ணன் போர்புரிந்துகொண்டு இருக்கிறான். நீ விரைந்து சென்று உன் பராக்கிரமத்தைக் காட்டி, கடோத்கசனை வதம் செய். இல்லையேல் கர்ணனை அவன் கொன்றுவிடுவான்" என்று சொன்னான்.

"ஆகட்டும்" என்று சொல்லி அலாயுதன் விரைந்தான்.

கர்ணனைத் தாக்குவதைவிட்டு, அலாயுதனைக் கடோத்கசன் எதிர்த்தான்.

பகன் தம்பியான அலாயுதனுக்கும் கடோத்கசனுக்கும் பெரும் போர் நடந்தது. வாலியும் சுக்ரீவனும் சண்டையிட்டுக்கொண்டதைப்போல், இந்த இரு அரக்கர்களும் சண்டையிட்டுக்கொண்டார்கள். கடைசியில் கடோத்கசன் அலாயுதனை வென்று அவன் தலையை அறுத்தான்.

பாண்டவர் தரப்பினர் பெரு முழக்கம் செய்தார்கள்; பேரிகைகளை முழக்கினார்கள்; சங்கங்களை ஊதி, பெருத்த ஆரவாரம் செய்தார்கள்.

தான் அறுத்த அலாயுதன் தலையை, கடோத்கசன், துரியோதனனுக்கு முன் வீசி எறிந்தான். இதனால் துரியோதனனும் அவன் தம்பியரும் பெரு வருத்தமுற்றனர்.

## கண்ணன் அடைந்த ஆனந்தம்

அலாயுதன் என்ற அரக்கனைக் கொன்றுவிட்டு, கடோத்கசன் வெற்றி வீரனாகத் திகழ்ந்தான். கௌரவர்களோ பீதியுற்றுத் தவித்தார்கள்.

அசையாமல் இருந்துகொண்டு பகைவர்களைக் கர்ணன் எதிர்த்தான். பலரை அம்பு எய்து கொன்றான். பாண்டவர்களின் சேனை, கர்ணனின் ஆற்றலைச் சமாளிக்க முடியாமல் திணறியது; புறங்காட்டியோடவும் தலைப்பட்டது.

• இதைக் கண்டதும் கடோத்கசன் சினந்து எழுந்தான். கர்ணனை அணுகி அம்பால் அவனைப் பிளந்தான். இருவருக்குமிடையே ஆயுதப் போர் நெடு நேரம் நடந்தது. ராகுவும் சூரியனும் சண்டையிட்டுக்கொள்வதுபோல் இருவரும் சண்டையிட்டுக்கொண்டார்கள். கர்ணன் திணறினான். பிறகு சிறந்த ஆயுதம் ஒன்றை ஏவி, கடோத்கசனுடைய தேர்ப்பாகனையும் குதிரைகளையும் கொன்றான்; தேரைப் பொடிப் பொடியாகச் செய்தான்.

தேரை இழந்த கடோத்கசன் கண்களுக்குப் புலப்படாமல் மறைந்துகொண்டான். இதைக் கண்டதும் கௌரவ வீரர்கள் பயந்து நடுங்கினார்கள். "கபட யுத்தம்

செய்கிற கடோத்கசன் கர்ணனைக் கொல்லாமல் விடமாட்டான்" என்று கூவினார்கள்.

இந்த மாயையை அகற்றுவதற்காக, கர்ணன் அம்புகளைச் சரமாரியாகத் தொடுத்து, சகல திக்குகளையும் மூடினான். இதனால் மாயை வெளிப்பட்டது. செம்மேகம் போன்ற பிரகாசம் ஒன்று ஆகாயத்தில் தென்பட்டது.

அந்த மாயையிலிருந்து மின்னல்கள் தோன்றின; இடிமுழக்கங்கள் பயங்கரமாக ஒலித்தன; அம்புகள், ஈட்டிகள், சூலங்கள், தோமரங்கள், கோடாரிகள், கதைகள், கற்கள் இவை எல்லாமே ஆகாயத்திலிருந்து பொலபொலவென்று உதிர்ந்தன. இவற்றைத் தடுத்து நிறுத்த முடியாது கர்ணன் திணறினான்.

கௌரவ சேனை துன்புற்றுத் தவித்தது; கூகூ என்று அலறி ஏங்கிற்று. அரக்கர்கள் கூட்டம் கூட்டமாகத் தோன்றி ஆயுதங்களை வாரி இறைத்துக் கௌரவப் படையைத் தாக்கினார்கள். தலை உடைந்தும் உடல் வெட்டுண்டும் வீரர்கள் தரையில் விழுந்தார்கள்; குதிரைகளும் யானைகளும் கொல்லப்பட்டுத் தரையில் விழுந்தன; கெஞ்சுகிறவனையும் பயந்தவனையுங்கூட மிச்சம் வையாமல் அரக்கர்கள் அடித்து வீழ்த்தினார்கள். "கௌரவர்களே! ஓடுங்கள். பாண்டவர்களை வெல்ல முடியாது; ஆகவே ஓடுங்கள்" என்று கூவிக்கொண்டே ஓட்டம் பிடித்தார்கள்.

கர்ணன் நிலைகலங்காது போர்க்களத்தில் நின்று அம்புமாரிகளைச் சமாளித்தான். கடோத்கசன் விட்ட சதக்னி என்ற ஆயுதம் கர்ணனுடைய நான்கு குதிரைகளையும் ஒரே சமயத்தில் கொன்றது. இதனால் வருத்தமடைந்து, தேரிலிருந்து கர்ணன் இறங்கிக்கொண்டான்.

இது சமயம் கௌரவர்கள் கர்ணனை [illegible], "சக்தியாயுதத்தை எடுத்து, கடோத்கசனைக் கொல். இந்திரன் உனக்கு அளித்த ஆயுதத்தை ஏவு. இவனை வதம் செய். இல்லையேல் எல்லோரையும் இவன் அவசியம் கொன்றுவிடுவான்" என்று கூவினார்கள்.

கௌரவர்களின் அலறல் கர்ணனைக் கோபம் கொள்ளச் செய்தது. அர்ச்சுனனைக் கொல்லும் பொருட்டு, பல ஆண்டுகளாகத் தான் பூசித்துவந்த வைஜயந்தி என்னும் அந்த ஆயுதத்தைக் கர்ணன் கடோத்கசன்மீது ஏவ முடிவு செய்தான். தனது இரு குண்டலங்களையும் இந்திரனுக்குக்

கொடுத்து, அவற்றுக்குப் பதிலாக இந்திரனிடமிருந்து கர்ணன் பெற்ற சிறந்த ஆயுதம் இது.

இதைக் கர்ணன் கடோத்கசன் மீது பிரயோகித்தான். சக்தியாயுதத்தைக் கண்டதும் கடோத்கசன் பயந்து போனான். தன் உடம்பை விந்திய பர்வதம்போல் பெரிதாக்கிக்கொண்டு ஓட்டம் பிடித்தான்.

சக்தியாயுதம் பிரயோகிக்கப்பட்டவுடனே பறவைகளும் விலங்குகளும் அலறின; புயல் காற்று கோரமாக வீசியது. முழக்கத்துடன் இடிகள் பூமியில் வீழ்ந்தன; சக்தியாயுதம் கடோத்கசன் மார்பைத் துளைத்தது. உயிரிழந்து கடோத்கசன் தலைகீழாக விழுந்தான்.

பெரிய தேகத்துடன் விழுந்த காரணத்தினால், பாண்டவர்களுக்கு ஒரு நன்மையை அவன் செய்தான். கடோத்கசன் உடல் விழுந்த இடத்தில் நின்ற கௌரவ வீரர்கள் துகள் துகளாக, நசுங்கி, உயிரை நீத்தார்கள்.

கடோத்கசன் மாண்டதைக் கண்டதும் மிஞ்சியிருந்த கௌரவ வீரர்கள் பெருத்த ஆரவாரம் செய்தார்கள். கர்ணனை வெகுவாகப் பாராட்டினார்கள்.

மாண்டு, மலைபோல் மண்ணில் கிடக்கின்ற கடோத்கசனைக் கண்டு, பாண்டவர்கள் கண்ணீர் உகுத்து அழுதார்கள். ஆனால், கண்ணனோ மகிழ்ச்சி தாங்காது பெரு முழக்கம் செய்தார். அர்ச்சுனனைக் கட்டித் தழுவிக்கொண்டார். ஆனந்த மிகுதியால் குதித்தார்; அர்ச்சுனனைத் தட்டிக் கொடுத்தார்; மீண்டும் கட்டிக்கொண்டு, தனது ஆனந்தத்தை வெளிப்படுத்தினார்.

இதைக் கவனித்த பார்த்தன் அதிக ஆச்சரியம் அடைந்தான். மனவருத்தத்துடன் இருந்த அவன், வாசுதேவர் ஆனந்தப்படுவதற்குரிய காரணத்தைக் கேட்டான்.

"வாசுதேவரே! பீமன் புதல்வன் மாண்டதை அறிந்து வருத்தமுற்று நாங்கள் கண்கலங்கி நிற்கிறோம். தாங்களோ ஆனந்தக் கூத்தாடுகிறீர்கள். இதற்குக் காரணம் யாது? காரணம் இல்லாமல் நீர் ஆனந்தப்பட மாட்டீர் அன்றோ? உமது நடத்தை எனக்குப் பெரும் வியப்பை அளிக்கிறது" என்று சொல்லி அர்ச்சுனன் கேட்டான்.

"தனஞ்சய! நான் ஏன் பெரு மகிழ்ச்சியுடன் இருக்கிறேன் என்பதற்குரிய காரணத்தைக் கேள். சக்தியாயுதத்தைக் கர்ணன் செலவிட்டுவிட்டதனால், இனி அவன்

உயிருடன் இரான். கர்ணன் கவசத்தை இழந்தான்; குண்டலங்களை இழந்தான்; இப்பொழுது சக்தியாயுதத்தை இழந்தான். இவை மூன்றும் கர்ணனிடம் தங்கி இருக்குமேயானால், தான் ஒருவனாகவே நின்று மூன்று உலகங்களையும் கர்ணன் வெல்வான். உனது காண்டீபமும், சுதர்சனம் என்ற எனது சக்கரமும் கர்ணனை வெல்லப் பயன்படாமல் போயிருக்கும்; கர்ணனைப் போர்க்களத்தில் நீ வெல்ல முடியாது போயிருக்கும். உன் நன்மைக்காக இந்திரன் கர்ணனிடமிருந்து கவச குண்டலங்களை அபகரித்தான். தான் பெற்றுக்கொண்ட கவச குண்டலங்களுக்குப் பதிலாக, இந்திரன் அளித்த ஆயுதம் சக்தியாயுதம். அந்த ஆயுதத்தை அடைந்த கர்ணன் உன்னை வென்றுவிடலாம் என்ற கருத்துடன் இருந்து வந்தான்.

"கர்ணன் அந்தணர்களை ஆதரிப்பவன்; உண்மை பேசுபவன்; தவமுள்ளவன்; உறுதியான நியமமுள்ளவன், பகைவர்களிடத்திலும் கருணை காட்டுபவன்; தர்மசீலன்; திறமையாகப் போர் செய்யத் தெரிந்தவன்; இவனை எளிதில் யாராலும் வெல்ல முடியாது. ஓர் உபாயத்தினால்தான் இவனை வெல்லலாம். சக்ரம் அமிழ்ந்து, பலம் குன்றி, சோர்ந்திருக்கும் காலத்தில் அவனை அடிக்கவேண்டும். ஜராசந்தன், சிசுபாலன், ஏகலைவன் ஆகியோர் உன் நன்மையின் பொருட்டாய், நான் செய்த உபாயத்தால் உயிர் நீத்தார்கள்" என்று சொன்னார்.

கடோத்சசன் சொல்லப்பட்டதை அறிந்து தர்மநந்தனர் தளர்ச்சியுற்றார். கண்ணீர் வடித்துக்கொண்டு தேரில் உட்கார்ந்திருந்தார். கர்ணனை வெல்ல முடியாது என்ற சந்தேகம் அவரை வாட்டிற்று.

இதைக் கவனித்த கண்ணன், "வேந்தே! உம்மைப் போன்றவர்கள் வருத்தமுற்று, தளர்ச்சி அடைதல் கூடாது. எழுந்து போர் செய்யும். இல்லையேல் வெற்றி கிட்டாது" என்று சொன்னார்.

கண்ணன் இவ்வாறு சொன்னதும், யுதிட்டிரர் தம் கண்களைத் துடைத்துக் கொண்டார். "மாதவரே! பாலனாய் இருந்தும், காம்யக வனத்தில், அர்ச்சுனன் இல்லாத சமயத்தில் எங்களைக் கடோத்கசன் பாதுகாத்தான். எங்களைச் சுமந்துகொண்டு கந்தமாதான பர்வதத்தைக் கடந்தான். கடோத்கசனிடத்தில் எனக்கு அளவு கடந்த அன்பு;

சகதேவனை நேசிப்பதைப்போலவே அவனையும் நான் நேசித்தேன்; அவனும் என்னை அளவு கடந்து நேசித்தான். அர்ச்சுனன் இல்லாத சமயத்தில் அபிமன்யு போர்க்களத்தில் வீர மரணம் எய்தினான். கர்ணனும் துரோணரும் தான், ஊன்று கோலாய் இருந்து, துரியோதனனை ஊக்குவிக்கிறார்கள். ஆகவே, கர்ணனை நான் வதம் செய்யப்போகிறேன்" என்று சொன்னார்.

இவ்வாறு சொல்லிவிட்டு, யுதிஷ்டிரர் போருக்கு எழுந்தார். ஆச்சரியமுற்றுப் பலரும் இதைப் பார்த்தபோது வியாச முனிவர் யுதிஷ்டிரரை அணுகினார். அவர் யுதிஷ்டிரரிடம் "கர்ணனை வதம் செய்ய அர்ச்சுனன் இருக்கிறான். சக்தியாயுதத்தைக் கர்ணன் இழந்துவிட்டதால் அர்ச்சுனன் வெல்வது எளிது. கவலைப்படாமல் மேலே காரியங்களைச் செலுத்து. இன்னும் ஐந்து நாட்களில் உலகம் முழுவதும் உனக்கு வசப்பட்டுவிடும்" என்று சொல்லிவிட்டு, அந்த இடத்திலேயே வியாச மகரிஷி மறைந்தார்.

வியாசர் சொல்லி மறைந்தவுடன், கர்ணனைக் கொல்லும் எண்ணத்தை விட்டு, யுதிஷ்டிரர் திரும்பினார். இரவு முழுவதும் தூங்காமல் கோபத்துடன் இருந்தார். அவர் திட்டத்துய்மனை நோக்கி "துரோணரைக் கொல்லும் பொருட்டு, நெருப்பிலிருந்து தோன்றியவன் நீ. ஆகையால் துரோணரைத் தாக்க பயம் வேண்டாம். எல்லோரும் ஒரு முகமாகத் துரோணரை எதிர்த்து, வதம் செய்யப் புறப்படுங்கள்" என்று கட்டளையிட்டார்.

அதன்படி எல்லோரும் புறப்பட்டுச் சென்று துரோணரை எதிர்த்தார்கள். துரோணரும் அவர்களை எதிர்த்தார். துரோணரைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஆர்வத்தால் துரியோதனன் பாண்டவர்களை எதிர்த்தான்.

சேனை களைப்போடிருந்தது; போர் வீரர்கள் நித்திரையின்றிக் களைப்படைந்து இருந்தார்கள். பொழுது புலர்வதற்கு மூன்று சாமங்கள் பாக்கி இருந்தன. பாக்கியிருந்த அந்த மூன்று சாமங்களும் கடக்க முடியாத சாமங்கள் போல, ஒவ்வொருவருக்கும் தோன்றின. காயமுற்று, களைப்படைந்து, உறக்கத்துக்காக, போர் வீரர்கள் ஏங்கினார்கள். ஊக்கத்தை இழந்து சோர்வடைந்தார்கள்.

சில வீரர்கள் இருந்த இடத்திலேயே ஆயுதங்களை எறிந்துவிட்டுத் தூங்கினார்கள்; சிலர் யானைமீது தூங்கினார்கள்; சிலர் குதிரைமீது தூங்கினார்கள்; சிலர் தேர்களில்

இருந்தபடி தூங்கினார்கள். தூக்க மயக்கம் காரணமாகப் போர்வீரர்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. தூங்குகிற வீரர்களைச் சிலர் அம்பால் அடித்து யமன் உலகுக்கு அனுப்பினார்கள். இனம் தெரியாமல் தூக்கக் கலக்கத்தில் ஒருவரை ஒருவர் வதம் செய்துகொண்டார்கள்.

இந்தக் கலக்கத்தைக் கவனித்த அர்ச்சுனன், "வீரர்களே! இருளும் புழுதியும் எங்கும் கவிந்து இருக்கிறது. வாகனங்களும் சோர்வடைந்து இருக்கின்றன. நீங்களும் சோர்வுடன் காணப்படுகிறீர்கள். போரை நிறுத்திவிட்டுச் சிறிது நேரம் உறங்குங்கள். கௌரவ வீரர்களே! நீங்களும் சிறிது நேரம் போரை நிறுத்திக்கொள்ளுங்கள். பிறகு சந்திரன் உதயமானதும் ஒருவரோடு ஒருவர் போர் செய்யத் தொடங்கலாம்" என்று திக்கெல்லாம் எதிரொலிக்கும்படி கூவினான்.

இரு தரப்புப் போர்வீரர்களும் அர்ச்சுனன் சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடந்தார்கள். "கர்ணா! துரியோதனா! போரை நிறுத்துங்கள்! பாண்டவ வீரர்கள் போரை நிறுத்தி இருக்கிறார்கள்" என்று படை வீரர்கள் கூவினார்கள்.

இரு தரப்புப் போர்வீரர்களும் உடனே போர் புரிவதை நிறுத்திவிட்டார்கள். சிறிது நேரம் மகிழ்ச்சியுடனிருந்து ஓய்வு எடுத்துக்கொண்டார்கள்; நன்றாக உறங்கினார்கள். "அர்ச்சுனனே! எங்களுக்கு ஓய்வு அளித்த உனக்குச் சகல விருப்பங்களும் கைகூடும்!" என்று சொல்லி வாழ்த்தினார்கள்.

சேனையினரும், வாகனங்களும் ஓய்வு எடுத்துக்கொண்டு போர்க்களத்தில் காட்சிக் கோலம், ஓவியன் ஒருவன் தீட்டிய சிறந்த சித்திரம் போலக் காட்சி அளித்தது.

இது சமயம் சந்திரன் கிழக்குத் திசையில் உதயமானான். போர்வீரர்கள் கண்விழித்து மீண்டும் போருக்கு ஆயத்தமானார்கள்.

துரியோதனன் துரோணரை அணுகினான். "அந்தணரே! களைப்பும் சோர்வும் நீங்கிப் பாண்டவர்கள் போருக்கு ஆயத்தமாகிவிட்டார்கள். பிரம்மாத்திரம் முதலிய சிறந்த ஆயுதங்களைப் பாண்டவர்கள் மீது தாங்கள் பிரயோகிக்காமல் இருப்பதன் நோக்கம் எங்களுக்குப் புரியவில்லை. எனது பாக்கியக் குறைவா? அல்லது பாண்டவர்கள்பால் உமக்கு இருக்கும் பாசமா? எது?" என்று கேட்டான்.

துரியோதனன் இப்படிக் கூறியதும் துரோணர் கோபமுற்றார். "மன்னா! நான் வயது முதிர்ந்தவன். இயன்ற மட்டும் நான் போர் புரியத்தான் செய்கிறேன். வெற்றி வேண்டும் என்றால் இழிந்த முறையில் போர் நடத்த வேண்டும். பயிற்சியில்லாதவர்மீது பாணங்களை எய்து அவர்களை எளிதில் வதம் செய்ய முடியும். அர்ச்சுனனை வெல்வது எளிதன்று. தேவர்கள், அசுரர்கள், தானவர்கள், கந்தர்வர்கள் ஆகியோரை எல்லாம் வென்றவன் அவன்" என்று சொன்னார்.

துரோணர், அர்ச்சுனனைப் புகழ்ந்தது துரியோதனனுக்குப் பிடிக்கவில்லை. அவன் கோபமுற்று, "ஆசாரியரே! கௌரவ சேனையை இரண்டாக வகுத்து நானும், துச்சாதனன், சகுனி, கர்ணன் ஆகியவர்கள் சேனையை நடத்தி, அர்ச்சுனனை வதம் செய்கிறோம். அர்ச்சுனன்மீது உமக்குப் பாசம் இருப்பதால், போர் செய்யாமல் நீர் விலகி நில்லும்" என்று குத்தலாகச் சொன்னான்.

துரியோதனன் சொன்னதைக் கேட்டு, துரோணர் நகைத்தார். "உன் விருப்பம் போலச் செய்! உனக்கு மங்களம் உண்டாகட்டும்!" என்று வாழ்த்தினார். பிறகு அவனிடம், உன்னிடத்தில் சந்தேகம் பிறந்திருக்கிறது ஆகையால் விரும்புகிறபடி போர் செய்யப் போ. நீயும் அரச குலத்தில் பிறந்தவன்தான். அர்ச்சுனனை எதிர்ப்பதற்கு உனக்கு அருகதை உண்டு. உன் மாமன் சகுனி இதோ இருக்கிறான். அவன் சூதாடுவதில் நிபுணன்; வஞ்சகன்; சூதாட்டத்திலேயே காலத்தையும் பொழுதையும் கழிப்பவன்; நேரிய வழி தெரியாதவன்; இவனையும் அழைத்துச் சென்று போர் செய்து, பாண்டவர்களை வெல். தற்புகழ்ச்சியில் விருப்பமுள்ள உனக்கு, வெற்றியைக் காட்டிலும், வீர மரணமே சாலப் பொருந்தும். பயப்படாமல் சென்று பாண்டவர்களுடன் போர் செய்" என்று சொன்னார்.

கௌரவ சேனை இரண்டாகப் பிரிக்கப்பட்டு, போர் ஆரம்பமாயிற்று.

கிழக்கு வெளுத்துவிட்டது; ஆயினும் சூரியன் உதயமாகவில்லை. துரோணர் இரண்டாகப் பிரிக்கப்பட்ட ஒரு பகுதிக்குத் தலைமை தாங்கி, பாஞ்சாலர்களை எதிர்த்துச் சென்றார்.

கர்ணனும் துரியோதனனும் சகுனியும் அர்ச்சுனனை எதிர்த்தார்கள். போர் தீவிரமாக நடந்தது.

துரோணர் படைகளை நடுங்கச் செய்து கொண்டு முன்னேறினார். விராடனையும், துருபதனையும் பாணங்களால் அடித்து வதம் செய்தார்.

தந்தை வதமானதை அறிந்த திட்டத்துய்மனன், பீமன் தூண்ட, கோபத்துடன் துரோணரை எதிர்த்தான்.

பதினான்காம் நாள் இரவுப் போர் முடிந்தது; சூரியன் உதயமானான்.

## யுதிட்டிரர் சொன்ன பொய்!

சூரியன் உதித்தான். உலகம் பிரகாசமாகத் திகழ்ந்தது. போர் மீண்டும் தொடங்கியது. போர் வீரர்கள் போர் செய்து செய்து, சோர்ந்து போனார்கள். துரோணரும் அர்ச்சுனனும்தான் உற்சாகத்துடன் தென்பட்டார்கள்.

பார்த்தனும் துரோணரும் கோரமாக யுத்தம் செய்தார்கள். சிறந்த அஸ்திரங்களை ஏவி, ஒருவரை ஒருவர் தாக்கிக் கொண்டார்கள்.

பார்த்தனின் போர்த் திறமையைத் துரோணர் மனத்திலுள்ளே பெரிதும் பாராட்டினார். பிரம்மாஸ்திரத்தைத் துரோணர் ஏவினார். அதைப் பார்த்தன் பயனற்றதாகச் செய்துவிட்டான்.

இதன் பின்னர், பார்த்தனுடன் போர் செய்வதை விடுத்து, துரோணர் பாஞ்சாலர்களுடன் போர் செய்ய முனைந்தார். திட்டத்துய்மனனுக்கும் துரோணருக்கும் இடையில் போர் நடந்தது.

பாண்டவ சேனை நான்காகப் பிரிக்கப்பட்டு, துரோணரைச் சுற்றி வளைத்துப் போர்புரிந்தார்கள். துரோணர் சளைக்காது போர் செய்தார். அவருடைய ஆற்றல் முன் மற்ற வீரர்கள் கிடுகிடுத்து நடுங்கினார்கள்.

அப்போது கிருஷ்ணன், அர்ச்சுனனிடம், "துரோணரை வெல்ல முடியாது. ஆயுதத்தைத் துரோணர் கீழே வைத்தாலல்லாது, அவரை யாராலும் வெல்ல முடியாது; ஆகவே தர்மம் புரண்டாவது, வெற்றியைத் தேட முயல வேண்டும். அசுவத்தாமா கொல்லப்பட்டால், துரோணர் போர் செய்வதை நிறுத்திக் கொள்வார். அசுவத்தாமா கொல்லப்பட்ட

தாக யாராவது ஒரு பொய் சொல்ல வேண்டும்'' என்று சொன்னார்.

இவ்வாறு பொய் சொல்லத் தனஞ்சயன் சம்மதிக்கவில்லை. யுதிட்டிரர் முதலில் சம்மதிக்கவில்லை மிகுந்த பிரயாசையின் பேரில் பிறகு சொல்லச் சம்மதித்தார்.

இது சமயம் பீமன் ஒரு காரியத்தைச் செய்தான் மாளவ நாட்டு மன்னனுக்குச் சொந்தமான பெரிய யானை ஒன்று இருந்தது. அந்த யானையின் பெயர் அசுவத்தாமா. அந்த யானையைக் கதையினால் அடித்துப் பீமன் கொன்றான்.

பின்னர் துரோணரை அணுகி, "அசுவத்தாமா கொல்லப்பட்டான்" என்று நாணத்துடன் உரக்கக் கூவினான்.

பீமன் சொன்ன இந்த வார்த்தைகளைக் கேட்டதும் துரோணர் தளர்ச்சி அடைந்தார் ஆயினும் 'இது பொய்' என்று துரோணர் மறுத்துக் கூறினார். தன் புதல்வனின் ஆற்றலை அறிந்திருந்த அவர், அவனை மாண்டிருக்க முடியாது என்று திடமாக நம்பினார். ஆகவே அம்புகளைச் சரமாரியாகத் தொடுத்து, போர்வீரர்களை அடித்தார். பிரம்மாஸ்திரத்தை ஏவி, இருபதாயிரம் பாஞ்சாலர்களை வதம் செய்தார்.

இது சமயம் விசுவாமித்திரர், யமதக்னி, கௌதமர், வசிஷ்டர் முதலிய ரிஷிகள் துரோணருக்குத் தரிசனம் தந்தார்கள், "துரோணரே! நீர் அதர்ம யுத்தம் செய்தீர். அந்திம காலம் உமக்கு அணுகிவிட்டது. ஆயுதங்களை எறிந்துவிட்டு எங்களைப் பாரும். அந்தணரான உமக்குப் போர் புரிவது அடுக்காது. பிரம்மாஸ்திரத்தை ஏவி, அறியாத மானிடர்களை நீர் வதம் செய்தீர். பாவமான காரியத்தை மறுபடியும் செய்யாதீர்'' என்று சொன்னார்கள்.

ரிஷிகள் கூறின இந்த வார்த்தைகளைச் செவிமடுத்ததும், துரோணருக்குப் போரில் உற்சாகம் குன்றிவிட்டது. அவர் தர்மராஜரை நோக்கி, "அசுவத்தாமா கொல்லப்பட்டது உண்மைதானா?'' என்று வினவினார்.

ஏனெனில் மற்றவர்களைக் காட்டிலும் யுதிட்டிரரைத் தர்மசீலர் என்றும் ஒருபோதும் பொய் சொல்லமாட்டார் என்றும் உறுதியாகத் துரோணர் நம்பினார்.

இது சமயம் கிருஷ்ணன் யுதிட்டிரரிடம், "இன்னும் பாதிப் பகல் துரோணர் போர் செய்தால் உமது சேனை அழிந்துவிடும். எங்களை நீர் துரோணரிடமிருந்து காப்பாற்

றும்; உயிருக்கு ஆபத்து நேரும் காலத்திலே, சத்தியம் பேசுவதைக் காட்டிலும் பொய் பேசுவதே சிறந்தது. இத்தகைய பொய் கூறினால் அது பாபம் ஆகாது" என்று சொன்னார்.

இப்போது பீமன் யுதிஷ்டிரரிடம் வந்து, "அரசே! மாளவ தேசத்து மன்னனின் யானை அசுவத்தாமாவை நான் வதம் செய்துவிட்டேன்" என்று தெரிவித்தான்.

பீமன் சொன்னதைக் கேட்ட யுதிஷ்டிரர் கிருஷ்ணன் சொன்னபடி ஒரு பொய் சொல்ல முன்வந்தார். 'யானை அசுவத்தாமா கொல்லப்பட்டான்' என்ற வாக்கியத்தை யுதிஷ்டிரர் சொன்னார். 'அசுவத்தாமா கொல்லப்பட்டான்' என்று உரக்கச் சொன்னார். 'யானை' என்ற சொல்லை மெதுவாகச் சொன்னார்.

தர்மசீலரான யுதிஷ்டிரர் இந்தப் பொய்யைச் சொன்னதுதான் தாமதம், அவருடைய தேர் பூமியைத் தொட்டு, பூமிமீதே செல்லலாயிற்று. இதற்கு முன்னால், அவருடைய தேர் பூமியினின்று நான்கு அங்குல உயரத்துக்கு மேலாகச் செல்வது வழக்கம்.

## துரோணர் வதம்

துரோணர் வருத்தத்துடன் இருப்பது தெரிய வந்ததும் திட்டத்துய்மனன் அவரை அணுகினான். வில்லையும் அம்பையும் எடுத்து, அவற்றால் துரோணரை அடிக்கத் திட்டத்துய்மனன் முயன்றான். அவனைத் தடுக்கத் துரோணர் முயன்றார். இருந்தாலும் முன்போல் அவரால் போர் செய்யமுடியவில்லை. ஆனாலும், அவனுடைய பாணத்தையும் வில்லையும் துரோணர் அறுத்துவிட்டார். கதையும் கத்தியும் தவிர, திட்டத்துய்மனனிடம் வேறு எந்த ஆயுதமும் இல்லை.

பிறகு திட்டத்துய்மனன் கதையால் துரோணரைத் தாக்கினான்; அதையும் துரோணர் பொடிப் பொடியாக்கிவிட்டார். அதன் பின்னர், கத்தியையும் கேடயத்தையும் எடுத்துக்கொண்டு திட்டத்துய்மனன் போர் செய்தான். அவற்றையும் அம்பெய்து துரோணர் உடைத்துவிட்டார்.

இதன் பின்னர் 'வைதத்திகம்' என்னும் ஒரு சிறந்த பாணத்தை எடுத்து, தன் சீடன் திட்டத்துய்மனன்மீது ஏவினார். அதற்குப் பலியாக இருந்த திட்டத்துய்மனனை, சாத்யகி

காப்பாற்றினன்.

போர்க்களத்தில் புகுந்து துரோணரை, சாத்யகி தாக்கு வதைக் கண்டதும், மற்ற கௌரவ வீரர்கள் சாத்யகியைத் தாக்கினார்கள். யுதிட்டிரர், பீமன் முதலியோர் சாத்யகிக்கு உதவியாக வந்து போர் தொடுத்தார்கள். யுதிட்டிரர் தம் பக்கத்துப் போர் வீரர்களை நோக்கி, "வீரர்களே! திட்டத் துய்மனன் துரோணரை இன்று கொல்லும் முயற்சியுடன் இருப்பதால் அவனுக்கு நீங்கள் உதவுங்கள்" என்று ஏவினர்.

பீமன், திட்டத்துய்மனனுக்கு உதவி, துரோணரை வதம் செய்யும்படி உற்சாகப்படுத்தினன்.

இது சமயம் துரோணருடைய ஆயுதங்கள் தீப்பற்றி எரிந்தன; குதிரைகள் கண்ணீரைச் சொரிந்தன. தேர் கட கடவென்று உருண்டு ஓடியது. துரோணருடைய இடது கண்ணும் இடது கையும் துடித்தன. பலம் முழுவதையும் இழந்தவர்போல், துரோணர் காணப்பட்டார்.

பீமன், துரோணரைப் பரிகசித்து ஏசினன். "பிராமணர்கள் தம் தொழிலைவிட்டு, போர் செய்வதனால்தான், க்ஷத்திரிய குலம் நாசம் அடைந்து வருகிறது. மனைவி, மகன், பொருள் இவற்றின்மீது உள்ள ஆசையால், நீர் உமக்கு உரியனவல்லாத காரியங்களை மூடனைப்போலச் செய்கிறீர். அனேக வீரர்களை அநியாயமாகக் கொன்று, நீர் நாசமடையாமல் இருக்கிறீர். எவனுக்காக ஆயுதம் எடுத்து நீர் போர் செய்கிறீரோ, அவன் போர்க்களத்தில் படுத்து இருக்கிறான். உம் புதல்வன் கொல்லப்பட்டுக் கிடப்பதை யுதிட்டிரரும் உமக்கு அறிவித்தார். அதில் உமக்குச் சந்தேகம் வேண்டாம்" என்று சொன்னன்.

பீமன் இப்படிச் சொன்னதும், துரோணர் வில்லை எறிந்துவிட்டார். யோகத்தில் அமர்ந்து உயிர்நீக்கத் தீர்மானித்தார். அவர், கர்ணனையும் துரியோதனனையும் கூவி அழைத்து, "வீரர்களே! போரில் நீங்கள் முயற்சியுடன் ஈடுபடுங்கள்; பாண்டவர்களே! உங்களுக்கு நலமுண்டாகட்டும். நான் ஆயுதங்களை விட்டுவிடப் போகிறேன்' என்று சொன்னர்.

இப்படிச் சொல்லிய பின், தம் புதல்வன் அசுவத்தாமாவைக் குறித்து, துரோணர் அலறினர். ஆயுதங்களை எறிந்து விட்டு, தேரின் நடுவே உட்கார்ந்தார். யோகத்தில் மனதைச் செலுத்தினர்.

இதைக் கவனித்த திட்டத்துய்மனன் கத்தியை எடுத்துக் கொண்டு துரோணரை அணுகினான். "ஆ ஆ" என்று மற்றவர்கள் அலறினார்கள்.

தியானத்தில் அமர்ந்த துரோணரின் தலையைப் பிளந்து கொண்டு, ஓர் ஒளி வெளிப்பட்டு, பரமபதத்தை நோக்கிச் சென்றது. வெறும் கூடு மட்டும்தான் தேரில் இருந்தது. ஒரு நிமிடத்தில் ஆகாயத்துக்குச் சென்று, அந்த ஒளியும் மறைந்து விட்டது.

திட்டத்துய்மனன் கோபத்துடன் சென்று, துரோணரின் குடுமியைப் பிடித்துக்கொண்டான். உயிர் பிரிந்து, பேசாமல் இருக்கும் துரோணருடைய சடலத்திலிருந்து, அவருடைய தலையைத் துண்டித்தான், பிறகு தான் பெரிய காரியத்தைச் செய்துவிட்டதாக வீர கர்ஜனை செய்தான். துரோணருடைய சடலம் இரத்தம் ஒழுக, தேரிலிருந்து பூமியில் விழுந்தது.

திட்டத்துய்மனன் துரோணருடைய தலையை எடுத்துப் போய், கௌரவ சேனை முன்பு போட்டான். இதைக் கண்டதும் கௌரவ வீரர்கள் பயந்துபோய் நாலா திக்கிலும் சிதறியோடினார்கள்

ஆனந்த மிகுதியால் திட்டத்துய்மனனைப் பீமன் கட்டிக் கொண்டான். "வீரனே! தேரோட்டி மகன் கர்ணனும் திருதராட்டிரன் புதல்வன் துரியோதனனும் வதம் செய்யப்பட்ட பிறகு மீண்டும் உன்னை நான் தழுவிக்கொள்வேன்" என்று சொன்னான்.

பாண்டவர்கள் ஆனந்த சாகரத்தில் திளைத்தார்கள்; கௌரவர்கள் அலறிப் புடைத்துக்கொண்டு ஓடினார்கள்.

## மகன் கொண்ட சீற்றம்

துரோணர் வதமான பின்னர், கௌரவ வீரர்கள் கண்கலங்கி வருந்தினார்கள்; பயந்து நடுங்கி, உதவியற்றவர் போல, துரியோதனனை அணுகி, அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். கண்ணீர் ததும்ப, குரல் தடைப்பட விம்மி விம்மிப் பேசினார்கள். துக்கத்தால் நலிந்து, பத்துத் திக்குகளையும் பார்த்தார்கள்.

இவர்களைக் கண்டதும் நிலைகொள்ளாமல் துரியோதனன் ஓட்டம் பிடித்தான். கௌரவ வீரர்கள் துரோணரு

டைய மரணத்தினால் மிகவும் பயந்தார்கள்; மேருமலை சிதறியதுபோலவும், கடல் வறண்டது போலவும், சூரியனுடைய வீழ்ச்சி போலவும் பரத்வாஜருடைய* வீழ்ச்சியை அவர்கள் கருதினார்கள்; விவரம் தெரிய வந்ததும் சகுனி ஓட்டம் பிடித்தான்; கர்ணனும் பயந்து ஓடினான்; சல்லியனும் ஓடினான். துன்பம் துன்பம்' என்று சொல்லிக் கொண்டே போர் செய்யாமல் இருபரும் ஓடினார். துச்சாதனன், உலூகன், கிருதவர்மா, விருஷசேனன் ஆகியோரும் பயந்து நடுங்கி ஓட்டம் பிடித்தார்கள்.

நான்கு பக்கங்களிலும் சேனா வீரர்கள் சிதறியோடினார்கள். 'விரைந்து வாருங்கள்' என்று தந்தை தனயனைத் துரிதப் படுத்தினான்; தனயன் தந்தையைத் துரிதப்படுத்தினான். அண்ணன் தம்பியையும், தம்பி அண்ணனையும் துரிதப்படுத்திக் கொண்டு ஓடினார்கள்.

இது சமயம் அசுவத்தாமா, சிகண்டி முதலான பாஞ்சால வீரர்களுடன் ஒரு பகுதியில் போர் செய்துகொண்டு இருந்தார். கௌரவ சேனை பயத்தால் சிதறியோடுவதைக் கவனித்த அசுவத்தாமா துரியோதனனிடம் "கௌரவ சேனை பயந்து நடுங்கி ஓடி வருகிறதே! ஏன்? நீ ஏன் அதைத் தடைப்படுத்தாமல் நிற்கிறாய்? எந்த வீரன் வீர மரணம் எய்தியதால், கௌரவ சேனை பயந்து ஓடுகிறது?" என்று கேட்டார்.

துரோணர் மாண்ட செய்தியை, அசுவத்தாமாவிடம் தெரிவிக்கத் துரியோதனனுக்குத் தைரியம் வரவில்லை. தேரில் இருக்கிற துரோணர் மகனைப் பார்த்ததும் அவன் கண்கள் நீரால் நிறைந்துவிட்டன. துயரக் கடலில் அழுந்தி அவன் தவித்தான். அவன் கிருபரை நோக்கி, 'சேனை ஓடுவதற்கு உரிய காரணத்தை அசுவத்தாமாவிடம் தெரிவியும்" என்று வெட்கத்துடன் கூறினான்.

அதன்படி கிருபர் துரோணர் வதத்தைப்பற்றி மிகுந்த கவலையுடன் அசுவத்தாமாவிடம் தெரிவித்தார்.

"நானூறு வயதுடைய துரோணர் பதினாறு பிராயமுள்ள வாலிபன்போல, மிடுக்குடன் போர் புரிந்தார்; பாஞ்சாலர்கள் தோற்றுப் புறங்காட்டி ஓடினார்கள். இதைக் கவனித்த கண்ணன் ஒரு பொய் சொல்லும்படி யுதிட்டிரரைத் தூண்டினார். பெரும் பிரயாசையுடன் உடன்பட்டு யுதிட்டிரன் உன் தந்தையிடம் ஒரு பொய்யைச் சொன்னான்;

---

* பரத்வாஜர் : துரோணர்.

'ஆசாரியரே! எவன் பொருட்டு ஆயுதம் எடுத்து நீர் போர் புரிகிறீரோ, எவருக்காக நீர் உயிர் வாழ்கிறீரோ, அந்த அசுவத்தாமா, போர்க்களத்தில் அடிபட்டு, பூமிமீது செம்மக் குட்டிபோலக் கிடக்கிறான்' என்று பொய்யைச் சொன்னான். இதனால் ஊக்கம் குன்றி, துரோணர் போர் புரியாமல் இருந்துவிட்டார். இது சமயம் திட்டத்துய்மனன் கத்தியை எடுத்துக்கொண்டு ஓடிவந்து, உன் தந்தையின் சிகையைப் பிடித்து, அவருடைய தலையை வெட்டி, வதம் செய்து விட்டான். இதனால் பீதியுற்ற கௌரவ சேனை சிதறியோடு கிறது" என்று விவரத்தைத் தெரிவித்தார்.

தன் தந்தை கொல்லப்பட்டார் என்பது தெரிய வந்ததும், அசுவத்தாமாவின் கண்கள் நீரால் நிறைந்து விட்டன; அதிக ஆத்திரம் அடைந்தார். அடிக்கடி தன் கண்களை அசுவத்தாமா துடைத்துக்கொண்டார். கோபத்தால் உள்ளம் கொதித்து, பெருமூச்சுவிட்டார். அவர் துரியோ தனனை நோக்கி, "ஆயுதங்களை கீழே வைத்த என் தந்தையை அற்பர்கள் வதம் செய்தனர். யுதிஷ்டிரன் ஒரு பொய்யைச் சொல்லியிருக்கிறான். நீசன் ஒருவன் செய்யும் காரியத்தைத் தருமன் செய்துவிட்டான். வெற்றி தோல்வி போரில் ஏற்படுவது இயற்கை. போர்க்களத்தில் மடிந்தவனுக்கு எப்பொழுதும் புகழ் உண்டு. அதற்காக உறவினர் வருந்த வேண்டியது இல்லை. என் தந்தை வீர மரணம் எய்தியதற்காக நான் வருந்தவில்லை. அவருடைய சிகையைப் பிடித்து அவமானப்படுத்திக் கொன்றது என் நெஞ்சை அறுக்கிறது. மகன் உயிருடன் இருக்கும்போது தந்தைக்கு அவமானம் நேர்ந்தால், அதனால் உலகம் மகனை நிந்திக்கும். ஆகையால் என் தந்தையின் வதத்துக்குக் காரணமானவர்களை பழிக்குப் பழி வாங்காமல் நான் விடமாட்டேன். இதனால் இம்பரத்திலும் பரத்திலும் நன்மை உண்டு என்பதனால்தான் அனைவரும் ஆண்மையை அதிகம் விரும்புகின்றனர். தற்புகழ்ச்சி கூடாது என்பதை நான் அறிவேன். ஆயினும் எனது ஆண்மையைக் காட்டி, பகைவர்களை அழிக்கும் எனது ஆற்றலைப் நீ பார். உலக முழுவதும் எனது ஆற்றலைப் பார்க்கட்டும். என்னிடம் சிறந்த நாராயண அஸ்திரம் இருக்கிறது. அதை நான் பிரயோகித்தால், எத்தகையவனும் அதற்கு இரையாகாமல் போகான்" என்று சொன்னார்.

அசுவத்தாமாவின் இந்த மொழிகள் கௌரவப் படைக்கு ஊக்கத்தை உண்டாக்கின. சங்கங்களை ஊதிக்கொண்டும்

வாத்தியங்களை முழக்கிக்கொண்டும் அவர்கள் போருக்குத் திரும்பினார்கள்.

படையின் பெரு முழக்கத்தைச் செவிமடுத்த பாண்டவர்கள் அதுபற்றிக் கூடி ஆலோசித்தார்கள்.

## வாக்குவாதம்

அசுவத்தாமா நாராயண அத்திரத்தைத் தொட்டதும் அண்ட சராசரங்கள் அனைத்தும் கிடுகிடுத்து நடுங்கின. புயல் கோரமாக அடித்தது; பூமி நடுங்கிற்று; கடல் கலங்கிற்று; மலைகளின் சிகரங்கள் சிதறின; நதிகள் எதிர்நோக்கிப் பாய்ந்தன; சூரியன் ஒளி குன்றி மங்கினான்.

புறமுதுகு காட்டிப் பயந்து ஓடின கௌரவ சேனை பெருத்த ஆரவாரத்துடன் முழங்கிக்கொண்டு திரும்பி வருவதைக் கண்ட யுதிட்டிரர் அர்ச்சுனனிடம், "தனஞ்சய! துரோணர் வதமான பின் பயந்து ஓடின கௌரவ சேனை, பெரு முழக்கம் செய்துகொண்டு திரும்பி வருகிறதே? இதற்குக் காரணபூதன் யார்? உனக்குத் தெரியுமா? அதன் முழக்கத்தைக் கேட்டு நம்மவர்கள் நடுங்குகின்றனர். உடம்பு எல்லாம் பயத்தால் புல்லரிக்கிறது. கௌரவர்களுக்கு ஊக்கம் கொடுத்து, மீண்டும் போர்செய்ய அழைத்து வருபவன் யார்?'' என்று கேட்டார்.

"அரசே! கௌரவர்களை ஊக்கமூட்டி அழைத்து வருபவன் யார் என்று கேட்கிறீர்? அந்த வீரரைப்பற்றிக் கூறுகிறேன் கேளும்; அவர் தோள்வலி மிக்கவர்; செய்யத்தகாத காரியத்தை ஒருபோதும் செய்யாதவர்; மத யானைபோல நடப்பவர்; ஆற்றலில் இந்திரனை நிகர்த்தவர்; கோபத்தில் யமனை நிகர்த்தவர்; அறிவில் பிருகஸ்பதிக்கு ஒப்பானவர்; நீதியோடு வாழ்பவர்; எவர் பிறந்தபோது ஆயிரம் பசுக்களை அந்தணர்களுக்குத் துரோணர் தானம் கொடுத்தாரோ, அந்த அசுவத்தாமாதான் முழக்கம் செய்துகொண்டு சேனையுடன் வருகிறார். திட்டத்துய்மனன் குடுமியைப் பிடித்து, தன் தந்தை தலையை அறுத்ததை அசுவத்தாமா பொறுக்கவே மாட்டார். அந்த அக்கிரமத்துக்காக நம்மை அவர் நாசம் செய்யப் போகிறார். தருமங்களை அறிந்த நீர், பொறுமைசாலி என்று புகழ்பெற்ற நீர், அரசின் பொருட்டாக, ஆசிரியரை வஞ்சித்துவிட்டீர்; மிகப் பெரிய அதருமத்தைச் செய்து நீர் பழி தேடிக்கொண்டீர். வாலியைக் கொன்ற ராம

னுக்கு அபகீர்த்தி நிலைத்து இருப்பதுபோல, துரோண வதத்தினால் உமக்கும் அபகீர்த்தி நிலைத்து நிற்கப்போகிறது. உம்மைத் தன் சீடன் என்றும், தர்மசீலன், என்றும் பொய் சொல்லாத புகழோன் என்றும், ஆசாரியர் துரோணர் உறுதியாக நம்பினார். சத்தியம் என்கிற ஆடையைப் போர்த்துக்கொண்டு, பொய் சொல்லி ஆசிரியரை நீர் வஞ்சித்துவிட்டீர். ஆற்றல் இருந்தால் திட்டத்துய்மனை நீர் காப்பாற்றும். தருமத்துக்குப் புறம்பான முறையில் துரோணர் கொல்லப்பட்டார்; நான் அலறியது பயனற்றுப் போயிற்று. நமது வாழ்நாளில் பெரும் பகுதி கழிந்துவிட்டது; இன்னும் சொற்ப காலமே இருக்கப் போகிறோம். அந்த நிலையில் பெரிய அதருமத்தை நீர் செய்துவிட்டீர். நானும் உடந்தையாய் இருந்துவிட்டேன். அற்ப காலம் இருக்கக்கூடிய ஒரு ராஜ்யத்தின் பொருட்டாக, அன்பிலும், தருமத்திலும் சிறந்து, நமக்குத் தந்தைபோல் இருந்த ஆசிரியரை, நாம் கொன்றுவிட்டோம்; துரோகம் செய்து, இழிந்தவர்கள் ஆகிவிட்டோம். நரகத்தில் கிடந்து நான் உழலப் போகிறேன். ராஜ்யத்தின் பொருட்டு, பெருந் தவசியான துரோணரைக் கொன்ற பிறகு, நமக்கு மரணமே சிறந்தது; வாழ்வு சிறந்ததன்று" என்று சொல்லி, அர்ச்சுனன் வருந்தினான்.

அர்ச்சுனன் இப்படிச் சொன்னதும் மற்றவர்கள் ஒன்றும் பேசாது மௌனமாக இருந்தனர். பீமன் மட்டும் கடுங் கோபங்கொண்டு, அர்ச்சுனனை நிந்தித்தான்.

"அர்ச்சுனா! காட்டில் தவம் இயற்றும் ரிஷிகள்போல நீ தருமத்தைப் பேசுகிறாய்; அரச குலத்தான் நடக்க வேண்டிய முறைப்படி நீ நடக்கவில்லை. அசுவத்தாமாவுக்கு நீ பயப்படுவது ஆண்மையற்ற செயல்; போர் செய்ய விருப்பம் இல்லாவிட்டால் நீ ஒதுங்கி இரு; அசுவத்தாமாவை என் கதையினால் அடித்து நான் கொல்கிறேன்" என்று சொன்னான் பீமன்.

திட்டத்துய்மனும் அர்ச்சுனனை நிந்தித்தான்: "அண்ணலே! அந்தணர்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஆறு காரியங்களைத் துரோணர் செய்யவில்லை. தன் தருமத்தைக் கடைப்பிடியாத ஒருவரை நான் கொன்றதற்கு என்னை நீர் ஏன் நிந்திக்கிறீர்? தனது தொழிலை நழுவ விட்டுவிட்டு அரச குலத்தான் தொழிலை மேற்கொண்டு, அரசர் குலம் அழியத் துரோணர் நடந்துகொண்டது எந்தத் தருமத்தின் பாற்பட்டது? அசுவத்தாமா முழங்கட்டும். என் தந்தையைக் கொன்ற துரோணரை நான் வதம் செய்தது குற்ற

மாகாது. தருமத்தை நழுவி நடப்பவன் வாழ்க்கை, நஞ்சு போன்றது என்று தருமத்தை அறிந்தவர்கள் கூறுகின்றனர். என்னைப் புகழ வேண்டிய நீர், இகழ்வதின் நோக்கம் யாது? எனக்குப் பகைவரான துரோணரை நான் கொன்றது பாவம் என்கிறீர்? உம் பாட்டனாரை பீஷ்மரைக் கொன்றது தருமம் என்று கருதுகிறீர்? தன்னைக் கொல்ல வருகின்றவனை, தகப்பனாயினும், குருவாயினும் கொல்லலாம் என்பது விதி. நீர் கூறியவற்றை எல்லாம் திரௌபதியின் பொருட்டாக நான் பொறுத்துக்கொள்வேன்'' என்று சொன்னான்.

திட்டத்துய்மன் இப்படிச் சொன்னதும் மற்ற அரசர்கள் சும்மா இருந்தார்கள்.

அர்ச்சுனன் மட்டும் ''சீச்சீ!'' என்று சொல்லி இகழ்ந்து கண்ணீர் உகுத்தான்.

யுதிஷ்டிரன், கண்ணன், பீமன், நகுலன் முதலியோர் மிக நாணமுற்று வாடினர்; பதில் சொல்ல முடியாமல் இருந்தார்கள்.

சாத்யகி மட்டும் திட்டத்துய்மனை நிந்தித்தான். ''தகாத வார்த்தைகள் பேசுகின்ற உன்னைத் தண்டிப்பவர் அலை இங்குக் காணோம். பாவ காரியத்தைச் செய்துவிட்டு, நற்புகழ்ச்சி கொள்கின்ற நீ பதர். பீஷ்மரைக் கொன்றவன் அர்ச்சுனன் இல்லை; பாஞ்சால குலத்தில் பிறந்த உன் சகோதரன் சிகண்டிதான் என்பதை நீ தெரிந்துகொள். மேலும் நிந்தனைச் சொற்களை நீ சொன்னால் உன் மண்டையை உடைப்பேன்'' என்று சொன்னான்.

சாத்யகி சொன்ன இந்த வார்த்தைகளைக் கேட்டு, திட்டத்துய்மன் உரக்கச் சிரித்தான்; கோபத்துடனும் பதில் சொன்னான்.

''பொறுமையாக இருப்பவனை அயோக்கியன் இகழ்ந்து கொண்டே இருப்பான். இழிந்த ஒழுக்கமுள்ளவர்கள் தன் குற்றத்தைப் பாராமல் பிறரைப் பழித்துக் கேவலமாகப் பேசுவார்கள். அத்தகையவன்தான் நீ என்பதை அறிந்து கொள். பூரிசிரவஸை நீ கொன்றது கொடுஞ் செயல் இல்லையா? பூரிசிரவஸ் காலால் உதைத்து, உன்னைப் பூமியில் தரதர வென்று இழுத்தானே, அப்பொழுது உன் ஆண்மையைக் காட்டி அவனை நீ ஏன் கொல்லவில்லை? மறுபடியும் பேசாமல் வாயை மூடிக்கொண்டிரு. மீறி நீ பேசினால் உன்னை யமன் உலகு அனுப்புவேன். தருமம் தெரிந்தவன்போலப் பிதற்றாதே! அதருமத்தை முற்றிலும் அறிந்தவனும் இல்லை;

அதேபோல, தருமத்தை முற்றிலும் அறிந்தவனும் இல்லை" என்று சொன்னான்.

இந்தக் கொடிய வார்த்தைகளைக் கேட்டதும் சாத்யகி நடுங்கிப் போனான். கோபத்தால் கண்கள் சிவந்து, பெருமூச்சுவிட்டான். கதையைக் கையில் எடுத்துக்கொண்டு திட்டத்துய்மனை எதிர்க்கப் போனான். "உன்னைப்போல கொடிய வார்த்தைகளை நான் கூற விரும்பவில்லை; உன்னை நான் கொல்லப் போகிறேன்" என்று கர்ஜித்தான்.

சாத்யகியைத் தடுக்கும்படி வாசுதேவர் பீமனிடம் சொன்னார்.

உடனே பீமன் ஓடுகின்ற சாத்யகியைப் பலவந்தமாகக் கட்டிப் பிடித்துக்கொண்டு தடுத்துவிட்டான். சகதேவன் ஆறுதல் வார்த்தைகள் சொல்லி இருவரையும் சமாதானப்படுத்த முயன்றான். வாசுதேவரும் யுதிஷ்டிரரும் அவர்களைத் தடுத்தார்கள்.

## நாராயண அத்திரம்

கோபத்துடன் வந்த அசுவத்தாமா, "தருமம் என்கிற சட்டையை அணிந்து, என் தந்தையைத் தருமன் வஞ்சித்து விட்டான். அவன் பார்த்துக்கொண்டு இருக்கும்பொழுதே பாண்டவ சேனையை நான் அழிக்கப் போகிறேன். திட்டத்துய்மனையும் கொல்லப் போகிறேன். ஆகையால் சேனையைத் திருப்பு" என்று துரியோதனனிடம் சொன்னார்.

இதைக் கேட்டதும் பயம் அகன்று, துரியோதனன் சேனையைத் திருப்பினான்.

இரண்டு கடல்கள் ஒன்றோடொன்று கலப்பது போல, இரண்டு மலைகள் ஒன்றோடொன்று மோதுவதுபோல, இரு திறத்துச் சேனைகளும் கலந்து போர் செய்தன.

அசுவத்தாமா நாராயண அத்திரத்தைப் பிரயோகித்தார். பாம்புகள்போலச் சீறிக்கொண்டு ஆயிரக்கணக்கான அம்புகள் அதிலிருந்து புறப்பட்டன; உருக்கு மயமான உருண்டைகள் வெளிப்பட்டன; சக்கரங்களுடன் கூடிய கதாயுதங்கள் தோன்றின. எங்கே பார்த்தாலும் ஒரே ஆயுத மயம்; பாண்டவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் வெருண்டு போனார்கள்.

யுதிட்டிரர் மிகவும் பயந்துபோனார். சேனை நிலைகுலைந்து தவித்தது: அர்ச்சுனன் நடுநிலைமை வகித்தான். ஆகவே யுதிட்டிரர், "இட்டத்துய்மனே! சேனையுடன் ஓடு. வீரர்களே! போர்க்களத்தைவிட்டு ஓடுங்கள். தனக்கு உரியதை வாசு தேவரும் செய்துகொள்ளட்டும். நான் தம்பியருடன் தீயில் குளிக்கிறேன்" என்று சொன்னார்.

யுதிட்டிரர் இப்படிச் சொன்னதும் வாசுதேவர் கையால் சாடைசெய்து, சண்டையை நிறுத்தினார். "வீரர்களே! ஆயுதத்தைக் கீழே போட்டுவிடுங்கள்; தேர், குதிரை, யானை இவற்றிலிருந்து இறங்கிக்கொள்ளுங்கள். ஆயுதமற்று இருப் பவர்களை நாராயண அத்திரம் ஒன்றும் செய்யாது" என்று சொன்னார்.

வீரர்கள் அதன்படி ஆயுதங்களைக் கீழே வைத்துவிட விரும்பினார்கள். ஆனால் பீமன் மட்டும் அதற்குச் சம்மதிக்க வில்லை. "இந்தப் போரில் யாரும் ஆயுதங்களை எறிய வேண் டாம். நாராயண அத்திரத்தைப் பாணங்களால் நான் தடுக் கிறேன்" என்று வீரர்களிடம்கூறிவிட்டு அர்ச்சுனனைநோக்கி, "வீரனே! நாராயண அத்திரத்துக்குப் பயந்து, காண்டீ வத்தை நீ கீழே வைக்காதே. அதனால் மாசற்ற உன் புகழுக்கு மாசு தேடிக்கொள்ளாதே" என்று சொன்னான்.

அதற்கு அர்ச்சுனன், "பீம! பசுக்கள், பிராமணர்கள், நாரா யண அத்திரம் இவற்றைக் காண்டீவம் எதிர்க்காது. இது நான் எடுத்துக்கொண்டுள்ள விரதம்" என்று பதில் சொன்னான்.

பீமன் ஆயுதத்துடன் தேரில் ஏறிக்கொண்டு சென்று, அசுவத்தாமாவை எதிர்த்து, பாணங்களைப் பொழிந்தான். அசுவத்தாமாவும் பீமனை அம்புகளால் அடித்தார். நெருப்புப் பொறிகள் சூழப், பீமன் இருந்த கோலம், மாலைநேரத்தில், மின்மினிப் பூச்சிகளால் நிறைந்த மலையை ஒத்து இருந்தது.

நாராயண அத்திரம் வெளிப்பட்டதும், பீமனைத் தவிர்த்து மற்றவர்கள் கிடுகிடுத்து நடுங்கினார்கள். ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டு, வாகனங்களிலிருந்து இறங்கிக்கொண் டார்கள்.

அந்த அத்திரத்தின் வேகம் பீமன் தலையைத் தாக்கிற்று. பீமசேனனைச் சுற்றிலும் ஒரே ஒளிமயம். நாராயண அத்தி ரத்தின் வெப்பத்தைத் தணிக்க, அர்ச்சுனன் வருண அத்தி ரத்தைத் தொடுத்து, பீமனை மறைத்தான். தேர், குதிரை,

சாரதி, பீமன் ஆகிய அனைவரும் அக்கினிக்கு நடுவே அகப்பட்டுக்கொண்டனர்.

அர்ச்சுனனும் வாசுதேவரும் தேரிலிருந்து குதித்து, பீமனிடம் விரைந்தார்கள். நாராயண அத்திரத்தைக் கடந்து, உள் புகுந்து, பீமன் கையில் இருந்த ஆயுதங்களைப் பிடுங்கினார்கள். பீமன் பிடி தளராமல் பற்றிக்கொண்டான்: அப்போது வாசுதேவர் பீமனிடம், "எங்களைப் போல் நீயும் தேரிலிருந்து இறங்கிக்கொள்; வீம்பு செய்யாதே" என்று சொல்லி அவனைத் தேரிலிருந்து கீழே இறக்கிவிட்டார்; ஆயுதங்களையும் கீழே போடச் சொன்னார்.

உடனே நாராயண அத்திரத்தின் வேகம் முழுதும் தணிந்துவிட்டது.

உலகம் மகிழ்ச்சியுற்றது; பறவைகளும் விலங்குகளும் வாகனங்களும் பயம் குறைந்து நின்றன.

பாண்டவ சேனை மீண்டும் போருக்கு ஆயத்தமாவதைக் கண்ட துரியோதனன் அசுவத்தாமாவிடம், "மீண்டும் நாராயண அத்திரத்தைப் பிரயோகியும்" என்று சொன்னான்.

இதற்கு அசுவத்தாமா, "மன்னா! நாராயண அத்திரத்தை இரு முறை பிரயோகிக்கக்கூடாது. மீறிப் பிரயோகித்தால், பிரயோகித்தவனையே அது கொல்லும். போரில் மரணமும் தோல்வியும் ஒருவனுக்கு நேரலாம்; தோல்வியைக் காட்டிலும் மரணமே மேலானது. தோல்வியுற்று ஆயுதங்களைக் கீழே வைத்தவர்கள், செத்தவர்களுக்குச் சமம்" என்று பதில் சொன்னார்.

"அப்படியானால் வேறு அத்திரங்களை ஏவி, சத்துருக்களைக் கொல்லும்" என்று சொன்னான் துரியோதனன்.

ஆகவே, அசுவத்தாமா திட்டத்துய்மனனை எதிர்த்துச் சென்றார்.

## ஏன் பலிக்கவில்லை?

தன்னை எதிர்த்துவரும் அசுவத்தாமாவைத் திட்டத்துய்மனன் எதிர்த்தான். உயிரை ஒரு பொருட்டாக மதியாமல், அசுவத்தாமாவைத் தாக்கினான்.

அசுவத்தாமா திட்டத்துய்மனின் தேர், குதிரை, சாரதி ஆகியவற்றை அழித்தார். பாஞ்சாலர்கள் புறங்காட்டி ஓடத் தலைப்பட்டார்கள். இதைக் கவனித்த சாத்யகி, அசுவத்தாமாவை எதிர்த்து வந்தான். அவருடைய தேர், குதிரைகள் முதலியவற்றை நாசம் செய்தான்.

கர்ணன், துரியோதனன், கிருபர் முதலியவர்கள் சாத்யகியைத் தாக்கினார்கள். இவர்கள் அனைவரையும் புறங்காட்டியோடும்படி செய்துவிட்டான் சாத்யகி.

பாண்டவர்கள் ஆரவாரம் செய்து சாத்யகியைப் பாராட்டினார்கள்.

பீமனுக்கும் அசுவத்தாமனுக்கும் இடையில் கடும்போர் நடந்தது; அசுவத்தாமாவிடம் தாக்குப் பிடிக்க முடியாமல் பாண்டவ சேனை சிதறியோடிற்று.

இதைக் கவனித்த அர்ச்சுனன் படையைத் தடுத்து நிறுத்தினான். அவன் கௌரவ சேனையை நாடிச் சென்று அசுவத்தாமாவிடம் "நீர் உமது திறமையைக் காண்பித்துப் போர்புரியும். உமது கொழுப்பை நான் அடக்குவதைப் பாரும்" என்று சொன்னான்.

அர்ச்சுனன் கூறின வார்த்தைகளால் அசுவத்தாமா கடும் சீற்றம் கொண்டார். ஆக்னேயாத்திரத்தை எடுத்துப் பிரயோகித்தார். அந்த அஸ்திரம் பார்த்தனை நோக்கி வந்தது. பிரம்மாஸ்திரத்தை ஏவி அதன் வேகத்தை அர்ச்சுனன் தடுத்துவிட்டான்.

இதைக் கவனித்த அசுவத்தாமா ஊக்கம் குன்றிப் போனார். வில்லை எறிந்துவிட்டு, தேரிலிருந்து கீழே குதித்தார். "இவையெல்லாம் மாயை" என்று சொல்லிவிட்டு, போர்க்களத்தை விட்டு ஓடினார்.

அப்போது வழியில் அசுவத்தாமா வியாசரைக் கண்டார். மெலிந்த குரலில் அவரை வணங்கினார். "ஐயா! நான் காண்பது மாயையா? நான் ஏவிய அஸ்திரங்கள் அனைத்தும் பலிக்காமல் போவதற்குக் காரணம் என்ன? என்னிடம் ஏதும் தவறு உண்டா? நிலைமை தலைகீழாக மாறியிருப்பதற்குக் காரணம் என்ன? நான் ஏவிய ஆக்னேயாத்திரம் சேனையை அழித்துவிட்டு, அர்ச்சுனனையும் கண்ணனையும் ஒன்றும் செய்யாமல் திரும்பிவிட்டதே? ஏன்?" என்று கேட்டார்.

"கண்ணனும் அர்ச்சுனனும் தெய்வாம்சம் அவர்களை யாராலும் வெல்ல முடியாது. ஆகவே, மன ஆறுதல் அடை" என்று வியாச மகரிஷி பதில் சொன்னார்.

விவரம் தெரிய வந்ததும், வியாசரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு, அசுவத்தாமா போர் நிறுத்தம் செய் தார்.

# வியாசர்

அருளிய

# மகா பாரதம்

## நாள் போர்

துரோணர் வதத்துக்குப் பின்னர், கௌரவர்கள் ஒருங்கு சேர்ந்து ஆலோசனை நடத்தினர். தம் சார்பாக இருக்கும் அரசர்களை நோக்கி, துரியோதனன், "சிறந்தவர்களே! தற்பொழுது நாம் செய்யத்தக்கது எது? செய்யத்தகாதது எது என்பதை நீங்களே கூறுங்கள்" என்று நயந்த முறையில் கேட்டான்.

"நாங்கள் போர்செய்யத் தயார்" என்று அங்க அசைப்பினால் அரசர்கள் தெரிவித்துக்கொண்டார்கள்.

அரசர்களின் கருத்து தெரிய வந்ததும் அறிஞர் அசுவத்தாமா, "நம் பக்கலில் போர் செய்த பொற்ற வீரர்கள் வீர மரணம் எய்திவிட்டார்கள். வெற்றி கிட்டவில்லை என்று நாம் வெறுப்படையக் கூடாது. காரியங்களைச் செவ்வனே செய்தால் தெய்வ உதவி நமக்குக் கிட்டும். உத்தம வீரனை கர்ணனைச் சேனாதிபதியாக்கி, தொடர்ந்து நாம் போரை நடத்துவோம். திறமையாகப் போர் புரியும் ஆற்றல் பெற்றவன் அவன்" என்று சொன்னார்.

அசுவத்தாமா சொன்னதைத் துரியோதனன் மகிழ்ச்சியுடன் அங்கீகரித்தான். அவன் கர்ணனை நோக்கி, "புயவலி மிக்கவனே! உனது வல்லமையையும் அன்பையும் நான் அறிவேன். பிராய முதிர்ந்தவர்களான பீஷ்மரும் துரோணரும் சேனாதிபதிகளாய் இருந்து வீர மரணம் எய்திவிட்டார்கள். நீ சேனாதிபதி பதவி ஏற்று, பகைவர்களை நாசம் செய்

உன்னால் வெற்றிகிட்டும் என்று நான் உறுதியாக நம்பு கிறேன்" என்று சொன்னான்.

"அரசே! நான் பாண்டவர்களை வெல்வேன். இதைத் தாங்கள் நம்பலாம்" என்று பதில் சொன்னான் கர்ணன்.

இதன் பின்னர், கர்ணனைச் சேனாதிபதி ஆக்கி அபிஷேகம் செய்தார்கள். அந்தணர்கள் ஆசி கூறினார்கள்; மாகதர்களும் வந்திகளும் கர்ணனுடைய பெருமைகளை எடுத்து உரைத் தார்கள். "வெற்றி பெறுக!" என்று அனைவரும கர்ணனை வாழ்த்தினார்கள்.

கர்ணன் துரியோதனனிடம், "அரசே! இந்தப் பூமண்டல முழுவதையும் நீர் நீடித்து ஆள நான் உதவுவேன்; உமக்காக எதையும் நான் செய்வேன்" என்று சொன்னான்.

பதினாறும் நாள் பொழுது புலர்ந்தது. போருக்கு வேண்டிய ஆயத்தங்களைச் சேனாதிபதி கர்ணன் செய்தான.

வெள்ளைக் குதிரைகள் பூட்டிய தேரில் ஏறிக்கொண்டு, வில்லைக் கையில் ஏந்தினவனாய், கர்ணன் போருக்குப் புறப் பட்டான். சேனையை மகர வியூகமாக வகுத்தான். மகரத் தின் வாயில் கர்ணன் நின்றான்; உலூகனும் சகுனியும் கண் களில் நின்றார்கள்; அசுவத்தாமா தலையில் நின்றார். துரியோ தனன் வியூகத்தின் நடுவில் நின்றான். கிருபர் வலது காலிலும் கிருதவர்மா இடது காலிலும் நின்றார்கள்.

இதைக் கவனித்த யுதிட்டிரர் அர்ச்சுனனிடம், "புயவலி மிக்கவனே! கௌரவ சேனையைக் கர்ணன் அணிவகுத்து நிறுத்தி இருக்கிறான். வலிமை குன்றி இருக்கும் கௌரவ சேனையில், அவன் ஒருவன்தான் மகா வீரன். யாவராலும் வெல்ல முடியாத அந்த வீரனை வென்று நீ மீள்க" என்று சொன்னார்.

அர்ச்சுனன் சேனையை அர்த்த சந்திர வியூகமாக வகுத் தான். இடப் புறத்தில் பீமன் நின்றான். வலப் புறத்தில் திட்டத்துய்மனன் நின்றான். யுதிட்டிரரும் அர்ச்சுனனும் நடுவில் நின்றார்கள்.

இரு தரப்புப் படைகளும் சங்கங்களை ஊதி, வாத்தியங் களை முழக்கின. பதினாறும் நாள் போர் ஆரம்பமாயிற்று.

பீமசேனனை முதன்மையாகக் கொண்டு, பாண்டவர்கள் கௌரவ சேனையை ஒரு புறத்தில் தாக்கினர். மற்று ஒரு புறத்தில் திராவிட நாட்டுப் படையினருடன் சென்று,

திட்டத்துய்மனனும் சாத்யகியும் கௌரவப் படையைத் தாக்கினார்கள்.

அகன்ற மார்பு, நீண்ட கைகள், உயரமான ஆகிருதி, பெரிய கண்கள் படைத்த பாண்டியர்களும் சோழர்களும் கௌரவர்களும் அணியின் ஊடே புகுந்து போர் செய்தார்கள்.

யானையின் மீது அமர்ந்து, பீமன் கௌரவ சேனையை எதிர்த்தான். குலூத நாட்டு மன்னன் க்ஷேமகீர்த்தி, பீமசேனனை எதிர்த்தான். இருவருக்கும் இடையில் கோரமான போர் நடந்தது. கதையால் அடித்து, பீமன் க்ஷேமகீர்த்தியைக் கொன்றான். கையில் பிடித்த கத்தியுடன் யானையிலிருந்து விழுந்து, க்ஷேமகீர்த்தி வீர மரணம் எய்தினான்.

மற்றொரு புறத்தில் கேகய நாட்டு மன்னர்கள், விந்தன், அநுவிந்தன ஆகிய இருவரையும் சாத்யகி எதிர்த்தான். தீவிரமாகப் போராடிய பின்னர், விந்தனும் அநுவிந்தனும் சாத்யகியின் வாளுக்கு இரையானார்கள்.

காற்றினால் சிதறியோடும் மேகங்கள்போல, கௌரவ சேனை நாற்புறமும் சிதறியோடியது.

அசுவத்தாமா பீமனை எதிர்த்தார். இரண்டு புலிகள் ஒன்றையொன்று எதிர்ப்பதுபோல, நீண்ட நேரம் அவர்கள் போர்க்களத்தில் சஞ்சரித்தார்கள். பிறகு களைப்புற்று இருவரும் தேர்த்தட்டில் சாய்ந்தார்கள். பீமனுடைய தேரை, போர்க்களத்தைவிட்டு, அவனுடைய சாரதி அப்பால் ஓட்டிச் சென்றான்; அதேபோல, அசுவத்தாமாவின் சாரதியும் தேரை அப்பால் ஓட்டிப் போனான்.

## கர்ணனும் நகுலனும்

ஒரு புறத்தில் கௌரவ சேனையை நகுலன் சிதற அடித்துக்கொண்டு இருந்தான். கர்ணன் அவனை எதிர்த்தான்.

அப்போது நகுலன் அவனை நோக்கி, "அடபாவி! நீண்ட காலமாக உன்னை நான் பார்க்கவில்லை. இவ்வளவு பகைமைக்கும் வெறுப்புக்கும் கொடுமைக்கும் நீயே மூல காரணம். உன் தூண்டுதலால் குருகுல வீரர்கள் ஒருவருடன் ஒருவர் அடித்துக்கொண்டு அழிந்து போகிறார்கள். உன்னைக் கொன்றாலல்லது எனக்கு மன நிம்மதி ஏற்படாது" என்று சொன்னான்.

"வீரனே! வாயால் பேசாது, உன் வல்லமையைக் காட்டிப் போர்செய்; போரில் வென்ற பின்னர் தற்புகழ்ச்சி செய்துகொள். வீரர்களாய் இருப்போர் வில்லினால் வீரத்தைக் காட்டுவார்களே யல்லாமல், சொல்லினால் காட்ட மாட்டார்கள். உன் கொழுப்பை அடக்க நான் வந்திருக்கிறேன்" என்று பதில் சொன்னான் கர்ணன்.

இருவரும் ஒருவரை ஒருவர் பாணங்களால் அடித்துக் கொண்டார்கள். அம்புகளால் துன்புற்ற இரு தரப்புச் சேனைகளும் அப்பால் விலகி நின்றுகொண்டன; கர்ணனும் நகுலனும் சளைக்காது போராடினர்.

குதிரை இழந்து, தேர் இழந்து, தேர்ப்பாகன் இழந்து, நகுலன் கதையைக் கையில் எடுத்துக்கொண்டான். அந்தக் கதாயுதத்தைக் கர்ணன் பொடியாக்கிவிட்டான். இதனால் கலக்கமுற்ற நகுலன் போர்க்களத்தைவிட்டு ஓடினான்; சிரித்த படியே துரத்திச் சென்று, நகுலன் கழுத்தில் வில்லை மாட்டிக் கர்ணன் இழுத்தான். "நீ செருக்குடன் பேசினாய். தகுந்தவர்களுடன் நீ போர் செய்வதுதான் முறை. வீட்டுக்குச் செல். அல்லது கண்ணனும் அர்ச்சுனனும் இருக்கும் இடத்துக்காவது செல்" என்று சொல்லிக் கேலி செய்தான்.

பிறகு குந்தி சொன்னது நினைவுக்கு வந்து, நகுலனை ஒன்றும் செய்யாது விட்டுவிட்டான்.

நாணமுற்றுச் சென்று, யுதிட்டிரரை அணுகி, அவருடைய தேரில் நகுலன் ஏறிக்கொண்டான்.

துரியோதனன் யுதிட்டிரரை எதிர்த்தான். யுதிட்டிரர் போர் தொடுத்து, தேர் இழந்து பூமியில் நிற்கும்படி துரியோதனனைச் செய்துவிட்டார்.

இதைக் கண்ட பீமசேனன், அசுவத்தாமா முதலியோர் துரியோதனனுக்கு உதவ வந்தனர். துரியோதனன் வேறு தேரில் ஏறிக்கொண்டு யுதிட்டிரரை எதிர்த்தான். கொடிய முறையில் இருவரும் நெடுநேரம் போர்செய்த காரணத்தால், துரியோதனன் மூர்ச்சித்துவிட்டான். பிறகு மூர்ச்சை தெளிந்து, கதாயுதத்தை எடுத்து, யுதிட்டிரரை எதிர்த்தான்.

யுதிட்டிரர் சிறந்த சக்தியாயுதத்தை எடுத்துத் துரியோதனன்மீது பிரயோகிக்கப் போனார். அப்போது ஓர் அசரீரி, "அரசே! பீமசேனன் இவனைக் கொல்வதாகச் சபதம் செய்திருப்பதால், நீ துரியோதனனைக் கொல்லாதே" என்று கூறிற்று.

சக்தி ஆயுதத்தைப் பிரயோகியாமல் யுதிட்டிரர் திரும்பி விட்டார்.

கிருதவர்மா வந்து, துரியோதனனைப் பாதுகாத்தான்.

சூரிய அஸ்தமனம் ஆகும்வரை அன்று தொடர்ந்து போர் நடந்தது. அர்ச்சுனன் பலமாகத் தாக்கிக் கௌரவ சேனையைப் புறமுதுகிட்டு ஓடும்படி செய்துவிட்டான். கேலியும் கிண்டலும் செய்து, கௌரவ சேனையைப் பாண்டவப் படை வீரர்கள் துரத்தினார்கள்.

பிறகு மகிழ்ச்சியுடன் பாண்டவர்கள் தங்கள் பாசறைகளுக்குத் திரும்பினார்கள்.

போர்க்களம் மயானம் போல் காட்சி அளித்தது. பேய்களும் பிசாசுகளும் அரக்கர்களும் கொடிய விலங்குகளும் போர்க்களத்தில் அங்கும் இங்கும் திரிந்தன.

இத்துடன் பதினாறும் நாள் போர் முடிவுற்றது.

## சல்லியன் சம்மதம்

பதினாறும் நாள் போரில் தோல்வியடைந்த கௌரவர்கள் கலக்கமுற்று, மீண்டும் மந்திராலோசனை செய்தார்கள். கர்ணன் பெருமூச்சுவிட்டான்; கையோடு கையைப் பிசைந்துகொண்டு பொருமினான். அவன் துரியோதனனை நோக்கி, "அரசே! அர்ச்சுனனுக்குக் கண்ணன் உதவியும் யோசனையும் சமயத்துக்குத் தக்கபடி கிடைக்கின்றன. ஆயினும் அவனுடைய விருப்பம் அனைத்தும் நாளை அழிவது திண்ணம்" என்று சொன்னான்.

"அவ்வாறே ஆகட்டும்" என்றான் துரியோதனன்.

இதன் பின்னர் அரசர்கள் தத்தம் பாசறைகளுக்குத் திரும்பினர். அன்றைய இரவை நிம்மதியுடன் கழித்தனர்.

பதினேழாம் நாள் காலையில் புயவலி மிக்க கர்ணன், துரியோதனனிடம் சென்றான். அவனைச் சந்தித்து, "அரசே! பாண்டவனை எதிர்க்க நான் புறப்படுகிறேன். அர்ச்சுனனை நான் கொல்வேன்; அல்லது அவன் என்னைக் கொல்வான். இந்திரன் அளித்த சக்தியாயுதத்தை நான் இழந்து இருப்பதால் என்னை எதிர்க்கும் துணிவு அர்ச்சுனனுக்கு ஏற்பட்டு இருக்கிறது. விஜயம் என்னும் பிரசித்தமான வில் என்னிடம் இருக்கிறது. பரசுராமரிடம் இருந்த அந்த வில் காண்டிவத்தைக் காட்டிலும் மேலானது. அதைக் கொண்டு அர்ச்சுனனை

வதம்செய்து உம்மை நான் ஆனந்தப்படுத்துவேன். திறமைசாலியான ஒருவர் அர்ச்சுனனுக்குச் சாரத்தியம் செய்கிறார். எனக்கும் தகுந்த சாரதி ஒருவன் வேண்டும். சல்லியன் கிருஷ்ணனுக்கு நிகரானவர். போரில் வல்லவர்; அவரைப் போல் திறமையாகச் சாரத்தியம் செய்வார்; அவர் எனக்குச் சாரத்தியம் செய்தால் போரில் நான் வெற்றிபெறுவது திண்ணம். அதற்கு நீர் ஏற்பாடு செய்யும்'' என்று சொன்னான்.

கர்ணன் சொன்னதைக் கேட்டு, துரியோதனன் மகிழ்ச்சி அடைந்தான். கர்ணனைப் பாராட்டினான். ''அவ்வாறே ஏற்பாடு செய்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, மத்தர நாட்டு மன்னன் சல்லியனிடம் போனான்.

அவனை அணுகி, வணங்கி, அடக்கமாக அருகில் உட்கார்ந்தான். அன்பு ததும்ப, ''மத்தர நாட்டு மன்னரே! உத்தம சீலரே! பகைவர்களை வாட்டுபவரே! திறமையாகப் பேசத் தெரிந்தவரே! பார்த்தனுடைய வதத்தின் பொருட்டாய் எனக்கு நீர் ஓர் உதவிசெய்ய வேண்டும். தலையால் வணங்கி உம்மை நான் வேண்டுகிறேன். கர்ணனுக்கு நீர் சாரத்தியம் செய்து எங்களை நீர் காப்பாற்ற வேண்டும். நீர் சாரத்தியம் செய்தால், பகைவர்களைத் தன்னால் வெகு எளிதில் வெல்ல முடியும் என்று கர்ணன் கூறுகிறான். கிருஷ்ணன் சாரத்தியம் செய்து, அர்ச்சுனனைக் காப்பதுபோல, கர்ணனுக்குச் சாரத்தியம் செய்து அவனை நீர் காப்பாற்ற வேண்டும். கபடமாகப் போர் செய்த காரணத்தால் எனது சேனையில் பெரும் பாகம் அழிந்துவிட்டதை நீர் அறிவீர். எஞ்சியிருக்கும் சேனையை நீர் காப்பாற்றும்'' என்று நயந்து வேண்டினான்.

அறிவும் பலமும் அகந்தையும் கொண்ட சல்லியன் துரியோதனன் கூறின வார்த்தைகளைக் கேட்டதும் கனன்று எழுந்தான். புருவத்தைச் சுளித்துக்கொண்டு கைகளை உதறினான். கோபத்தால் சிவந்த கண்களைப் புரட்டி உருட்டி விழித்தான். அவன் துரியோதனனிடம், ''அரசே! இத்தகைய காரியத்தில் என்னை நீர் ஏவுதல் தகாது. 'இழிகுலத்தானுக்குப் பணிபுரிய என் உள்ளம் சம்மதியாது. உனது நடத்தை மேலோரைக் கீழ்மைப்படுத்தி, கீழோரை மேன்மைப்படுத்துவதாய் இருக்கிறது. விபரீதமான இந்த நடத்தை பாவத்தின்பாற்படும். நான் ரிஷிகளுடைய குலத்தில் பிறந்தவன்; முடிபுனைந்து அபிஷேகம் செய்யப் பெற்றவன்; வல்லவன் என்று புகழ் படைத்தவன்; சிறப்புகளுடன் வாழ்ந்து சீர்பெற்று இருக்கும்

நான் சூத குலத்தில் பிறந்த ஒருவனுக்குத் தேர் செலுத்தப் பிரியப்படவில்லை. அச்சமில்லாமல் இந்த எண்ணத்தை என்பால் நீ வெளியிடுவது, என்னை அவமதிப்பதாகும். என்னைக் காட்டிலும் கர்ணனை நீ மேலானவனாகக் கருதுகிறாய். சேனையின் ஒரு பகுதியை அழிக்குமாறு நீ ஏவினால், திருப்தியுடன் அதைச் செய்து முடித்து, மகிழ்ச்சியுடன் திரும்புவேன். என் தகுதியில் பதினாறில் ஒரு பங்குகூடக் கர்ணன் ஈடாகான். அவனுக்குச் சாரத்தியம் செய்யச் சொல்லி என்னை நீ அவமதிக்காதே. என்மீது சந்தேகமும் கொள்ளாதே. காந்தாரி மகனே! இப்பொழுதே எனக்கு நீ விடை கொடு. நான் எனது நாட்டுக்குத் திரும்புகிறேன். கர்ணனுக்குச் சாரத்தியம் செய்து என்னை நான் இழிவுபடுத்திக்கொள்ளேன்'' என்று கூறினான்,

இப்படிக் கோபத்துடன் சொல்லிவிட்டு, அரசர்களின் நடுவே இருந்து விரைவாக எழுந்து, சல்லியன் அப்பால் போய்விட்டான்.

எழுந்து போகும் சல்லியனை அன்பினாலும் மரியாதையாலும் இன்சொலாலும் தடுத்தான் துரியோதனன். ''அரசே! நீர் கூறுவது முற்றும் உண்மை; உம்மைக் காட்டிலும் கர்ணன் மேலானவன் அல்லன்; மற்ற அரசர்களும் உமக்கு மேலானவர்கள் அல்லர்; கிருஷ்ணனுக்குக்கூட, உம்மை எதிர்க்கத் திறமை போதாது. நீர் பகைவரின் கர்வத்தை அழிக்கும் ஆற்றல்பெற்றவர்; அளவற்ற தருமங்களைச் செய்தவர்; தருமங்களை அறிந்தவர்; கர்ணன் உமக்கு நிகராகான்; நானும் நிகராகேன்; குணங்களில் அர்ச்சுனனை விட, கர்ணன் மேம்பட்டவன்; சாரத்தியம் செய்வதில் வாசுதேவரைக் காட்டிலும் நீர் மேலானவர் என்று உலகம் கூறுகிறது. நானோ வாசுதேவரைக் காட்டிலும் அறிவிலும் சாரத்தியம் செய்வதிலும் நீர் இரு மடங்கு மேலானவர் என்று கருதுகிறேன்'' என்று சொன்னான்.

துரியோதனன் உரைத்த இந்தப் புகழ் உரையால் சல்லியன் அகமகிழ்ந்தான். ''குருகுலச் செம்மலே! கிருஷ்ணனைக் காட்டிலும் மேலானவன் என்று நீ என்னைப் பலர் முன்னிலையில் பாராட்டுவதால் அக மகிழ்ந்தேன்; உம் விருப்பப்படி, அர்ச்சுனனுடன் போர்புரியச் செல்லும் கர்ணனுக்கு நான் சாரத்தியம் செய்கிறேன்'' என்று சொன்னான் சல்லியன்.

அதற்குத் துரியோதனன், ''அரசே! தேரில் இருப்பவனைக் காட்டிலும் தேர் ஓட்டுபவன் சிறந்தவன் என்று தெரிந்

தவர்கள் சொல்லுகிறார்கள். தேர் ஓட்டுவது இழிதொழில் அன்று; திரிபுரத்தைச் சங்கரர் எரிக்கச் சென்ற காலத்தில் பிரம்ம தேவர் அவருக்குச் சாரத்தியம் செய்து இருக்கிறார். மேலும் கர்ணன் இழிகுலத்தில் பிறந்தவன் அல்லன்; சூதனால் வளர்க்கப்பட்டவனே யன்றி, சூத குலத்தில் பிறந்தவன் அல்லன் என்று நாம் கருதலாம்: பெண் மான் ஒன்று சிங்கக் குட்டியை ஈனும் என்று நாம் நம்பலாமா? கர்ணனைப் போன்ற மகாவீரன் சூதகுலத்தில் பிறந்திருக்கவே முடியாது. கவசகுண்டலங்களை அறுத்துக் கொடுத்த கர்ணனைத் தாங்கள் சாமான்யமானவன் என்று கருதவேண்டாம்; நீண்டு பருத்திருக்கிற அவனுடைய கைகளைப் பாருங்கள்; அவனது அகன்ற மார்பை நோக்குங்கள்'' என்று சொன்னான்.

"சரி. நீ விரும்புவதுபோல, கர்ணனுக்கு நான் சாரத்தியம் செய்கிறேன். ஆயினும் என் மனத்தில் தோன்றுவதைக் கர்ணனிடம் வெளிப்படையாக நான் சொல்லுவேன். இது எனது சபதம்'' என்று சொன்னான் சல்லியன்.

"வேந்தே! அவ்வாறே செய்யுங்கள்'' என்று துரியோதனன் சம்மதித்தான்; அப்போது கர்ணனும்கூட இருந்தான்.

சல்லியன் சம்மதித்ததும் துரியோதனன் களிப்படைந்தான்; கர்ணனைக் கட்டித் தழுவிக்கொண்டான். "கர்ணா! அசுரர்களை இந்திரன் வதம் செய்ததுபோல, பார்த்தர்களை நீ வதம் செய்'' என்று சொன்னான்.

அதற்குக் கர்ணன், "அரசே! சல்லிய மன்னன், மகிழ்ச்சியின்றிப் பேசுகிறான். இனிய வார்த்தைகள் சொல்லி அவனை இன்னும் இணங்கச் செய்க'' என்று சொன்னான்.

அதன்படி துரியோதனன் சொன்னான். "சல்லிய மன்னரே! கர்ணன் அர்ச்சுனனுடன் போர்புரிய விரும்புகிறான். கருணைபுரிந்து அவனுக்கு நீர் சாரத்தியம் செய்ய வேண்டும் என்று உம்மை நான் வேண்டுகிறேன். கிருஷ்ணன் அர்ச்சுனனைக் காப்பதுபோல், கர்ணனை நீர் காப்பாற்றும்'' என்று வேண்டினான்.

துரியோதனன் இதமாக மீண்டும் வேண்டியதும் சல்லியன் அவனைத் தழுவிக்கொண்டான். "காந்தாரி மகனே! நீ விரும்புவதை நான் செய்வேன். ஆயினும் பிரியமுள்ள, பிரியமற்ற வார்த்தைகளை நான் கூற நேர்ந்தால் நீயும் கர்ணனும் அவற்றைப் பொறுத்துக்கொள்ள வேண்டும்'' என்று தனது நிபந்தனையை மீண்டும் வற்புறுத்தினான் சல்லியன்.

"மத்தர நாட்டு மன்னரே! சங்கரர் பிரம்மாவிடம் அன்பு செலுத்துவதுபோலவும் கேசவர் அர்ச்சுனனிடத்தில் அன்பு செலுத்துவதுபோலவும் எம்மிடம் அன்பு செலுத்தி எங்களை நீர் காக்க வேண்டும்" என்று வேண்டினான் கர்ணன்.

"சூதன் மகனே! தன் இகழ்ச்சி, தற்புகழ்ச்சி, பர நிந்தை, பாராட்டு இந்த நான்கையும் உயர்ந்தவர் கடைப்பிடிக்க விரும்பார். உனக்கு உண்மை தெரியும்பொருட்டு நான் கூறுவதைக் கேள். நான் தேரோட்டுவதில் திறமைமிக்கவன்; இந்திரனுடைய சாரதி மாதலிக்கு நிகராக என்னால் தேரோட்ட முடியும்" என்று சொன்னான் சல்லியன்.

## அப சகுனங்கள்

சல்லியன் சாரத்தியம் செய்யச் சம்மதித்ததும் கர்ணன் அவனை நோக்கி, "தேர்ப்பாகனே! தேரைச் சுத்தம் செய்" என்று கட்டளையிட்டான்.

"உனக்கு மங்களம். நீ வெற்றி பெறுக!" என்று வாழ்த்தினான் சல்லியன். பிறகு தேரைச் சுத்தம் செய்து, "புறப்படலாம்" என்று தெரிவித்தான்.

வலம்வந்து தேரை வணங்கினான் கர்ணன். சல்லியனை நோக்கி, "முதலில் தேரில் ஏறும்" என்று சொன்னான்.

சிம்மம் மலையில் ஏறுவதுபோல், சல்லியன் அந்தத் தேரில் ஏறிக்கொண்டான். அதன் பின்னர் மின்னலைப்போல் தாவி, அந்தத் தேரில் கர்ணன் ஏறிக்கொண்டான்.

சூரியனைப்போல் தேரில் அமர்ந்திருக்கும் கர்ணனை நோக்கி துரியோதனன், "வீரனே! துரோணரும் பீஷ்மரும் அர்ச்சுனனை வதம்செய்வார்கள் என்று எண்ணி இருந்தேன். அது நடக்கவில்லை. அந்த அரிய காரியத்தை நீ செய். பாண்டவர்களுடைய படையைப் படுநாசம் செய். உனக்கு நலம் உண்டாகட்டும். நீ வெற்றி பெறுக" என்று வாழ்த்தினான்.

பேரிகைகள் ஒலித்தன. வாத்தியங்கள் முழங்கின. துரியோதனன் சொன்னதைக் கர்ணன் ஏற்றுக்கொண்டான். அவன் சல்லியனை நோக்கி, "சல்லிய மன்னரே! தேரை நடத்தும். எனது புயவலிமையைப் பாண்டவர்கள் பார்க்கட்டும். துரியோதனனுக்கு நான் வெற்றியைத் தேடிக் கொடுக்கிறேன்" என்று கூறினான்.

கர்ணன் இப்படிச் சொன்னதும் சல்லியன் அவனைக் கண்டித்தான். "ராதை மகனே! பலசாலிகளான பாண்டவர்களை அவமதிக்காதே. அர்ச்சுனனுடைய நாண் ஒலியை நீ செவிமடுத்து இருந்தால், இப்படிப் பேசும் துணிவு உனக்கு ஏற்பட்டு இராது" என்று சொன்னான்.

சல்லியன் சொன்னதை அலட்சியப்படுத்திவிட்டு, "என் கைவரிசையை நீர் பாரும்" என்று பதில் சொன்னான் கர்ணன்.

மகிழ்ச்சியுடன் கௌரவர்கள் ஆரவாரம் செய்தார்கள்; பேரிகைகளும் துந்துபிகளும் முழங்கின; குதிரைகள் கனைத்தன. கௌரவ வீரர்களும் கர்ணனும் போருக்குப் புறப்பட்டார்கள்.

அப்போது பூமி நடுங்கிற்று; விகாரமான ஒலிகள் உண்டாயின. பயங்கர எரிநட்சத்திரங்கள் உதிர்ந்தன. இடிகள் விழுந்தன. விலங்குகளும் பறவைகளும் பயங்கரமாக ஊளையிட்டுக்கொண்டு சுற்றின. கர்ணன் இருந்த தேரின் குதிரைகள் இடறிக் கீழே விழுந்தன. வானத்திலிருந்து எலும்பு மழை பொழிந்தது. பயங்கரமான பல அபசகுனங்கள் இவ்வாறு தோன்றின.

"வெற்றி பெறுக!" என்று கர்ணனைக் கௌரவர்கள் வாழ்த்தி அனுப்பினார்கள்.

ஆனால், கர்ணன் மனநிலையோ வேறு விதமாக இருந்தது. துரோணர், பீஷ்மர் இவர்களின் வீழ்ச்சி, அர்ச்சுனனின் போர்த்திறம் இவை கர்ணனின் மனத்தில் அதிக இடம் பெற்றிருந்தன. அகந்தையும் கோபமும் அதிகமாகி அவன் பெருமூச்சுவிட்டான். அவன் சல்லியனை நோக்கி, "இந்திரன் முதலிய தேவர்கள் எதிர்த்தாலும் பயப்பட மாட்டேன். பீஷ்மர் துரோணர் முதலியவர்களின் வீழ்ச்சிகூட எனது மன உறுதியை அசைத்தது இல்லை. இருந்தும் எதையும் நிலையானதாக நாம் எண்ணலாகாது, மன்னரே! அர்ச்சுனனும் பீமனும் இருக்கும் இடத்துக்குத் தேரைச் செலுத்தும். பாண்டவர்களை எதிர்த்து அவர்களை நான் கொல்கிறேன்; அல்லது பாண்டவர்கள் என்னைக் கொல்லட்டும். தன்பகைவஞ்சிப்பது நாணயமாகாது. ஆன மட்டும் முயன்று அர்ச்சுனனுடன் போர்புரிவேன். தெய்வத்தின் திருவுளப்படி நடப்பது நடக்கட்டும். யார் எதிர்த்து வந்தாலும் அதற்காக நான் அஞ்சப் போவது இல்லை. அர்ச்சுனனை நான் அவசியம் வெல்வேன்" என்று சொன்னான் கர்ணன்.

கர்ணன் இப்படிச் சொன்னதும், சல்லியன் அவனை அவமதித்துக் கேலிசெய்தான். "கர்ணு! அதிகமாகத் தற்புகழ்ச்சி செய்துகொள்வதால் யாது பயன்? அர்ச்சுனனுக்கும் உனக்கும் மலைக்கும் மடுவுக்குமுள்ள வித்தியாசம் இருக்கிறது. அர்ச்சுனன் சுபத்திரையைத் தன் வல்லமையினால் கவர்ந்து வந்தான்; மகாதேவரைத் தரிசித்தான். பலமுறை நீ அர்ச்சுனனுடன் தோற்று ஓடி இருக்கிறாய். ஆகவே, நீ அர்ச்சுனனை ஜயிக்க முடியாது. உன் அழிவின் பொருட்டே இந்த யுத்தம் தொடங்கி இருக்கிறது. புறங்காட்டி நீ ஓடாதிருந்தால் உயிருடன் நீ மீளமாட்டாய்" என்று சொன்னான்.

"சல்லியனே! வீணே பிதற்றுவதால் யாது பயன்? போர் நடக்கட்டும்; முடிவு பிறகு தெரியவரும்" என்று சொல்லி விட்டுத் தேரைச் செலுத்தும்படி உத்தரவிட்டான் கர்ணன்.

போர்க்களத்தில் தேர் சென்றது. அப்போது கர்ணன், "அர்ச்சுனனும் கேசவனும் இருக்கிற இடத்தை எனக்கு யார் காண்பிக்கிறார்களோ அவர்களுக்கு, அவர்கள் விரும்பிக் கேட்கிற வெகுமதிகளை வாரிக் கொடுப்பேன். மனைவி மக்களைத் தவிர்த்து, எதைக் கேட்டாலும் கொடுக்க நான் தயார்" என்று சொல்லிவிட்டுத் தனது சங்கத்தை எடுத்து ஊதினான் கர்ணன்.

## சல்லியன் சொன்ன கதை

அர்ச்சுனனைக் காட்டுபவனுக்கு அனைத்தையும் வாரிக் கொடுப்பேன் என்று தற்புகழ்ச்சி பேசிய கர்ணனை நோக்கி, "தனத்தையும் யானை குதிரைகளையும் நீ தானம் செய்ய வேண்டாம். இயல்பாகவே நீ அர்ச்சுனனைப் பார்க்கலாம். கல்லைக் கழுத்தில் கட்டிக்கொண்டு, கடலை இரு கையாலும் நீந்திக் கடக்க விரும்புபவன்போல் இருக்கிறது உன் செய்கை. அர்ச்சுனனை வதம் செய்துவிடலாம் என்று வீண் முயற்சி செய்யாதே" என்று சொன்னான் சல்லியன்.

"சல்லியனே! தோள் வலிமையால் அர்ச்சுனனை வெல்ல நான் முயல்கிறேன். நண்பன்போல நடித்து என்னை நீர் பயமுறுத்துகிறீர். எனது எண்ணத்தை மாற்ற உம்மாலும் முடியாது; இந்திரனாலும் முடியாது" என்று சொன்னான் கர்ணன்.

கர்ணனை மேலும் கோபப்படுத்த வேண்டும் என்று சல்லியன் கருதினான். "கர்ணா! அம்புகள் வந்து உன்னைப் பலவாறாகத் தாக்கும்பொழுது, இந்தப் புத்தி உன்னிடம் இருக்காது. சிங்கத்தை அறைகூவி அழைக்கும் சிறு யானைக்கு நேரும் கதிதான் உனக்கும் நேரப் போகிறது. பார்த்தனை எதிர்த்து வீணே அழிந்து போகாதே. வீட்டில் கட்டிக் கிடக்கும் நாய், புலியைக் கண்டதும் குரைப்பதுபோல, அர்ச்சுனனைக் கண்டு நீ குரைக்கிறாய். அர்ச்சுனனை நீ போர்க்கோலத்தில் காணாதபடியால்தான் உன்னை ஒரு சிம்மமாகக் கருதிக்கொண்டு நீ பேசுகிறாய். நீ நரியை நிகர்த்தவன்; அர்ச்சுனன் சிம்மத்தை நிகர்த்தவன். அர்ச்சுனனுக்கும் உனக்கும் இடையில் பெருத்த வித்தியாசம் உண்டு. அதை அறியாமல் நீ பேசுகிறாய்' என்று சொன்னான் சல்லியன்.

சல்லியன் செய்த நிந்தனைகளைச் செவிமடுத்த கர்ணன் கடும் சீற்றம் கொண்டான். "சல்லியனே! அர்ச்சுனனின் ஆற்றலையும் திறமையையும் நான் அறிந்திருக்கும் அளவு நீ அறிய மாட்டாய். கண்ணனுடைய மகிமையையும் நான் அறிந்திருக்கும் அளவு நீ அறிய மாட்டாய். இவற்றை எல்லாம் அறிந்தே அவர்களுடன் நான் போர்புரிய வந்திருக்கிறேன். மேருமலையைப் பிளக்கவல்ல அஸ்திரங்கள் என்னிடம் இருக்கின்றன. அர்ச்சுனனையும் கண்ணனையும் பிளப்பதற்கு என்றே அவற்றை நான் ஒதுக்கி வைக்கிறேன். அர்ச்சுனனிடம் இருக்கும் காண்டீவத்தையும் கண்ணனிடமிருக்கும் சக்கரத்தையும் கண்டு மற்றவர்கள் மருளுவார்கள். ஆனால், நானோ மகிழ்ச்சி அடைகிறேன். நீ கெட்டவன்; போர் செய்யத் தெரியாதவன்; அடுத்துக் கெடுக்கும் பகைவன் வாயை மூடிக்கொண்டு சும்மா இரு. நீயும் மோசமானவன்; நீ பிறந்த மத்தர நாடும் மோசமான நாடு; அந்த நாட்டு மக்களும் மோசமான நடத்தையுடையவர்கள். மத்தர நாட்டினர் பண்பு இல்லாதவர்கள்; அடுத்துக் கெடுப்பவர்கள்; ஒழுக்கங் கெட்டவர்கள்; பொருத்தமற்ற வார்த்தைகளைப் பேசுபவர்கள்; மத்தர நாட்டுப் பெண்டிரும் மோசமானவர்கள்; ஒரு வேளைச் சாப்பாட்டுக்காக ஒழுக்கந்தவறி நடப்பவர்கள். அரச குலத்தில் பிறந்தவனுக்குப் போர் செய்வது தருமம்; போரில் உயிர் துறப்பது புகழ். அரசன் துரியோதனனுக்கு நன்மைசெய்யக் கருதி நான் போரில் இறங்கி இருக்கிறேன். நீ பாண்டவர்களின் கையாளாக இருந்துகொண்டு துரியோதன மன்னருக்குத் துரோகம் செய்கிறாய். நீ புலம்பிக் கொண்டே இரு. அதை நான் காதில் வாங்கிக்கொள்ளப்

போவது இல்லை. சாரதியைக் கொன்றான் என்ற அபவாதம் எனக்கு நேரக் கூடாது என்பதனால்தான் நான் இதுவரை பொறுத்து இருந்தேன். இனியும் நீ பேசினால் கதாயுதத்தினால் அடித்து உன் மண்டையை நான் பிளப்பேன்'' என்று சொன்னான்.

பிறகு சிறிது கோபம் தணிந்து, "தேரைச் செலுத்து'' என்று சல்லியனை ஏவினான்.

"கர்ணா! என்னை நீ அடிப்பது இருக்கட்டும். நான் சொல்லும் கதையைக் கேட்டுவிட்டு, உன் விருப்பம்போல் செய்ய வேண்டியதைச் செய்'' என்று சொல்லி, சல்லியன் அடியில் வரும் கதையைக் கர்ணனுக்குச் சொன்னான்:

"அறம் வழுவாமல் நாட்டைப் பரிபாலிக்கும் ஓர் அரசனுடைய நாட்டில், அறத்தில் பிரியமும் இரக்க சித்தமும் உள்ள வணிகன் ஒருவன் இருந்தான். அந்த வணிகனுக்குப் பல புதல்வர்கள் இருந்தனர். அவர்களின் எச்சிலை உண்டு ஒரு காகம் வளர்ந்து வந்தது. நாள்தோறும் சிறந்த உணவுகளை உண்டு உண்டு அந்தக் காகம் கொழுத்துப் போயிற்று. அதனால் தனக்குச் சமதையான பறவைகளையும் தன்னிலும் மேம்பட்ட பறவைகளையும் அந்தக் காகம் அவமதிக்கத் தொடங்கிற்று.

ஒரு நாள் அன்னப் பறவைகள் சில, அந்தக் காகம் வசிக்கும் கடற்கரை அருகே பறந்துவந்தன.

அதைக் கவனித்த வணிகன் மக்கள், காகத்தை நோக்கி, "ஏ காகமே! நீ மற்றவைகளைக் காட்டிலும் மேம்பட்ட பறவை. இதோ வானத்தில் அன்னப் பறவைகள் ஒய்யாரமாகப் பறப்பதைப் பார். ஆற்றல் அதிகமுள்ள நீ ஏன் பறக்காமல் இருக்கிறாய்?'' என்று கேட்டார்கள்.

இவர்களின் முட்டாள்தனமான இந்தக் கூற்றை, காக்கை உண்மையாகவே நம்பியது. ஆகவே அன்னப் பறவைகளை நோக்கி இறுமாப்புடன், "நானும் உங்களுடன் சேர்ந்து பறக்கிறேன்'' என்று காகம் கூறிற்று.

காகம் கூறின வார்த்தைகளைக் கேட்டு அன்னப் பறவைகள் உரக்கச் சிரித்தன. "ஏ காகமே! நாங்கள் மானசரோவரில் வசிப்பவர்கள்; வெகு தூரம் பறக்கும் ஆற்றல் எங்களுக்கு இருப்பதால் மற்ற பறவைகள் எங்களுக்கு மரியாதை செய்கின்றன. எங்களுடன் சேர்ந்து பறக்கும் ஆற்றல் உனக்குக் கிடையாது'' என்று சொல்லின.

"அன்னங்களே! பல விதங்களில் எனக்குப் பறக்கத் தெரியும். நூற்று ஒரு விதமாக நான் பறப்பேன். நீங்கள் குறிப்பிடுகிறபடி யெல்லாம் நான் பறந்து காட்டுவதை நீங்கள் காணப்போகிறீர்கள்" என்று பதில் சொல்லிற்று, காகம்.

இவ்வாறு சொல்லிய காகத்தினிடம், "சரி. பறந்து வா" என்று சொல்லி, அன்னங்களில் மூன்று ஆகாயத்தில் பறந்தது. காகமும் அதனுடன் சேர்ந்து ஆகாயத்தில் பறந்தது.

வெகு நேரம் ஆகாயத்தில் பறந்துவிட்டு, மேற்குக் கடலை நோக்கி அன்னம் பறக்கத் தொடங்கியது. காகமும் இறுமாப்புடன் அதனுடன் சேர்ந்து பறந்தது.

சிறிது நேரம் பறந்ததும், காக்கை களைத்துப் போயிற்று. இறங்கிக் களைப்பாறுவதற்கு மரமோ இடமோ தென்படவில்லை. "கடலில் விழுந்தால் இறந்து போவேனே!" என்று சொல்லிக்கொண்டே விழுந்துவிட்டது காகம்.

பிறகு தன்னைக் காப்பாற்றும்படி அன்னத்தைக் காகம் வேண்டிக்கொண்டது. அன்னமும் சம்மதித்து அந்தக் காகத்தை முதுகில் சுமந்து சென்று, அது முன்பு இருந்த இடத்தில் இறக்கிவிட்டு, "இனி தற்புகழ்ச்சி செய்துகொண்டு இறுமாப்புடன் பேசாதே" என்று சொல்லிவிட்டு, திரும்பிச் சென்றது.

"இந்தக் காகத்தைப்போல்தான் நீயும் நடக்கிறாய். திருதராட்டிரன் புதல்வர்களின் எச்சிலை உண்டு கொழுத்து அகந்தையுடன் பேசுகிறாய். கண்ணனையும் அர்ச்சுனனையும் பார்த்துவிட்டால் இவ்வாறு நீ பேச மாட்டாய். நாய் போன்ற நீ சிம்மம் போன்ற அர்ச்சுனனையும் கண்ணனையும் அவமதியாதே" என்று புத்திமதி சொன்னான் சல்லியன்.

## வாய்ச் சண்டை

"சல்லியனே! நீ என்னதான் சொன்னாலும் அதற்காகப் பயந்து நான் போர் செய்யாமல் இருக்கப்போவது இல்லை. பரசுராமராலும் அந்தணர் ஒருவராலும் எனக்கு முன்பு ஏற்பட்ட சாபங்கள்தான் என்னை நலியச் செய்கின்றன.

"முன்பு கடல்கரையை அடுத்துள்ள மகேந்திரமலையில் பரசுராமர் தவம் செய்துகொண்டிருந்தார். நான் அந்தணக் கோலத்துடன் அவரை அணுகி எனக்கு அஸ்திர வித்தைகள்

கற்பிக்குமாறு வேண்டினேன். என்னை அந்தணன் என்று கருதி எனக்கு அவர் பெரிய அத்திரங்களை உபயோகிக்கும் மந்திரங்களை உபதேசித்தார். 'உனக்கு ஆபத்து நேரும் காலத்தில் இதைப் பயன்படுத்து' என்று சொன்னார்.

"ஒரு முறை ஆசிரியர். பரசுராமர் என் தொடையில் தலையை வைத்து உறங்கிக்கொண்டிருந்தார். அப்போது அர்ச்சுனனுக்கு உதவிபுரிய எண்ணி, புழுவாக வந்து, இந்திரன் என் தொடையைக் குடைந்தான். அதன் காரணமாக, உதிரம் தரையில் பெருகு எடுத்து ஓடியது. எழுந்தால் ஆசிரியர் விழித்துவிடுவாரே என்று கருதி, நான் அசையாது இருந்தேன்.

"ஆசிரியர் கண்விழித்தபோது இரத்தம் தரையில் பெருகி இருப்பதைக் கண்டு ஆச்சரியமுற்று என்னை நோக்கி 'நீ பிராமணன் இல்லை, உண்மையைச் சொல்" என்று கேட்டார்.

'நான் சூதன்' என்று அவரிடம் உண்மையைச் சொன்னேன்.

"பரசுராமர் கடுங் கோபம்கொண்டார். 'உனக்கு மரணம் நேரும் காலத்தில். இந்தப் பிரமாத்திரம் பயன் படாது; மற்ற நேரங்களில் பயன்படும்' என்று என்னைச் சபித்தார்.

"ஒரு முறை ஓர் அந்தணருடைய யாகப் பசுவின் கன்றை அறியாமல் அம்பு எய்து நான் கொன்றுவிட்டேன். "போர் செய்யும் காலத்தில் உனது தேர்ச் சக்கரம் பூமியில் அழுந்திப் போகும். அதனால் உன் பகைவன் உன்னை எளிதில் வதைப்பான்' என்று அவர் சாபம் கொடுத்தார்.

"இந்த இரண்டு சாபங்களும் என் நெஞ்சை உறுத்து கின்றன. ஆயினும் அர்ச்சுனனை எதிர்க்க நான் ஒரு போதும் தயங்கமாட்டேன். இதை உறுதியாக நம்பு" என்று கர்ணன் சொன்னான்.

மேலும் சல்லியனை அவன் நிந்தித்துச் சொன்னான், "நீ அடுத்துக் கெடுக்கும் தீயவன்; நண்பனைப்போல் நடிக்கும் பகைவன் நீ: நட்பின் இலக்கணத்தையும் பகைமையின் இலக்கணத்தையும் அறியாதவன் நீ; உள்ளம் களிக்கச் செய்தல், கண்ணியப்படுத்தல், காப்பாற்றல், நேசமாய் இருத்தல், உடன் மகிழ்தல் இந்த ஆறும் நட்புக்கு இலக்கணம். இந்த இலக்கணப்படி நானும் அரசர் துரியோதனனும் கலந்து பழகுகிறோம். அழித்தல், பயமுறுத்தல், ஆயுதம்,

எடுத்தல், தொந்தரவு கொடுத்தல், பெருமூச்சுவிடச் செய்தல். இது பகைவனின் இலக்கணம். இந்தக் குணங்கள் அனைத்தும் உன்னிடம் பொருந்தி இருக்கின்றன. என் தகுதியை அறியாமல் நீ பேசுவதால் இவை அனைத்தையும் உனக்கு நான் சொன்னேன். அன்பு மிகுதியால் இவற்றை உன்னிடம் நான் சொல்லவில்லை என்பதைத் தெரிந்து கொள்'' என்று கர்ணன் சொன்னான்.

இப்படி இருவரும் வாக்குவாதம் புரிவதைக் கவனித்த துரியோதனன் அவர்கள் இருவருக்கும் இடையில் சமாதானம் செய்து வைத்தான்.

பிறகு சல்லியனை நோக்கிச் சிரித்துக்கொண்டு ''சல்லியனே! போ'' என்று கூவினான் கர்ணன்.

அதற்குச் சல்லியன், "கர்ணா! சகுனங்கள் நன்றாக இல்லை. வானரத்தைக் கொடியாகக் கொண்ட அர்ச்சுனன் இதோ வரப் போகிறான். நான் ஒலி கேட்கிறது'' என்று சொன்னான்.

''அர்ச்சுனன் துன்பக் கடலில் ஆழ்ந்து போவதை நீயே காண்பாய்'' என்று முழங்கினான் கர்ணன்.

இப்படி இருவரும் உரையாடின தருணத்தில் பாண்டவ சேனையும் கௌரவ சேனையும் ஒன்றுடன் ஒன்று கடல் கலப்பதுபோல் கலந்தன.

## கர்ணனும் யுதிட்டிரரும்

சல்லியன், கர்ணன் முதலான மகா ரதர்களை நோக்கி "ராதை மகனே! எதிரிகளைக் கொன்று பூமியை ஆள்வது, அல்லது போரில் மடிந்து வீர சொர்க்கம் அடைவது: இது தான் அரசர்கள் கடைபபிடிக்க வேண்டிய தருமம். ஆகவே போரில் ஈடுபடுங்கள்'' என்று சொன்னான் துரியோதனன்.

அரசகுல வீரர்கள் துரியோதனன் சொன்னதைக் கேட்டு உற்சாகம் அடைந்தார்கள். வாத்தியங்களை முழக்கிக் கொண்டு போர் செய்யப் புறப்பட்டார்கள். அசுவத்தாமா மகிழ்ச்சி அடைந்து போர் வீரர்களை உற்சாகப்படுத்தினார். "ஆயுதத்தைக் கீழே வைத்துவிட்டு இருந்த என் தந்தையை, திட்டத்துய்மனன் வதம் செய்துவிட்டான். அவனைக் கொல்லாமல் நான் தரித்து இருக்கும் கவசத்தைக் கழற்ற மாட்டேன். பாரத! நான் பொய்ச் சபதம் செய்யவில்லை. போர் புரிந்து, பகைவர்களை வதைப்பேன்'' என்று கூவினார்.

போர் ஆரம்பமாயிற்று; பாண்டவர்கள் கௌரவர்களை எதிர்த்தார்கள்; கௌரவர்கள் பாண்டவர்களை எதிர்த்தார்கள். பீமன் வீரத்துடன் போர் புரிந்து அன்று பல அரசர்களையும் வீரர்களையும் வதம் செய்தான்.

"இன்று நடக்கிற போரில் அர்ச்சுனனைக் கர்ணன் கொல்வான்; துரியோதனன் பகை ஒழிந்து, வெற்றி பெறுவான்" என்று கௌரவப் படை வீரர்கள் பேசிக்கொண்டார்கள்.

பிருகஸ்பதி கூறியுள்ள முறையைப் பின்பற்றி ஒரு வியூகத்தைக் கர்ணன் திறமையாக வகுத்தான். யார்க்கும் பகைவர்களுக்கு நடுக்கத்தை விளைவிப்பதாய் அந்த வியூகம் இருந்தது.

இதைக் கவனித்த யுதிட்டிரர் தனஞ்சயனிடம், "அர்ச்சுனா! கர்ணன் வகுத்துள்ள வியூகத்தைப் பார். அணி வகுத்து நிற்கும் கௌரவப் படை நம்மை வெல்லாதபடி தகுந்த ஏற்பாடுகளைச் செய்" என்று சொன்னார்.

யுதிட்டிரர் இப்படிச் சொன்னதும் அர்ச்சுனன் அவரைக் கைகூப்பி வணங்கினான். "அரசே! தங்கள் விருப்பப்படி ஏற்பாடு செய்கிறேன். இந்தப் படையை அழிக்கவும் செய்கிறேன்" என்று சொன்னான்.

"அர்ச்சுனா! நீ கர்ணனைக் கொல்; பீமன் துரியோதனனைக் கொல்வான்; சகாதேவன் சகுனியைக் கொல்வான். சதானிகன் துச்சாதனனையும், திட்டத்துய்மனன் அசுவத்தாமாவையும் கொல்வான்" என்று சொன்னார்.

"அவ்வாறே ஆகட்டும்" என்று சொல்லிப் படையை நோக்கி அர்ச்சுனன் சென்றான்.

அன்று கர்ணன் கடுமையாகப் போர் புரிந்தான். பாண்டவர்கள் சார்பாகப் போராடும் வீரர்கள் பலரைப் பாணத்தால் அடித்துக் கொன்றான். நடனம் ஆடுபவன் போல உற்சாகத்துடன் போர்க்களத்தில் போர் புரிந்தான். கௌரவப் படையினர் கர்ணனைச் சூழ்ந்துகொண்டு அவனைப் பாதுகாத்தார்கள்.

கர்ணன் சேனையைப் பிளந்துகொண்டு, யுதிட்டிரரை எதிர்த்தான். கர்ணனைக் கொல்லும்படி ஆந்திரர்களையும் திராவிடர்களையும் சாத்யகி ஏவினான். அம்பு எய்து தாக்கி, அவர்களைப் பூமியில் விழச் செய்துவிட்டான் கர்ணன்.

வெட்டுண்ட பெரிய மரங்களைப்போல் அவர்கள் பூமியில் சாய்ந்தார்கள்.

கர்ணனுக்கும் யுதிட்டிரருக்கும் இடையில் கடும் போர் நிகழ்ந்தது. வஜ்ராயுதம் போன்ற ஒரு பாணத்தை யுதிட்டிரர் ஏவினார். அதனால் தாக்குண்டு உயிரை இழந்தவன்போல் சல்லியன் அருகே கர்ணன் சாய்ந்தான். பார்த்தன் கொல் லட்டும் என்ற எண்ணத்தினால் மேலும் ஒன்றும் செய்யாது யுதிட்டிரர் கர்ணனை விட்டுவிட்டார்.

கர்ணன் விழுந்ததைக் கண்டதும் கௌரவப் படையினர் கலக்கமுற்றுத் தவித்தனர்; பாண்டவர்கள் தரப்பினர் ஆர வாரம் செய்து தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண் டனர்.

சிறிது நேரத்துக்குப் பின்னர் மூர்ச்சை தெளிந்து கர்ணன் மீண்டும் போர் தொடுத்தான். கூர்மையான பாணங்களால் யுதிட்டிரரை அடித்தான்; அவருடைய வில்லை அறுத்தான்; கவசத்தை உடைத்தான்; குதிரைகளையும் சாரதியையும் கொன்றான்; தேரைத் துகள் துகளாக்கினான். இதனால் மனம் நொந்த யுதிட்டிரர், எதிர்த்து நிற்கமாட்டாது அப்பால் விலகிச் சென்றார்.

யுதிட்டிரர் விலகிச் செல்வதைக் கவனித்த கர்ணன் அவரைக் கிண்டல் செய்தான். "அந்தணனாய் இருக்க வேண்டிய நீ அரசகுல தர்மத்தைக் கடைப்பிடிப்பது உன் தகுதிக்கு அடுக்காது. வீரர்களை எதிர்த்துப் போர் செய்ய முயலாதே; வீரர்களை அவமதித்துத் துடுக்காகப் பேசாதே; வீட்டுக்குத் திரும்பிச் செல். உன் போன்ற கோழையைக் கர்ணன் கொல்ல விரும்பான்" என்று சொன்னான்.

குந்திக்குக் கர்ணன் கொடுத்திருந்த வரம் கர்ணனை இவ் வாறு சொல்லச் செய்தது.

இதைக் கேட்டு, யுதிட்டிரர் பெரிதும் வெட்கினார். பிறகு அவர் சென்று கிருதகீர்த்தியின் தேரில் ஏறிக் கொண்டார். அவர் தன்னைத் துரத்தி வருகிற கர்ணன் முதலானவர்களை வதம் செய்யும்படி தன் தரப்பு வீரர்களை ஏவினார்.

பிறகு இரு தரப்பு வீரர்களும் ஒருவரை ஒருவர் தாக்கினார் கள். "அடியுங்கள், விரட்டுங்கள், நாற்புறமும் சூழ்ந்து கொள்ளுங்கள்" என்று ஒருவரை ஒருவர் ஏவிக் கொண்டு போர் செய்தார்கள்.

சாத்யகி முதலான வீரர்கள் கடுமையாகத் தாக்கிய படியால் எதிர்த்து நிற்க மாட்டாது, கௌரவப் படையினர் ஓட்டம் பிடித்தார்கள். சிங்கத்தைக் கண்ட யானைக் கூட்டம் எவ்வாறு சிதறிப் போகுமோ, அப்படியே கௌரவப் படையினர் நாற்புறமும் சிதறி யோடினார்கள்.

## கர்ணனும் பீமனும்

கௌரவ சேனை புறங்காட்டி ஓடுவதைக் கவனித்த கர்ணன் சல்லியனை நோக்கி, பீமன் போர் செய்யும் பக்கம் "தேரைத் திருப்பும்" என்று சொன்னான்.

அதன்படி, சல்லியன் தேரைச் செலுத்தினான்; தன்னை எதிர்க்கக் கர்ணன் வருகிறான் என்பதை அறிந்த பீமன் அவனை எதிர்த்தான். சாத்யகியிடமும் திட்டத்துய்மனனிடமும், "நீங்கள் யுதிட்டிரரைப் பாதுகாத்துக்கொள்ளுங்கள். நான் கர்ணனை வதம் செய்வேன்; அல்லது கர்ணன் என்னை வதம் செய்யட்டும். அரசரை உங்களிடம் அடைக்கலமாக ஒப்படைத்துவிட்டு, நான் கர்ணனுடன் போர் செய்யப் போகிறேன்" என்று சொல்லிவிட்டு, பெரு முழக்கத்துடன் கர்ணனை எதிர்த்துச் சென்றான்.

பீமன் எதிர்த்து வருவதைக் கவனித்த சல்லியன், "கர்ணா! நெடுங் காலமாகவே உன்பால் கோபத்துடன் இருந்து வரும் பீமன் உன்னை எதிர்த்து வருவதைப் பார். கோபம்கொண்டால் மூவுலகங்களையும் எதிர்க்கும் ஆற்றல் பெற்றவன் அவன். அவனுடைய உருவம் பிரளய கால நெருப்பை நிகர்த்து விளங்குவதைக் கவனி" என்று சொன்னான்.

பீமன் தன்னை எதிர்த்து வருவதைக் கண்டதும் கர்ணன் உரக்கச் சிரித்தான். "அரசே! நீர் பீமனைப்பற்றிச் சொல்லியது முற்றும் அவனுக்குப் பொருந்தும். ஆயினும், என் சபதம் நிறைவேற நல்ல வழி பிறந்திருக்கிறது. பீமனை இப்பொழுது நான் எதிர்த்தால், பீமன் உதவிக்கு அர்ச்சுனன் வருவான்; அப்போது அவனை எதிர்ப்பது எனக்கு எளிதாகலாம்" என்று கூறினான் கர்ணன்.

கர்ணனும் பீமனும் ஒருவரை ஒருவர் தாக்கினார்கள் சிறிது நேரத்துக்குப் பின்னர், சிறந்த பாணம் ஒன்றை எடுத்து, கர்ணன்மீது பீமன் ஏவினான். அது கர்ணனைப்

படுகாயப்படுத்தி, இரத்தம் சொரியச் செய்தது. அதனால் சோர்வடைந்து, கர்ணன் தேர்த்தட்டின் நடுவே உட்கார்ந்தான்.

அவனைக் கொல்லக் கருதி, பீமன் நெருங்கினான். அப்போது சல்லியன் அவனை நோக்கி, "பீமசேனா! நான் சொல்வதைக் கேட்டு அதன்படி நட. கர்ணனை வதம் செய்வதாக அர்ச்சுனன் சபதம் செய்து இருக்கிறான். அது பழுது அடையும்படி நீ செய்யாதே" என்று சொன்னான்.

அதற்குப் பீமன், "அரசே! அர்ச்சுனன் சபதம் செய்திருப்பதை அறிவேன். அரசர் யுதிட்டிரரைக் கர்ணன் அதிகம் பீடித்த காரணத்தினால் ஆத்திரமுற்று அதை நான் மறந்து போனேன். இழிவான வார்த்தைகள் பல பேசின இந்தக் கர்ணன் நாவைத் துண்டிக்காதவரை என் சினம் அடங்காது. தன் சபதம் நிறைவேறாவிட்டால் அர்ச்சுனன் உயிர் தரியான். ஆகையால் ஒன்றும் செய்யாது இப்பொழுது இந்த இழிந்தவனை நான் விட்டுவிடுகிறேன்" என்று சொன்னான்.

கர்ணனுடைய தேரைச் சல்லியன் அப்பால் ஓட்டிச் சென்றான். கர்ணன் காயமுற்று, புறங்காட்டிச் செல்கிறான் என்பதை அறிந்த துரியோதனன், தன் தம்பியரை அவனுக்கு உதவி செய்ய அனுப்பினான்.

அதன்படி துரியோதனன் தம்பியர் பலர் கோபமுற்று, பீமனைச் சூழ்ந்து கொண்டார்கள். இவர்களைக் கடுமையாகத் தாக்கி, பீமன் வதம் செய்தான். சிலர் பயந்து ஓட்டம் பிடித்தார்கள்.

இதன் பின்னர், கர்ணனுக்கும் பீமனுக்கும் இடையில் மீண்டும் போர் தொடங்கிற்று. தேரை இழந்த பீமன் சிரித்துக் கொண்டே கதாயுதத்தை எடுத்துக்கொண்டு தேரிலிருந்து குதித்தான். கதையால் அடித்து யானைப் படையை அழித்தான்; காலாட்களையும் துன்புறுத்தினான்.

கௌரவ வீரர்கள் பத்துத் திசைகளிலும் சிதறியோடினார்கள்; கடலில் உடைபட்ட மரக்கலம் போல, கௌரவ சேனை தத்தளித்துத் தவித்தது.

## அசுவத்தாமாவின் தோல்வி

போர் இப்படி நடக்கும் சமயத்தில் காண்டீபத்தின் நாண் ஒலி கேட்டது. அர்ச்சுனன் போர்க்களத்தில் புகுந்து

சம்சப்தர்களை எதிர்த்தான். அவர்களும் பதிலுக்கு அர்ச்சுனனை எதிர்த்தார்கள்.

சுசர்மாவுக்கும் அர்ச்சுனனுக்கும் இடையில் போர் நடந்தது. சம்சப்தர்களைச் சேர்ந்த சில வீரர்கள் அர்ச்சுனனையும் கண்ணனையும் பிடிக்க விருப்பம் கொண்டு தேரில் ஏறினார்கள்; கண்ணனுடைய இரு கைகளையும் அவர்கள் பிடித்துக் கொண்டார்கள்; வேறு சிலர் பார்த்தனைப் பிடித்துக் கொண்டார்கள்.

தன்னைப் பிடித்தவர்களைக் கைகளை உதறிக் கண்ணன் கீழே தள்ளினார். அர்ச்சுனன் காலால் உதைத்து, சம்சப்தர்களைக் கீழே தள்ளினான். பிறகு அர்ச்சுனன் தனது தேவதத்தம் என்னும் சங்கை ஊதினான்; கண்ணன் தனது பாஞ்சசன்யத்தை முழக்கினார்.

இந்த இரு சங்கங்களின் முழக்கத்தைக் கேட்டு, சம்சப்தர்கள் நடுங்கினார்கள்; பயந்து போய் ஓட்டம் பிடிக்கத் தொடங்கினார்கள். உடனே அர்ச்சுனன் சிரித்துக்கொண்டு நாகாத்திரத்தை ஏவி ஓடமுடியாதபடி அவர்களின் கால்களைக் கட்டிவிட்டான். பிறகு அம்பு எய்து பலரையும் கொன்றான்.

இதை அறிந்த சுசர்மா கருடாத்திரத்தை ஏவினான்; கருடனைக் கண்டதும் சம்சப்தர்களைப் பிடித்த பாம்புகள் பயந்து ஓடிவிட்டன. பந்தத்தினின்று விடுபட்ட வீரர்கள் மகிழ்ச்சி அடைந்து மீண்டும் போர் தொடுத்தார்கள்.

சுசர்மா ஏவிய கணைகளால் நலிவுற்று, சோர்ந்து, அர்ச்சுனன் தேர்த்தட்டில் உட்கார்ந்தான். பிறகு மூர்ச்சை தெளிந்து, சுசர்மாவைப் பாணங்களால் அடித்தான். சுசர்மா ஓட்டம் பிடித்தான். அர்ச்சுனன் சிரித்துக்கொண்டே அவனைத் துரத்தினான்.

இதன் பின்னர், இந்திராத்திரத்தை ஏவி, கௌரவ சேனையை அர்ச்சுனன் நிலைகலங்கச் செய்தான்.

அசுவத்தாமா, யுதிட்டிரரை எதிர்த்தார் பாணங்களை ஏராளமாக விடுத்து, ஆகாயத்தை மூடிவிட்டார். பாண்டவ சேனை தத்தளித்துத் தவித்தது. யுதிட்டிரரும் அவரை எதிர்த்து நிற்க முடியாது திணறினார். அவர் அசுத்தாமாவை நோக்கி, "வீரரே! நீர் திறமையாகப் போர் செய்யத் தெரிந்தவர் என்பதை நான் அறிவேன். இந்தத் திறமைகளை எல்லாம் நீர் திட்டத்துய்மனனிடம் காட்டும். அவனைப் பார்த்ததும் நீர் பலம் குன்றிப் போவீர். பிராமணனுன நீர் நன்றி

மறந்தவர்; அன்பு இல்லாதவர்; நீர் பிராமணர்களில் இழிந்தவர்; நீர் பார்த்திருக்கும்பொழுதே கௌரவர்களை நான் வதம் செய்வதை நீர் பாரும்" என்று சொன்னார்.

யுதிட்டிரர் சொன்னதைச் செவிமடுத்த அசுவத்தாமா பதில் ஒன்றும் சொல்லாமல் சிரித்தார்; மேலும் அம்புகளை ஏவி அவரைத் தாக்கினார். யுதிட்டிரர் தம் சேனையை அழைத்துக்கொண்டு அப்பால் விலகிச் சென்றுவிட்டார்.

அதைக் கவனித்த அசுவத்தாமா மேலும் ஒன்றும் செய்யாது சும்மா இருந்து விட்டார்.

அர்ச்சுனன் சம்சப்தர்களுடன் போர் புரிந்து அவர்களை அடித்து அடித்து விரட்டினான். அர்ச்சுனனுடைய திறமையைப் பாராட்டித் தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்.

அசுவத்தாமா கோபம்கொண்டு, அர்ச்சுனனை எதிர்க்க விரைந்தார். "வீரனே! போர் செய்ய விரும்புகிறேன்" என்று சொன்னார்.

அசுவத்தாமா அழைத்ததும் அர்ச்சுனன் கேசவரிடம், "மாதவரே! நான் சம்சப்தர்களை வதம் செய்ய வேண்டும். ஆனால் அசுவத்தாமா என்னைப் போருக்கு அழைக்கிறார். நான் யாருடன் போர் செய்வது உசிதம்? தேவரீர் கட்டளையிடும்" என்று சொன்னார்.

உடனே கேசவர் தேரை அசுவத்தாமா நிற்கும் பக்கம் கொண்டுபோய் நிறுத்தி, "அந்தணரே! அர்ச்சுனன் போர் தொடுக்க வந்திருக்கிறான். உறுதியாக நின்று அவனுடன் போர் புரியும். சோற்றுக் கடனைக் கழிப்பதற்கு இதுதான் உமக்குத் தக்க சமயம்" என்று சொன்னார்.

"அவ்வாறே ஆகட்டும்" என்று சொல்லி அசுவத்தாமா பாணங்களால் அடித்தார். இடைவிடாது பாணங்களைப் பொழிந்து, மாதவரையும் அர்ச்சுனனையும் அம்புக் கூட்டங்களால் மறைத்து நலிவுறச் செய்தார். 'உலகம் இனி என்ன ஆகுமோ?' என்று தாவர சங்கமங்கள் நடுங்கின. அசுவத்தாமாவின் கை மேலோங்கி வருவதைக் கண்ட கண்ணன் ஆத்திரமடைந்தார். அர்ச்சுனனையும் அசுவத்தாமாவையும் எரிப்பவர்போல, அடிக்கடி கோபத்துடன் பார்த்தார்.

அவர் அர்ச்சுனனிடம், "குந்தி மைந்தனே! அசுவத்தாமாவின் கை போர்க்களத்தில் உன்னை மிஞ்சி நிற்பது எனக்கு ஆச்சரியத்தை விளைவிக்கிறது. பிரசித்தி பெற்ற காண்டீபம் சிதறிப் போகாமல் இருக்கிறதா? கைப்பிடி நழுவாமல் இருக்கிறதா? குரு புதல்வன் என்பதனால் அசுத்தாமாவிடம் நீ

அன்பு பாராட்டுகிறாயா? அவ்விதம் செய்வதற்கு இது தருணமன்று" என்று எச்சரித்தார்.

இதைக் கேட்ட அர்ச்சுனன், "மாதவரே! அந்த எண்ணம் எனக்கு இல்லை. அசுவத்தாமாவைக் கொல்வது, என்று நான் முடிவு செய்துவிட்டேன்" என்று சொல்லிப் பாணங்களை அசுவத்தாமா மீது ஏவினான். அவருடைய கொடி, குடை, வில் யாவற்றையும் துண்டு துண்டாக்கினான்; கை, கால் முதலிய இடங்களிலும் படுகாயப்படுத்தினான்; அசுவத்தாமாவின் குதிரைகளையும் கூரிய பாணங்களால் அடித்தான்.

குதிரைகள் அசுவத்தாமாவுடன் அப்பால் சென்றன; அர்ச்சுனனையும் கண்ணனையும் வெல்வது சாத்தியமன்று என்று கருதிய அசுவத்தாமா, காயங்களுடன் கர்ணனுடைய படையில் புகுந்தார்.

இதன் பின்னர், அர்ச்சுனனும் கண்ணனும் சம்சப்தர்களைத் தாக்கச் சென்றுவிட்டார்கள்.

## படுகளச் சிறப்பு

தண்டாதரன் என்னும் மகத நாட்டு மன்னன் வட புறத்தில் பாண்டவ சேனையைக் கடுமையாகத் தாக்கிக் கொண்டிருந்தான். அதனால் தாக்குப்பிடிக்க முடியாமல நால்வகைப் படைகளும் கதறின. இதைக் கவனித்த கேசவர் அர்ச்சுனனிடம், "மகத நாட்டு மன்னன் தன் யானையுடன் வந்து பகைவர்களை அழிக்கிறான். படைப் பயிற்சியிலும் பலத்திலும் பகதத்தனுக்குக் குறைந்தவன் அல்லன் இவன். இவனைக் கொன்ற பின், சம்சப்தகர்களைக் கொல்லலாம்" என்று சொன்னார்.

பிறகு தேரை வேகமாகச் செலுத்திச் சென்று, தண்டாதரன் அருகே நிறுத்தினார்.

தண்டாதரன் என்னும் இந்த மகத நாட்டு மன்னன் மிகக் கொடியவன். தீமை செய்வதில் தேர்ச்சி பெற்றவன். ஆயிரக்கணக்கான குதிரைகளையும், யானைகளையும், தேர்களையும், காலாட்களையும் இவன் அழித்தான்.

இவனுடைய யானையும் கொடியது; அசுரனைப்போல, இதுவும் பாண்டவ சேனையை அழித்தது.

அர்ச்சுனன் அழகிய தேரில் வந்து, தண்டாதரனையும் அவனுடைய யானையையும் எதிர்த்தான். கோபமுற்ற தண்டாதரன் அர்ச்சுனனையும் கேசவரையும் பாணங்களால் தாக்கினான். முதலில் இரு கைகளையும் பிறகு தலையையும் அறுத்துத் தண்டாதரனைக் கொன்றான் அர்ச்சுனன்.

யானையும் தாக்குப் பிடிக்க முடியாது, பாகனுடன் போர்க்களத்தைவிட்டு ஓடிற்று. சிறிது தூரம் சென்றதும், இமயத்தின் சிகரம்போல் விளங்கிய அந்த யானை கீழே விழுந்து உயிர்நீத்தது.

தன் சகோதரன் தண்டாதரனும் அவனுடைய யானையும் கொல்லப்பட்டதைக் கண்ட அவன் தம்பி, அர்ச்சுனனையும் கிருஷ்ணனையும் எதிர்க்க விரைந்தான். அவன் தமையனைக் கொன்றதைப் போலவே, இவனையும் இவனுடைய யானையையும் அர்ச்சுனன் கொன்றான்.

இதன் பின்னர், சம்சப்தர்களை நாடி அர்ச்சுனன் போருக்குச் சென்றான். வக்கரித்துச் செல்லும் செவ்வாய்க் கிரகம் கேடு விளைவிப்பதை ஒப்ப, சம்சப்தர்களின் படைக்குக் கேடு விளைவித்துக்கொண்டு அர்ச்சுனன் புகுந்தான்.

அர்ச்சுனனுக்கும் சம்சப்தர்களுக்கும் இடையே, உடல் சிலிர்க்கும்படியான போர் நிகழ்ந்தது. குதிரைகள், தேர்கள், யானைகள், காலாட்கள் அடிக்கப்பட்டு, போர்க்களத்தில் சிதறிக் கிடந்தனர். காற்று, நெருப்பு, மழை இவற்றால் சேதம் ஏற்பட்ட செல்வச் சீமான்களின் மாளிகைகள் போல, அந்தப் போர்க்களம் காட்சி அளித்தது.

அர்ச்சுனன் ஏவிய அம்புகளால், குதிரை வீரர்கள் குதிரைகளோடு கீழே விழுந்தனர். நாக்கும் குடலும் வெளியே வந்து, உயிர்நீத்துக் கிடந்த குதிரைகள், பார்க்கப் பயங்கரமாய் இருந்தன.

படுகளச் சிறப்பைக் கண்ணன் இவ்வாறு காட்டிச் சென்ற சமயம், கௌரவப் படையில், சங்கங்களும் துந்துபிகளும் பேரிகைகளும் பெரு முழக்கமாக முழங்கின. குதிரைகள், யானைகள், தேர்கள், காலாட்கள் ஆகியவற்றின் ஒலிகளும் காதில் விழுந்தன.

பாண்டியன் கௌரவ சேனையைத் தாக்கிக் கலக்கிக் கொண்டிருப்பதை வாசுதேவர் கண்டார். ஆயுள் முடிந்தவர்களை யமன் கொல்வதை ஒப்ப, பாண்டியன், கௌரவப் படையினரை வதம்செய்து கொண்டிருப்பதைக் கண்டு கண்ணன்

வியப்புற்றார். யானைகள், குதிரைகள், காலாட்கள் ஆகிய வற்றைப் பிளந்து பிளந்து தள்ளி, உயிர் நீங்கச் செய்தான் பாண்டியன். அசுரர்களை இந்திரன் வதம்செய்ததை நிகர்த்து, பாண்டியன் கௌரவப் படையினரை வதம் செய்தான்.

## மலையத்துவஜ பாண்டியன்

தனுர் வேதத்தை முழுதும் அறிந்தவர்களில் பீஷ்மர், துரோணர், கிருபர், அசுவத்தாமா, கர்ணன், அர்ச்சுனன், வாசுதேவர் இந்த எழுவரும் முதன்மையானவர்கள். இவர்கள் அனைவரையும் விஞ்சிய ஆற்றல் பெற்றவன் பாண்டியன். பீஷ்மரையும் கர்ணனையும் தனக்கு நிகராகப் பாண்டிய மன்னன் கருதுவது இல்லை. அர்ச்சுனனுக்கும் கண்ணனுக்கும் குறைவுபட்டவனாக அவன் கருதிக்கொள்வது இல்லை.

அரசர்கள் அனைவரிலும் சிறந்தவனான அந்தப் பாண்டியன், பாசக் கயிற்றைக் கையில் பிடித்த யமனைப்போல, கர்ணனுடைய படையில் புகுந்து, அதைக் கலக்கினான்; வஜ்ராயுதத்தால் மலைகளை இந்திரன் பிளப்பதுபோல, யானைகளைப் பாண்டிய மன்னன் பிளந்தான்; சட்டியால் தாக்கி, குதிரைகளையும் குதிரை வீரர்களையும் வதம் செய்தான். புளிந்தர்கள், போதார்கள், நிஷாதர்கள், ஆந்திரர்கள், தென்னாட்டவர்கள் ஆகியோரை எல்லாம் பாண்டியன் தாக்கிக் கொன்றான்.

நால்வகைப் படைகளையும் பாண்டியன் நாசமாக்குவதை அசுவத்தாமா கண்டார். பரபரப்பு இன்றி அவர் பாண்டியனை அணுகினார். பயமற்றவனான அந்தப் பாண்டிய மன்னனை, பயமற்றவரான அசுவத்தாமா இனிமையாக அழைத்தார். சிரித்துக்கொண்டே அவனை நோக்கி, 'மன்னனே! நீ உயர்குடியில் தோன்றியவன்; திறமையாகப் போர் புரியத் தெரிந்தவன்; எதிரிகளை அழிப்பதில் இந்திரனை நிகர்த்தவன்; ஆண்மையிலும் வலிமையிலும் பிரசித்தி பெற்றவன்; நீண்டு பருத்த ஆற்றல்மிக்க இரு கைகளையுடையவன். மேகத்தைப்போல் பாணங்களைப் பொழிகின்ற உன்னை எதிர்க்க, என்னைத் தவிர்த்து வேறு எவனும் இல்லை. மற்ற விலங்குகளைக் கூட்டங் கூட்டமாக, சிம்மம் கொல்வதைப்போல, நீ ஒருவனே தனித்து நின்று, நால்வகைப் படைகளையும் கொல்கிறாய். முக்கண்ணன் அந்தகனுடன் போர் செய்ததை ஒப்ப

நீ என்னுடன் போர் செய்" என்று சொல்லி அழைத்தார்.

"ஆகட்டும்" என்று சொல்லி, அசுவத்தாமாவை மலையத்துவஜ பாண்டியன் எதிர்த்தான். கர்ணி என்னும் பாணத்தை ஏவி அவரைத் துன்புறுத்தினான். அசுவத்தாமா அவன் மீது பாணங்களைப் பத்து விதங்களில் தொடுத்தார்.

பாண்டியன் பல்வேறு பாணங்களைத் தொடுத்து, அசுவத்தாமாவின் குதிரைகளைக் கொன்றான். அவருடைய நாண் கயிற்றை அறுத்தான்.

அசுவத்தாமா வேறு குதிரைகள் பூட்டிய தன் தேரில் ஏறிக்கொண்டு பாண்டியனைத் தாக்கினார். மழைக் கடவுள் தாரைகளைப் பொழிவதைப்போல, அம்பு மழையைப் பாண்டியன் மீது பொழிந்தார்.

காற்றானது பெரு மழையைச் சிதற அடிப்பதுபோல, அசுவத்தாமாவின் கணைகளை எல்லாம் பாண்டியன் சளைக்காது சிதறடித்தான்.

அசுவத்தாமா, மலை உருவம் எழுதப்பெற்ற பாண்டியனுடைய கொடியை அறுத்துத் தள்ளினார்; அவனுடைய நான்கு குதிரைகளையும் கொன்றார். தேரைத் துகள் செய்து பொடியாக்கிவிட்டார். வாய்ப்பு இருந்தும், பாண்டியனைக் கொல்லாது சும்மா இருந்தார்.

ஒரு சமயம் அசுவத்தாமாவின் அம்புகளால் துன்புற்ற பெரிய யானை ஒன்று, பாகன் இன்றி, மலையத்துவஜ பாண்டியன் அருகே அலறிக்கொண்டு ஓடி வந்தது. யானைப் போரில் வல்லவனான மலையத்துவஜ பாண்டியன், சிங்கம் ஒன்று மலை மீது ஏறுவதுபோல, அந்த யானைமீது தாவி ஏறினான். "நீ கொல்லப்பட்டாய்" என்று கூறி, தோமரம் ஒன்றை எடுத்து, அசுவத்தாமாமீது ஏவினான். முத்தும் நவரத்தினங்களும் இழைத்த அவருடைய கிரீடத்தைக் கீழே தள்ளினான்.

காலால் மிதியுண்ட பாம்புபோல, அசுவத்தாமா பெரும் சீற்றம்கொண்டார். பாணங்களை ஏவி, அவனுடைய யானையைக் கொன்றார். நீண்டு, பருத்து, உருண்டையாகவுள்ள, சந்தனம் பூசிய அவனுடைய இரு கரங்களையும் பாணங்களால் துண்டித்தார். கருடனால் கொல்லப்பட்ட பாம்புகள் துடிப்பதுபோல, அந்த இரு கைகளும் பூமியில் கிடந்து துடித்தன. இரு குண்டலங்களுக்கு நடுவே இருந்த அவனுடைய முகம், இரு விசாக நட்சத்திரங்களுக்கு இடையில் பிரகாசிக்கும் சந்திரன்போல் பிரகாசித்தது. மூன்று பாணங்கள் ஏவி,

பாண்டியன் உடலை நான்கு பகுதியாகத் துண்டித்தார் அசுவத்தாமா. நீரினால் அழிக்கப்படும் நெருப்புப்போல, உயிர் அடங்கிப் பாண்டியன் ஓய்ந்தான்.

வீரன் பாண்டியனை வதம்செய்த அசுவத்தாமாவைத் துரியோதனன் முதலானவர்கள் பெரிதும் கொண்டாடினார்கள்.

பாண்டியன் கொல்லப்பட்டவுடன், கேசவர் அர்ச்சுனனை நோக்கினார். "நம்மைச் சேர்ந்த பாண்டிய மன்னன் கொல்லப்பட்டான். அரசரை நான் காணவில்லை. மற்றப் பாண்டவர்கள் பயந்து ஓடுகிறார்கள் நால்வகைச் சேனைகளுக்கும் பெருத்த அழிவு ஏற்பட்டு இருக்கிறது" என்று சொன்னார்.

"கேசவரே! தேரை அங்கே செலுத்தும்" என்று கூறினான் அர்ச்சுனன்.

கர்ணனுக்கும் பாண்டவர்களுக்கும் இடையே பெரும் போர் தொடங்கியது.

## அசுவத்தாமாவும் திட்டத்துய்மனனும்

போர் பயங்கரமாக நடந்துகொண்டிருந்தது. மயிர் பொடிக்கச் செய்யும் முறையில் ஆச்சரியமாக நடந்து கொண்டு இருந்தது. சம்சப்தர்களில் சிலர் எஞ்சி இருந்தார்கள் திட்டத்துய்மனன் கர்ணனை எதிர்த்துச் சென்றான்; பாண்டவ தரப்புப் படையினரும் திட்டத்துய்மனனுடன் சேர்ந்து சென்றார்கள்.

எதிர்த்து ஓடிவரும் பெரு வெள்ளத்தை, மலை குறுக்கிட்டுத் தடுப்பதுபோல, பாண்டவர்கள் படையைக் கர்ணன் தடுத்தான். "நில் நில்" என்று சொல்லிக்கொண்டே திட்டத்துய்மனன் கர்ணனை எதிர்த்தான். இருவருக்கும் இடையில் தீவிரமாகப் போர் நடந்தது.

இது சமயம் அசுவத்தாமா போர்க்களத்தில் தோன்றினார். அவர் கோபத்துடன் திட்டத்துய்மனனை நோக்கி, "பிராமணர்களைக் கொல்பவனே! நில்லடா! உயிர் பிழைத்து என்னிடமிருந்து நீ தப்பமாட்டாய்" என்று உறுமினார். பிறகு கூரிய அம்பு ஒன்றை ஏவி, திட்டத்துய்மனனை அடித்தார். பதிலுக்குத் திட்டத்துய்மனனும் அசுவத்தாமாவைக்

கூரிய பாணங்களால் அடித்தான். இருவருக்கும் இடையில் போர் தீவிரமாக நடந்தது.

அப்போது அசுவத்தாமா திட்டத்துய்மனை நோக்கி, "பாஞ்சாலர்களின் கடைப்பட்டவனே! என் தந்தையைக் கொன்ற நீ இப்பொழுது, என் கையால் யமன் வீட்டை அடையப் போகிறாய். பார்த்தன் வந்து உன்னைப் பாதுகாத்தாலோ அல்லது போர்க்களத்தைவிட்டு நீ ஓடினாலன்றி, இன்று உன் உயிர் உடலில் தரியாது; இது உறுதி" என்று சொன்னார்.

அதற்குத் திட்டத்துய்மனன் பளபளப்புள்ள ஒரு கத்தியைக் கையில் எடுத்துக்கொண்டு அசுவத்தாமாவிடம், "உமது தந்தையின் தலையை அறுத்த இந்தக் கத்தி இப்போது உமக்கு மறுமொழி செய்யும்" என்று சொல்லிவிட்டு, கத்தியால் அவரை வெட்டப் போனான்.

பிறகு அசுவத்தாமா கோபம்கொண்டு திட்டத்துய்மனை எதிர்த்தார். திட்டத்துய்மனனுடைய கொடி, தேர், குதிரை, பாகன், அம்பு, வில் அனைத்தையும் ஒரு நொடியில் அழித்தார்; பாம்பைப் பிடிக்கத் திவ்ய விரைகின்ற கருடனைப்போல, அவர் திட்டத்துய்மனை அணுகினார்.

இதைக் கண்ணன் கவனித்துவிட்டார். அவர் அர்ச்சுனனிடம், "திட்டத்துய்மனை வதைசெய்ய அசுவத்தாமா விரைவதைப் பார். நீ சென்று பாதுகாக்காவிடில், திட்டத்துய்மனை அவர் சடுதியில் வதம் செய்துவிடுவார்" என்று சொன்னார்.

பிறகு அவர் அர்ச்சுனனுடைய தேரை, அசுவத்தாமா போர்புரியும் பக்கம் செலுத்தினார். இருவரும் தன்னை நாடி வருவதைக் கவனித்த அசுவத்தாமா, திட்டத்துய்மனைத் துரிதமாகத் தாக்கினார். அவனை வதம் செய்வதில் அதிக முயற்சியுடன் இருந்தார்.

இதை அறிந்த அர்ச்சுனன் காண்டீவத்தின் சரமாரியாக அம்புகளைத் தொடுத்து, அசுவத்தாமாவைத் துன்புறுத்தினான். அதனால் திட்டத்துய்மனை அடிப்பதை விட்டுவிட்டு, தேரின்மீது ஏறிக்கொண்டு, பார்த்தனைத் தாக்கினான். பதிலுக்குப் பார்த்தனும் கடுமையாகத் தாக்கியதால், சோர்வுற்று அசுவத்தாமா தேரின் நடுவே உட்கார்ந்தார்.

அசுவத்தாமா இறந்துவிட்டதாக எண்ணிக்கொண்டு, தேர்ப்பாகன் தேரை அப்பால் ஓட்டிச் சென்றான்.

சகதேவன் வந்து, திட்டத்துய்மனனைத் தேரில் ஏற்றிக் கொண்டு வேறு இடத்திற்குச் சென்றான்.

இது சமயம் அர்ச்சுனன் கேசவனை நோக்கி, "சம்சப் தர்கள் போர்புரியும் இடத்துக்குத் தேரைச் செலுத்தும்" என்று சொன்னான்.

கண்ணன் அவ்வாறே தேரைச் செலுத்தினார்.

## அரசருக்குக் காயம்

போர் நடந்துகொண்டிருந்தது. எங்கும் ஒரே குருதி மயம்; அதனால் புழுதி அடங்கி, போர்க்களம் பிரகாசமாக இருந்தது. அப்போது வாசுதேவர் அர்ச்சுனனை நோக்கி, "உன் சகோதரர் யுதிட்டிரரைப் பிடித்துக் கொல்லும் எண்ணத்துடன் திருதராட்டிரன் புதல்வர்கள் முந்துகிறார்கள். பாஞ்சாலர்கள் அவரைப் பாதுகாக்க முனைப்புடன் இருக்கிறார்கள். பலசாலிகளான தன் தம்பியருடன் யுதிட்டிரரைப் பிடிப்பதற்குத் துரியோதனன் யானைப் படையுடன் பின்தொடர்கிறான். பீமனும் சாத்யகியும் அந்தப் படையைத் தடுத்து நிறுத்துகிறார்கள். ஆயினும் கௌரவப் படையினர் சளைக்காது முன்னேறுகிறார்கள். யுதிட்டிரரைக் கொல்லும்படி கௌரவர்களைக் கர்ணன் உற்சாகப்படுத்துகிறான். அரசர் யுதிட்டிரர் அந்தணர்களுக்கு உரிய பொறுமையுடன் இருப்பதால் பேராபத்தில் மாட்டிக்கொண்டுள்ளார்; தாமரைத் தடாகத்தை ஒரு யானை புகுந்து நாசம் செய்வது போல, பாண்டவப் படையை நாசம் செய்துகொண்டு, உன்னை நாடிக் கர்ணன் வருகிறான். பார்த்தா! உனது ஆற்றலையும் திறமையையும் காட்டி, துரியோதனன், கர்ணன் முதலானவர்களை நீ வதம் செய்" என்று சொன்னார்.

அர்ச்சுனன் கௌரவப் படையைக் கலக்கினான். காற்றானது கடலைக் கலக்குவதுபோல, அர்ச்சுனன் கலக்கினான். இது சமயம் அர்ச்சுனனை சிறிது கவனக் குறைவாக இருப்பதைக் கவனித்த துரியோதனன், படையினருடன் சென்று யுதிட்டிரரைச் சூழ்ந்துகொண்டான். கௌரவர்கள் அவரைப் பிடிப்பதற்கு முயன்றார்கள். பீமன், நகுலன், சகாதேவன், திட்டத்துய்மனன் முதலியோர் யுதிட்டிரரைப் பாதுகாக்க விரைந்தார்கள்.

கர்ணனுக்கும் யுதிட்டிரருக்கும் இடையில் நடந்த

போரில், கர்ணன் யுதிட்டிரரை, அம்புகளால் தாக்கி மயங்கச் செய்துவிட்டான். யுதிட்டிரர் சோர்வுற்று, தேர்த்தட்டின் நடுவே உட்கார்ந்தார். அவர் தம் பாகனை நோக்கி, "போர்க்களத்தைவிட்டு, தேரை அப்பால் செலுத்து" என்று ஏவினார்.

துரியோதனனும் மற்றக் கௌரவர்களும் இதைக் கண்டு பெருத்த ஆரவாரம் செய்தார்கள். "அரசனைப் பிடியுங்கள்" என்று கூவிக்கொண்டு, பிடிக்க ஓடி வந்தார்கள். அவர்களைப் பாஞ்சாலர்களும் கேகயர்களும் தடுத்தார்கள்.

சோர்வுற்று, தனித்து, தேரில் செல்லுகின்ற யுதிட்டிரரைக் கர்ணன் தூரத்திச் சென்று அம்புகளால் அடித்தான். நகுலனும் சகாதேவனும் யுதிட்டிரரைப் பாதுகாக்க விரைந்தார்கள்.

கர்ணன் பாணத்தை ஏவி, யுதிட்டிரரின் குதிரைகளைக் கொன்றான்; அவருடைய தலைப்பாகையைக் கீழே தள்ளினான். உதவிக்கு வந்த நகுலனுடைய குதிரைகளைக் கொன்று அவனுடைய வில்லையும் அறுத்தான். காயமுற்ற இவர்கள் இருவரும் சகதேவனுடைய தேரில் ஏறிக்கொண்டார்கள்.

மாமன் சல்லியனுக்குத் தன் மருமகர்மீது பரிவு உண்டாயிற்று. அவன் கர்ணனை நோக்கி, "நீ அர்ச்சுனனை அடைந்து அவனுடன் போர்புரிய வேண்டும். இப்பொழுது யுதிட்டிரனோடு போர் செய்வதால் யாது பயன்? கவசம் இழந்து, அம்புகள் குறைந்து, குதிரைகளும் சோர்வுற்று இருக்கும் தருணத்தில் நீ யுதிட்டிரனை எதிர்த்துச் சென்றால், உன்னை மற்றவர்கள் பரிகசிப்பார்கள்" என்று சொன்னான்.

சல்லியன் கூறியதைத் தன் காதில் வாங்கிக்கொள்ளாமல் கர்ணன் யுதிட்டிரரையும் நகுல சகதேவனையும் மீண்டும் அம்புகளால் அடித்தான்.

கர்ணனுடைய செய்கையைக் கண்டு, சல்லியன் உரக்கச் சிரித்தான். "ராதை மகனே! உன்னை எதற்காகப் பெருமைப் படுத்தி, கௌரவர்கள் பாராட்டினார்களோ, எந்த அர்ச்சுனனைக் கொல்ல உனக்கு ஆதரவு தந்தார்களோ, அந்த அர்ச்சுனனை நீ கொல். அதைச் செய்யாமல் யுதிட்டிரனை நீ கொல்வதனால் யாது பயன்? யுதிட்டிரனை நீ கொன்றால், மிச்சம் வையாமல் கௌரவர்களை அர்ச்சுனன் கொன்று விடுவான். அர்ச்சுனனைக் கொன்றால்தான் கௌரவர்களுக்கு வெற்றி. அதோ வானரக் கொடி சூரியன்போல் பட்டொளி வீசிப் பறப்பதைப் பார்; தேவதத்தமும் பாஞ்சசன்யமும்

ஒலிப்பதைக் கேள், இடி முழக்கம் போன்ற காண்டீவத்தின் ஒலி உன் காதில் விழுகிறதா? அங்கே துரியோதனனைப் பீமன் துன்புறுத்துவதைப் பார். துரியோதனனை விடுவிக்க நாம் முந்த வேண்டும்'' என்று சொன்னான்.

உடனே கர்ணன், சகாதேவன், நகுலன், யுதிட்டிரன் ஆகியோரை விட்டுவிட்டு, துரியோதனனைப் பாதுகாக்க விரைந்தான்.

அம்புகளால் காயமுற்ற யுதிட்டிரர் சோர்ந்து போனார். தமது பாசறையை அணுகி, நாணமுற்றவராய்த் தேரிலிருந்து கீழே இறங்கினார், களைப்புடன் இருந்த அவர் விரைவாகச் சென்று படுக்கையில் படுத்துக்கொண்டார். தம் மேனியில் தைத்திருந்த பாணங்களை அப்புறப்படுத்தினார்; துயரம் மேலிட்டு வருந்தினார். அவர் தம் தம்பியர் நகுல சகதேவர் களை நோக்கி, ''நீங்கள் பீமனிடம் செல்லுங்கள்'' என்று ஏவினார்.

அவர்கள் தேரில் ஏறிக்கொண்டு, பீமனிடம் போய்ச் சேர்ந்தனர்.

அர்ச்சுனன் கௌரவர்கள் படையைத் தீவிரமாகத் தாக்கினான். நால்வகைப் படைகளும் அடிபட்டு, அலறின; கௌரவப் படையைப் பாண்டவர்கள் விரட்டி விரட்டி அடித்தார்கள்; அழித்தார்கள்.

தனது படை அலறிக்கொண்டு சிதறியோடுவதைத் துரியோதனன் கவனித்தான். அவன் கர்ணனை அணுகி அன்புடன், ''வீரனே! பாண்டவர்கள நமது சேனையைப் பெரிதும் பீடிக்கிறார்கள். அடிபட்டுத் துன்புற்ற வீரர்கள் உன்னை உதவிக்கு அழைக்கிறார்கள்'' என்று சொன்னான்.

கர்ணன் உடனே சல்லியனை நோக்கி, ''மன்னனே! குதிரைகளைத் துரிதமாக நடத்தும். எனது புயவலிமையைப் பாரும். பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் நான் இப் பொழுதே வதம் செய்கிறேன். இது உறுதி'' என்று சொல்லி விட்டு, கர்ணன், தனக்குப் பரசுராமர் அளித்த ஒரு சிறந்த அத்திரத்தைத் தொடுத்தான்.

பாண்டவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் இதனால் நலிவுற்றுப் பெரிதும் வருந்தினார்கள். யானைகளும் குதிரை களும் தேர்களும் மனிதர்களும் அம்புகளால் அடிப்பட்டு. தடால் தடால் என்று பூமியில் விழுந்தார்கள். பாண்ட வர்கள் சார்பான வீரர்கள் கர்ணனைத் தாக்குப்பிடிக்க முடி

யாது அர்ச்சுனனையும் வாசுதேவரையும் உதவிக்குக் கூவி அழைத்தார்கள்.

உடனே அர்ச்சுனன் கண்ணனிடம், "கோவிந்தரே! பரசுராமர் கொடுத்த அஸ்திரத்தைக் கர்ணன் தொடுத்த காரணத்தால், நம் பக்கத்துப் படை பெரிதும் அல்லலுற்றுத் தவிக்கிறது. அந்த அஸ்திரத்தைத் தடுத்து அழிப்பது சாத்தியமன்று. அதனால் செருக்குற்ற கர்ணன் அடிக்கடி என்னைப் பார்க்கிறான். அவனுக்குப் பயந்து போர்க்களத்தைவிட்டு, நான் போகமாட்டேன். உயிருள்ள மனிதன் தான் வெற்றி, தோல்விகளைக் காண்பான். இறந்தவனுக்கு அழிவைத் தவிர, வெற்றிக்கு இடம் ஏது? கேசவரே! தேரை அவன் பக்கம் திருப்பும்" என்று சொன்னான்.

அதற்கு வாசுதேவர் "அரசர் காயமுற்று இருக்கிறார். முதலில் அவரைச் சந்திக்கலாம். பிறகு கர்ணனைக் கவனிக்கலாம். எதிர்த்து வரும் கர்ணனைப் பீமன் சமாளிப்பான்" என்று சொன்னார்.

"அச்சுதரே! அப்படியானால் தேரை, அரசர் இருக்கும் இடத்துக்குத் திருப்பும். அவரைக் காண்பதற்கு என் உள்ளம் விழைகிறது" என்றான் அர்ச்சுனன்.

## யுதிட்டிரரும் கோபித்தார்

போர்க்களத்தில் யுதிட்டிரர் எங்கு இருக்கிறார் என்று கவனித்துக்கொண்டே அர்ச்சுனன் சென்றான்; வெற்றி வீரனான அவன் படைவீரரைப் பார்த்துக் கொண்டே சேனையின் ஊடே சென்றான்; படை வீரர்களைப் பாராட்டி அவர்களைப் புகழ்ந்து ஊக்கம் ஏற்படச் செய்தவாறு அர்ச்சுனன் சென்றான்.

போர்க்களத்தில் யுதிட்டிரரைக் காணாதபடியால் பரிதவித்த அவன், பீமனை அணுகி, "அரசர் எப்படி இருக்கிறார்? இப்பொழுது அவர் எங்கே இருக்கிறார்?" என்று கேட்டான்.

"கர்ணனுடைய பாணங்களால் காயமுற்று, போர்க்களத்தைவிட்டு அரசர் விலகிச் சென்றுவிட்டார். அவர் உயிருடன் இருக்கிறாரோ என்னவோ?" என்று சொன்னான் பீமன்.

"அப்படியானால் நீர் சென்று, அரசருடைய நிலையை

அறிந்து வாரும். பகைவர்களை நான் சமாளிக்கிறேன்" என்று சொன்னான் அர்ச்சுனன்.

"அர்ச்சுனா! நீ சென்று அரசரைச் சந்தித்து விவரத்தைத் தெரிந்துகொள். போர்க்களத்தை விட்டு நான் விலகிச் சென்றால் பகைவர்கள் என்னைக் கோழை என்று கூறுவார்கள்" என்று பதில் சொன்னான் பீமன்.

"பீமசேனரே! நான் சம்சப்தகர்களை எதிர்க்க வேண்டியது இருக்கிறது. ஆகையால் நீர் சென்று அரசரைப் பற்றிய செய்தியை அறிந்துவாரும்" என்று சொன்னான் அர்ச்சுனன்.

"அர்ச்சுனா! சம்சப்தகர்களை நான் எதிர்க்கிறேன். நீ சென்று அரசரைப் பார்" என்று பீமன் மறுமொழி சொன்னான்.

பீமன் இப்படிக் கூறியதும் அர்ச்சுனன் கிருஷ்ணனை நோக்கி "கேசவரே! குதிரைகளை வேகமாக நடத்தும். அரசரைக் காண என் உள்ளம் தவிக்கிறது" என்று சொன்னான்.

அதற்குக் கண்ணன் "பீமா! நீ பகைவர்களை வதம் செய். நாங்கள் இருவரும் அரசனைக் காணச் செல்கிறோம்" என்று சொல்லிக் குதிரைகளை நடத்தினார்.

கண்ணனும் பார்த்தனும் யுதிட்டிரர் படுத்து இருக்கும் இடத்தை அடைந்தார்கள். தேரிலிருந்து இறங்கிச் சென்று அவருடைய அடிகளை வணங்கினார்கள்; கைகூப்பி வணங்கி நின்று, அவரைப் புகழ்ந்தார்கள்.

யுதிட்டிரரும் அவர்கள் இருவரையும் கண்டு மகிழ்ச்சி அடைந்தார். கர்ணனை வதம் செய்து திரும்பி இருக்கிறார்கள் என்ற எண்ணத்தினால் அவர்களைப் பாராட்டலானார். மகிழ்ச்சி காரணமாய் அவரால் பேசவே முடியவில்லை. "தேவகி புதல்வரே! உமக்கு நல்வரவு! அர்ச்சுனா உனக்கு நல்வரவு! கௌரவர்களுக்கு நன்மை புரிவதில் அதிக நாட்டமுடைய வீரன் கர்ணனைக் கொன்று நீங்கள் இருவரும் திரும்பி இருப்பது குறித்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். கர்ணன் என்னுடன் போர் தொடுத்து என்னை வெற்றிகொண்டான். என்னைப் பலவாறு நிந்தித்து ஏளனம் செய்தான். பீமசேனன் இல்லாவிட்டால் நான் உயிருடன் மீண்டிருக்க முடியாது. கர்ணனுடைய ஆற்றலுக்கு அஞ்சி அஞ்சிப் பதின்மூன்று வருட காலம் நான் வாழ்ந்தேன். அல்லும் பகலும் அவனைப்பற்றிய அச்சம் என் நெஞ்சை விட்டு அகலாது இருந்தது. அவனால் தோல்வியுற்று மீண்டுள்ள நான் உயிர்வாழ்வதால் யாது

பயன்? மறுபடியும் ராஜ்யம் கிடைத்தாலும் என்ன பயன்? கர்ணனிடத்து இன்று நான் அடைந்த அவமானத்தைப் போல, பீஷ்மர் துரோணர் இவர்களிடத்தும் நான் அடைந்தது இல்லை. அத்தகைய அடல் வீரன் கர்ணனை நீ வதம் செய்தது அறிந்து நான் பெருமிதம் அடைகிறேன். நீ கர்ணனைக் கொன்ற விவரத்தை எனக்கு நீ விரிவாகச் சொல். அதைக் கேட்க என் உள்ளம் பெரிதும் ஆசைப்படுகிறது. கர்ணன் 'எள்ளுப் பதர்கள்' என்று சொல்லி, நம்மைச் சபையில் நிந்தித்தவன்; திரௌபதியை இழிவாகப் பேசியவன்; எப்பொழுதும் தன்னைப் புகழ்ந்து கொள்வதில் பிரியமுள்ளவன்; அத்தகைய தீயோனை நீ வதம் செய்து விட்டாயா?" என்று கேட்டார்.

"அரசே! இன்று நான் சம்சப்தர்களுடன் போர்புரிந்து கொண்டிருந்தபோது, திடுமெனப் போர்க்களத்தில் தோன்றி, கூரிய கொடிய அம்புகளால் அசுவத்தாமா என்னைத் தாக்கினார். வாசுதேவனையும், என்னையும் கடுமையாகத் தாக்கிய அவரை நான் பதிலுக்குத் தாக்கினேன். என்னைச் சமாளிக்க முடியாது அவர் திணறிய சமயத்தில், அரங்கத்தில் கர்ணன் தோன்றினான். தங்களைக் காணும் விருப்பத்தில் இருந்த நான், கர்ணனுடன் போர் தொடுக்காது திரும்பிவிட்டேன். சாத்யகி, திட்டத்துய்மனன், யுதாமன்யு, உத்தமௌஜஸ் இவர்களின் துணைகொண்டு இன்று நான் கர்ணனை எதிர்க்கிறேன். இன்று நான் கர்ணனை வதம் செய்யாவிட்டால், சபதத்தை நிறைவேற்றாதவர்களுக்கு நேரும் கதி எனக்கும் நேரட்டும். நான் உம்மிடம் விடைபெற்றுக்கொள்கிறேன். 'வெற்றி பெறுக' என்று எனக்கு ஆசி கூறும்" என்று சொன்னான் அர்ச்சுனன்.

கர்ணன் இன்னும் உயிருடன் இருக்கிறான் என்பது தெரிய வந்ததும், அவனால் காயமுற்று வருந்தும் யுதிஷ்டிரர் அர்ச்சுனன்மீது அளவற்ற சீற்றம்கொண்டார். அர்ச்சுனனை அவர் நிந்திக்கவும் செய்தார்.

"அர்ச்சுனா! கர்ணனை எதிர்த்துப் போர்புரிய எனக்கு ஆற்றல் போதாது என்று நீ கூறியிருந்தால், நாங்கள் ராஜ்யத்தை அடைய வேறு ஏற்பாடுகள் செய்துகொண்டிருப்போம். கர்ணனையும் பகைவர்களையும் வதம் செய்வதாகச் சபதம் செய்த நீ, இப்போது அதைச் செய்யாமல் பகைவர்கள் நடுவில் எங்களை நிறுத்தி, எங்களைப் பொடிப் பொடியாக்கிவிட்டாய். பயன்தரும் காலத்தில் மரத்தை

வெட்டும் மூடனைப்போல் இருக்கிறது உன் நடத்தை. நீ, பிறந்த காலத்தில் 'இவன் சகல பகைவர்களையும் வெல்வான்' என்று தேவர்கள் முழங்கினார்கள். இப்பொழுது தேவர்கள் வாக்கும் உன் விஷயத்தில் பொய்த்துப் போய்விட்டது. கர்ணனுக்கு நீ பயப்படுகிறாய் என்பது எனக்குத் தெரியாமல் போய்விட்டது. 'கர்ணனை எதிர்த்து நிற்கும் ஆற்றல் அர்ச்சுனனுக்கு இருக்காது' என்று முன்பு துரியோதனன் சொல்லியதை நான் நம்பாதது என்மீது பிசகு. பீமன்தான் எனக்கு இப்பொழுது நாதனாக இருக்கிறான். அபிமன்யு இப்பொழுது உயிருடன் இருந்தால், எனக்கு இப்போது அவமானம் ஏற்பட்டு இருக்காது. பார்த்தா! உன்னை ஒரு துரும்பாக மதித்து, கர்ணன் என்னைப் பலவாறு துன்புறுத்திவிட்டான். ஆபத்துக் காலத்தில் உதவுபவனே உறவினன்; நண்பன். காண்டீவத்தைக் கையில் பிடித்துள்ள நீ, கர்ணனுக்குப் பயந்து ஏன் போரினின்று விலகினாய்? காண்டீவம் வைத்திருப்பதற்குப் பதிலாக, அதைக் கேசவரிடம் கொடுத்து விட்டு, கேசவருக்கு நீ சாரத்திரம் செய். அப்படியானால் விருத்திரனை இந்திரன் கொன்றது போல் கர்ணனைக் கேசவர் நாசம் செய்வார். குந்தியின் வயிற்றில் நீ கருவாய் உருவாகாமல் இருந்திருந்தாலும், அல்லது ஐந்தாவது மாதத்திலேயே கருச்சிதைவு ஏற்பட்டிருந்தாலும் எவ்வளவோ மேன்மையாய் இருந்திருக்கும்? இவ்வளவு பெரிய அவமானமும் ஏற்பட்டிராது'' என்று சொன்னார்.

## கண்ணன் சொன்ன புத்திமதி

யுதிட்டிரர் செய்த நிந்தனையைப் பொறுக்க மாட்டாத அர்ச்சுனன், கோபம்கொண்டு, வாளை உருவி யுதிட்டிரரை வெட்ட முனைந்தான்.

இதைக் கவனித்த கிருஷ்ணன், 'பார்த்தா! எதற்காக வாளைக் கையில் எடுக்கிறாய்? நீ போர்செய்து தடுக்க வேண்டிய பகைவன் எவனும் இங்கு இல்லை. திருதராட்டிரன் புதல்வர்களைப் பீமன் தடுத்துக்கொண்டு இருக்கிறான். யுதிட்டிரரைக் காணும்பொருட்டுத்தான் நீ போர்க்களத்திலிருந்து திரும்பினாய். அவர் நலத்துடன் இருப்பதை நீ பார்த்தாய். புலிக்கு ஒப்பான யுதிட்டிரர் நலத்துடன் இருக்கும்போது நீ ஏன் இப்படிக் கோபம்கொள்கிறாய்? மதிமயக்க முற்று ஏன்

வாளை எடுக்கிறாய்? நீ யாரை வெட்டப் போகிறாய்? உன் விருப்பத்தைத் தெரிவி" என்று கேட்டார்.

கண்ணன் இப்படிக் கேட்டதும், பார்த்தன் பாம்புபோல் சீறினான். "'காண்டீவத்தை வேறு ஒருவனிடம் கொடு' என்று எவன் என்னை ஏவுகிறானோ அவன் தலையைப் பிளப்பது என நான் ரகசிய சபதம் செய்து இருக்கிறேன். கோவிந்தரே! உம் முன்னிலையில் அந்த வார்த்தைகளை யுதிட்டிரர் இப்போது சொன்னார்; ஆகையால் யுதிட்டிரரை இந்தக் கத்தியால் வதம்செய்து, எனது சபதத்தையும் சத்தியத்தையும் நான் நிறைவேற்றப் போகிறேன். ஆயினும் இது சமயம் நான் செய்யத்தக்கது எது என்பதை எனக்கு விளக்கமாகக் கூறும். அதன்படி நான் நடக்கிறேன். எது தருமம் எது அதருமம் என்பதை நீர் அறிந்தவர் ஆயிற்றே?" என்று அர்ச்சுனன் சொன்னான்

அதற்குக் கண்ணன், "பார்த்தா! உன் செயல் நிந்திக்கத் தக்கது. அர்ச்சுனா! பெரியோர்களை அடுத்துப் பழகாத காரணத்தால்தான் நீ கோபம் கொள்ளத்தகாத சமயத்தில் கோபம் கொள்கிறாய். தருமத்தின் நுட்பங்களை அறிந்தோர், இன்று நீ நடப்பது போல ஒருபோதும் நடக்க மாட்டார்கள். எவன் செய்யவேண்டிய காரியத்தைச் செய்யாமலும் செய்யக் கூடாத காரியத்தைச் செய்யவும் முனைகிறானோ அவனை, மனிதர்களில் கடைப்பட்டவன் என்றுதான் சொல்ல வேண்டும். தருமத்தின் கோட்பாடுகளைப் பெரியோர் சொல்ல நீ கேட்டது இல்லைபோலும். இதனால்தான் செய்யத்தக்கது எது, செய்யத்தகாதது எது என்பதை அறியாமல், அறிந்து நிச்சயப்படுத்திக் கொள்ளாமல், மயக்கம் அடைந்துள்ளாய். தருமம் என்ன [illegible] நீ, அதருமமான காரியத்தைச் செய்யத் துணிகிறாய். உயிருள்ள ஜீவனை வதம்செய்வது பாவம் என்பதை நீ அறியவில்லை. ஒருவன் பொய் சொல்லலாம்; ஆயினும் உயிர்வதம் செய்வது கூடாது. இதை அறியாமல் நீ உன் தமையனை வதம்செய்ய முந்துகிறாய். இது உனக்கு இழுக்கை உண்டாக்கும். போர் செய்யாதவன், புறங்காட்டி ஓடுபவன், போர்புரிய விரும்பாதவன், குரு, அடைக்கலம் புகுந்தவன், வணங்குபவன், கவனக்குறைவாக இருப்பவன், ஆகியோரை வதம்செய்தல் கூடாது என்று பெரியவர்கள் கூறியிருக்கின்றனர்; அவனை அவர்கள் பாராட்டவும் மாட்டார்கள். உனக்குக் குருபோன்ற யுதிட்டிரரை நீ கொல்ல முயல்வது மடமை. சிறுபிள்ளைத்தனமாய் நீ முன்பு செய்த

சபதத்தின் பொருட்டாய், அதருமமான ஒரு காரியத்தைச் செய்ய முந்தலாமா?

"பார்த்த! பீஷ்மர், விதுரர், புகழ்பெற்ற குந்தி, யுதிட்டிரர் ஆகியோர் உனக்கு முன்பு உரைத்த அறங்களை, நான் இப்போது விவரித்து விளக்கிச் சொல்லுகிறேன். சத்தியத்தை எடுத்து உரைப்பது நலம்; அதைவிட மேலானது எதுவும் இல்லை. ஆயினும் எது சத்தியம் என்பதை உள்ளபடி அறிவது எளிதன்று.

"மெய் பொய்யின் பலனைத் தந்தால், அப்போது ஒருவன் மெய் பேசக் கூடாது; அதேபோல பொய், மெய்யின் பலனைத் தருமாயின் அப்போது ஒருவன் பொய் சொல்லலாம்.

"திருமணம் செய்யும்போதும், பெண்ணை அணையும் போதும், உயிருக்கு ஆபத்து நேரும்போதும், சகல சொத்துகளும் பறிபோகும்போதும், அந்தணனுக்கு உதவிசெய்ய வேண்டிய காலத்தும் ஒருவன் பொய் சொல்லலாம். இந்த ஐந்து பொய்களையும் பாவம் அல்ல என்று பெரியவர்கள் கூறியுள்ளனர்.

"இந்த ஐந்து சமயங்களிலும் சொல்ல நேரும் பொய்யை மெய் என்றும், மெய்யைப் பொய் என்றும் நாம் கொள்ளலாம். புறத்தில் மெய் என்று தோன்றும் ஒன்றை மெய் எனவே நம்பிக் காரியத்தில் இறங்குபவன் மடையன் ஆவன். எது மெய், எது பொய் என்பதை முன்னதாக நிர்ணயப்படுத்திக்கொண்டு, ஒருவன் செயலில் இறங்க வேண்டும். கொடிய செயலைப் புரியும் ஒருவன் பலாகன் என்னும் வேடனைப் போல், புண்ணியத்தைச் சம்பாதிப்பவனாகலாம். தருமத்தில் நாட்டமுள்ளவனாய் இருந்தும், கௌசிகனைப்போல ஒருவன் பாவத்தை அடையலாம்" என்று சொன்னார்.

"அச்சுதரே! பலாகனைப் பற்றிய கதையையும் கௌசிகனைப் பற்றிய கதையையும் எனக்குக் கூறுங்கள்" என்று கேட்டான் அர்ச்சுனன்.

* * *

## பலாகன் கதை

"அர்ச்சுனா! கேள். முன்பு ஒரு காலத்தில் விலங்குகளை வேட்டையாடும் வேடன் ஒருவன் இருந்தான். தன் மனைவி மக்களைக் காப்பாற்றும் பொருட்டு, விலங்குகளை அவன் வேட்டையாடுவானே யன்றி, மனப்பூர்வமாக வேட்டையாடி, விலங்குகளைக் கொல்ல மாட்டான். இவன் எப்பொழுதும்

மெய்யே பேசுவான்; பொறாமைக் குணம் அவனிடம் துளிகூட கிடையாது. தன் குல வழக்கப்படி விலங்குகளை வேட்டையாடி, அதன் ஊனை, வயது முதிர்ந்த தன் பெற்றோருக்கும் தன்னை அண்டி வாழும் மற்றவர்களுக்கும் அவன் பகிர்ந்து கொடுப்பான்,

"ஒரு நாள் அவன் வழக்கம்போல் வேட்டையாடச் சென்றிருந்தபோது, எவ்வித விலங்கும் அவனுக்கு அகப்படவில்லை. கடைசியாகக் கொடிய விலங்கு ஒன்று நீர் அருந்திக்கொண்டிருப்பதைப் பலாகன் கண்டான். அந்த விலங்குக்குக் கண் இல்லை. ஆயினும் மூக்கின் உணர்வால் எதையும் அறியும் ஆற்றல் அதனிடம் விளங்கிற்று.

"தான் முன்பு பார்த்திராத கொடிய அந்த விலங்கைப் பலாகன் அம்பு எய்து கொன்றான். வானத்திலிருந்து பூமாரி பொழிந்தது. தேவலோகத்திலிருந்து விமானம் ஒன்று கீழ வந்து, அப்ரசுகளின் இன்னிசை ஒலிக்க, தேவலோகத்துக்கு பலாகனை அழைத்துப் போயிற்று.

"இந்தக் கொடிய விலங்கு, கடுந்தவம் செய்து மற்ற விலங்குகளைக் கொல்லும் வரத்தைப் பெற்றிருந்தது. அதற்குக் கண் தெரியாதபடி பிரம்மதேவர் செய்துவிட்டார். பிற விலங்குகளைக் கொன்று வாழ்ந்த அந்தக் கொடிய விலங்கைக் கொன்றதனால் பலாகன் சொர்க்கத்தை அடைந்தான்.

'ஆகையால் அர்ச்சுனா! தருமம் எது என்பதை அறிவது எளிதன்று."

* * *

## கௌசிகன் கதை

"பார்த்தா! நதிகள் சேரும் இடத்துக்குச் சிறிது தூரத்தே கிராமம் ஒன்று இருந்தது. அங்கே கௌசிகன் என்ற அந்தணன் ஒருவன் வசித்து வந்தான். நூல்களை நிறையப் படிக்காத காரணத்தால், தருமத்தின் நுட்பங்களை வேறுபடுத்தித் தெரிந்துகொள்ள அவனால் முடியவில்லை. "எப்பொழுதும் உண்மைதான் பேச வேண்டும்" என்ற உறுதியுடன் அவன் வாழ்க்கை நடத்தி வந்தான். அதனால் 'சத்திய சீலன்' என்ற புகழ் அவனுக்குக் கிட்டி இருந்தது.

"ஒரு முறை திருடர்களுக்குப் பயந்து, சிலர் காட்டில் புகுந்து ஒளிந்துகொண்டார்கள். விரட்டிக்கொண்டே திருடர்கள் சிலர் அவர்களைத் தேடி வந்தார்கள். அகப்படவில்லை,

ஆகவே கௌசிகனை அணுகி, "சத்தியசீலரே! யாராவது சில மனிதர்கள் இந்தக் காட்டில் புகுந்து ஒளிந்து கொண்டிருக்கிறார்களா?" என்று கேட்டார்கள்.

"அறத்தின் நுட்பங்களை அறியாத கௌசிகன் திருடர்கள் கேட்ட கேள்விக்குச் சட்டெனப் பதில் சொல்லி விட்டான். தான் உண்மை பேசும் வழக்கப்படி, 'திருடர்களே! நீங்கள் தேடிவந்த நபர்கள் அங்கே புதரில் ஒளிந்திருக்கிறார்கள்' என்று உண்மையைக் கூறிவிட்டான்.

"விவரம் தெரிய வந்ததும், தேடிச் சென்று, கொண்டிருப்பவர்களைப் பிடித்துத் திருடர்கள் கொன்று விட்டார்கள்.

"உண்மையே உரைத்த போதிலும், அறத்தின் நுட்பங்களை அறியாது இருந்த காரணத்தால், கௌசிகனுக்குக் கொடிய நரகம் கிடைத்தது."

"நீதி சாத்திரங்களைத் தவறாகப் புரிந்து கொண்டிருப்பவனும், பெரியோரை அடுத்து, தருமங்கள் பற்றிய ஐயங்களை விளக்கிக் கொள்ளாதவனும், மூடன் குழியில் விழுவதுபோல, விழுந்து அவதிப்படுவார்கள். உனது போக்கும் அப்படித் தான் இருக்கிறது.

"தருமத்தை முழுவதும் உணர்ந்து கடைப்பிடிப்பது எளிதான காரியம் அன்று; சிலர் சத்தியமே தருமம் எனக் கருதி அதைக் கடைப்பிடிக்கின்றனர்.

"உயிர்களுக்கு நன்மை பயப்பது எதுவோ அதை நாம் தருமமாகக் கொள்ளலாம். தீமை பயப்பதை அதருமமாகக் கொள்ளலாம்.

"சபதம் எடுத்துக்கொண்டதற்காக, அதருமமான காரியத்தைச் செய்வது மதியீனம். பார்த்தா! நன்கு யோசித்துப் பார். யுதிட்டிரரைக் கொல்வது தகுமா என்பதைச் சிந்தனை செய்" என்று சொன்னார்.

கண்ணன் கூறின இந்தப் புத்திமதிகளைச் செவிமடுத்த அர்ச்சுனன், "கோவிந்தரே! நீர் அனைத்தையும் அறிந்தவர்; எங்கள் நன்மையில் அதிக நாட்டமுடையவர்; எங்களுக்குத் தந்தைபோலவும் தாய்போலவும் இருப்பவர்; அறத்தின் இயல்புகளையும் நுட்பங்களையும் நன்கு அறிந்தவர். யுதிட்-

டிரரை வதம்செய்யக்கூடாது என்பதை நான் ஒப்புக்கொள் கிறேன். அதே சமயத்தில் எனது சபதமும் வீண்போகாமல் நிறைவேறுவதற்கு உரிய ஒரு மார்க்கத்தை எனக்கு நீர் சொல்லும்” என்று கேட்டான்.

“வீரனே! அரசர் யுதிட்டிரர் கர்ணனுடைய அம்புகளால் அடிப்பட்டு, மிகவும் நலிவுற்றுச் சோர்ந்து இருக்கிறார். இதன் பயனாய், கவலையுடன் இருக்கும் அவர், கோபமுற்று, தகாத வார்த்தைகளை உன்னிடம் உரைத்துவிட்டார். உனது கோபத்தைக் கிளறிவிட்டால் நீ கர்ணனை வதம்செய்வாய் என்று கருதித்தான் அவர் இப்படிச் சொல்லி இருக்கிறார். உன்னைத் தவிர்த்து வேறு எவராலும் பாவியான கர்ணனை வெல்ல முடியாது என்று அவர் கருதுகிறார். இன்று கர்ணனை வதம் செய்துவிட்டால் கௌரவர்கள் தோற்பது நிச்சயம் என்று அவர் திடமாக நம்புகிறார். ஆகவே, அரசரைக் கொல்வது நியாயமன்று.

“ஆயினும் நீ எடுத்துக்கொண்டுள்ள சபதமும் வீண் போகக் கூடாது. அதற்கு உரிய உபாயத்தை உனக்கு நான் இப்போது சொல்லுகிறேன்; அதன்படி நீ செய்தால், உயிர் வாழ்ந்தாலும் உண்மையிலேயே அந்த மனிதன் இறந்தவனே ஆவான்.

“கௌரவத்துக்குப் பாத்திரனான ஒரு மனிதன் தொடர்ந்து கௌரவத்துடன் இருந்தால்தான் வாழ்ந்தவன் ஆவான்; அப்படியின்றி, கௌரவத்தை இழந்து, ஓர் அவமானத்தை அவன் எப்பொழுது அடைகிறானோ, அப்பொழுது அவன் இறந்தவன் ஆவான். உயிருடன் அவன் இருந்தாலும் அவன் நிலை இறந்தவனுக்கு இருக்கும் நிலைதான்.

“பார்த்தா! நீயும், பீமன், நகுலன் சகதேவன் முதலியோரும் அரசரைப் பெரிதும் மதித்துக் கௌரவித்து வந்திருக்கிறீர்கள்; உலகத்திலுள்ள சான்றோர்களும் வீரர்களும் அவரைப் பெரிதும் மதிக்கிறார்கள். அவரை அவமதிக்கும் ஒரு வார்த்தையால் நீ அழைத்தால், அதனால் அவர் இறந்ததற்கு நிகர் ஆவார். நீ என்று சொல்லி அவரை அவமதித்து விடு. அது ஒன்றே போதும். பிறகு அவருடைய காலடியில் வீழ்ந்து, அவரைச் சமாதானம் செய்து கொள்ளலாம்” என்று சொன்னார்.

## 'தமையனை நிந்தி'

கிருஷ்ணன் சொன்ன புத்திமதியை அர்ச்சுனன் முழுதும் அங்கீகரித்தான். யுதிட்டிரரைக் கொடிய வார்த்தைகளால் வலிந்து அவன் நிந்திக்கலானான்!

"அரசனே! என்னைக் கண்டிப்பதை நீ நிறுத்திக்கொள்; போர்க்களத்திலிருந்து வெகு தூரம் விலகி இருக்கின்ற உனக்கு என்னை நிந்திக்கும் உரிமை கிடையாது. பீமன் பகைவர்களை எதிர்த்துக் கடும்போர் செய்து, அவர்களை வதம் செய்து இருக்கிறான். என்னை நிந்திக்கும் உரிமை அவனுக்கு உண்டு; உனக்கு இல்லை என்பதை நீ தெரிந்துகொள். நண்பர்களால் பாதுகாக்கப்பட்டு ஒதுங்கி இருக்கும் உனக்கு, அந்த உரிமை ஏது? நீ சூதாடி ராஜ்யத்தை இழந்துவிட்டாய். எங்களின் உதவி கொண்டு, மீண்டும் ராஜ்யத்தை அடைய முயல்கிறாய். சூதாடி நாட்டை இழந்த நீ இப்பொழுது என்னை நிந்திக்கிறாய். ஊசிபோன்ற கூரிய கொடுஞ் சொற்களால் எங்களை நீ துன்புறுத்துகிறாய். உன்னால் நாங்கள் எந்த நலனையும் அடையவில்லை. சூது ஆடுவதால் பல துன்பங்கள் நேரும் என்பதைச் சகதேவன் உனக்கு எடுத்து விளக்கினான். அதை நீ காதில் வாங்கிக்கொள்ளாமல், இழிந்தோர் ஆடும் சூதை ஆடி, எங்களைத் துன்பத்தில் அழுத்திவிட்டாய். கொடிய சொற்களைக் கூறி மேலும் எங்களை நீ கொடுமைப்படுத்தாதே; கோபத்தை உண்டாக்காதே" என்று சொன்னான்.

உறுதியும் பண்பும் மனச்சாட்சியுமுடைய அர்ச்சுனன் இந்தக் கொடுஞ் சொற்களால் யுதிட்டிரரை நிந்தித்தான். பெருமூச்சுவிட்டுக்கொண்டே தான் கூறின கொடுஞ் சொற்களை நினைந்து வருந்தினான். பிறகு வானம்போல் பளபளக்கும் தனது கத்தியை உறையிலிருந்து உருவினான்.

இதைக் கண்ணன் கவனித்துவிட்டார் "அர்ச்சுனா! இதெல்லாம் என்ன? எதற்காகக் கத்தியை நீ உருவுகிறாய்? உனது விருப்பம் நிறைவேறுவதற்கான மார்க்கத்தை மீண்டும் உனக்கு நான் கூறுகிறேன். உனது விருப்பத்தைத் தெரிவி" என்று கேட்டார்.

"அச்சுதரே! பாபம் செய்த எனது உடலை நான் ஒழித்துக்கொள்ள விரும்புகிறேன்" என்று அர்ச்சுனன் மறுமொழி கூறினான்.

"அர்ச்சுனா! யுதிட்டிரரை 'நீ' என்று சொல்லி அவமதித்த

தற்காக நீ தற்கொலை செய்துகொள்ள விரும்புகிறாய். இது நேர்மையானவன் செய்யும் செயல் அன்று. ஆகவே, நான் ஒரு வழி சொல்லுகிறேன் கேள். தற்புகழ்ச்சி செய்துகொள்வது, தற்கொலை செய்துகொள்வதற்குச் சமம். எனவே வேண்டிய மட்டும் உன்னைப் புகழ்ந்து கொள். உனது பாபம் அகன்றுவிடும்" என்று யோசனை சொன்னார்.

"அவ்வாறே ஆகட்டும்" என்றுசொல்லி, கத்தியை அர்ச்சுனன் கீழே வைத்தான். பிறகு யுதிட்டிரரை நோக்கி, "அரசே! நான் கூறப்போவதைக் கேளும். பிநாகத்தை வில்லாகக்கொண்ட மகாதேவரைத் தவிர்த்து, என்னை நிகர்த்த வில்லாளி எவனும் இல்லை அவருடைய அனுமதி கிடைத்தால், உலக முழுவதையும் அழிக்கும் ஆற்றல் எனக்கு உண்டு. எனது ஆற்றலால்தான் ராசசூய வேள்வியை இயற்றி நீர் பெருமை பெற்றீர். அங்க லட்சண அமைப்பினால் என்னை ஒருவனாலும் போரில் வெல்ல முடியாது" என்று சொன்னான்.

இதன் பின்னர், படைக்கலன்களை அர்ச்சுனன் கீழே கழற்றிவைத்தான். பிறகு யுதிட்டிரரை அணுகிக் கைகூப்பி வணங்கினான். நாணத்தால் தலைகவிழ்ந்தவாறே யுதிட்டிரரிடம், "அரசே! நான் சொன்னவற்றைப் பொறுத்து அருளும், காலக்கிரமத்தில் இதன் பொருள் விளங்கும்" என்று சொன்னான்.

பிறகு யுதிட்டிரரின் இரு பாதங்களையும் பற்றிக்கொண்டு "அரசே! பீமனைப் போரினின்று விடுவிப்பதற்காகவும் கர்ணனைக் கொல்வதற்காகவும் இதோ நான் செல்கிறேன். உமக்கு நன்மை செய்யத்தான் இந்த உயிரை நான் வைத்துக் கொண்டு இருக்கிறேன். இன்று கர்ணனை நான் கொல்வேன்; அல்லது கர்ணன் என்னைக் கொல்வான். ராதையாவது குந்தியாவது இன்று புத்திரன் இல்லாதவர்களாக இருப்பதை நீர் காண்பீர். இது உறுதி" என்று சொன்னான்.

## காடு செல்வேன்

அர்ச்சுனன் சொன்ன இந்தக் கொடிய சொற்களைச் செவிமடுத்த யுதிட்டிரர் துக்கமுற்று, எழுந்து படுக்கையில் உட்கார்ந்தார். அவர் அர்ச்சுனனை நோக்கி, "பார்த்தா! நான் நன்மை புரியாத காரணத்தால் நீங்கள் துயரம் அநுப

விக்கிறீர்கள். நான் குலத்துக்கு அழிவைச் செய்பவன்; மூடன்; இழிந்தவன். பெரியோர்களை நிந்திப்பவன். ஆகையால் என் தலையைத் துண்டாக்க உனக்கு உரிமை உண்டு. அந்தக் காரியத்தை இப்பொழுதே நீ செய். கொடியவனை என்னை நீ பின்பற்றியதனால், எந்த நன்மையும் நீ அடையவில்லை. ஆகையால் நான் இப்பொழுது காடு செல்கிறேன். நீங்கள் சுகமாய் இருங்கள். பீமனை அரசனாக்கிக் கொள்ளுங்கள். ஆற்றலற்ற எனக்கு அரசு தேவையில்லை. நீ கூறும் கொடிய சொற்களைப் பொறுப்பதற்கு என்னால் முடியாது. அவமதிப்புக்கு ஆளான பிறகு, உயிர் வாழ்வதால் யாது பயன்?'' என்று சொன்னார்.

பிறகு கோபத்துடன் படுக்கையைவிட்டு எழுந்து, காடு செல்ல முனைந்தார்.

உடனே வாசுதேவர் அவரை வணங்கி, "அரசே! 'காண்டீவத்தைப் பிறரிடம் கொடு' என்று சொன்னதை அர்ச்சுனன் பொறுக்கவில்லை. அதனால் என் தூண்டுதலின் பேரில் உம்மை அவன் நிந்தித்துவிட்டான். நானும் பார்த்தனும் சேர்ந்து செய்த இந்த அபசாரத்தை நீர் பொறுத்துக்கொள்ளும். நாங்கள் உம் அடைக்கலம். பாவி கர்ணனுடைய குருதியை இப்பொழுது பூமி குடிக்கப்போகிறது. நீர் விரும்புகிறபடி, கர்ணனுடைய வதம் நிச்சயம் நடந்தே தீரும்'' என்று சொல்லி, சமாதானம் செய்தார்.

கிருஷ்ணன் இவ்வாறு பணிவுடன் சொன்னதும் யுதிட்டிரர் பரபரப்பு அடைந்தார். அவரை எடுத்து நிறுத்தி, "மாதவரே! நான் சமாதானம் அடைந்தேன், உம்மால் நாங்கள் துயரக் கடலைக் கடப்போம்'' என்று சொன்னார்.

தன் தமையனை நிந்தித்ததை நினைந்து நினைந்து அர்ச்சுனன் துயரத்துடன் இருந்தான். இதைக் கவனித்த கண்ணன் "அர்ச்சுனா! யுதிட்டிரரைக் கொடுஞ் சொற்களால் நிந்தித்ததற்காக நீ இப்படிக் கவலைப்படலாமா? வாளால் அவரை நீ மாய்த்திருந்தால், நிலைமை எப்படி இருக்கும் என்பதை நீயே சிந்தித்துப் பார். தருமத்தை அறிவது கடினம். ஆகவே, அரசரிடம் நீ செய்த குற்றத்தைப் பொறுத்து அருளும்படி வேண்டு. பிறகு கர்ணனுடன் போர்செய்ய நாம் புறப்படலாம். கர்ணனைக் கொன்றால் யுதிட்டிரர் பெரிதும் மகிழ்ச்சி அடைவர்'' என்று சொன்னார்.

அர்ச்சுனன் நாணத்துடன் சென்று யுதிட்டிரரின் அடிக் கமலங்களைத் தலையால் வணங்கினான். "அரசே! நான் செய்த

பிழையைப் பொறுத்து அருளும்" என்று சொல்லிப் பல முறை வேண்டினான்; அழுதான்.

யுதிட்டிரர் தன் தம்பியை எடுத்து நிறுத்தித் தழுவிக் கொண்டார். தாமும் கண்ணீர் உகுத்து அழுதார். சகோதரர் இருவரும் சிறிது நேரம் இப்படி அழுது தங்கள் தங்கள் துக்கத்தை நீக்கிக்கொண்டார்கள். பிறகு இருவரும் ஆறுதல் அடைந்து, மகிழ்ச்சியுற்றார்கள்.

யுதிட்டிரர் உச்சிமோந்து அர்ச்சுனனைத் தழுவிக்கொண்டார். அவர் அர்ச்சுனனிடம், "தோள்வலி மிக்கவனே! மகிமை பொருந்திய வில்லையுடையவனே! சேனையினர் பார்த்திருக்க என்னைக் கர்ணன் தோல்வியுறச் செய்தான். கொடி, தேர், குதிரை, வில், கவசம் யாவற்றையும் நான் இழந்தேன். அதனால் ஏற்பட்ட துக்கம் என் நெஞ்சை உறுத்துகிறது. அவனை நீ கொல்லாவிட்டால் நான் உயிர் தரியேன்" என்று சொன்னார்.

"அவ்வாறே கர்ணனை நான் கொல்வேன். இது உறுதி" என்று தன் ஆயுதத்தைத் தொட்டு அர்ச்சுனன் சபதம் செய்தான்.

பிறகு அவன் கிருஷ்ணன் பக்கம் திரும்பி, "மாதவரே! தேரைச் சித்தம் செய்யும். நாம் போருக்குப் புறப்படலாம்" என்று சொன்னான்.

உடனே கிருஷ்ணனுடைய சாரதி தாருகன் தேரைச் சித்தம் செய்து, குதிரைகள் பூட்டி, கொணர்ந்து நிறுத்தி அர்ச்சுனனிடம் தெரிவித்தான்.

அப்போது கண்ணன் யுதிட்டிரரிடம், "அரசே! அர்ச்சுனனுக்கு ஆசி கூறி, அவனைப் போருக்கு அனுப்பும்" என்று சொன்னார்

அதன்படி யுதிட்டிரர் அர்ச்சுனனை இறுகத் தழுவிக் கொண்டு, "அர்ச்சுனா! நீ வெற்றிபெற்று மீள்க" என்று வாழ்த்தினார்.

"அரசே! கர்ணனைக் கொன்று, நான் உம்மிடம் வருகிறேன். அவனைக் கொல்லாமல் நான் திரும்ப மாட்டேன். இது உறுதி" என்று சொல்லி, யுதிட்டிரரின் தாளிணையை மீண்டும் வணங்கினான் அர்ச்சுனன்.

"அர்ச்சுனா! உனது விருப்பம் நிறைவேறட்டும். வாழ்நாளும் புகழும் உனக்கு அதிகரிக்கட்டும்! வெற்றியும் பலமும் உனக்குப் பெருகட்டும்!" என்று வாழ்த்தினார் யுதிட்டிரர்.

# பதினான்கு கிராமங்கள்

யுதிட்டிரரைச் சமாதானம் செய்த பிறகு, கர்ணனை வதம் செய்யும் பொருட்டு, அர்ச்சுனன் தேரில் ஏறினான். அந்தணர்கள் ஆசி சொன்னார்கள். தருமசீலரான யுதிட்டிரரும் அர்ச்சுனனை வாழ்த்தினார்.

அர்ச்சுனன் புறப்பட்டதும் நன்நிமித்தங்கள் தோன்றின. கிரவுஞ்சம் முதலிய பறவைகள் அர்ச்சுனனை வலம் வந்தன; கழுகுகளும் கொக்குகளும் காக்கைகளும் ஊனைத் தின்னும் பொருட்டு, அர்ச்சுனனுக்கு முன்னே பறந்தன.

அர்ச்சுனன் பெருங் கவலையுடன் புறப்பட்டான். அவனுக்கு உடம்பு எல்லாம் வியர்த்துவிட்டது. 'வெற்றி பெறுவது எப்படி?' என்ற சிந்தனையில் மூழ்கியவனாய் அவன் சென்றான்.

இதைக் கவனித்த கண்ணன் அர்ச்சுனனுக்கு உற்சாகம் ஏற்படச் செய்தார். "காண்டீவத்தை யுடையவனே! எந்த மனிதனும் போரில் உன்னை வெல்ல முடியாது. பீஷ்மர், துரோணர், பகதத்தன் முதலிய மாபெரும் வீரர்களை வெற்றி கண்ட வீரன் நீ. தேவர், கந்தர்வர், அரக்கர் இவர்களையும் வெல்லும் திறன் உனக்கு உண்டு. ஆயினும் அலட்சியமாகக் கர்ணனுடன் நீ போர் புரியாதே.

'கர்ணன் மகா பலசாலி; திறமையாகப் போர்புரியத் தெரிந்தவன்; காலம் அறிந்து கருத்துடன் போர் செய்பவன். அகந்தையுள்ளவன்; உனக்கு நிகரானவன்; ஏன் உன்னைக் காட்டிலும் மேலானவன் என்றும் சொல்லலாம். பெரு முயற்சி செய்துதான் கர்ணனை நீ கொல்ல நேரும். ஆற்றலில் நெருப்புக்கும், வேகத்தில் காற்றுக்கும், கோபத்தில் யமனுக்கும், பலத்தில் சிம்மத்துக்கும் நிகரானவன் அவன். பார்க்க இனியவன்; நண்பர்கள் நலத்தில் நாட்டமுடையவன்; பாண்டவர்களைப் பெரிதும் பகைப்பவன். உன்னைத் தவிர்த்து வேறு எவராலும் கர்ணனை அழிக்க முடியாது. சிங்கம் யானையைக் கொல்வதுபோல், கர்ணனை நீ கொல். அதனால் யுதிட்டிரர் மகிழ்ச்சியுறுவார்" என்று சொல்லி, அர்ச்சுனனை உற்சாகப் படுத்தினார்.

கிருஷ்ணன் இப்படி உற்சாகப்படுத்தியதும், கவலை அகன்று அர்ச்சுனன் களிப்புற்றான். அவன் காண்டீவத்தை ஒலி

செய்துகொண்டு, கண்ணனிடம் "மாதவரே! உமது உதவி இருக்கும்போது, எனக்கு வெற்றி நிச்சயம். எனது வில்லினால் கர்ணன் மாள்வது திண்ணம். கர்ணனுடன் நான் தொடுக்கப் போகும் போரைப்பற்றி, உலகம் உள்ள அளவும் மக்கள் பேசுவர். கர்ணனைக் கொன்று, யுதிட்டிரருக்கு உள்ள துயரத்தை நான் போக்குகிறேன். இது உறுதி. எனது ஆற்றலைக் கண்டு உற்றார் உறவினர்கள் மகிழப் போகின்றனர். துரியோதனன் முதலானவர்களின் உறவினர்கள் அழப் போகின்றனர்" என்று சொன்னான்.

• • •

பீமசேனன் தனித்துப் பகைவர்களுடன் போர் செய்துகொண்டிருந்தான். பாணங்கள், படைக்கலங்கள் இன்னும் எவ்வளவு கைவசம் இருக்கின்றன என்பதை அறியாமல் தீவிரமாக அவன் போர் செய்துகொண்டிருந்தான் அவன் தன் சாரதியை நோக்கி 'விசோக! படைக்கலங்கள் இன்னும் எவ்வளவு மீதம் இருக்கின்றன என்பதைப் பார்த்துச் சொல்" என்று கேட்டான்.

அதற்கு அவன் "வீரரே! இந்தக் தேரில் பன்னீராயிரம் பல்லங்கள் இருக்கின்றன; அறுபதினாயிரம் பாணங்கள் இருக்கின்றன; இரண்டாயிரம் நாராசங்கள், மூவாயிரம் பிரதரங்கள் இருக்கின்றன. இவற்றைத் தவிர ஈட்டி, கத்தி, உலக்கை, எறி வளையங்கள், கதாயுதம் முதலியனவும் இருக்கின்றன. சளைக்காது நீர் போர் தொடுக்கலாம். ஆயுதம் குறையும் என்ற பயம் வேண்டாம்" என்று சொன்னான்.

இது சமயம் நான்கு பக்கங்களிலும் கௌரவ சேனை சிதறியோடுவதைப் பீமன் கவனித்தான். தன் தேர்ப்பாகனிடம், "விசோக! அர்ச்சுனன் வந்துவிட்டான் போலும். அர்ச்சுனனுடைய அம்புகளால் துன்புற்று, கௌரவ சேனை சிதறியோடுவதைப் பார்!" என்று சொன்னான்.

"பீமசேனரே! ஆம். அர்ச்சுனன் வந்துவிட்டார். அதோ அவருடைய வானரக் கொடி பறக்கிறது. காண்டீவத்தின் ஒலி, காதில் விழுகிறது. தேவதத்தம் என்னும் சங்கத்தின் முழக்கமும் கேட்கிறது. வாசுதேவர் வெண்ணிறமுள்ள அர்ச்சுனன் குதிரைகளை விரைவாகச் செலுத்தி வருகிறார். பகைவர்களை நாசம் செய்துகொண்டு அதோ அர்ச்சுனன் உம்மை நாடி வருகிறார். உம் பகைவர்கள் மாளப் போகின்றனர். உமது பலமும் ஆயுளும் புகழும் விருத்தியடையப் போகின்றன" என்று சொன்னான்.

"விசோகா! நீ பிரியமான வார்த்தைகளைச் சொன்னதனால் களிப்புற்றேன். சிறந்த பதினான்கு கிராமங்களை உனக்கு நான் வெகுமதி அளித்து இருக்கிறேன். நூறு வேலைக்காரிகள், இருபது தேர்கள் இவற்றையும் தருகிறேன்" என்று வாக்களித்தான்.

* * *

அர்ச்சுனன், கண்ணனிடம் "அச்சுதரே! தேரை விரைவாகச் செலுத்தும்" என்று சொன்னான்.

"பீமன் போர் செய்யும் இடத்துக்கு இதோ விரைந்து தேரைச் செலுத்துகிறேன்" என்று பதில் சொன்னார் கிருஷ்ணன்.

கௌரவப் படையைக் கலக்கிக்கொண்டு, அர்ச்சுனன் புகுந்தான்; பகைவர்களைப் பலவித பாணங்களால் துன்புறுத்திக்கொண்டே, படையை நிலைகலங்கச் செய்தான்.

அர்ச்சுனன் வந்துவிட்டான் என்பதை அறிந்த பீமன், உற்சாகத்துடன் போர் செய்தான். கௌரவ சேனை நிலை கலங்கித் தவித்தது.

இதைக் கவனித்த துரியோதனன் சகுனியிடம், "மாமா! பீமனை எதிர்த்து வெல்லும். அவனை வெற்றிகொண்டால் பாண்டவப் படை முழுவதும் வெற்றிகொண்டதாகவே நாம் கருதலாம்" என்று சொன்னான்.

அதன்படி சகுனி பீமனை எதிர்த்துச் சென்றான். சகுனிக்கும் பீமனுக்குமிடையில் தீவிரமான போர் நடந்தது. இதில் சகுனி தோற்றான். துரியோதனன் அவனைத் தன் தேரில் ஏற்றிக்கொண்டு அப்பால் சென்றான்.

கௌரவப் படை பயந்து ஓட்டம் பிடித்தது; பீமன் அவர்களை விரட்டி விரட்டி அடித்தான். பீமனிடமிருந்து தங்களைக் காப்பாற்றக் கூடியவன் கர்ணன்தான் என்று கருதி, கௌரவ வீரர்கள் அவன் அருகில் போய்ச் சேர்ந்தனர்.

## வீர மரணமா ? வெற்றியா ?

பீமசேனன் கௌரவ சேனையைச் சின்னபின்னப்படுத்தி, சிதற அடித்துக்கொண்டு இருந்தான். இதைக் கவனித்த கர்ணன், "பாஞ்சாலர்களிடம் தேரைச் செலுத்து" என்று சல்லியனிடம் சொன்னான்.

அதன்படி சல்லியன் தேரைச் செலுத்தினான். கர்ணனுடைய தேர் வருவதைக் கண்டு பாஞ்சாலர்கள் பயந்து நடுங்கினார்கள்.

கர்ணன் அம்புகளை இடைவிடாது தொடுத்து, பாண்டவ சேனையைத் துன்புறுத்தினான்; சாத்யகி, பீமன், திட்டத்துய்மனன் முதலான வீரர்கள் பதிலுக்குக் கர்ணனைத் தாக்கினார்கள்.

கர்ணன் சளைக்காது போர் செய்தான். அவன் எய்த அம்புகளால் நலிவுற்ற பாஞ்சாலர்கள் கதறி அழுதார்கள். கோபம்கொண்ட சிங்கம் மற்ற விலங்குகளைத் துரத்துவது போலப் பாண்டவ வீரர்களைக் கர்ணன் விரட்டி விரட்டி அடித்தான்.

இதைக் கண்டு கௌரவ வீரர்கள் பெருத்த ஆரவாரம் செய்தார்கள். துரியோதனன் களிப்புற்றான். நான்கு பக்கங்களிலும் வாத்தியங்களை முழங்கச் செய்து, தனது மகிழ்ச்சியை வெளிப்படுத்திக்கொண்டான்.

கர்ணன் உற்சாகம் அடைந்து, பாண்டவர்களின் நால்வகைப் படைகளையும் அழித்தான். இதைக் கவனித்த அர்ச்சுனன், "கிருஷ்ணா! போர்க்களத்தில் கர்ணனுடைய கொடி அதோ தெரிகிறது. பீமசேனன் கௌரவ வீரர்களை எதிர்த்துப் போர்புரிகிறான். பாஞ்சாலர்கள் கர்ணனுக்குப் பயந்து ஓடுகிறார்கள். அதனால் துரியோதனன் மகிழ்ச்சியுடன் இருக்கிறான். சல்லியன் கர்ணனுடைய தேரைத் திறமையாக நடத்தி வருகிறான். கர்ணன் போர்புரிகிற இடத்துக்கு நம் தேரைச் செலுத்தும். கர்ணனைக் கொல்லாமல் போர்க்களத்திலிருந்து நான் திரும்பமாட்டேன்" என்று சொன்னான்.

அர்ச்சுனன் விருப்பப்படி, கர்ணன் போர் செய்யும் பகுதிக்குத் தேரைச் செலுத்தினார் கண்ணன்.

இதைச் சல்லியன் கவனித்துவிட்டான். அவன் கர்ணனிடம், "கர்ணா! வெண்மையான குதிரைகள் பூட்டிய தேரில் அதோ அர்ச்சுனன் வருகிறான்; வரும்போதே பகைவர்களை அவன் வதம் செய்துகொண்டு வருவதைப் பார். காண்டீவத்தைக் கையில் பிடித்திருக்கும் அவனைக் கொல்ல, உனக்குத் தகுந்த சமயம் வாய்த்திருக்கிறது; உன்னை எதிர்க்க விரும்பி வருகின்ற அர்ச்சுனனைப் பார். உன்மீது மிகுந்த கோபம் கொண்டு உன்னை அவன் தாக்க வருகிறான். அர்ச்சுனனை எதிர்ப்பதற்கு உன்னை நிகர்த்த வேறு வீரன் இல்லை. முயற்சி

யுடன் போர் தொடுத்து, அர்ச்சுனனை வதம் செய்'' என்று ஊக்கமூட்டினான்.

"சல்லிய மன்னரே! இப்பொழுதுதான் உம் நிலையில் நின்று நீர் பேசுகிறீர். இது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. அர்ச்சுனனையும் கிருஷ்ணனையும் கொல்லாமல் போர்க் களத்திலிருந்து நான் திரும்பப் போவது இல்லை. ஒன்று அவர்களை நான் கொல்வேன்; இல்லையேல் அவர்கள் என்னைக் கொல்வார்கள். எது நேர்ந்தாலும் என் கடமையை நான் செய்தவன் ஆவேன்'' என்று பதில் சொன்னான் கர்ணன்.

"கர்ணா! தனித்து நின்று போராடும் அர்ச்சுனன் வெல்ல முடியாதவன் என்று கேள்விப்படுகிறோம். அப்படி இருக்கும் போது கிருஷ்ணனுடன் சேர்ந்திருக்கும் அர்ச்சுனனை வெல்வது அவ்வளவு எளிதான காரியமா?'' என்று கேட்டான் சல்லியன்.

"சல்லிய மன்னரே! அர்ச்சுனனை நிகர்த்த வில்லாளி ஒருவன் இதுவரை உலகில் தோன்றியது இல்லை என்று நாமும் கேள்விப்பட்டு இருக்கிறோம். அவனை எதிர்த்துப் போர்புரியவே நான் விரும்புகிறேன். காண்டவ வனத்தை எரித்து, அக்கினியை மகிழச் செய்தவன் என்பதையும் மகாதேவரை மகிழ்வித்து அவரிடமிருந்து பாசுபதத்தைப் பெற்றவன் என்பதையும் அறிந்துதான் அர்ச்சுனனுடன் நான் போர் தொடுக்க முனைகிறேன். தேரை விரைவாகச் செலுத்தும். எனது பிறப்பு இன்று மேன்மையடையப் போவதைக் கண்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். இன்று அர்ச்சுனனையும் கிருஷ்ணனையும் நான் கொல்வேன். அல்லது அவர்கள் இருரும் என்னைக் கொல்வார்கள்' என்று சொன்னான் கர்ணன்.

பிறகு கர்ணன், பாண்டவனை எதிர்க்க விரைந்தான்.

சகுனி, கிருபர், அசுவத்தாமா ஆகியோரை நோக்கி, "சேனாதிபதி கர்ணன் அர்ச்சுனனையும் கிருஷ்ணனையும் வதம் செய்ய விரைகிறான். அவனுக்கு உதவியாக நீங்களும் செல்லுங்கள்'' என்று ஏவினான்.

"ஆகட்டும்'' என்று சொல்லி, அவர்களும் புறப்பட்டார்கள்.

எதிர்த்து வருகின்ற இவர்களை எல்லாம் அர்ச்சுனன் அம்பால் அடித்தான். கௌரவ வீரர்களைச் சிதற அடித்துக் கொண்டு, பீமசேனனை அணுகினான் அர்ச்சுனன். யுதிட்டிரர் நலத்துடன் இருக்கிறார் என்ற விவரத்தைப் பீமனிடம்

தெரிவித்துவிட்டு, அவனிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டான்.

கௌரவ வீரர்களை அர்ச்சுனன் கடுமையாகத் தாக்கினான். தாக்குப் பிடிக்க முடியாமல் அவர்கள் கர்ணனிடம் சென்று பதுங்கினார்கள். 'பயப்பட வேண்டாம்' என்று கர்ணன் அவர்களுக்குத் தைரியம் சொன்னான்.

அர்ச்சுனனுடைய தேர் கர்ணனை நாடிச் சென்றது; அந்தத் தேரைத் தொடர்ந்து, அர்ச்சுனனுக்குப் பாதுகாப்பாகப் பீமனும் சென்றான்.

## அமிருதம்போல் சுவைக்கிறது

தேவர்களும் அசுரர்களும் சண்டையிட்டுக்கொண்டது போல, பாண்டவப் படையினரும் கௌரவப் படையினரும் போர்புரிந்தனர். நால்வகைப் படைகளும் ஒன்றுடன் ஒன்று முட்டி மோதிக் கடுமையாகப் போர்புரிந்தன; கூக்குரலிட்டுக் கொண்டு கதறின; உயிர் துறந்தும பூமியில் விழுந்தன.

இப்படிப் போர் நடக்கும் தருணத்தில், துச்சாதனன் வந்து பீமனை எதிர்த்தான். பீமனோ சிம்மம் யானையை எதிர்ப்பது போல, துச்சாதனனை எதிர்த்தான். சம்பரனுக்கும் இந்திரனுக்கும் இடையில் நடந்த போரை நிகர்த்து, அவர்கள் இருவரும் போர் செய்தனர்.

'பீமனை நோக்கித் தேரைச் செலுத்து' என்று தேர்ப்பாகனைத் துச்சாதனன் துரிதப்படுத்தினான். பீமனோ துச்சாதனனை நாடிச் செல்லுமாறு தன் தேர்ப்பாகனுக்குப் பணித்தான்.

இரண்டு தேர்களும் எதிர் எதிரே வந்து எதிர்க்கத் தொடங்கின. பீமன் துச்சாதனனை நோக்கி, "துச்சாதனா! உன்னைச் சந்திக்க நேர்ந்தது என் பெரும் பாக்கியம். திரௌபதியைச் சபையில் தொட்டபோது, நான் செய்த சபதம் இப்போது நிறைவேறப் போகிறது" என்று சொன்னான்.

"பீமசேனா! அர்ச்சுனன் அடைந்த ஒரு பெண்ணை ஐவரும் மனைவியாக்கிக்கொண்டீர்கள்; ஏன் நாணமின்றி இப்படிச் செய்தீர்கள்? நீங்கள் சபையில் திரௌபதியுடன் அடிமையான விவரமும் என் நினைவுக்கு வருகின்றது. மற்றவை

எனக்கு மறந்து போகின்றன" என்று குத்தலாகப் பதில் சொன்னான் துச்சாதனன்.

பீமசேனன் கோபமடைந்தான். துச்சாதனனுடைய கொடியையும் வில்லையும் அம்புகளால் அறுத்தான். ஒரு பாணத்தால் தேர்ப்பாகனின் நெற்றியைப் பிளந்தான்; தலையைத் துண்டித்தான்.

துச்சாதனனே தானே தேரை நடத்திக்கொண்டு, பீமசேனனை எதிர்த்தான். காட்டானையை அம்புகளால் அடிப்பதுபோல பீமசேனனை அம்புகளால் அடித்தான். பீமன் பதிலுக்கு, ஈட்டிகளால் குத்துவதுபோல, ஐம்பது பாணங்களால் துச்சாதனன் மார்பில் குத்தினான்.

கோபங்கொண்ட துச்சாதனன், பீமனுடைய நான்கு குதிரைகளைக் கொன்றான்; தேரின் ஏர்க்காலைத் துண்டித்து, பீமனைத் தேரிழந்து நிற்கும்படி செய்தான்.

பீமன் கதாயுதத்தால் அடித்து, துச்சாதனனுடைய குதிரைகளை யமன் உலகு அனுப்பினான். துச்சாதனனையும் கதையால் தாக்கினான்.

பீமசேனனுடைய சபதம் அடிக்கடி நினைவுக்கு வந்து, துச்சாதனன் கவலைப்பட்டான். பதின்மூன்று ஆண்டுகளாக அடக்கி வைக்கப்பட்டிருந்த கோபம், பீமனிடம் பீறிட்டு எழுந்தது. அவன் கோபத்துடன் கதாயுதத்தைப் பூமியில் அடித்தான். பிறகு அதனால் துச்சாதனனை ஓங்கி அடித்தான்.

கதாயுதத்தால் அதிகம் அடியுண்ட துச்சாதனன், தேகம் பிளந்து பூமியில் சரிந்தான். அவன் கழுத்தில் பீமன் மிதித்தான். கண்கள் சிவக்க, துச்சாதனனை நோக்கி, 'எங்களை அவமதித்துவிட்டு. உன்னால் எளிதில் உயிர்வாழ முடியுமா? உனது மார்பைப் பிளந்து, அதில் சொரியும் குருதியை நான் குடிக்கப் போகிறேன்" என்று முழங்கினான்.

பிறகு தேகத்தில் சொரியும் குருதியைக் குடிப்பதற்கு முனைந்தான்; துச்சாதனனோ அவனிடமிருந்து வேகமாக விலகி ஓடினான் பீமன் அவனைப் பிடிக்கவிரைந்தான். மானைச் சிங்கக்குட்டி தாவிப் பிடிப்பதுபோலத் தாவிப்பிடித்து, துச்சாதனனை அடிக்கடி மேலே தூக்கி எறிந்தான். பூமியில் போட்டு அவனைத் தேய்த்தான். பளபளப்பான ஒரு கத்தியை உறையிலிருந்து, உருவிக்கொண்டு, துச்சாதனனைக் கீழே தள்ளி, மகிழ்ச்சிப் பெருக்கால், பீமன் பெரும் கர்ஜனை செய்தான்.

அந்தக் கர்ஜனையைக் கேட்டு, பக்கத்தில் இருந்தவர்கள் மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்தார்கள்.

மாதவிடாய்க் காலத்தில் இருக்கும் திரௌபதியின் துயிலை உரிந்தது, அவள் கூந்தலைப்பற்றி இழுத்து அவமதித்தது, இவற்றை யெல்லாம் நினைத்தபோது பீமனுக்கு வந்த கோபம் கட்டில் அடங்கவில்லை. ஆகவே, அவன் துரியோதனன், கர்ணன், கிருபர், அசுவத்தாமா, கிருதவர்மா ஆகியோரை நோக்கி, "வீரர்களே! பாவி துச்சாதனனை இதோ கொல்லப் போகிறேன். முடிந்தால் வந்து அவனைக் காப்பாற்றுங்கள்" என்று சொன்னான்.

பிறகு துரியோதனனும் கர்ணனும் பார்த்து இருக்கத் துச்சாதனனைப் பிடித்தான். கத்தியை மேலே தூக்கிப் பிடித்துக்கொண்டு, துச்சாதனன் கழுத்தில் காலை வைத்து மிதித்தான். அவன் துச்சாதனனை நோக்கி, "தீயவனே! கர்ணனுடனும் துரியோதனனுடனும் சேர்ந்து பாஞ்சாலியை 'மாடே!' என்று சொல்லிக் கொக்கரித்தாய். ராஜசூய யாகம் செய்து, அபிவிருத நீரால் நனைந்த கூந்தலைப் பற்றி இழுத்தாய். அதுபற்றி இப்பொழுது பீமன் உன்னை வினவுகிறான்" என்று சொன்னான்.

பீமன் சொன்ன வார்த்தைகளைச் செவிமடுத்த துச்சாதனன் கர்வத்தால் கண்களைப் புரட்டி விழித்தான். "பீமா! எனது இந்தக் கைகள் சாமானியமானவை அல்ல; யானைத் துதிக்கைக்கு ஒப்பான கைகள் இவை; ஆயிரம் பசுக்களைத் தானம் வழங்கிய கரங்கள் இவை; நீங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போதே, கௌரவ சபையில் திரௌபதியின் கூந்தலைப் பற்றி இழுத்த கரங்களும் இவைதான்" என்று பெருமிதத்துடன் சொன்னான்.

துச்சாதனன் இப்படிச் சொன்னதும் பீமன் அவனுடைய மார்பை அழுத்தி மிதித்தான். "இவன் தன் இரு கைகளையும் இழுக்கப் போகிறேன். தடுப்பவர்கள் முன்வந்து தடுக்கட்டும்" என்று பீமன் போர்க்களத்தில் கூவினான்.

போர்வீரர்களை இவ்வாறு அவமதித்துவிட்டு துச்சாதனனுடைய இரு கரங்களையும் பீமசேனன் ஒடித்தான்; துச்சாதனன் உடல் பூமியில் கிடந்து துடித்தது.

பீமனுடைய உருவம் காலனைப்போல் பார்க்கப் பயங்கரமாய் இருந்தது. பூமியில் கிடக்கும் துச்சாதனனின் மார்பைப் பீமன் பிளந்தான். ஈரலை வெளியே எடுத்துவிட்டு, அங்கே வெப்பமாயிருக்கும் குருதியைச் சுவைத்துச் சுவைத்து, நாற்

புறமும் பார்த்துக்கொண்டே பீமன் பருகினான். அவன் உள்ளத்தில் அப்போது கோபமும் மகிழ்ச்சியும் ஒரே சமயத்தில் பிரதிபலித்தன, "என் பகைவனுடைய இந்தக் குருதி எனக்குச் சுவையுடன் இருக்கிறது. தாய்ப்பால், அமிருதம், தேன், பால், தயிர், கருப்பஞ் சாறு இவற்றைக் காட்டிலும் எனக்கு மிகுந்த சுவையைத் தருகிறது இது" என்று சொல்லிக் கொண்டே, பருகினான்.

பீமசேனனின் இந்தக் களிப்பைக் கண்டவர்கள், மூர்ச்சித்துக் கீழே சாய்ந்தார்கள்; சாயாதவர்கள் கையிலிருந்த ஆயுதம் நழுவிக் கீழே விழுந்தது. போர்க்களத்தில் இருந்தவர்கள் பீதியுற்று விகாரமான குரலுடன் அலறினார்கள்; பார்க்கச் சகிக்காமல் கண்களை மூடிக்கொண்டார்கள்.

"இரத்தத்தைக் குடிக்கிற இவன் மனிதன் ஆகான்" என்று கூறிக்கொண்டே ஓட்டம் பிடித்தார்கள்.

## இரண்டு பிரிவுகள்

துச்சாதனனுடைய குருதியைக் குடித்த பீமன் அவனுடைய இரு கால்களையும் பற்றிக்கொண்டு ஆனந்தக் கூத்தாடினான். "இதோ உனது குருதியை இன்னும் குடிக்கப் போகிறேன். 'பசு, பசு' என்று இப்பொழுதும் எங்களை நீ சொல். எங்களைப் 'பசு, பசு' என்று கூவிக் கொக்கரித்துக் கூத்தாடியவர்களைப் பார்த்து, நாங்களும் 'பசு பசு' என்று கூவி எதிர்க் கூத்தாடுகிறோம். திருதராட்டிரனாலும் அவன புதல்வர்களாலும் நாங்கள் அனுபவித்த துயரங்கள் கொஞ்ச நஞ்சமன்று. அவை எங்கள் நினைவில் இருக்கின்றன" என்று சொல்லி, உரக்கச் சப்தமிட்டுப் பீமசேனன் கூத்தாடினான்.

பிறகு கையைக் கையில் எடுத்துக்கொண்டு, போர்க்களத்தில் நாற்புறமும் சஞ்சரித்தான. அவனைக் கண்டதும் கௌரவ வீரர்கள் அலறிப் புடைத்துக் கொண்டு ஓட்டம் பிடித்தார்கள். கௌரவர்களின் போர்க்களம் சூனியமாகி விட்டது.

புள்ளிமானைச் சிங்கம் கொல்வதுபோல, துச்சாதனனைக் கொன்று தன் சபதத்தைப் பீமன் நிறைவேற்றிக்கொண்டான். அவன் துச்சாதனனை நோக்கிக் "கொலைகார? உன் சம்பந்தப்பட்ட சபதத்தை நிறைவேற்றி முடித்துவிட்டேன். துரியோதனனைக் கொல்வதான இரண்டாவது சபதத்தை

யும் நிறைவேற்றப் போகிறேன். அவனுடைய தலையை நொறுக்கி நான் மீண்டும் ஆனந்தம் அடைவேன். கணவன்மாரை இழந்திருந்த பாஞ்சாலி, பதிகளை அடைந்துவிட்டாள். பதிகளுடன் இருந்த கௌரவ குலப் பெண்டிர் இப்போது பதிகளை இழந்துவிட்டார்கள். 'எள' என்று கொக்கரித்து இறுமாந்து இருந்தவர்கள் இப்போது பதர் ஆகிவிட்டார்கள்" என்று சொல்லி, களிப்புற்று, ஆனந்தக் கூத்தாடி உரக்கக் கூவினான். பீமனுடைய முகம் எல்லாம் உதிரமாய் இருந்தது; அந்த உதிரத்தின் ஊடே, பீமனுடைய எக்களிப்பும் முகத்தில் தெரிந்தது.

இவற்றை எல்லாம் பார்த்ததும் கர்ணன் பயந்து போனான். வெற்றிமீது இருந்த ஆசையைக் கௌரவர்கள் விட்டொழித்தார்கள். ஆயினும் துச்சாதனன் வதம் அவர்களை ஆத்திரம்கொள்ளச் செய்தது. அவர்கள் பீமசேனனைக் கடுமையாகத் தாக்கினார்கள். திருதராட்டிரன் புதல்வர்களில் ஒன்பது பேரை, பீமன் யமன் உலகு அனுப்பினான். பீமனுடைய செயலையும் போக்கையும் கவனித்த கர்ணன் பெரிதும் பயந்து போனான்.

கர்ணனுடைய மனநிலையை அறிந்த சல்லியன், அவனுக்கு ஆறுதல் சொன்னான். "ராதை புதல்வா! கவலைப்படாதே. நீ கவலைப்படுவது உன் பெருமைக்கு அடுக்காது. பீமசேனனிடம் பயந்து அரசர்கள் ஓடுகிறார்கள். தம்பி துச்சாதனன் மரணத்தினால் துரியோதனன் மதிமயங்கிக் கிடக்கிறான். குருதியைப் பீமன் குடித்ததைப் பார்த்தபோது அறிவு குழம்பி, மனம் தடுமாறி நலிவுற்றுக் கிடக்கிறான். மற்ற கௌரவ வீரர்கள் உன்னை நாடுகிறார்கள். ஆண்மை மிக்க நீ அர்ச்சுனனை எதிர்த்துச் செல். உன்னை நம்பியன்றோ துரியோதனன் போரில் ஈடுபட்டான்? உன் ஆற்றலுக்குத் தக்கபடி இப்போது போர் செய். வெற்றி பெற்றால் புகழ் கிட்டும்; வீர மரணம் எய்தினால் சொர்க்கம் கிட்டும்' என்று சொன்னான்.

சல்லியன் சொன்ன இந்த வார்த்தையைக் கேட்டதும் கர்ணன் போருக்கு ஊக்கத்துடன் முனைந்தான்.

இதற்கு இடையில் கர்ணன் புதல்வன் விருஷசேனனுக்கும் அர்ச்சுனனுக்கும் இடையில் போர் நடந்தது. அர்ச்சுனன் கர்ணன் மைந்தனைக் கொல்வதில் முனைப்புடன் இருந்தான். அவன் கர்ணன், துரியோதனன், அசுவத்தாமா முன்னிலையில் கர்ணனைக் கூவி அழைத்து, உரக்கச் சிரித்த

வாறு, "கர்ணா! நீ பார்த்திருக்கும்பொழுதே உன் புதல்வன் விருஷசேனனை யமன் உலகு அனுப்பப் போகிறேன். தனித்து நின்ற என் அருமந்த புதல்வன் அபிமன்யுவை நீங்கள் பலர் ஒன்றுகூடி வதம் செய்தீர்கள் அன்றோ? அதை மக்கள் ஒரு குறையாக என்னிடம் கூறுகிறார்கள். ஆகவே, உங்கள் முன்னிலையில் விருஷசேனனை நான் வதம் செய்யப் போகிறேன். ஆற்றலுள்ளவர்கள் காப்பாற்றுங்கள். பிறகு உன்னையும் நான் கொல்வேன். இவ்வளவு கலகத்துக்கும் மூல காரணம் நீதான். நான் உன்னைக் கொல்வேன்; பீமசேனன் துரியோதனனைக் கொல்வான்" என்று சொல்லி, கூரிய பாணங்களை ஏவி, கர்ணன் புதல்வன் விருஷசேனனை அர்ச்சுனன் வதம் செய்தான்; இரண்டு பாணங்களை ஏவி, தலையையும் கைகளையும் முதலில் அறுத்தான். இடியுண்ட பெரிய மரம் ஒன்று முறிந்து விழுவதுபோல், விருஷசேனன் இரதத்திலிருந்து கீழே விழுந்தான்.

தன் புதல்வன் கொல்லப்பட்டதைக் கண்ட கர்ணன், ஆத்திரமுற்று, அர்ச்சுனனை எதிர்க்க விரைந்தான். கண்களிலிருந்து நீரைச் சொரிந்துகொண்டே, அர்ச்சுனனை அவன் எதிர்த்தான்.

இருவரும் போர்க்களத்தில் இரு சூரியர்கள்போல் விளங்கினார்கள். கௌரவர்கள் சங்குகளை ஊதி, கர்ணனை உற்சாகப்படுத்தினார்கள்; பாண்டவர்கள் சங்குகளை ஊதி, அர்ச்சுனனை உற்சாகப்படுத்தினார்கள்.

இருவரும் சமபலமுடைய வீரர்கள்; ஆற்றலிலும் சமதையானவர்கள்; இருவரும் வெள்ளைக் குதிரைகள் பூட்டிய தேரில் ஏறிப் போர் செய்பவர்கள்: சிறந்த சாரதியையுடையவர்கள்! இந்த இரு வீரர்களும் போர் செய்வதைக் காண, தேவர்களும் அசுரர்களுமே இரண்டாகப் பிரிந்து, ஒரு பிரிவு அர்ச்சுனனையும் மற்றொரு பிரிவு கர்ணனையும் ஆதரித்தன. இருவரில் யார் வெல்வார் என்பதை நிச்சயிக்க முடியாமல் இருந்தது.

தேவர்கள் அர்ச்சுனன் வெற்றி பெறுவதைப் பெரிதும் விரும்பினர்; வெற்றி பெறாதுபோயின் உலகம் அழிந்துவிடும் என்று அஞ்சினர்.

# நண்பன் சொன்ன புத்திமதி

போருக்குத் தயாரான அர்ச்சுனனும் கர்ணனும் தத்தம் சங்கங்களை ஊதினார்கள்; தேர்ப்பாகர்களான சல்லியனும் கண்ணனும் தத்தம் சங்கங்களை ஊதினார்கள்.

போர் ஆரம்பமாயிற்று. கண்ணபிரான் சல்லியனைப் பார்த்தார்; கர்ணன் பார்த்தனைப் பார்த்தான். அப்போது கர்ணன் சல்லியனிடம், "சல்லிய மன்னரே! இந்தப் போரில் அர்ச்சுனன் என்னைக் கொல்வானாயின், பிறகு போரில் நீர் என்ன செய்வீர்? உண்மையாகச் சொல்லும்" என்று புன்முறுவலுடன் கேட்டான்.

"கர்ணா! இந்தப் போரில் பார்த்தன் உன்னைக் கொல்வானாயின், அர்ச்சுனன் கிருஷ்ணன் இருவரையும் நான் கொல்வேன்" என்று பதில் சொன்னான் சல்லியன்.

கர்ணன் கேட்ட கேள்வியைப் போலவே, அர்ச்சுனனும் வாசுதேவரைக் கேட்டான்.

உடனே வாசுதேவர் உரக்கச் சிரித்துப் பதில் சொன்னார்: "அர்ச்சுனா! சூரியன் கீழே விழுந்து திசை தப்பிப் போகலாம்; பூமி ஆயிரம் சுக்காகத் தெறித்துப் போகலாம். நெருப்பு தண்மை அடைந்தாலும் அடையலாம். ஆனால் கர்ணன் உன்னைக் கொல்வது என்பது ஒருபோதும் நடவாது. இது சம்பவித்தால் உலகம் தலைகீழாக மாறிப்போகும். நான் கைகளால் போர் செய்து சல்லியனையும் கர்ணனையும் கொல்வேன்" என்று பதில் சொன்னார்.

"மாதவரே! கர்ணனையும் சல்லியனையும் நானே கவனித்துக்கொள்கிறேன். எனது பாணங்கள் கர்ணனை அழிப்பதை நீர் காண்பீர்; அவனுடைய மனைவியர் விதவைகள் ஆகப் போகின்றனர். கர்ணன் மூடன்; நீடித்து ஆலோசனை செய்யத் தெரியாதவன்; நம்மைப் பலவாறு எள்ளி நகையாடினவன்; அடிக்கடி அவமதித்தவன். திரௌபதியைச் சபையில் கண்டதும், கர்ணன் நடத்தையில் ஏற்பட்ட கோபம் எனக்கு இன்னும் தணியவில்லை. பூவோடும் பிஞ்சோடும் இருக்கிற மரத்தை மதயானை முறிப்பதைப்போல, கர்ணனை நான் முறிக்கப் போகிறேன்" என்று சொன்னான் அர்ச்சுனன்.

மலையை மலை எதிர்ப்பதுபோலவும், கடலைக் கடல் எதிர்ப்பதுபோலவும், கர்ணனும் அர்ச்சுனனும் ஒருவரை ஒருவர் எதிர்த்தார்கள். கர்ணன் அர்ச்சுனனை முதலில் பத்துப் பாணங்களால் அடித்தான்; பதிலுக்கு அர்ச்சுனன் அவனைப் பதினெட்டுப் பாணங்களால் அடித்தான். நெருப்புக் கணையை ஏவினன் அர்ச்சுனன்; நீர்க்கணையால் அதைத் தடுத்தான் கர்ணன்.

நீண்ட நேரம் இருவரும் சளைக்காது போராடினர்; இருவருக்கும் இடையில் நடந்த ஆச்சரியகரமான போரைக் கண்டு, தேவர்கள் பூமாரி சொரிந்து வாழ்த்தினர்.

இருவரின் ஆற்றலும் திறமையும் சம நிலையில் இருந்தன.

இது சமயம் அசுவத்தாமா துரியோதனன் கையைத் தன் கையில் பற்றிக்கொண்டு, அவனுக்கு இதம் தரும் வார்த்தைகளைச் சொன்னர்: "துரியோதன! பாண்டவர்களுடன் பகைமை வேண்டாம். சமாதானமாகிவிடு போர் கொடியது. பிரம்மதேவருக்கு நிகரான குருவும் பீஷ்மரும் இந்தப் போரில் மாண்டார்கள். எனக்கும் கிருபருக்கும் அதே கதி நேரலாம். நான் சொன்னல் அர்ச்சுனன் கட்டுப்பட்டுக் கேட்பான்; கிருஷ்ணன் பகைமையை விரும்பவில்லை. யுதிட்டிரன் கருணையுடையவன்: அவன் சொலவதைப் பீமன் மீறி நடக்க மாட்டான். பாண்டவர்களுடன் நீ சமாதானம் செய்துகொண்டால் குடிமக்கள் நலன் அடைவர். நான் சொல்வதைக் கேளாவிட்டால் போரில் நீயும் மாண்டு போவாய். விரும்பிக் கேட்டால் யுதிட்டிரன் ராஜ்யத்தைத் தந்துவிடுவான்; வயது முதிர்ந்த திருதராட்டிரனும் காந்தாரியும் சாந்தி அடைவர். போரை நிறுத்திவிட்டால் அனைவருமே நலனும் மகிழ்ச்சியும் அடைவர். துரியோதன! உயிரைக் காப்பாற்றிக்கொள். உயிர் இருந்தால் அன்றோ எதையும் ஒருவனல் அனுபவிக்க முடியும். உயிருடன் இருந்தால் ராஜ்யம், செல்வம், சுகம் அனைத்தையும் அனுபவித்து மகிழலாம். இறந்துபோனவன் எதை அனுபவிப்பான்? குருகுலத் தோன்றலே! நான் கூறும் வார்த்தைகள் தருமத்துடன் கூடியவை: அவற்றை நீ புறக்கணித்துத் தள்ளாதே. அர்ச்சுனனைக் கர்ணனல் வெல்ல முடியாது. உன்னிடத்துள்ள அபிமானத்தின் காரணமாக இவற்றை எல்லாம் நான் சொல்லுகிறேன். பாண்டவர்களுடன் சமாதானம் செய்துகொள்" என்று புத்திமதி சொன்னர்.

அசுவத்தாமா சொன்ன இந்தப் புத்திமதியைக் கேட்டு, துரியோதனன் பெருமூச்சுவிட்டான்; ஆலோசித்தான்; வருத்தம் அடைந்தான். பிறகு அவன் அசுவத்தாமாவிடம் "நண்பரே! நீர் கூறியது உண்மை. நான் வேண்டுவதையும் நீர் செவிமடுத்துக் கேளும். புலிபோல் பாய்ந்து, துச்சாதனனைக் கொன்று, பலவாறு எங்களைப் பீமன் இடித்துச் சொன்னான். அவன் சொன்ன வார்த்தைகள் என் நெஞ்சத்தை உறுத்துகின்றன; எங்களுடன் கொண்டுள்ள பகைமையைப் பாண்டவர்கள் விடமாட்டார்கள். கர்ணனும் போரைவிட்டு விலக மாட்டான். அர்ச்சுனனைக் கர்ணன் வதம் செய்வான் என்பது முக்காலும் உறுதி. பூமி புரண்டாலும் புரளும்; சமுத்திரம் வற்றினாலும் வற்றும்; மலை சமுத்திரத்தில் மிதந்தாலும் மிதக்கும். ஆனால் அர்ச்சுனனால் கர்ணனை ஒரு போதும் போரில் வெல்ல முடியாது. இது திண்ணம்" என்று பதில் சொன்னான்.

பிறகு படைவீரர்களை நோக்கி, "தொடர்ந்து போர் செய்யுங்கள்; பகைவரைக் கொல்லுங்கள்" என்று ஏவினான்.

## 'சிறிது நேரம் பொறுத்துக்கொள்'

கர்ணனும் அர்ச்சுனனும் சமநிலையில் போர் செய்தார்கள்; எனினும் கர்ணனின் ஆற்றல் மற்றவர்களுக்கு மிஞ்சி நிற்பதுபோல் தோன்றியது. கூரிய அம்புகள் அர்ச்சுனன் உடலில் மிகுதியாகத் தைத்திருந்தது.

இதைக் கவனித்த பீமன் கோபமுற்று, தன் கையைக் கையால் பிசைந்துகொண்டான். அவன் அர்ச்சுனனிடம் "பார்த்தா! கூறிய அம்புகளால் உன்னைக் கடுமையாகக் கர்ணன் தாக்கி வருகிறான். ஊக்கத்துடன் போர் செய்து கர்ணனைக் கொல். இல்லையேல் என் கதையினால் அவனை நான் நொறுக்கிக் கொல்கிறேன்" என்று சொன்னான்.

கிருஷ்ணனும் அர்ச்சுனனை ஊக்குவித்தார். "அர்ச்சுனா! நீ எய்த அம்புகளைக் கர்ணன் பயனற்றவனவாகச் செய்துவிட்டான். கௌரவர்களை என்ன செய்யவேண்டும் என்பதை அறிந்திருந்தும் நீ ஏன் மதிமயக்கம் கொள்கிறாய்? சிவபெருமானை மகிழ்வித்த நீ அதே தைரியத்தைக் கொண்டு,

கர்ணனைக் கொல். இந்தப் பூமண்டலத்தைப் பகைவன் அற்றதாகச் செய்து, அதை அரசர் யுதிட்டிரருக்குக் கொடு'' என்று சொன்னார்.

அதற்கு அர்ச்சுனன், ''கேசவரே! சிறந்த கணையை ஏவிக் கர்ணனை நான் வதம் செய்கிறேன். தேவர்களும் நீரும் அதற்கு அனுமதி அளியுங்கள்'' என்று சொன்னான்.

இப்படிச் சொல்லிவிட்டு, பிரம்ம தேவரை மனத்தினால் வழிபட்டு வணங்கி, பிரமாத்திரத்தை வெளியிட்டான் அர்ச்சுனன். காண்டீவத்தினாலும் நூற்றுக்கணக்கான அம்பு களைத் தொடுத்தான். பதிலுக்குக் கர்ணன் ஆயிரக்கணக்கில் அம்புகளைத் தொடுத்து, அர்ச்சுனனை அடித்தான்.

கர்ணன், சிறந்த கணை ஒன்றைத் தொடுத்து, காண்டீவத் தின் நாண் கயிற்றை அறுத்துவிட்டான். அர்ச்சுனனோ வேறு நாண் கயிற்றைப் பூட்டி, கர்ணன்மீது அம்புகளைத் தொடுத் தான். அர்ச்சுனன் நாண் கயிறு பூட்டியதைக் கர்ணன் கவனிக்கவில்லை. அர்ச்சுனன் தொடுத்த அம்புகளால் கர்ண னுடைய வில்லின் நாண் கயிறு அறுந்துவிட்டது.

அர்ச்சுனன் சல்லியனை அடித்தான்; பதிலுக்குக் கர்ணன் கோவிந்தரை அடித்தான். கர்ணன் எய்த அம்புகள், கோவிந்தர் அணிந்திருந்த பொன்மயமான கவசத்தை உடைத்துவிட்டன.

இதனால் கோபமுற்ற அர்ச்சுனன் கௌரவர்களை அம்பு ஏவி ஏவி அழித்தான். கர்ணனை விட்டுவிட்டு அவர்கள் ஓட்டம் எடுத்தார்கள்.

இதைக் கவனித்த துரியோதனன், ''அரச குலப் பெரு மக்களே! நீங்கள் அனைவரும் சிறந்த வீரர்கள்; அரச குல தருமத்தில் நிலைபெற்றவர்கள். கர்ணனை விட்டுவிட்டு நீங்கள் ஓடுவது உங்களுக்குப் பெருமையன்று'' என்று சொன்னான்.

துரியோதனன் சொன்னதைக் கௌரவ வீரர்கள் காதில் வாங்கிக்கொள்ளாமல் ஓட்டம் பிடித்தார்கள். ஆனால் கர்ணனோ நிலைகலங்காது அர்ச்சுனனை எதிர்த்தான்.

போர் மிகத் தீவிரமாக நடந்தது. அர்ச்சுனனும் கர்ண னும் தங்கள் கைவன்மையைக் காட்டி, திறமையாகப் போர் புரிந்தார்கள். சகல சேவராசிகளும் அர்ச்சுனனையும் கர்ணனை யும் அவர்களுடைய திறமையைக் கண்டு வியந்து, 'நன்று! நன்று!' என்று சொல்லிப் பாராட்டின.

  

அர்ச்சுனன் காண்டவ வனத்தை எரித்த காலத்தில் அசுவசேனன் என்னும் பாம்பு, நீக்கிரையாகாமல் தப்பி, பூமிக்குள் பதுங்கி இருந்தது. கர்ணனுக்கும் அர்ச்சுனனுக்குமிடையில் போர் மூண்டு இருப்பது தெரிய வந்ததும், அர்ச்சுனனிடம் வஞ்சம் தீர்த்துக்கொள்ள அந்த நாகம் வெளிப்பட்டு வந்தது. வந்ததும் அம்பு வடிவத்தைத் தாங்கி, கர்ணனுடைய அம்புறாத் தூணியில் நுழைந்தது.

கர்ணன் நெடு நாட்களாகத் தான் பூசித்துப் பேணிவைத்திருந்த நாகாஸ்திரத்தை எடுத்து, வில்லில் பூட்டி, காதுவரை இழுத்து விடுவதற்குத் தயாரானான்.

அப்போது இந்திராதி தேவர்கள் நடுங்கினார்கள்; முடிவு என்ன ஆகுமோ என்று பயந்தார்கள்

இது சமயம் சல்லியன் கர்ணனை நோக்கி, "கர்ணா! பகைவனின் கழுத்தைக் குறிவைத்து இந்தப் பாணத்தை நீ பூட்டவில்லை; நன்கு கவனித்து அதைப் பூட்டுக" என்று சொன்னான்.

பகைவுறுதியுள்ள கர்ணன், சல்லியன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டுக் கோபம் கொண்டான். "சல்லிய மன்னரே! இரண்டு தடவை குறிபார்த்துப் பாணத்தைப் பூட்டுகிற வழக்கம் கர்ணனுக்கு இல்லை. என்னைப் போன்றவர்கள் கபட யுத்தம் செய்வதை விரும்ப மாட்டார்கள்" என்று பதில் சொன்னான்.

பிறகு "அடே! பல்குனா! நீ மாண்டாய்!" என்று சொல்லி, நாகாஸ்திரத்தை விடுத்தான் கர்ணன். சூரியனுக்கு நிகராகப் பிரகாசித்துக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பிற்று அது.

பிரகாசத்துடன் வருகிற அந்த அஸ்திரத்தை வாசுதேவர் கவனித்தார். உடனே தேரை அழுத்தி, அதன் சக்கரங்கள் ஐந்து அங்குலம் பூமியில் பதியும்படி செய்தார். அதனால் கர்ணன் எய்த நாகாஸ்திரம் அர்ச்சுனனுடைய கிரீடத்தை மட்டும் பலாத்காரமாக அபகரித்துக் கீழே தள்ளிற்று.

இந்திரன் கொடுத்த அந்தக் கிரீடம் தரையில் விழுந்ததும் திசைகள் கலங்கின. அசுவசேனன் என்னும் பாம்பு, அர்ச்சுனனுடைய கிரீடத்தைத் தூக்கிக் கொண்டு ஆகாயத்தில் கிளம்பிற்று.

வாசுதேவர் அந்தப் பாம்பை அர்ச்சுனனுக்குக் சுட்டிக் காட்டி, அதனுடைய விருத்தாந்தத்தையும் அவனுக்குச்

சொன்னார். உடனே அந்தப் பாம்பை அர்ச்சுனன் அம்பு எய்து துண்டித்தான்; உயிர் பிரிந்து அது பூமியில் விழுந்தது.

அதன் பின்னர் வாசுதேவர், பூமியில் பதிந்திருந்த தேரை தம் கைளால் தூக்கி மேலே நிறுத்தினார்.

கூரிய பாணங்களால் அர்ச்சுனனையும் கண்ணனையும் அடித்து உரக்கச் சிரித்தான் கர்ணன். இதைப் பொறுக்காது அர்ச்சுனன், கர்ணனைப் பல நூறு பாணங்களால் அடித்தான். கவசத்தையும் உடைத்தான். குண்டலங்களையும் அறுத்தான். படுகாயமுற்று இரத்தம் ஒழுக, கர்ணன் வருந்தினான்; கைபிடி தளர்ந்து மூர்ச்சையுற்றான்.

இவ்வாறு காயமுற்று ஆயுதமின்றி இருக்கும் கர்ணனை, அர்ச்சுனன் கொல்ல விரும்பவில்லை.

இதைக் கவனித்த வாசுதேவர், "அர்ச்சுனா! கவனக்குறைவாக இராதே; விரைவில் கர்ணனைக் கொல். இரக்கம் காட்ட இது தருணம் அன்று" என்று சொன்னார்.

"ஆகட்டும்" என்று சொல்லி, கர்ணனை அர்ச்சுனன் பாணங்களால் அடித்தான்; பாணங்களால் அடிபட்ட கர்ணன் சூரியன் போல் விளங்கினான்.

கர்ணன் மூர்ச்சை தெளிந்து, கண்ணனையும் அர்ச்சுனனையும் பாணங்களால் தாக்கினான். அத்திரத்தை ஏவ எண்ணங்கொண்டு, அதைவிட முயன்றான் கர்ணன். பரசுராமர் சாபம் இருந்ததால், அதைவிடும் மார்க்கத்தைக் கர்ணன் மறந்தான். அவனுடைய தேரின் இடது கால் சக்கரம் பூமியில் மறைந்து விட்டது.

இவற்றை அறிந்த கர்ணன் கலக்கமடைந்தான். நாகாத்திரம் வீணானதைக் கண்டு, தருமத்தையே அவன் நிந்திக்கத் தொடங்கினான். "தருமத்தைக் கடைப்பிடிப்பவனைத் தருமம் காக்கும் என்று தருமம் அறிந்தவர்கள் கூறுகின்றனர். நான் தருமத்தை நித்தியம் கடைப்பிடித்து வந்திருக்கிறேன். ஆனால் இப்பொழுது தருமம் என்னைப் பாதுகாக்கவில்லை" என்று சொல்லி, தருமத்தை அடிக்கடி நிந்தித்தான். கர்ணன்.

பிறகு அர்ச்சுனன்மீது பல பாணங்களைப் பிரயோகித்தான்; கர்ணன் அர்ச்சுனனும் பல்வேறு சிறந்த தந்திரங்களைக் கர்ணன் மீது பிரயோகித்தான் ரௌத்திரம் என்னும் அத்திரத்தை மந்திரித்து, அர்ச்

னன்மீது கர்ணன் பிரயோகிக்க முயன்றபோது கர்ணனுடைய தேர்ச் சக்கரங்களைப் பூமி கவர்ந்துகொண்டது.

கர்ணன் கீழே இறங்கி, தேர்ச்சக்கரங்களை மேலே தூக்கினான்; நான்கு அங்குல மட்டும்தான் அவனால் மேலே தூக்க முடிந்தது. இதனால் கவலையுற்ற கர்ணன் கண்ணீர் சொரிந்தான்.

அவன் அர்ச்சுனனை நோக்கி, "பார்த்தா! சிறிது நேரம் இரு: அமிழ்ந்திருக்கும் சக்கரங்களை நான் மேலே தூக்குகிறேன். இடது கால் சக்கரம் புதைந்திருப்பதைப் பயன்படுத்தி, அற்பனைப்போல் அடிக்கும் எண்ணத்தை விட்டுவிடு. தலைமயிர் அவிழ்ந்து இருப்பவன், புறங்காட்டி ஓடுபவன், பிராமணன், வணங்குபவன், சரண் அடைந்தவன், ஆயுதத்தைக் கீழே வைத்தவன், யாசிப்பவன், கவசம் நழுவினவன், பாணம் இழந்தவன், ஒடிந்த ஆயுதங்களையுடையவன் இவர்களை, சூரர்களாய் இருப்போர் ஒருபோதும் தாக்கமாட்டார்கள். அர்ச்சுனா! நீ; சிறந்த வீரன் யுத்த தருமங்களை அறிந்தவன் நீ. சிறிது நேரம் நீ பொறுத்துக்கொள்; தேரை நான் மேலே தூக்கும் வரை பொறுத்து இரு. தேரில் இருக்கிற நீ தேரில்லாது நிற்கும் என்னைத் தாக்குவது முறையன்று, பயந்து நான் இவ்விதம் சொல்லவில்லை. உன்னிடத்திலும் கிருஷ்ணனிடத்திலும் எனக்குப் பயமில்லை. சிறிது நேரம் பொறுத்துக்கொள்" என்று சொன்னான்.

## கர்ணன் வதம்

கர்ணன் இப்படிச் சொன்னதும் வாசுதேவர் அவனிடம் "ராதை மகனே! பாக்கிய வசத்தினால் உனக்கு இப்பொழுது தருமத்தைப்பற்றிய நினைப்பு வந்திருக்கிறது. பாண்டவர்கள் எப்பொழுதுமே தருமத்தில் நாட்ட முடையவர்கள். அதனால் அவர்கள் விருத்தி அடைகின்றனர். கௌரவர்கள் தருமத்தைப் புறக்கணிப்பவர்கள். அதனால் அவர்கள் அழிவை அடைகின்றனர். கீழோர் தாங்கள் துயரத்தை அடையும் பொழுது தெய்வத்தை நிந்திப்பார்கள்; தங்களின் பாவத்தை அவர்கள் நிந்திப்பது இல்லை. கர்ணா! திரௌபதியைச் சபைக்கு இழுத்து அவமதித்தீர்களே, அப்பொழுது உங்கள் தருமம் எங்கே போயிற்று? வனவாசத்தைக் கழித்து விட்டு, பதின்மூன்றாவது ஆண்டில் திரும்பி வந்து, பாண்டவர்கள் ராஜ்யத்

னைத் திருப்பிக் கேட்டார்களே அப்போது, உனது தருமம் எங்கே போயிற்று? அரக்கு மாளிகையில் வைத்துப் பாண்டவர்களை எரிக்க முயன்றீர்களே, அப்போது உனது தரும புத்தி எங்கே சென்றிருந்தது? பாலன் அபிமன்யுவைப் பலர் கூடி வதம் செய்தீர்களே, அப்பொழுது உனது தருமம் எங்கே போயிற்று? இச் சமயங்களில் எல்லாம் தருமத்தைவிட்டு விலகி இருந்த நீ, இப்போது ஏன் நா வறண்டு போகும் அளவுக்குத் தருமத்தைப்பற்றிப் பேசுகிறாய்? அதனால் பயன் ஒன்றும் விளையாது. சூதில் தோற்ற நாட்டை நளன் திருப்பி அடைந்ததைப்போல், பாண்டவர்கள் நாட்டை அடையப் போகின்றனர். பகைவர்களைக் கொன்று நாட்டை அவர்கள் கைப்பற்றுவர்'' என்று சொன்னார்.

வாசுதேவர் இப்படி இடித்துச் சொன்னதும், நாணமுற்று, கர்ணன் தலையைக் கவிழ்த்துக்கொண்டான். மறுமொழி ஒன்றும் கூறவில்லை. கோபத்தால் அவனுடைய உதடுகள் துடித்தன. வில்லை எடுத்து, பார்த்தனை அவன் தாக்கினான்.

"சிறந்த கணையை ஏவி, கர்ணனைக் கொல்'' என்று அர்ச்சுனனைக் கண்ணன் தூண்டினார்.

அர்ச்சுனன் கடுங் கோபமுற்று, கர்ணனைத் தாக்கினான். கர்ணன் சிறந்த அத்திரம் ஒன்றை எடுத்து அர்ச்சுனன்மீது ஏவினான். அந்த அத்திரம் விடுபட்டதும் பூமி நடுங்கிற்று; பரல் கற்களுடன் கூடின காற்று உண்டாயிற்று.

கர்ணன் விட்ட அந்த அம்பைக் கண்டு பாண்டவர்கள் மனத் தளர்ச்சி அடைந்தார்கள். கர்ணன் ஏவின அந்தக் கொடிய பாணம் அர்ச்சுனனுடைய மார்பில் புகுந்து அவனைத் துன்புறுத்திற்று. காண்டீவத்தை நழுவ விட்டு, நிலை தளர்ந்து' அர்ச்சுனன் அசைந்து கொடுத்தான்.

இந்த நிலையைப் பயன்படுத்திக்கொண்டு, கர்ணன் தேரை மேலே தூக்கினான். தெய்வ சம்மதம் இல்லாததனால் பலசாலியாய் இருந்தும் அவனால் தூக்க முடியவில்லை.

அர்ச்சுனன் மூர்ச்சை தெளிந்து, அஞ்சலிகம் என்னும் சிறந்த பாணத்தை எடுத்தான். "கர்ணன் தேரில் ஏறுவதற்குள் உன் எதிரியான அவனைக் கொல்'' என்று கண்ணன் அர்ச்சுனனைத் தூண்டினார்.

முதலில் அர்ச்சுனன் மிகவும் பிரசித்திபெற்றுள்ள கர்ணனின் கொடியை ஓர் அம்பினால் அழித்தான். கொடி அறுந்து

விழுந்ததும், கர்ணன் ஜயிப்பான் என்ற ஆசை கௌரவர்களுக்கு இல்லாது போயிற்று.

கர்ணனைக் கொல்ல அர்ச்சுனன் விரைந்தான். ஒப்பற்ற, சிறந்த, அஞ்சலிகம் என்னும் அஸ்திரத்தை எடுத்துக் காண்டீவத்தில் அர்ச்சுனன் பூட்டினான். "மகிமை பொருந்திய இந்த அஸ்திரமானது என் பகைவன் கர்ணனைக் கொல்லட்டும். நான் செய்த தவமும், எனது குரு பக்தியும் பலிக்கட்டும்" என்று அந்தப் பாணத்தைத் தொடுத்தான்.

அந்தப் பாணம் கர்ணனுடைய தலையைத் துண்டித்தது; முதலில் தலை கீழே விழுந்தது; பிறகு சரீரம் கீழே விழுந்தது.

கர்ணனுடைய உடலிலிருந்து ஒரு ஒளி புறப்பட்டு, சூரியனை அடைந்தது.

கர்ணன் வதையுண்டதை அறிந்த பாண்டவர் உரக்கச் சிங்கநாதம் செய்தார்கள்; ஆடைகளை வீசி தங்கள் ஆனந்தத்தை வெளிப்படுத்தினார்கள்; ஒருவரையொருவர் கட்டிக் கொண்டு ஆனந்தக் கூத்து ஆடினார்கள்; அர்ச்சுனனைப் பாராட்டினார்கள்.

பதினேழாம் நாள் பிற்பகல் கடைசி நேரத்தில் கர்ணன் போர்க்களத்தில் மாண்டான். அவனுடைய தேர்ப்பாகன் சல்லியன் கொடி இழந்த தேரைத் திருப்பிக்கொண்டு சென்றான்.

போர்க்களத்தில் எஞ்சி நின்ற கௌரவர்கள் பயந்து ஓட்டம் பிடித்தார்கள். தன் புதல்வன் கர்ணன் மாண்டதை அறிந்த சூரியன், தன் ஒளிக் கற்றைகளை மெல்ல மெல்லச் சுருக்கிக்கொண்டு, தனது இருப்பிடம் சேர்ந்தான்.

## 'அரசன் ஆனேன்'

கர்ணன் அடிபட்டுக் கீழே சாய்ந்ததும் பார்க்க எண்ணியவர்கள் அவனைச் சூழ்ந்து பார்த்தார்கள். அர்ச்சுனன் முதலானவர்கள் மிகுந்த சந்தோஷமடைந்தார்கள்; சிலர் அவனைப் பார்க்கப் பயந்தார்கள்; சிலர் பார்த்து ஆச்சரியமடைந்தார்கள். கௌரவ தரப்பினர் பெரிதும் துயருற்று வருந்தினார்கள். துரியோதனன் கண்கலங்கி அழுதான்.

கொடி அறுபட்ட தேருடன் சல்லியன் துரியோதனனை அடைந்தான். சிருஞ்சயர்களும், சோமகரர்களும் அவனைப் பரிகசித்துக் கேலி செய்தார்கள்.

சல்லியன் துரியோதனனை நோக்கி, அதிகத் துக்கத்துடன், "துரியோதன மன்னா! கர்ணனுக்கும், அர்ச்சுனனுக்கும் இடையில் நடந்ததுபோன்ற போர் இதுவரை நடந்தது இல்லை. தெய்வ அநுகூலம் பாண்டவர்களுக்கு இருப்பதால் அவர்கள் வெற்றி பெறுகிறார்கள். உன் விருப்பம் நிறைவேறப் போர் செய்த பல அரசர்கள், உன் பொருட்டு, போர்க்களத்தில் மாண்டார்கள். ஆகையால் வருந்தாதே. வெற்றி என்பது மாறி மாறி ஏற்படும் இயல்புடையது; வெற்றியடைந்தவனே மேலும் மேலும் வெற்றியடைவான் என்பது நிச்சயம் இல்லை" என்று ஆறுதல் சொன்னான்.

சல்லியன் சொன்ன இந்த வார்த்தைகளைக் கேட்டு, கண் கலங்கி, துரியோதனன் பெருமூச்சுவிட்டான். "ஆ கர்ணா! ஆ கர்ணா!" என்று புலம்பினான்.

சூரியனும் மேற்றிசையை அடைந்தான். போர் வீரர்கள் புகழ்பெற்ற அர்ச்சுனனுடைய தேரையும் கொடியையும் பார்த்துக்கொண்டே தத்தம் பாசறை திரும்பினார்கள்.

அர்ச்சுனனும், கண்ணனும் தங்கள் சங்குகளை நாதம் செய்து கொண்டு, மகிழ்ச்சியுடன் யுதிட்டிரரை அடைந்தார்கள். தேரிலிருந்து இறங்கிச் சென்று, யுதிட்டிரருடைய இரண்டு கால்களையும் அர்ச்சுனன் பற்றிக்கொண்டான்.

யுதிட்டிரர் அவனைத் தூக்கி நிறுத்தி, உச்சி மோந்து, தடவிக் கொடுத்தார்; பீமன், நகுலன், சகதேவன் முதலியவர்களும் அர்ச்சுனனைத் தழுவிக்கொண்டார்கள்.

கிருஷ்ணன் யுதிட்டிரரிடம் "அரசே! சூத புத்திரன் கொல்லப்பட்டதனால் மற்ற கௌரவர்களும் மாண்டார்கள் என்றே கொள்ளலாம் மூவுலகங்களையும் வெற்றி கொள்ளும் ஆற்றல்பெற்ற கர்ணன் உமது கோபத்தின் காரணமாகத் தோல்வியுற்றான்" என்று சொன்னார்.

அதற்கு யுதிட்டிரர், "கோவிந்தரே! உமது உதவியினால் தான் கர்ணன் மாண்டான்; பாண்டவர்கள் வெற்றிபெற்றார்கள்; பகைவர்களும் அழிந்தார்கள். உம்மை அடுத்தவர்கள் வெற்றிபெறுவது ஆச்சரியம் அன்று. எனக்கு

இருந்த பயம் அகன்றது; இனி இன்று இரவு நன்றாகத் தூங்குவேன்" என்று பதில் சொன்னார்.

பிறகு கண்ணனும் யுதிட்டிரரும் தேரில் ஏறிக்கொண்டு போர்க்களத்தைக் காணச் சென்றார்கள். காண்டீவத்தினால் அடிபட்டு, தன் புதல்வர்களுடன் பூமியில் மாண்டு கிடக்கும் கர்ணனை யுதிட்டிரர் பார்த்தார். மாதவரே! உமது அருளினால் நான் அரசன் ஆனேன்" என்று கண்ணனிடம் சொன்னார். அர்ச்சுனனையும், கண்ணனையும் பலவாறு பாராட்டினார்.

கர்ணன் மாண்டதனால், தான் புத்துயிர் பெற்றிருப்பதாக எண்ணி, யுதிட்டிரர் அகமகிழ்ந்தார்.

# வியாசர்

அருளிய

# மகா பாரதம்

---

## வீர மரணமே மேல்

கர்ணன் மாண்ட பின்னர் பலமுறை அழைத்து வந்தும், போர் வீரர்கள் ஓட்டம் பிடிப்பதைக் கண்டு துரியோதனன் கவலையுற்றான். பார்த்தனுடைய வல்லமையை நினைந்து நினைந்து வருந்தினன்.

இது சமயம் பேசுவதில் சமர்த்தரான பிராயமுதிர்ந்த கிருபர், துரியோதனனை அணுகி, அவனுக்கு இதமான வார்த்தைகளைச் சொன்னார்.

"அரசனே! போர் செய்வது அரசர்களுக்கு விதிக்கப்பட்ட தருமம்; தாய், தந்தை, தங்கை, தமக்கை, தம்பி, அண்ணன், மாமன், சம்பந்தி யாராய் இருந்தாலும் வேறுபாடு பாராமல் அரசன் போர் செய்யக் கடமைப்பட்டவன். போரில் இறப்பது பெருமை அளிக்கும்; புறங்காட்டி ஓடுவது அவமானத்தை உண்டாக்கும். ஆயினும் நான் சொல்லப் போகும் புத்திமதியைக் கேள். பீஷ்மர், துரோணர், கர்ணன், ஜயத்ரதன், உன் தம்பிமார்கள், உன் புதல்வன் இலக்குவன், அனைவரும் போரில் மடிந்தனர். இனி யாரைப் பற்றுக் கோடாகக் கொண்டு நாம் போரை நடத்துவது? உலர்ந்த காட்டை நெருப்பு எரிப்பதுபோல், உனது படை முழுவதையும் அர்ச்சுனன் எரித்துவிட்டான். போர் தொடங்கி, இன்று பதினேழு நாட்கள் ஆகின்றன. துரியோதனா! இனியும் போரைத் தொடர்ந்து நடத்தாமல், உன் உயிரை நீ பாதுகாத்துக்கொள். தனக்குச் சமதையானவனுடனும், தன்னிலும் மேம்பட்டவனுடனும், ஒருவன் சமாதானம் செய்து

கொள்வது நலம். விருத்தியடைபவன், குறைவுபட்டவனுடன் சண்டை செய்யவேண்டும். இது பிருகஸ்பதி சொன்ன நீதி. இப்போது நாம் பாண்டவர்களைக் காட்டிலும் பலத்தில் குறைந்து இருக்கிறோம். ஆகவே, நீ பாண்டவர்களுடன் சமாதானம் செய்துகொள். திருதராட்டிரனும் கண்ணனும் சொன்னால், பெரியோர்பால் மரியாதையுள்ள யுதிட்டிரன் உனக்கு நாட்டைத் தந்து, உன்னை அரச பதவியில் அமர்த்துவான். பயத்தாலோ, உயிர்மீதுள்ள ஆசையாலோ, இதை நான் உனக்குச் சொல்லவில்லை. உன் நன்மையை நாடி இதை நான் சொல்லுகிறேன்'' என்று சொன்னார்.

அழுது புலம்பிப் பெருமூச்சு விட்டுக்கொண்டே, இந்த வார்த்தைகளைக் கிருபாச்சாரியார், துரியோதனனிடம் சொன்னார். பிறகு மூர்ச்சித்தும் விழுந்துவிட்டார்.

முதியவரான கிருபாச்சாரியார் சொன்ன இந்த வார்த்தைகளைக் கேட்டு, துரியோதனன் பெருமூச்சுவிட்டான். சிறிது நேரம் பேசாமலும் இருந்தான். ஆழ்ந்து யோசனை செய்தான். பிறகு அவரை நோக்கி, "எனக்காக உயிர்விடத் துணிவுள்ள நீர் அன்போடு சொன்ன வார்த்தைகளைச் செவிமடுத்தேன். ஆயினும் நீர் சொன்ன அந்த வார்த்தைகள், சாகப்போகிறவனுக்கு மருந்து ருசிக்காதது போல, எனக்கு ருசிக்கவில்லை. யுதிட்டிரன் ராஜ்யத்தை விட்டுக்கொடான்; நான் சொல்வதையும் நம்பான். கண்ணனும் அர்ச்சுனனும் இணைபிரியாதவர்கள். அவர்கள் இருவரும் என் சொல்லுக்குச் செவிசாய்க்க மாட்டார்கள். பீமசேனன் கொடியவன்; போர் செய்து தோல்வியடைந்தாலும் அடைவானே யன்றி, இணங்கி வர மாட்டான். அரசனாக இருந்து கடல்சூழ்ந்த அவனியை ஆண்டு அனுபவித்தவன் நான்; யுதிட்டிரனுக்கு ஊழியம் புரிய என் மனம் ஒப்பாது. நீர் நல்ல எண்ணத்துடன்தான் உரைக்கிறீர் என்பதை என் மனமும் ஒப்புகிறது. ஆயினும் பாண்டவர்களுடன் சமாதானம் செய்துகொள்ள என் மனம் இடம் தரவில்லை.

"நான் வேள்விகள் பல இயற்றி, தேவர்களைப் பூசித்தவன்; அறங்கள் பல செய்தவன்; உலக இன்பங்களை அனுபவித்தவன்; மறைகளைச் செவிமடுத்தவன்; அரசர்களை அடக்கி ஆண்டவன்; வேலைக்காரர்களைப் பேணிக் காப்பாற்றியவன்; எளியோர்களைக் கைதூக்கிவிட்டவன்; அத்தகைய நான் பாண்டவர்களை அணுகி, இரப்பது எனக்கு இழுக்காகும்.

"பீஷ்மர், துரோணர், ஜயத்ரதன், கர்ணன், துச்சாதனன் முதலியோரும், அரசர்கள் பலரும் என் பொருட்டாக, போரில் உயிர் நீத்தார்கள். அவர்களைப்போல நானும் போர் செய்து போர்க்களத்தில் மடிவதே எனக்குப் பெருமையைத் தரும். அரசின்மீது ஆசைகொண்டு, போரை நிறுத்திவிட்டு, நான் சமாதானம் செய்துகொண்டால், உலகம் என்னை இகழும். என் நண்பர்களும் தோழர்களும் எனக்காகச் சென்ற வழியிலே சென்று, வீர மரணம் எய்தி, சொர்க்கத்தை அடைவதைத் தவிர்த்து, வேறு வழியில் செல்ல என் மனம் ஒரு போதும் சம்மதியாது" என்று பதில் சொன்னான் துரியோ

துரியோதனன் இவ்வாறு சொன்னதும் அங்கு இருந்த அரசகுலப் பெருமக்கள், "நன்று செய்தீர்! நன்று சொன்னீர்!" என்று துரியோதனனைப் பாராட்டினர். போரில் ஈடுபட எண்ணங்கொண்டு குதிரைகளைக் களைப்பாறச் செய்தனர். சரஸ்வதி நதிக்கரைக்குச் சென்று, ஆற்றில் இறங்கி நீராடி, அதன் நீரைப் பருகினர். ஒருவரை ஒருவர் உற்சாகப் படுத்திக்கொண்டு போருக்குத் தயாராயினர்.

## சேனாதிபதி சல்லியன்

போர் செய்வதில் நாட்டத்துடன் இருந்த கௌரவ வீரர்கள் இமய மலையின் தாழ்வரையில் களிப்புடன் கூடினர். சல்லியன், சித்ரசேனன், சகுனி, அசுவத்தாமா, கிருபர், கிருதவர்மா ஆகியோர் இமய மலையின் அருகே இரவில் தங்கினார்கள். கர்ணன் மரணம் எய்திய பிறகு, பாண்டவர்கள்பால் பீதியுற்று இருந்த அவர்கள், இமயத்தின் தாழ்வரையில் தங்குவதில்தான் மன நிம்மதியைக் கண்டனர். அங்கே ஒன்று இரண்டு இருந்த அரசர்கள், துரியோதனனை நோக்கி, "அரசே! பகைவர்களை வெல்வதற்கு வேண்டிய ஏற்பாடு களைச் செய்யும். ஒருவனைச் சேனாதிபதியாக நியமித்து, போருக்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்யும்" என்று சொன்னார்கள்.

தேரில் வீற்றிருந்தபடியே துரியோதனன் அவர்கள் சொல்வதைச் செவிமடுத்தான். அவன், கௌரவத்தில் மேருவையும், புத்தியில் சுக்கிரரையும் நிகர்த்த, குணக் கடலான அசுவத்தாமாவை அணுகி, "ஆசானின் புதல்வரே!

எங்கள் அனைவருக்கும் இப்பொழுது தகுதியாக விளங்குபவர் நீர்தான். யாரைச் சேனாதிபதியாக்கி, பாண்டவர்களை நாம் ஜயிக்கலாம்? கட்டளையிடும்" என்று கேட்டான்.

"குலம், செல்வம், ஆற்றல் இவற்றால் மேம்பட்டுள்ள சல்லியனைச் சேனாதிபதியாக்கி, போரை நாம் நடத்தலாம். நன்றியுள்ள இந்தச் சல்லியன் தன் மருமக்களைவிட்டு, நம்மிடம் வந்திருப்பவன். கந்தனுக்கு ஒப்பான இவனைப் படைத் தலைவனாக நியமித்து, போரில் தேவர்கள் வெற்றி பெற்றதுபோல், நாமும் வெற்றிபெறலாம்" என்று அசுவத்தாமா பதில் சொன்னார்.

இதைக் கேட்டதும் சல்லியனைச் சூழ்ந்திருந்த அரசர்கள், "வெற்றி பெறுக!" என்று அவனை வாழ்த்தினார்கள்; போர் செய்வதில் ஊக்கம் காட்டினார்கள்.

தேரைவிட்டு இறங்கி, தேரில் இருக்கும் சல்லியனைத் துரியோதனன் அணுகினான். கைகூப்பிக்கொண்டு, "ஐயனே! இவன் நண்பன், இவன் நண்பன் அல்லன் என்பதைச் சோதனைக் காலத்தில்தான் ஒருவன் அறியலாம். நீர் சேனாதிபதியாகி, நமது படைகளை நடத்தவேண்டும்" என்று வேண்டினான்.

"அரசனே! நீ விரும்புகிறபடி செய்கிறேன். என் உடல் பொருள் ஆவி அனைத்தும் உன் நன்மையின் பொருட்டே இருக்கின்றன" என்று பதில் சொன்னான் சல்லியன்.

சல்லியன் சம்மதித்ததும், அவனைத் துரியோதனன் முறைப்படி சேனாதிபதியாக நியமித்தான்.

போர்வீரர்கள் வாத்தியங்களை முழங்கித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொண்டார்கள். சல்லியனை நோக்கி, "அரசே! நீர் வெற்றி பெறுக! பகைவர்களை வதைத்து நெடிது காலம் வாழ்க! உமது புயவலிமையைக்கொண்டு, இந்தப் பூமண்டலம் முழுவதையும் துரியோதனன் ஆளட்டும். பகைவர்கள் அற்றவராய்ப் பரிபாலனம் செய்யட்டும். தேவர்கள், அசுரர்கள், மானுடர்கள் அனைவரையும் ஜயிக்கும் ஆற்றல் உமக்கு உண்டு. ஆகையால் சிருஞ்சயர்களையும் சோமகர்களையும் எளிதில் நீர் வெல்வீர் என்பதில் ஐயம் இல்லை" என்று சொல்லி அவனை வாழ்த்தினார்கள்.

இந்தப் பாராட்டுகளைச் செவிமடுத்த மத்தர நாட்டு மன்னன் உளம் பூரித்தான். படை வீரர்கள் கர்ணன் வதத்தை மறந்து உற்சாகம் அடைந்தார்கள். பார்த்தனை மத்தர மன்னன் கொல்வான் என்று திடமாக நம்பினார்கள்;

அன்று இரவு மகிழ்ச்சிப் பெருக்கில் திளைத்து, நன்றாக உறங்கினார்கள்.

கௌரவப்படையின் ஆரவாரத்தை அறிந்த யுதிட்டிரர் வாசுதேவரிடம், "மாதவரே மத்தர நாட்டு மன்னன் சல்லியனைத் துரியோதனன் சேனாதிபதி ஆக்கி இருக்கிறான். தகுந்த காரியத்தை நாம் செய்யவேண்டும். எங்கள் நலத்தில் நாட்டமுள்ள நீர் செய்யத்தக்கதைத் தெரிவியும்" என்று கேட்டார்

"அரசே! சல்லியன் ஆற்றல் மிக்கவன். திறமையாகப் போர் செய்யத் தெரிந்தவன்; பீஷ்மர், துரோணர், கர்ணன் இவர்களை விஞ்சியவன்; சிகண்டி, அர்ச்சுனன் இவர்களையும் மீறியவன். அச்சமின்றி ஆற்றலுடன் அவன் போர் புரிவான். அவனை எதிர்த்து முறியடிப்பதற்கு, உம்மைத் தவிர, வேறு வீரன் இந்த அவனியில் இல்லை. கர்ணனுக்குப் பின்னர் துரியோதனன் சல்லியனையே பெரிதும் மதிக்கிறான். அவனை எதிர்த்துச் சென்று நீர் கொல்லும். 'அம்மான்' என்பதனால் கருணை காட்டக் கூடாது" என்று சொன்னார் கிருஷ்ணன்.

இவ்வாறு சொல்லிவிட்டு, கிருஷ்ணன் தனது பாசறைக்குத் திரும்பினார். தன் தம்பிமார்களையும் மற்றவர்களையும் அனுப்பிவிட்டு, அன்று இரவு யுதிட்டிரரும் அயர்ந்து தூங்கினார். கர்ணன் மாண்டதனால் பாஞ்சாலர்களும் மற்றவர்களும் மகிழ்ச்சியுடன் உறங்கினார்கள்.

பதினெட்டாம் நாள் பொழுது புலர்ந்தது. "வீரர்களே! போர்செய்ய முந்துங்கள்" என்று துரியோதனன் சொன்னான்.

வீரர்கள் தேர்களைப் பூட்டினார்கள்; யானைகளைச் சித்தம் செய்தார்கள். போர்ப் பறைகளை முழக்கினார்கள்; போர் செய்ய முனைப்புடன் நின்றார்கள். எல்லாரும் ஒருங்கு கூடி, ஓர் உறுதிமொழி செய்தார்கள். "தனித்து யாரும் பாண்டவர்களுடன் போர் செய்யக் கூடாது. யாவரும் ஒருங்கு நின்று அவர்களை எதிர்க்க வேண்டும். அசுவத்தாமாவும் தனித்துப் போர்புரியக்கூடாது" என்று முடிவு செய்துகொண்டார்கள்.

பிறகு, கடல்போல் முழங்கிக்கொண்டு, சேனை போர் செய்யக் கிளம்பிற்று.

சர்வதோபத்திரம் என்னும் வியூகத்தை வகுத்து, பார்த்தர்களை எதிர்த்துச் சென்றான் சல்லியன்.

பீமனும் அர்ச்சுனனும் சங்கநாதம் செய்துகொண்டு கௌரவப் படையை எதிர்த்தார்கள். யுதிட்டிரரும் சிகண்டியும் திட்டத்துய்மனனும் சல்லியனை எதிர்த்தார்கள்.

'ஆ, ஆ' என்ற அலறலும், 'நில், நில்' 'விடாதே' என்ற எச்சரிக்கைகளும் போர்க்களத்தில் எங்கும் கேட்டன.

முறியடிக்கப்பட்டதால், கௌரவ சேனை நாற்புறமும் சிதறியோடிற்று.

## சல்லியன் வதம்

கௌரவ சேனை சிதறுண்டு தவிப்பதைக் கண்ட சல்லியன் தேர்ப்பாகனை நோக்கி, "பாகனே! யுதிட்டிரன் அதோ நிற்கிறான். அவனிடம் தேரைச் செலுத்து. என் திறமைக்குமுன், பாண்டவர்கள் திறமை எம்மாத்திரம்?" என்று சொன்னான்.

அவ்வாறே சாரதி, யுதிட்டிரன் நிற்கும் இடத்திற்குத் தேரைச் செலுத்தினான்; கௌரவப் படையும் ஊக்கம் அடைந்து போர் செய்யத் திரும்பிற்று.

இன்று நடந்த போரில் நகுலன், கர்ணன் புதல்வர் மூவரைக் கொன்றான். சித்ரசேனன், சுசர்மா, சத்தியசேனன் ஆகிய மூவரும் நகுலன் கையால் மாண்டனர்.

நெருப்பின் நடுவே சிக்கிய பெண் மான்போல், கௌரவ சேனை தத்தளித்தது. அந்தச் சேனையைப் பாதுகாக்கச் சல்லியன் முனைந்தான். யுதிட்டிரரையும் பீமனையும் பாணங்களால் அடித்தான். அவன் விடுத்த பாணங்கள் இடிகள் போல எதிரிகளைத் தாக்கின; ஆற்ற மாட்டாது எதிரிகள் அலறினர், பதறினர், கதறினர், பூமியில் சாய்ந்தனர்.

சகாதேவனுடைய குதிரைகளைச் சல்லியன் அடித்துக் கொன்றான்; சல்லியன் புதல்வனைச் சகதேவன் கத்தியினால் கொன்றான்.

பீமன் கதையை எடுத்துக்கொண்டு தீவிரமாகப் போர் செய்தான். இயக்கர்களை எதிர்த்து முறியடித்த பிரசித்தமான கதையைக் கையில் எடுத்துக்கொண்டு, சல்லியனுடைய குதிரைகளை அடித்து வீழ்த்தினான்; அவனுடைய தேர்ப்பாகனையும் கொன்றான்.

பீமனுக்கும் சல்லியனுக்கும் இடையில் கோரமான கதா யுதப் போர் தொடங்கிற்று. இரண்டு மலைகள் ஒன்றை ஒன்று தாக்குவதுபோல, இருவரும் போர் செய்தார்கள். திறமை யாகப் போராடி இருவரும் சோர்வடைந்தார்கள்.

கிருபர், சல்லியனைத் தனது தேரில் ஏற்றிக்கொண்டு அப் பால் சென்றார்.

"கொல்லுங்கள், வெட்டுங்கள், அடியுங்கள், பிடியுங்கள்" என்ற சொற்கள் போர்க்களத்தில் கேட்டன.

யுதிட்டிரரும் சல்லியனும் அம்புகளால் ஒருவரை ஒருவர் தாக்கினார்கள். சல்லியனின் ஆற்றலை விஞ்ச முடியாது. யுதிட் டிரர் தவித்தார்; யுதிட்டிரருடைய வில்லைச் சல்லியன் துண் டித்து விட்டான். உடனே அவர் வேறு ஒரு வில்லை எடுத்துச் சல்லியனைத் தாக்கினார். 'வெற்றி அல்லது மரணம்' என்ற நிச்சயத்துடன் போர் செய்தார்.

அவர் வாசுதேவரையும் தம் தம்பியர்களையும் நோக்கி, "கௌரவர்களின் பொருட்டு, பீஷ்மர், துரோணர், கர்ணன் முதலியோரும் மற்றஅரசர்களும் தங்கள் தங்கள் ஆற்றல்களைக் காட்டி அழிந்து போனார்கள். நீங்களும் உங்கள் ஆண்மையை வெளிப்படுத்திப் போர் செய்தீர்கள். நான்சல்லியனை எதிர்த்து போரில் என் பங்குக்கு உரிய கடமையைச் செய்து முடிக்க விரும்புகிறேன். தாய் மாமனை அவரை எதிர்த்து, நான் வதம் செய்யப் போகிறேன். ஆகவே மற்ற வீரர்களும் எனக்குப் பக்க பலமாக வரட்டும்" என்று சொன்னார்.

இரண்டு புலிகள் ஒன்றை ஒன்று தாக்குவது போல, யுதிட்டிரரும் சல்லியனும் போர் செய்தார்கள். சல்லியன் மிகுந்த திறமையுடன் போர் செய்தான். யுதிட்டிரருடைய குதிரைகளை அழித்தான். தேர்ப்பாகனைக் கொன்றான். இத னால் கோபமுற்ற யுதிட்டிரர், சல்லியனை வதம் செய்ய, தம் மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டார்.

இரத்தினங்கள் இழைத்த பொற்காம்புள்ள, ஓர் அம்பை யுதிட்டிரர் கையில் எடுத்தார். மிகுந்த கோபங்கொண்டு, கண்களை உருட்டி விழித்து, சல்லியனை நோக்கினார். அந்தப் பார்வையால், சல்லியன் எரிந்து சாம்பலாகாமல் இருந்தது தான் ஆச்சரியமான விஷயம்.

கோபத்துடன் இருந்த அவர், மந்திரம் உச்சரித்து சக்தி யாயுதத்தைச் சல்லியன்மீது ஏவினார். 'இவன் மாண்டான்' என்று சொல்லி, யுதிட்டிரர் அந்தப் பாணத்தை மத்தர

நாட்டு மன்னன்மீது ஏவியபோது, முப்புரத்தை எரித்த, ருத்திரர்போல, அவர் விளங்கினார்.

இந்தப் பாணத்தைச் சல்லியன் களிப்புடன் ஏற்றுக் கொண்டான். அது சல்லியனுடைய மார்பையும் கீர்த்தியையும் பிளந்து கொண்டு, பூமியில் நீர் புகுவதுபோல, பூமியில் புகுந்தது.

மூக்கு, கண், காது, வாய் இவற்றின் வழியாக இரத்தம் பெருக, பெரிய மலை ஒன்று பூமியில் விழுவதுபோல, சல்லியன் விழுந்தான். அன்புள்ள கணவனைத் தழுவிக் கொள்ளும் மனைவிபோல, பூமி அவனை அன்புடன் ஏற்றுக் கொண்டாள். உயிர் பிரிந்தவனாய் இருந்தும், சல்லியன் முகத்தில் களை குன்றவில்லை.

சல்லியன் மாண்டதைக் கண்ட பாண்டவர்கள் களிப்புற்றார்கள்; கௌரவர்கள் துயருற்று ஓடினார்கள்.

## சால்வன் வதம்

சல்லியன் மாண்ட பின்னர், எழு நூறு மத்தர நாட்டு வீரர்கள் பயந்து ஓட்டம் பிடித்தார்கள். யானைமீது அமர்ந்தபடி "ஓடவேண்டாம், ஓடவேண்டாம்" என்று சொல்லி, துரி தனன் அவர்களைத் தடுத்தான்.

பல முறை துரியோதனன் தடுத்ததினால் அவர்கள் கோபத்துடன் திரும்பி யுதிட்டிரரை வதம் செய்யும்கருத்துடன்பாண்டவ சேனையில் புகுந்தார்கள். அவர்கள் ஆத்திரத்துடனும் ஆவேசத்துடனும் போர் புரிந்தார்கள்; யுதிட்டிரரைக் கடுமையாகத் தாக்கினார்கள்.

விவரம் தெரிய வந்ததும், காண்டீவத்தை ஒலி செய்து கொண்டு, பார்த்தன் தேரில் வந்தான். மற்றப் பாண்டவ வீரர்களும் யுதிட்டிரரைப் பாதுகாக்கும் கருத்துடன் கௌரவ சேனையை நாற்புறத்திலும் சூழ்ந்துகொண்டார்கள்.

இதற்காகக் கௌரவ வீரர்கள் பயந்துவிடவில்லை. மகர மீன் கடலைக் கலக்குவதை ஒப்ப, பாண்டவ சேனையைக்கௌரவ வீரர்கள் கலக்கினார்கள். கோரமான காற்று, மரங்களை நடுங்கச் செய்வதுபோல, பாண்டவ வீரர்களை நடுங்கச் செய்தார்கள். "அரசன் யுதிட்டிரன் எங்கே? அவனுடைய தம்பியர்

கள் எங்கே? ஒருவரையும் காணோமே?'' என்று மத்தர நாட்டினர் கூச்சலிட்டார்கள்.

இவர்களைச் சாத்யகியும் திட்டத்துய்மனனும் எதிர்த்து அழித்தார்கள். கௌரவப் படையினர் பயந்து ஓடுவதைக் கண்ட துரியோதனன் தடுத்துப் பார்த்தான். அவர்கள் நிற்க வில்லை; கொம்பு ஒடிந்த காளைகள் போலவும் தந்தம் முறிந்த யானைகள் போலவும் கௌரவ வீரர்கள் போர்க்களத்திலிருந்து திரும்பினார்கள். வெற்றிமீது இருந்த நம்பிக்கையை இழந்தார்கள்.

பாண்டவ வீரர்கள் களிப்படைந்தார்கள். "சத்திய சீலரான யுதிட்டிரர் இன்று அரசராகிவிட்டார். துரியோதனன் போரில் மடிவது உறுதி. தீயபுத்தியுள்ள திருதராட்டிரன் மகனை இழந்து பரிதவிக்கப் போகிறான்; தம்மைத் தாமே நிந்தித்துக் கொள்ளப் போகிறான். விதுரர் சொன்ன நல்லுரைகளை அவன் நினைத்துப் பார்க்கப் போகிறான். யாரிடத்தில் தருமம் இருக்கிறதோ அவர்கள் வெற்றி பெறுவது திண்ணம்'' என்று ஒருவருக்கு ஒருவர் பேசிக் கொண்டனர்.

அர்ச்சுனன் தேர்ப்படையை எதிர்த்தான். நகுலன், சகதேவன் சாத்யகி ஆகிய மூவரும் சகுனியை எதிர்த்தார்கள். பீமனிடம் பயந்து வீரர்கள் ஓடுவதைக் கண்ட துரியோதனன் ஆச்சரியமுற்றுத் தன் பாகனை நோக்கி, "பாகனே! தேரை மெதுவாகச் செலுத்து. அர்ச்சுனன் என்னைக் கடந்து அப்பால் செல்கிறான். நான் போர்புரிந்து பாண்டவர்களைத் தடுப்பது படைக்குத் தெரிய வருமாயின், அந்தப் படை திரும்பி வந்து மீண்டும் போர்புரியும்'' என்று சொன்னான்.

அதன்படி பாகன் தேரை மெதுவாகச் செலுத்தினான்.

இருபத்து ஓராயிரம் வீரர்கள், பற்பல நிறங்களில் உடையணிந்து போர்செய்யத் தயாராக நின்றார்கள்.

போர் ஆரம்பமாயிற்று. துரியோதனன் பீமசேனன் முதலியவர்களைத் தடுத்தான். கௌரவ வீரர்கள் கடுங் கோபம்கொண்டு, பீமனைத் தாக்கினார்கள்.

பீமன் தேரிலிருந்து இறங்கிக்கொண்டு, கதையைக்கையில் எடுத்து, அதால் கௌரவ வீரர்களை அடித்தான்; இருபத்து ஓராயிரம் காலாட்களை அந்தக் கதையால் அடித்துக் கொன்றான்.

கௌரவ வீரர்கள் பயந்து ஓடினார்கள். இதைக் கவனித்த துரியோதனன், "வீரர்களே! நீங்கள் எங்கு ஓடி ஒளிந்தாலும் பாண்டவர்கள் உங்களை விட மாட்டார்கள். ஓடுவதால் யாது பயன்? பாண்டவ சேனை குறைவாக இருக்கிறது. கிருஷ்ணனும் அர்ச்சுனனும் படுகாயமுற்று இருக்கிறார்கள். ஆகவே உறுதியாக நின்று நாம் போர்செய்தால் வெற்றி நிச்சயம். போரில் இறப்பவனுக்குப் புகழ் கிட்டும். போர்புரியா விட்டாலும் சாவின் பிடியிலிருந்து எவனும் தப்ப முடியாது. போரில் வீர மரணம் எய்தியவன் சொர்க்க இன்பத்தை அனுபவிப்பான்" என்று சொன்னான்.

இப்படிச் சொன்னதும் கௌரவ வீரர்கள் திரும்பி வந்து பாண்டவர்களை எதிர்த்தார்கள்.

படைகள் திரும்பிவந்து எதிர்த்ததும், கௌரவ தரப்பைச் சேர்ந்த சால்வன், யானைமீது ஏறிக் கொண்டு பாண்டவர்களை எதிர்த்தான். அவன் ஏறி வந்த யானை பயங்கரமான யானை. அது பாண்டவர்களின் படையை அழித்துத் துவைத்தது. அதன் வேகத்தைத் தாங்க முடியாது பாண்டவ வீரர்கள் சிதறி யோடினார்கள்.

இதனால் மகிழ்ச்சியுற்ற கௌரவர்கள் ஆர்ப்பரித்து சால்வனைக் கொண்டாடினார்கள். இதைப் பொறுக்காது பாண்டவ படைத் தலைவன் திட்டத்துய்மனன் அந்த யானையை எதிர்த்தான். சிறந்த பாணங்களால் அதன் மத்தகத்தில் அடித்தான்.

சால்வன் தன் யானையை முடுக்கினான். அது வருகின்ற வேகத்தைக் கண்டு பயந்து, திட்டத்துய்மனன் வெலவெலத்துப் போனான். தேரிலிருந்து குதித்து, கதையைக் கையில் எடுத்துக் கொண்டான்.

யானையோ திட்டத்துய்மனன் இருந்த தேரைக் குதிரைகளுடன் தன் துதிக்கையால் மேலே தூக்கி, பிறகு தரையில் போட்டுத் துவைத்தது.

இதைக் கவனித்த சாத்யகி திட்டத்துய்மனனுக்கு உதவி புரிய ஓடி வந்தான்; பீமனும் வந்தான். இருவரும் அந்த யானையின் வேகத்தைத் தடுத்தார்கள்.

யானை நிலைதவறித் தத்தளித்தது. சால்வன் கோபமுற்று பாணங்களால் பகைவர்களை அடித்தான்.

திட்டத்துய்மனன் கதையுடன் சென்று, சால்வனுடைய யானையின் மத்தகத்தைப் பிளந்தான். அந்த யானை வீறிட்டு

அலறி, இரத்தத்தைக் கக்கிக்கொண்டு, மலைபோல் விழுந்து, உயிர் நீத்தது.

சால்வனுடைய யானை களத்தில் பட்டதைக் கண்டதும் கௌரவ வீரர்கள் 'ஆ, ஆ' என்று அலறினார்கள்.

கூர்மையான ஒரு பாணத்தை ஏவி, சாத்யகி சால்வனுடைய தலையை வெட்டினான்; உயிர்பிரிந்து மலைபோல் தரையில் சாய்ந்தான் சால்வன.

## போர் வெறி

சாத்யகியினுடைய அம்புக்குச் சால்வன் பலியானதும் கிருதவர்மா முன்வந்து, பாண்டவர்களின் படையைத் தாக்கினான். முழங்கிக்கொண்டு, கிருதவர்மாவும் சாத்யகியும் ஒருவரை ஒருவர் எதிர்த்தார்கள். சாத்யகி கிருதவர்மாவின் சாரதியையும் குதிரைகளையும் கொன்றான்.

இதனால் ஆத்திரமடைந்த கிருதவர்மா கொடிய சூலம் ஒன்றை எடுத்து, சாத்யகியின் மார்பைக் குறிவைத்து எறிந்தான். அம்பு எய்து, அந்தச் சூலத்தைச் சாத்யகி பொடி செய்துவிட்டான்.

தேர் இழந்து, பூமியில் நிற்கும் கிருதவர்மாவைக் கண்ட கிருபர், சினமுற்று, சாத்யகியை எதிர்க்க விரைந்தார். சென்றவர் கிருதவர்மாவைத் தன் தேரில் ஏற்றிக்கொண்டு, வேறு இடத்துக்குப் போனார்.

கௌரவ வீரர்கள் பயந்து ஓடினார்கள். ஆனால் துரியோதனன் மட்டும் தனியாக நின்று, பாண்டவர்களை எதிர்த்தான்; ஓடுகின்ற போர்வீரர்களைத் தடுத்து நிறுத்திப் போர் செய்யத் தூண்டினான். முயற்சியுடனும் முழு மனத்துடனும் போர் செய்தான். பகைவர்கள் எதிர்க்கத் துணியாது நின்றார்கள்.

இது சமயம் வேறு ஒரு தேரில் ஏறிக்கொண்டு, கிருதவர்மா துரியோதனனிடம் வந்தான்.

துரியோதனன் ஆற்றலுடன் போர் செய்தான். தனித்து நின்று போர் செய்த அவனைப் பார்த்தார்கள்! எதிர்க்கவில்லை. யுதிட்டிரன், பீமன், சகதேவன், நகுலன், திட்டத்துய்மனன் இவர்கள் எல்லாரையும் துரியோதனன் கடுமையாகத் தாக்கினான்.

பிறகு பாண்டவர்களும் மற்றவர்களும் துரியோதனனைத் தாக்கினார்கள். துரியோதனனோ அச்சமயமலும் சளைக்காமலும் போர்புரிந்தான். அவனுடைய ஆற்றல், திறமை, துணிச்சல் இவற்றைக்கண்டு, போர்க்களத்தில் அனைவரும் வியந்தார்கள்.

அரசனின் ஆற்றலைக் கண்ட கௌரவ வீரர்கள் திரும்பி வந்து, பாண்டவ வீரர்களை எதிர்த்தார்கள்.

அசுவத்தாமா பீமசேனனை எதிர்த்தார். சகுனி யுதிட்டிரரை எதிர்த்து, தேரும் குதிரைகளும் இழக்கும்படி செய்தான். உடனே சகதேவன் வந்து, வேறு ஒரு தேரில் அவரை ஏற்றிக் கொண்டு, அப்பால் சென்றான்.

சகதேவனுடைய தேரில் ஏறின யுதிட்டிரர், சகுனியைப் பல பாணங்களால் அடித்துக் கர்ஜனை செய்தார்.

இதனால் கோபமுற்ற கௌரவர்கள், யுதிட்டிரரைக் கடுமையாகத் தாக்கினார்கள். நாற்புறமும் சுற்றி வளைத்துக் கொண்டு, அவர் இருப்பது தெரியாமல் மறைத்துவிட்டார்கள். இதைக் கண்டு பொறுக்காத பாஞ்சால வீரர்கள் தேர்களுடன் வந்து, கௌரவ வீரர்களைத் தாக்கினார்கள்.

போர் தீவிரமாக நடந்தது. அநேக தீய நிமித்தங்கள் தோன்றின. கல் மழை பெய்தது. சுழல் காற்று வீசிற்று; யானைகள் நடுங்கிக் கண்ணீரைச் சொரிந்தன.

சகுனி, கௌரவ வீரர்களை நோக்கி, "நீங்கள் எதிரில் நின்று போர்புரியுங்கள்; நான் பின்புறத்திலிருந்து பாண்டவர்களைக் கொல்கிறேன்" என்று சொன்னான்.

போர் நடந்தது. கௌரவ சேனை நிலையடைந்து ஓட்டம் பிடித்தது. சகுனி போர்வீரர்களை நோக்கி, "தருமத்தை அறிந்தவர்கள் போர்க்களத்தில் புறங்காட்டி ஓட மாட்டார்கள். போர் செய்யத் திரும்புங்கள்" என்று கூவி அழைத்தான்.

சகுனியிடம் ஈட்டிப் படைக் குதிரை வீரர்கள் பதினாயிரவர் இருந்தனர். இந்தப் படையினர் பாண்டவப் படையினரைப் பெரிதும் துன்புறுத்தினார்கள்; பெரும் காற்றால் சிதறியோடும் மேகம்போல, பாண்டவ வீரர்கள் நான்கு பக்கங்களிலும் சிதறியோடினார்கள்.

தன் படை முறியடிக்கப்பட்டிருப்பதைக் கண்ட யுதிட்டிரர், சகதேவனிடம் "சகுனி பின்புறத்திலிருந்துகொண்டு,

வதம் செய். யானைப்படை, குதிரைப்படை, காலாட் படை மூன்றும் உன்னுடன் வரும்" என்று சொன்னார்.

அதன்படி, சகுனியை வதம் செய்ய, சகதேவன் புறப்பட்டுச் சென்றான். பாண்டவர்களின் குதிரைப்படையினர் சகுனி படையின் ஊடே புகுந்து தாக்கினார்கள்; ஆயிரக் கணக்கான குதிரைகள், யானைகள் இந்தப் போரில் மடிந்தன. இரத்தம் சொரிய அடிபட்டு, ஆயிரக்கணக்கான வீரர்கள் தரையில் விழுந்தார்கள்.

காயமுற்ற குதிரைகள் நடக்க முடியாது தவித்தன. நெடு நேரம் போராடிய பிறகு, ஆறாயிரம் குதிரைகளுடன் சகுனி ஓட்டம் பிடித்தான்.

போர் வெறியோடு நடந்த காரணத்தால் ஒன்றும் புரியாமல் தந்தை மகனைக் கொன்றான்; மகன் தந்தையைக் கொன்றான்; அண்ணன் தம்பியைக் கொன்றான்; தம்பி அண்ணனைக் கொன்றான்; நண்பனை நண்பன் பகைத்துக் கொண்டு, ஒருவனை ஒருவன் தாக்கி, போரில் உயிர் துறந்தார்கள்.

வரம்பு கடந்து போர் நடந்தபடியால், ஆள் சேதமும் பொருள் சேதமும் அதிகம் ஏற்பட்டன.

## மூர்க்கனின் போக்கு

பாண்டவர்களால் கௌரவப் படை அழிந்துபோனதை அறிந்த சகுனி, எஞ்சியிருக்கும் குதிரைப் படையுடன் போர்க் களத்துக்குத் திரும்பினான். அவன் கௌரவ வீரர்களை நோக்கி, "பகைவர்களை அடக்கும் ஆற்றல் பெற்றவர்களே! மகிழ்ச்சியுடன் போர்புரியுங்கள்" என்று படை வீரர்களை ஏவினான்.

பிறகு அங்கே போர்புரிகின்ற அரசர்களை நோக்கி, "துரியோதன மகாராஜன் எங்கே இருக்கிறான்?" என்று கேட்டான்.

"கௌரவ வேந்தன் துரியோதனன் போர்க்களத்தின் நடுவே நிற்கிறார். பூரண சந்திரனுக்கு ஒப்பான பெரிய குடை அதோ தெரிகிறது. அந்த இடத்துக்குச் சென்றால் துரியோதன மன்னரைத் தாங்கள் காணலாம்" என்று அரசர்கள் பதில் சொன்னார்கள்.

சகுனி துரியோதனனிடம் சென்றான். அவனைக் கண்டதும் மகிழ்ச்சி அடைந்த சகுனி, "அரசே! தேர்ப் படையை அழிப்பதற்கு முந்துக. இல்லையேல் பாண்டவர்களை வெல்வது சாத்தியமன்று" என்று சொன்னான்.

கௌரவர்கள் மகிழ்ச்சியுற்று, பாண்டவர்களைத் தாக்கினார்கள்.

அப்போது அர்ச்சுனன் கிருஷ்ணனிடம், "மாதவரே! மெதுவாகக் குதிரைகளை ஓட்டும். கூர்மையான அம்புகளால் பகைவரை நான் அழிக்கிறேன். போர் தொடங்கி இன்றுடன் பதினெட்டு நாட்கள் ஆகின்றன. முடிவற்றதாக இருந்த கௌரவ சேனை அழிந்துவிட்டது. பீஷ்மரின் மரணத்துக்குப் பின்னர், துரியோதனன் சமாதானத்துக்கு வருவான் என்று எண்ணினேன். மூர்க்கனும் முட்டாளுமான துரியோதனன் சமாதானத்துக்கு வரவில்லை. பீஷ்மர் சொன்ன புத்திமதிகளையும் அவன் பொருட்படுத்தவில்லை. விடாப்பிடியாகத் துரியோதனாதியோர் போர் செய்தனர். அதனால் துரோணர், கர்ணன், விகர்ணன், சல்லியன், சால்வன் இவர்கள் அனைவரும் வீர மரணம் எய்திய பின்னரும் துரியோதனன் போரை நிறுத்தவில்லை. துச்சாதனன் மாண்ட பின்னும் பயங்கரமான போர் நிற்கவில்லை. நீர் சொன்ன புத்திமதியையே ஏற்றுக்கொள்ளாத துரியோதனன் பிறர் சொல்லும் புத்திமதியை ஏற்கவே மாட்டான். வயது முதிர்ந்த தாய் தந்தையர் உரைத்த அறிவுரைகளும் அவன் செவியில் ஏறவில்லை. குலத்தை அழிக்கவே பிறந்தவன் துரியோதனன் என்பது வெளிப்படை. நமது நாட்டை ஒருபோதும் இவன் நமக்குத் திருப்பித் தர மாட்டான். "உயிர் இருக்கும் வரை உரிய பங்கைத் தரச் சம்மதியான் துரியோதனன்" என்று மகாத்மா விதுரர் சொன்னார். துரியோதனன் போக்கு அவர் கூற்றை மெய்ப்பிக்கிறது. ஆகையால் போரைத் தொடர்ந்து நடத்தாமல் நமது எண்ணம் நிறைவேறப்போவது இல்லை. ஆகவே தேரைச் செலுத்தும். பகைவர்களை அழிக்கலாம்" என்று சொன்னான்.

அதன்படி கண்ணன் தேரைச் செலுத்தினார். அர்ச்சுனன், யானை, குதிரை, காலாள் ஆகியோரை அம்பினால் அடித்து அடித்து வதம் செய்துகொண்டே சென்றான். அவன் எய்த ஒவ்வோர் அம்பும் இலக்கைத் தவறாது அடித்தது. அம்பு மழையால், போர்க்களத்தின் நாற்புறங்களையும் அர்ச்சுனன் மூடினான்.

திட்டத்துய்மனனுக்கும் துரியோதனனுக்கும் இடையில் பெரும் போர் நிகழ்ந்தது. துரியோதனனுடைய நான்கு குதிரைகளையும் தேர்ப்பாகனையும் திட்டத்துய்மனன் நமன் உலகு அனுப்பினன்.

தேர் இழந்த துரியோதனன், வேறு ஒரு குதிரைமீது ஏறிக்கொண்டு சகுனியிடம் சென்றான். மூவாயிரம் யானைப் படையினர் உடனே பாண்டவர்கள் ஐவரையும் சுற்றி வளைந்துகொண்டு தாக்கத் தொடங்கினர்கள்.

அர்ச்சுனன் அந்த யானைப் படையை எதிர்க்கலானன்; ஒரே அம்பில் பல யானைகளை அவன் கொன்றான். பீமன் தேரி லிருந்து கீழே குதித்து, கதையைக் கையில் எடுத்துக்கொண்டு யானைகளைத் தாக்கினன்; மத்தகம் பிளந்து, கதறிக்கொண்டு யானைகள் ஓட்டம் பிடித்தன; சில உயிர் துறந்து, பெரிய மலை கள் போலப் பூமியில் சாய்ந்தன.

திட்டத்துய்மனனிடம் தோல்வியுற்றுத் துரியோதனன் விலகிச் சென்றதை அறியாமல் அசுவத்தாமா, கிருபர், கிருதவர்மா முதலியோர், "துரியோதனன் எங்கே சென் றான்?" என்று அங்கே போர் செய்து கொண்டிருந்த அரசர் களை வினவினர்கள்.

"அவன் சகுனி இருக்கும் இடம் சென்று விட்டான்" என்று பதில் சொல்லிவிட்டு, தொடர்ந்து போர் புரிந்தார்கள்.

விவரம் தெரிய வந்ததும், சகுனி இருக்கும் இடத்துக்கு அந்த மூவரும் துரியோதனனைத் தேடிச் சென்றார்கள்.

பீமன் தேரில் ஏறிக்கொண்டு, போர் செய்து, துரியோ தனன் தம்பியர்களைக் கொன்றன். இதனால் நலிவுற்ற கௌரவ சேனை நாற்புறமும் சிதறி ஓடித் தவித்தது. அளவி லும் ஆற்றலிலும் குறைந்து பரிதவித்தது.

## சகுனி மாண்டான்

துரியோதனன், அவன் தம்பி சுதர்சன் இருவரையும் தவிர்த்து, திருதராட்டிரன் புதல்வர்களில் ஏனையோர் அனை வரும் போரில் கொல்லப்பட்டார்கள்.

எஞ்சிய இருவரும் குதிரைப் படை நடுவே நிற்பதைக் கிருஷ்ணன் கண்டார். அவர் அர்ச்சுனனை நோக்கி, "குந்தி

மைந்தனே! பகைவர்களில் பெரும்பாலோர் கொல்லப் பட்டார்கள். உறவினர்களும் மாண்டார்கள். நகுலனும் சகதேவனும் போர் செய்து களைத்துவிட்டார்கள். கிருபர், கிருதவர்மா, அசுவத்தாமா ஆகிய மூவரும் துரியோதனனுக்கு அப்பால் நிற்கிறார்கள். துரியோதனன் நம்மை நோக்கி வந்துகொண்டு இருக்கிறான். அவனை எதிர்த்துக் கொன்று நீ பெரும் புகழைத் தேடிக்கொள்" என்று சொன்னார்.

அதற்கு அர்ச்சுனன், "மாதவரே! திருதராட்டிரன் புதல்வர்களைப் பீமன் வதம் செய்துவிட்டான். எஞ்சி இதோ நிற்கும் இருவரும் உயிருடன் இருக்கப் போவதில்லை. அசுவத்தாமா, கிருபர், சுசர்மா, உலூகன், சகுனி, கிருத வர்மா இவர்கள்தான் கௌரவப் படையில் எஞ்சியிருக் கின்றனர். இன்று யுதிட்டிரர் பகைவர் அற்றவராக விளங்கப் போகிறார். இன்று நடக்கும் போரில் துரியோதனன் பொருளையும் உயிரையும் இழக்கப் போகிறான்" என்று மறு மொழி சொன்னான்.

துரியோதனன் நிற்கும் பக்கம் கிருஷ்ணன் தேரைச் செலுத்தினார். இதைக் கவனித்த பீமனும் சகதேவனும் முழக்கம் செய்துகொண்டு, துரியோதனனை வதம் செய்யும் பொருட்டு விரைந்தார்கள்.

இவர்கள் வருவதைக் கண்ட சகுனி, தானே முன்வந்து அவர்களை எதிர்த்தான்; சுதர்சன் பீமனை எதிர்த்தான். சுசர்மாவும் சகுனியும் அர்ச்சுனனை எதிர்த்தார்கள்; துரியோ தனன் குதிரை மீது இருந்தபடி சகதேவனை எதிர்த்தான்.

இப்பொழுது நடந்த போரில் சுசர்மாவை அம்பால் அடித்து, மார்பைப் பிளந்து அர்ச்சுனன் கொன்றான். இதனால் பாண்டவர்கள் அகமகிழ்ந்தார்கள். கௌரவர்கள் துன்புற்று நலிந்தார்கள்.

பீமன் கோபமுற்றுச் சிரித்துக்கொண்டே சுதர்சனனை எதிர்த்தான். ஒரு பாணத்தால் அவன் தலையைத் துண்டித் தான்.

யானைகளுக்கும் குதிரைகளுக்கும் மனிதர்களுக்கும் பெருத்த அழிவு நேர்ந்தது. சுபலன் மகன் சகுனியைச் சகதேவன் எதிர்த்தான்; அவன் மகன் உலூகனையும் எதிர்த்தான்.

போர் மும்முரமாக நடந்தது. பீமசேனனும் போரில் கலந்துகொண்டு சகதேவனுக்கு உதவினான். சகுனி சக

தேவன்மீது ஓர் அம்பை எய்து, மூர்ச்சையடையும்படி செய்தான்.

இதனால் கோபமுற்ற பீமன் சகுனியின் போர்வீரர்களைக் கடுமையாகத் தாக்கினான். தாக்குப் பிடிக்க முடியாது அவர்கள் ஓட்டம் பிடித்தார்கள்.

இதைக் கவனித்த துரியோதனன், "தருமம் தெரிந்தவர்களே! புறங்காட்டி ஓடாது திரும்பி, போர் செய்யுங்கள். போரில் தைரியமாக உயிர் துறப்பவனுக்குப் புகழும் உண்டு; புண்ணியலோகமும் உண்டு" என்று கூவி அழைத்தான்.

சகுனியின் படை வீரர்கள் திரும்பி வந்து, பாண்டவர்களை எதிர்த்தார்கள். பாண்டவர்களும் ஊக்கத்துடன் அவர்களை எதிர்த்தார்கள்.

சகதேவன் மூர்ச்சை தெளிந்து, சிரித்துக் கொண்டு, சகுனியைப் பத்துப் பாணங்களால் அடித்தான்; அவனுடைய வில்லை அறுத்தான்.

சகுனி வேறு வில்லை எடுத்துக் கொண்டு போர் செய்தான். தன் தந்தையைக் காப்பாற்ற விரும்பி, உலூகனும் தீவிரமாகப் போர் செய்தான். சகதேவன் ஓர் அம்பை ஏவி, உலூகன் உயிரைக் கவர்ந்தான். இரத்தம் நாற்புறமும் சொரிய, தேரிலிருந்து கீழே விழுந்து, உலூகன் உயிர் நீத்தான்.

போர்க்களத்தில் தன் மைந்தன் மரணம் அடைந்ததைக் கண்ட சகுனி பெருமூச்சுவிட்டான். கண்ணீர் உகுத்தான்; அவனால் பேச முடியவில்லை. ஒரு முகூர்த்த காலம் சிந்தனையில் ஆழ்ந்தான்; விதுரர் முன்பு உரைத்த அறிவுரைகள் அடிக்கடி அவன் நினைவுக்கு வந்தன.

அவன் பிறகு சகதேவனை மூன்று பாணங்களால் அடித்தான். அந்த அம்புகளைத் தடுத்து, சகுனியின் வில்லைச் சகதேவன் துண்டித்துவிட்டான். உடனே சகுனி ஒரு பெரிய கத்தியை எடுத்து, சகதேவன்மீது வீசினான். அந்தக் கத்தியை, சகதேவன் இரண்டு துண்டாக வெட்டினான். அதனால் ஆத்திரமுற்ற சகுனி ஒரு கதையை எடுத்து, சகதேவன்மீது வீசினான். குறி தவறி, பயனற்று அது கீழே விழுந்தது.

பிறகு சகதேவன் அவனை நோக்கி, "தீய புத்தியுள்ளவனே! உறுதியாக நின்று நீ, போர் செய். அரச தருமத்தைக் கைவிடாதே. பாய்ச்சிகைகளை உருட்டி, வெற்றியோடு கொக்கரித்துப் பேசிய நீ, இப்பொழுது அதன் பயனை அடையப் போகிறாய். முன்பு எங்களைப் பார்த்து எள்ளி

நகையாடின தீயவர்கள், போரில் மடிந்தார்கள். குலத்தைக் கெடுக்கப் பிறந்த துரியோதனனும், அவன் மாமனை நீயும் தான் எஞ்சி உயிருடன் இருக்கிறீர்கள். உன்னை நான் இப்பொழுது பாணத்தால் கொல்லப் போகிறேன்" என்று சொன்னான்.

தாமதியாது அவனைச் சகதேவன் எதிர்த்தான். சகுனியின் குடை, கொடி, வில் இவற்றை அழித்தான். குதிரைகளைக் கொன்று சகுனியை செயித்தான். அறுக்க முடியாத கொடிய அம்புகளைச் சகுனிமீது தொடுத்தான்.

சகுனி எதிர்த்ததையும் பொருட்படுத்தாது, துரிதமாக ஓர் அம்பை ஏவி, சகுனியின் தலையைச் சகதேவன் துண்டித்தான்; பிறகு அவனுடைய பருத்த இரு கைகளையும் சகதேவன் துண்டித்தான்.

குருதி ஒழுக, பயங்கரமான தோற்றத்துடன் சகுனியின் முண்டம் தரையில் கிடந்தது.

இதைக் கண்டதும் கௌரவர்கள் வாய் உலர்ந்து பயந்து ஓட்டம் பிடித்தார்கள். மற்றவர்கள் மகிழ்ச்சி அடைந்து சகதேவனைப் பாராட்டினார்கள். "வீரனே! வஞ்சகன் சகுனியையும் அவன் பிள்ளை உலூகனையும் நீ வதம் செய்தது பெரும் பாக்கியம்" என்று அவனைப் பாராட்டினார்கள்.

## யுயுத்சு

தனது சேனை முழுதும் நாசம் அடைந்திருப்பதைக் கண்ட துரியோதனன் கோபம் கொண்டான். எஞ்சியிருக்கிற நால்வகைப் படைகளையும் ஒன்று திரட்டினான். அவர்களை நோக்கி, "நண்பர்களுடனும் நேசர்களுடனும் சேர்ந்திருக்கிற பாண்டவர்களையும் பாஞ்சால ராஜகுமாரன் திட்டத்துய்மனையும் போரில் கொன்று திரும்புங்கள்" என்று சொன்னான்.

அதன்படி சிறிதளவு எஞ்சியிருந்த அந்தக் கௌரவ சேனையினர், பாண்டவர்களை எதிர்த்துச் சென்றார்கள். பாண்டவர்களும், பாம்பை நிகர்த்த பாணங்களை அவர்கள் மீது பொழிந்தார்கள். காப்பவன் இல்லாமல் அந்தச் சேனை முழுதும் ஒரு நொடியில் பாண்டவர்களின் பாணத்துக்கு இரையாயிற்று. பதினொரு அக்குரோணி

சேனையும் மீதமில்லாமல் அழிந்து நாசமானதைக் கண்ட துரியோதனன், உடல் முழுதும் காயமுற்று, தனித்து நின்றான்.

வாகனம் இன்றி, சேனையின்றி நின்ற துரியோதனன், பூதலம் முழுவதையும் சூனியமாகக் கண்டான். பாண்டவர்களின் வெற்றி முழக்கமும் நாண் ஒலியும் அவன் மனத்தில் ஒருவித பயக்க நிலையை உண்டுபண்ணின. ஆகவே, போர்க்களத்திலிருந்து அவன் ஓடத் தீர்மானித்தான்.

பாண்டவர்கள் படையில் இரண்டாயிரம் தேர்கள், எழுநூறு யானைகள், ஐயாயிரம் குதிரைகள், பதினாயிரம் காலாட்கள் இவர்கள் தாம் எஞ்சியிருந்தனர்.

பதினொரு அக்ஷௌஹிணி சேனைக்கு அரசனாக விளங்கிய துரியோதனன் யாவும் அழிந்து, தனியனாய் நின்றான். அவன் சென்ற குதிரையும் கொல்லப்பட்டதால், பயந்து அவன் கீழ்த் திசையை நோக்கி ஓடினான். கதாயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, காலால் நடந்து ஒரு மடுவை நோக்கிப் புறப்பட்டான்.

சிறிது தூரம் நடந்து சென்றதும், புத்திமானான விதுரர் முன்பு சொன்ன அறிவுரைகள் அவன் நினைவுக்கு வந்தன. மிகுந்த கவலையுடன் மடுவை நோக்கி அவன் சென்றான். கிருபர், கிருதவர்மா, அசுவத்தாமா, துரியோதனன் இந்த நால்வரும்தான் கௌரவ தரப்பில் எஞ்சியிருந்தனர்.

கௌரவர்களைச் சேர்ந்த சஞ்சயனைக் கொல்லும் எண்ணத்துடன், கூர்மையான ஒரு கத்தியை எடுத்துக்கொண்டு, சாத்யகி விரைந்தான். அப்போது ஞானியான வியாசர் சாத்யகியைத் தடுத்தார். "சஞ்சயனைக் கொல்லக் கூடாது; அவனை விட்டுவிடு" என்று சாத்யகியிடம் அவர் சொன்னார்.

வியாசருடைய சொல்லுக்குக் கட்டுப்பட்டு, சாத்யகி நடந்துகொண்டான். "சஞ்சயா! நீ பயமின்றிச் செல்" என்று சொல்லி, அவனை விட்டுவிட்டான்.

சஞ்சயன் கவசத்தைக் கழற்றி வைத்தான். ஆயுதமின்றி, காயங்கள் பட்ட உடம்போடு ரத்தம் ஒழுக, அத்தினபுரத்தை நோக்கி நடந்தான். வழியில் துரியோதனனை அவன் கண்டான். கையில் கதையை வைத்துக்கொண்டு துரியோதனன் தனியாக நின்றான். கண்ணீர் உகுத்தவாறே துரியோதனன் சஞ்சயனை நோக்கினான். அவனால் பேச முடியவில்லை.

ஆயிரம் இரத்தினங்கள் இழைத்த மணிமுடி அணிந்த துரியோதன மன்னன், இந்த அவல நிலையில் நின்றான்.

எவன் அரசர்களிடமிருந்து கப்பம் பெற்று, அவனி முழுவதையும் ஆண்டானோ, எவனுக்கு உதவி செய்து ஆக்கத்தையும் ஊக்கத்தையும் செல்வத்தையும் கர்ணன் தேடிக் கொடுத்தானோ, எவன் குபேரனையும் மதிக்காமல் அத்தினாபுரத்திலிருந்து உலக முழுவதையும் ஆண்டானோ, எவன் நடந்து செல்லும்பொழுது வழி முழுதும் பொன்னால் அமைக்கப்பட்டு இருந்ததோ, எவன் ஐராவதத்துக்கு ஒப்பான யானைமீது பவனி செல்வானோ, அத்தகைய பீடும் பெருமையும் பெற்ற துரியோதன மன்னன், அங்கமெல்லாம் காயமுற்று, தனித்து, பரிதாப நிலையில் நிற்பதைச் சஞ்சயன் கண்டான்.

நடந்த அனைத்தையும் துரியோதனனுக்குச் சஞ்சயன் சொன்னான். அதைச் செவிமடுத்த துரியோதனன், "சஞ்சயா! உன்னைத் தவிர்த்து, எனக்கு வேண்டியவர்கள் யாரும் இப்பொழுது உயிருடன் இல்லை. பாண்டவர்கள் துணை வலியுடன் இருக்கிறார்கள். அறிவே கண்ணாக உடைய என் தந்தை திருதராட்டிரரிடம் சென்று, 'உம் மைந்தன் துரியோதனன் மடுவில் புகுந்துவிட்டான்' என்று சொல். காயமுற்று இந்த மடுவில் நான் மறைந்திருப்பதை என் தந்தையிடம் தெரிவி" என்று சொல்லிவிட்டு, தண்ணீர் நிறையவிருக்கும் மடுவுக்குள் துரியோதனன் புகுந்துகொண்டான். மூச்சை அடக்கி, மடுவுக்குள் உயிருடன் துரியோதனன் ஒளிந்துகொண்டிருந்தான்.

துரியோதனன் மடுவுக்குள் புகுந்துகொண்டதும் சஞ்சயன் அங்கிருந்து புறப்பட்டான். வழியில் கிருபர், கிருதவர்மா, அசுவத்தாமா ஆகிய மூவரும் காயமுற்று களைப்புற்று, ஓர் இடத்தில் ஒருங்குசேர்ந்து இருப்பதைச் சஞ்சயன் கண்டான்.

அவர்கள் மூவரும் சஞ்சயனைக் கண்டதும் அருகில் வந்தார்கள். "சஞ்சயா! நீ சௌக்கியமா? அரசன் துரியோதனன் உயிருடன் இருக்கிறானா?" என்று கேட்டார்கள்.

"ஆம், சௌக்கியமாக இருக்கிறார்" என்று தெரிவித்து, துரியோதனன் சொன்னவற்றை அவர்களிடம் சஞ்சயன் சொன்னான்; துரியோதனன் ஒளிந்திருக்கிற மடு எங்கே இருக்கிறது என்ற விவரத்தையும் தெரிவித்தான்.

சஞ்சயன் சொன்ன பதிலைக் கேட்டு, அசுவத்தாமா கண் கலங்கி வருந்தினார். "அந்தோ! அந்தோ! நாங்கள் உயிருடன் இருப்பதை அறியாத காரணத்தால், துரியோதனன் மடுவில் இறங்கிவிட்டான். நாம் அனைவரும் ஒருங்கு சேர்ந்து போர் செய்தால் பகைவர்களை வெல்வது திண்ணமாயிற்றே!" என்று சொல்லிப் புலம்பினார்.

பிறகு பாண்டவர்களைக் கண்டதும் போர்க்களத்தை விட்டு, மூவரும் ஓட்டம் பிடித்தார்கள். கிருபருடைய தேரில் சஞ்சயனையும் ஏற்றிக்கொண்டு, சூரியன் அஸ்தமிக்கும் சமயத்தில, கௌரவ சேனை இருக்கும் பாசறையை அடைந்தார்கள்.

கௌரவர்கள் அனைவரும் அழிந்து போன விவரம் தெரிந்து, அரசகுலப் பெண்டிர் அனைவரும கதறிக் கதறி அழுதார்கள். அவர்களுக்குப் பாதுகாவலாய் இருந்த முதியவர்கள் அந்தப் பெண்மணிகளை அழைத்துக்கொண்டு அத்தினபுரத்துக்குப் புறப்பட்டார்கள்.

மந்திரி முதலானவர்களும் துக்கம் தாளாது பொருமினார்கள்; அவர்களால் பேச முடியவில்லை. கண்களில் நீர் மல்க, அரசகுலப் பெண்டிரை அழைத்துக்கொண்டு அத்தினபுரம் சென்றார்கள்.

எங்கே பார்த்தாலும் ஒரே பயம் நிலவியது. எஞ்சி இருந்தவர்கள் எப்படித் தப்புவது என்ற அவல நிலையில கிடந்து தவித்தார்கள்.

இது சமயம் கவலையும் கிலியும் யுயுத்சுவைப் பற்றிக் கொண்டன. இவன் வணிகப் பெண்ணுக்கு, திருதராட்டிரன் மூலம் பிறந்தவன். போரின் முடிவை அறிந்ததும் அவன் பெரிதும் பயந்துபோனான். "பதினொரு அக்குரோணி சேனைக்கு அதிபதியாக இருந்த துரியோதன மன்னனைப் பாண்டவர்கள் வென்றுவிட்டார்கள்; அவனுடைய தம்பியரும் மாண்டு போனார்கள். துரோணரும் பீஷ்மரும் தோல்வியுற்றார்கள்; நான் ஒருவன் மட்டும்தான் தப்பி உயிர்பிழைத்து இருக்கிறேன். பயமும் கிலியும் அதிகரித்துவிட்டன; மந்திரிமார்கள் அரச பத்தினிகளை அழைத்துக்கொண்டு, அத்தினபுரம் செல்லுகிறார்கள். யுதிட்டிரரிடமும் வாசுதேவரிடமும் அனுமதி பெற்றுக்கொண்டு, நானும் அத்தினபுரம் திரும்புவதுதான் உசிதம்" என்று கருதினன்.

பிறகு யுதிட்டிரரிடம் சென்று யுயுத்சு அனுமதி கேட்டான். யுதிட்டிரர் கட்டித் தழுவிக்கொண்டு, அவனுக்கு அனுமதி கொடுத்தார்.

யுயுத்சு தேரில் ஏறிக்கொண்டு புறப்பட்டான். அரச குலப் பெண்டிரையும் அழைத்துக்கொண்டு, பொழுது சாயும் தருணத்தில் அத்தினபுரத்தை அடைந்தான். அவனுடைய கண்கள் நீரால் நிறைந்து இருந்தன. குரல் தடுமாறியது.

கவலையோடும் கண்ணீரோடும் வருகிற விதுரரை யுயுத்சு வழியில் கண்டான். உடனே சென்று அவரை வணங்கினான் யுயுத்சு.

அவர் யுயுத்சுவை நோக்கி, "மைந்தா! பாக்கிய வசத்தால் நீ உயிருடன் இருக்கிறாய்? அரசன் துரியோதனனுடன் சேர்ந்து வராமல் நீ மட்டும் வந்திருக்கிறாயே ஏன்?" என்று கேட்டார்.

நடந்த விவரம் அனைத்தையும் விதுரருக்கு யுயுத்சு சொன்னான்.

அவனுடைய நடத்தை குறித்து விதுரர் அவனைப் பெரிதும் பாராட்டினார். "கௌரவர்கள் அனைவரும் இந்தப் போரில் அழிக்கப்பட்டார்கள். கண்ணில்லாத திருதராட்டிர மன்னருக்கு நீ ஒருவன்தான் இப்பொழுது ஊன்றுகோலாய் இருக்கிறாய். நீ சென்று இன்று ஓய்வு எடுத்துக்கொள்; நாளை நீ யுதிட்டிரனிடம் போகலாம்" என்று சொன்னார்.

இவ்வாறு சொல்லிவிட்டு, கண்களில் நீர் மல்கி நிற்க, அவனிடம் விடை பெற்றுக்கொண்டு, அரசனுடைய அரண்மனையில் விதுரர் பிரவேசித்தார். அழுகை ஒலியும் துக்கமும் நிறைந்து சோபை இழந்து நிற்கும் நகரத்தைப் பார்த்து, மேலும் அதிக துக்கத்தை விதுரர் அடைந்தார், பெருமூச்சு விட்டு வருந்தினார்.

யுயுத்சு தன் இல்லம் திரும்பினான். அவன் திரும்பி வந்ததை அறிந்த அவன் உறவினர்கள் அவனைப் பெரிதும் கொண்டாடினார்கள்; ஆனால் யுயுத்சுவோ பரத வம்சத்துக்கு நேர்ந்த பெருத்த அழிவை நினைந்து நினைந்து, கவலையுடன் இருந்தான்.

## மடுவினுள்ளே ஒளிந்தான்

அரசகுலப் பெண்டிர் அத்தினபுரம் திரும்பியதும் கிருபர், கிருதவர்மா, அசுவத்தாமா ஆகிய மூவரும் துரியோதனன் மறைந்திருக்கும் மடுவை நோக்கிச் சென்றார்கள்.

துரியோதனன் அந்த மடுவினுள் தூங்கிக்கொண்டிருப்பதைக் கண்டு, "அரசனே! எழுந்து வெளியே வா. எங்களுடனே சேர்ந்து யுதிட்டிரனை எதிர்த்துப் போர் செய். வெற்றி பெற்று உலகத்தை ஆட்சி செய்; அல்லது வீர மரணம் அடைந்து சொர்க்கம் செல். நாம் எதிர்த்தால் பாண்டவர்களால் தாக்குப்பிடிக்க முடியாது" என்று சொல்லி அழைத்தார்கள்.

'ஆண்மையில் சிறந்த நீங்கள் உயிருடன் இருப்பது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். நாம் இளைப்பாறி, களைப்பு நீங்கி, பகைவர்களை எதிர்த்துச் செல்வோம். நீங்களும் களைப்படைந்து காணப்படுகிறீர்கள். அதிகமாகக் காயமுற்றும் இருக்கிறீர்கள். பாண்டவர்களின் கை இப்போது மேலோங்கி இருக்கிறது. இதுசமயம் அவர்களை எதிர்ப்பது சரியன்று. இன்று இரவு இளைப்பாறி, நாளை அவர்களுடன் போர்புரியலாம்" என்று துரியோதனன் பதில் சொன்னான்.

அதற்கு அசுவத்தாமர், "வேந்தனே! எழுந்து வா. நாம் பகைவர்களை வெல்வோம். பொழுது புலர்வதற்குள் பகைவர்களை நான் அவசியம் கொல்வேன். பாஞ்சாலர்களையும் சோமகர்களையும் கொல்லாமல் நான் கவசத்தைக் கழற்றப் போவது இல்லை. இது உறுதி" என்று சொன்னார்.

இது சமயம் இறைச்சிச் சுமையால் களைப்புற்ற வேடர்கள் சிலர், தண்ணீர் அருந்தும்பொருட்டு, தற்செயலாக அந்த மடுவுக்கு வந்தார்கள். நாள்தோறும் கூடைகள் நிறைய மாமிசம் எடுத்துச் சென்று பீமனுக்குக் கொடுக்கும் வாடிக்கைக்காரர்கள் இவர்கள். மறைவாக ஓர் இடத்தில் மடு அருகே இருந்த இந்த வேடர்கள் காதில், அசுவத்தாமாவும் துரியோதனனும் பேசிக்கொண்டது, விழுந்தது. துரியோதனனை மற்றவர்கள் கட்டாயப்படுத்துவதையும் மடுவில் துரியோதனன் ஒளிந்துகொண்டிருப்பதையும் வேடர்கள் தெரிந்துகொண்டார்கள். துரியோதனனைப் பாண்டவர்கள் தேடிக்கொண்டிருப்பதை இந்த வேடர்கள் முன்பே அறிவர் ஆகையால் அவர்கள், "துரியோதனன் ஒளிந்து இருக்கும் இடத்தைத் தெரிவித்தால், பீமனும் யுதிட்டிரரும் நமக்கு நிறையப் பொருள் தருவார்கள்" என்று ஒருவரோடு ஒருவர் மெதுவாகப் பேசிக்கொண்டார்கள்.

துரியோதனன் ஓடிவிட்டதை அறிந்த பாண்டவர்கள் சாரர்களை எங்கும் அனுப்பி, துரியோதனனைத் தேடச் செய்தார்கள். சென்றவர்கள் திரும்பி வந்து, "துரியோதனன்

எங்கோ ஒளிந்துகொண்டிருக்கிறான். இருக்கும் இடம் தெரியவில்லை" என்று தெரிவித்தார்கள்.

இதைக் கேட்ட யுதிட்டிரர், "பகைவர்களில் ஒருவன் பதுங்கியிருந்தால், கிடைத்திருக்கும் வெற்றியை ஒரு வெற்றியாகக் கொள்ள முடியாது" என்று சொல்லி, பெருமூச்சு விட்டார்.

இந்தக் கவலையில் பாண்டவர்கள் மூழ்கியிருந்த சமயத்தில், மடுவின் கரையிலிருந்த வேடர்கள், பாண்டவர்களின் பாசறைக்கு வந்தார்கள். வந்து, பீமசேனனிடம் தாங்கள் மடுக்கரையில் கேட்டவற்றைத் தெரிவித்தார்கள்.

மகிழ்ச்சி அடைந்த பீமன், வேடர்களுக்கு நிறைய வெகுமதி கொடுத்தான்.

பிறகு யுதிட்டிரரிடம் சென்று, "அரசே! துரியோதனன் மடுவினுள் ஒளிந்திருப்பதாக வேடர்கள் சொல்லுகிறார்கள்" என்று தெரிவித்தான்.

விவரம் தெரிய வந்ததும் பாண்டவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார்கள். "பாவி துரியோதனன் ஒளிந்திருக்கும் இடம் தெரிந்துவிட்டது" என்று உரக்க நாற்புறங்களிலும் கேட்கும்படி கூவினார்கள் சோமகர்கள்.

கிருஷ்ணன், யுதிட்டிரர், பீமன், அர்ச்சுனன் முதலியவர்கள் துரியோதனன் ஒளிந்து இருக்கும் மடுவை நாடி, தேர்களில் சென்றார்கள். கலகல என்ற சத்தமும் மகிழ்ச்சி ஆரவாரமும் எங்கும் வியாபித்தன.

துரியோதனன் ஒளிந்து தூங்கிக்கொண்டிருக்கும் மடுவை அடைந்தார்கள். துவைபாயனம் என்னும் அந்த மடு சமுத்திரம்போல் பெரிதாய இருந்தது; நீர் பரிசுத்தமாய் இருந்தது. யாருக்கும் தெரியாதபடி அந்த மடுவுக்குள் படுத்திருந்த துரியோதனன் காதில், தேர்கள் வரும் ஒலி இடி முழக்கம்போல் கேட்டது. தேரின் ஒலியும் சங்கங்களின் ஒலியும் பூமியை நடுங்கச் செய்தன; எங்கே பார்த்தாலும் ஒரே புழுதி மயம். இதைக் கிருதவர்மா, கிருபர், அசுவத்தாமா ஆகிய மூவரும் கவனித்துவிட்டார்கள். "வெற்றியினால் பூரித்துப்போயிருக்கிற பாண்டவர்கள் பெருமுழக்கம் செய்துகொண்டு இதோ வருகிறார்கள். நாங்கள் இந்த இடத்தைவிட்டு அப்பால் போகிறோம். எங்களுக்கு விடை கொடும்" என்று துரியோதனனிடம் சொன்னார்கள்.

"அவ்வாறே செய்யுங்கள்" என்று சொல்லிவிட்டு, துரியோதனன் மீண்டும் மடுவுக்குள் சென்று, படுத்துக் கொண்டான்.

கிருபர், கிருதவர்மா, அசுவத்தாமா ஆகியோர் வருந்திய மனத்துடன் அங்கிருந்து புறப்பட்டார்கள். களைப்புற்று இருந்த அவர்கள் நெடுந் தூரம் சென்று ஓர் ஆல மரத்தை அடைந்தார்கள். மிகுந்த கவலையுடன அதன் நிழலில் உட்கார்ந்தார்கள். "போர் எப்படி நடக்குமோ? அரசன் துரியோதனன் என்ன ஆவானோ? பாண்டவர்கள் அவனைக் கண்டுபிடிப்பார்களோ என்னவோ?" என்ற கவலையுடன் தேரிலிருந்து இறங்கி, ஆலமர நிழலில் அமர்ந்தார்கள்.

குதிரைகளைத் தேரிலிருந்து அவிழ்த்து விட்டுவிட்டு, கிருபரும் ஆலமரத்தடியில் அமர்ந்தார்.

## போர் செய்ய வருக

பாண்டவர்கள் துரியோதனன் ஒளிந்துகொண்டிருக்கும் துவைபாயன மடுவை அடைந்தனர். மூச்சை அடக்கி நீருக்குள் துரியோதனன் இருப்பதை அறிந்த யுதிட்டிரர், கிருஷ்ணனிடம் 'மாதவரே! நீரில் இறங்கி, துரியோதனன் செய்திருக்கும் மாயைப் பாரும். இந்திரனே முன்வந்து உதவி செய்யினும் இவனை நாங்கள் கொல்லாமல் விடப் போவது இல்லை" என்று கூறினார்.

"பாரதரே! துரியோதனன் செய்துள்ள மாயையை அகற்றும். மாயையில் வல்லவனை மாயையாலே எதிர்த்துக் கொல்ல வேண்டும். மாயையால்தான் பலிச்சக்கரவர்த்தியை பகவான் விஷ்ணு கட்டுப்படுத்தி அடக்கினார். இரண்ய கசிபு இரண்யாட்சன இருவரையும் மாயையாலே வதம் செய்தார். ஆகவே துரியோதனனை வதம் செய்ய நீர் மாயையைப் பயன் படுத்தும். அசுரர், அரக்கர், தானவர், தைத்யர் முதலிய வர்களை முன்பு மாயையால்தான் வென்றிருக்கிறீர்கள்" என்று வாசுதேவர் சொன்னார்.

உடனே, தருமநந்தர் மடுவுக்குள் ஒளிந்திருக்கும் துரியோதனனைக் கூவி அழைத்தார்.

"துரியோதனா! அரசர்கள் அனைவரையும் அழித்துவிட்டு, நீ ஏன் மடுவுக்குள் ஒளிந்துகொண்டிருக்கிறாய்? உயிரைக்

காப்பாற்றிக்கொள்ளும் ஆசையினாலோ நீருக்குள் ஒளிந்திருக்கிறாய்? வெளியே வந்து எங்களுடன் போர் செய். சிறந்த ஆண்மகனான நீ பயந்து நீரில் ஒளிந்திருப்பது முறையா? உனது அகந்தையும் கௌரவமும் எங்கே போயின? வீரத்தையும் பெருமையையும் மறந்து நீ ஒளிந்து இருப்பது உனது குலத்துக்கே இழுக்கு அல்லவா? உன் பொருட்டாய் உறவினர்கள் பலர் உயிர் துறந்தார்கள். நீயோ மடுவில் புகுந்து மறைந்திருக்கிறாய். இது வீரனுக்கு அழகா? பயத்தை விட்டுவந்து எங்களுடன் போர் செய். உனது ஆண்மை, மானம், ஊக்கம், அஸ்திரப் பயிற்சி அனைத்தும் எங்கே போயின? எங்களைத் தோற்கச் செய்து இந்தப் பூமண்டலத்தை ஆள்; அல்லது எங்கள் வாளுக்கு இரையாகிப் பூமியில் படுத்து உறங்கு" என்று சொன்னார்.

யுதிட்டிரர் சொன்ன நிந்தனைச் சொற்களைச் செவிமடுத்த துரியோதனன் மடுவிலிருந்தபடியே, "மன்னனே! உயிர்களுக்குப் பயம் ஏற்படுவது இயல்பு. ஆயினும் நான் பயந்து போர்க்களத்தைவிட்டு ஓடிவரவில்லை. ஆயுதம் இழந்து, தேர்ப்பாகன் இழந்து, சேனை இழந்து, தனித்து நின்றதனால் இளைப்பாறுவதற்கு வந்தேன். உயிர்மீதுள்ள ஆசையினாலோ அல்லது பயத்தினாலோ நான் நீரில் மறைந்து இருக்கவில்லை குந்தி மைந்தனே! நீயும் உன்னைச் சார்ந்தவர்களும் இளைப்பாறுங்கள் நானும் இளைப்பாறிவிட்டு உங்களுடன் வந்து போர்புரிகிறேன்" என்று பதில் சொன்னான்.

அதற்கு யுதிட்டிரர், ‘துரியோதனா’ நாங்கள் இளைப்பாறி விட்டுத்தான் வந்திருக்கிறோம். நெடுநேரமாக நாங்கள் உன்னைத் தேடுகிறோம் நீ வெளிப்போந்து எங்களுடன் போர் செய்" என்று சொன்னார்.

“அரசே! யாருக்காக ராஜ்யத்தை விரும்பினேனோ, அவர்கள் போரில் இறந்துவிட்டார்கள் செல்வம் அழிந்த, அரசர் குலம் அழிந்த பூமியை, கைம்பெண்ணை விரும்பாத ஆண் மகன்போல, நானும் விரும்பவில்லை அனுபவிப்பதற்கு எனக்கு ஆசையும் இல்லை. யுதிட்டிரா! உன்னை வெல்வதையே நான் பெரிதும் விரும்புகிறேன் பீஷ்மரும் துரோணரும் கர்ணனும் இல்லாத இந்த உலகம் எனக்கு வெறும் சூனியமாகத் தோன்றுகிறது. அந்தச் சூனியத்தை நீ ஆண்டு அனுபவி. துணையில்லாத ஒருவனால் நாட்டை ஆளமுடியுமா? ஆளத்தான் விருப்பம் உண்டாகுமா? தந்தை, தம்பி, தோழன், பிள்ளை இவர்களை இழந்தும் ராஜ்யத்தை இழந்தும்

இருக்கிற நான் உயிருடன் இருக்கப் பிரியப்படவில்லை. மான் தோலை உடுத்துக்கொண்டு நான் காடு செல்கிறேன். செல்வச் செழிப்பும் இதர நலன்களும் குன்றிப்போன இந்த உலகத்தை நீயே ஆண்டு அனுபவி" என்று பதில் சொன்னான் துரியோதனன்.

"அரசனே! நீரினுள் இருந்து நீ குருவிபோல் புலம்புவதால் யாது பயன்? உன்னிடம் தானமாகப் பெற்று இந்தப் பூமியை ஆள நான் பிரியப்படவில்லை. அதரும வழியில் பெற்றுக் கொள்ளவும் ஆசைப்படவில்லை. போரில் உன்னை வென்று இந்தப் பூதலத்தை நான் அடையப் போகிறேன். கொடுப்பதற்கு உன்னிடம் இப்போது பூமி ஏது? முன்பு இந்தப் பூமியை நீ கொடுக்க மறுத்தாயே ஏன்? கண்ணன் தூது வந்து பூமியைக் கேட்டபோது, அவரை அவமதித்த நீ இப்பொழுது ஏன் பூமியைக் கொடுப்பதாகச் சொல்கிறாய்? மதி மயக்கமுற்று இப்பொழுது நீ பிதற்றுகிறாயா? பூமியை மனமுவந்து கொடுப்பதற்கோ அல்லது பலாத்காரமாகப் பிடுங்கிக்கொள்வதற்கோ உனக்கு உரிமை ஏது? போரில் வென்று இந்தப் பூமியை ஆட்சிசெய். ஊசிமுனை அளவு நிலத்தைக் கூட எனக்குக் கொடுக்க முன்பு நீ சம்மதிக்கவில்லை. பிடிவாதம் செய்த நீ இப்பொழுது ஏன் இணங்கி மனமுவந்து கொடுக்க முன்வருகிறாய்? பாவி! எழுந்து வந்து போர் செய். உன்னை உயிருடன் விட்டுவைப்பதே பெரும் பாவம்" என்று பதில் சொன்னார் யுதிட்டிரர்.

## பீமனும் துரியோதனனும்

யுதிட்டிரர் இப்படி வெருட்டிச் சொன்ன கடுமையான சொற்களைக் கேட்டு, துரியோதனன் வெம்பினான்; பெருமூச்சு விட்டான், நீரினுள் இருந்தபடியே இரு கைகளையும் உதறிக் கொண்டான். அவன் யுதிட்டிரரிடம் 'பார்த்தர்களே! நீங்கள் வாகன வசதியுடனும் துணை வலியுடனும் இருக்கிறீர்கள். நான் ஒண்டியாக இருக்கிறேன். களைப்புற்றும் தேர் இழந்தும் இருக்கும் நான் ஆயுதபாணிகளான உங்களுடன் எப்படிப் போர்புரிய முடியும்? பலர் ஒருங்குகூடி, களைத்திருக்கும் ஒருவனை எதிர்ப்பது முறையன்று. தனித் தனி வந்தால் நான் போர்செய்யத் தயாராக இருக்கிறேன். யாருக்கும் நான் அஞ்சவில்லை" என்று பதில் சொன்னான் துரியோதனன்.

தான் போர்செய்யத் தயார் என்று துரியோதனன் கூறியதும் யுதிஷ்டிரர், "புயவலிமிக்கவனே! போர்செய்யத் தயார்" என்று நீ கூறுவது பெருமைக்குரிய விஷயம். துணையில்லாதவனாய் இருந்தும் எங்கள் அனைவரையும் எதிர்க்க நீ பிரியப்படுகிறாய். ஓர் ஆயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, எங்களில் யாராவது ஒருவருடன் நீ போர்புரிவது எங்களுக்குச் சம்மதம். எங்களில் ஒருவனைக் கொன்று நீ அரசனாகிவிடு அல்லது வீர மரணம் எய்து" என்று பதில் சொன்னார் யுதிஷ்டிரர்.

"கதாயுதப் போரில் எனக்குப் பிரியம் அதிகம். உங்களில் எனக்குச் சமதை என்று கருதுகிறவன் ஒருவன், தனித்து வந்து, கதாயுதத்தைக் கொண்டு என்னை எதிர்த்துப் போர் புரியட்டும். ஆயுதத்தை மாற்றிப் போர்புரிவதை அறிஞர்கள் விரும்புவார்கள். இன்று கதாயுதப்போர் நடக்கட்டும். இன்று உன்னையும் உன் தம்பிமார்களையும் துணைவர்களையும் நான் போரில் வெல்லப் போகிறேன். இந்திரன் எதிர்த்து வந்தாலும் நான் கலங்க மாட்டேன்" என்று பதில் சொன்னான் துரியோதனன்.

"காந்தாரி மைந்தா! எழுந்து வந்து நீ என்னுடன் கதாயுதப் போர்செய். இந்திரனே உனக்கு உதவியாக வந்தாலும் இன்று நீ உயிருடன் திரும்ப மாட்டாய்" என்று யுதிஷ்டிரர் சொன்னார்.

கோபமுள்ள பாம்பு பொறுக்காததுபோல, இந்தச் சொற்களைத் துரியோதனனால் பொறுக்கவில்லை. நீரைக் கலக்கிக்கொண்டும் கதையைக் கையில் பிடித்துக்கொண்டும் மடுவிலிருந்து வெளிப்பட்டான். சூலத்தைக் கையில் பிடித்த ருத்திரர்போல அவன் காட்சி அளித்தான்.

துரியோதனனைக் கண்டதும் பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் மகிழ்ச்சி அடைந்தார்கள். ஒருவர் கையை ஒருவர் குலுக்கி, தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்திக்கொண்டார்கள்.

இந்தப் பரிகாசத்தைப் பொறுக்க முடியாமல் துரியோதனன் கண்களைப் புரட்டி விழித்தான். பாண்டவர்களை எரித்துவிட விரும்புபவன்போல நோக்கினான்; உதட்டைக் கடித்துக்கொண்டான். கண்ணனுடன் சேர்ந்து இருந்த அவர்களை நோக்கி, "பாண்டவர்களே! இந்தப் பரிகாசத்தின் முழுப் பலனையும் இப்பொழுது நீங்கள் அனுபவிக்கப் போகிறீர்கள்.

பாஞ்சாலர்களும் நீங்களும் யமன் உலகை அடையப் போகிறீர்கள்' என்று சொன்னான்.

கதையைக் கையில் பிடித்து நின்ற துரியோதனன் உடல் முழுதும் இரத்த மயமாக இருந்தது. அருவி பொங்கி வழியும் மலைபோல அவன் காட்சி அளித்தான். கோபத்துடன் இருக்கிற துரியோதனனை யமனே வந்துவிட்டதாகவே பாண்டவர்கள் கருதினார்கள். இடிபோல் முழங்கிக்கொண்டு பாண்டவர்களை அவன் போருக்கு அழைத்தான். "யுதிட்டிரா! ஒவ்வொருவராக நீங்கள் என்னை எதிர்த்து வாருங்கள். பலர் சேர்ந்து ஒருவனை எதிர்ப்பது நியாயமன்று; கவசம் இழந்து, தேர் இழந்து, துணைவர்கள் இழந்து, படுகாயமுற்று, களைப்படைந்து ஒண்டியாக இருப்பவன் நான்" என்று சொன்னான் துரியோதனன்.

அதற்கு யுதிட்டிரர், "துரியோதனா! அபிமன்யுவை நீங்கள் வதம்செய்த காலத்தில் இந்த நியாய புத்தி அப்பொழுது ஏன் உனக்குத் தோன்றவில்லை? ஆபத்துக் காலத்தில் அறம் பேசுவதால் யாது பயன்? வீரனே! கவசத்தை எடுத்து அணிந்துகொள்; குந்தலை முடிந்துகொள். எந்த ஆயுதம் வேண்டுமோ அதைக் கையில் எடுத்துக்கொள். எங்கள் ஐவரில் எவனுடன் நீ போர்புரிய விரும்புகிறாயோ, அவனை வென்று நீ அரசை ஆளலாம். அல்லது உயிர் துறந்து சொர்க்கத்தை அடையலாம்" என்று சொன்னார்.

உடனே துரியோதனன் பொன்னாலான கவசத்தை எடுத்துப் பூட்டிக்கொண்டான்; அழகிய தலைப்பாகையைத் தரித்துக்கொண்டான். இதனால் மேரு மலைபோல் தோன்றிய துரியோதனன் கதையைக் கையில் பிடித்துக்கொண்டு பாண்டவர்களை நோக்கினான். "உங்களில் யார் வேண்டுமானாலும் கதாயுதப் போருக்கு வரலாம். எனக்கு நிகராகக் கதாயுதப் போர் தொடுப்பவன் இந்த அவனியில் இல்லை. உங்கள் அனைவரையும் இந்தப் போரில் நான் கொல்வேன். அடக்கமில்லாத அகந்தைச் சொல்லை நான் சொல்லலாகாது. ஆயினும் உண்மை நிலை இன்னும் சிறிது நேரத்தில் தெரிந்துவிடப் போகிறது. என்னுடன் போர்செய்ய விரும்புபவன் கதையைக் கையில் எடுத்துக்கொண்டு போர்செய்ய முன் வரட்டும்" என்று கூவினான் துரியோதனன்.

இவ்வாறு பல முறை துரியோதனன் முழங்கியதும் வாசுதேவர் யுதிட்டிரர்மீது கோபங்கொண்டார். "அரசரே! உம்மையாவது, அர்ச்சுனனையாவது, நகுலனையாவது, சக-

தேவனையாவது துரியோதனன் போருக்கு அழைத்தால் என்ன செய்வது! 'ஒருவனைக் கொன்றாலும் ஆட்சியை ஏற்கலாம்' என்று ஆராய்ந்து பாராமல் சொல்லிவிட்டீரே. அது மட்டு மன்று பீமனைக் கொல்ல வேண்டும் என்ற ஆசையுடன் பதின் மூன்று ஆண்டுகள் இரும்புப் பதுமையை வைத்து, துரியோ தனன் பழகி இருக்கிறான். ஆகையால் துரியோதனனை வெல் வது எளிதன்று. பீமனாலும் துரியோதனனைத் தாக்குப் பிடிக்க முடியுமா என்பது சந்தேகம். பீமன் பலசாலி; துரியோதனன் பயிற்சியில் வல்லவன். பலசாலியைப் பயிற்சியுள்ளவன் எளி தில் வெல்ல வாய்ப்புண்டு. மீண்டும் நாட்டைப் பகைவனுக் குச் சூதாடிக் காட்டி, மீண்டும் காட்டுக்குப் போகிறீரோ?' என்று கடிந்து சொன்னார்.

கண்ணனின் இந்தக் கூற்றைச் செவிமடுத்த பீமசேனன், "மதுசூதனரே! நீர் கவலைப்பட வேண்டாம். நான் துரியோ தனனை அவசியம் கொல்வேன். நீர் சந்தேகப்பட வேண்டாம். துரியோதனனுடைய கதையைக் காட்டிலும் என் கதை ஒன்றரை மடங்கு பெரிது. ஆகையால் வெற்றி நமக்கே" என்று சொன்னான்.

வீர வார்த்தை கூறிய விருகோதரனை வாசுதேவர் பெரிதும் பாராட்டினார். "வீரனே! உன்னை அண்டியுள்ள யுதிஷ் டிரர் நாட்டை அடைவார் என்பதில் சந்தேகம் இல்லை. திருத ராட்டிரன் புதல்வர்களை நீ போரில் கொன்றாய். துரியோ தனனையும் கொன்று, கடல் சூழ்ந்த பூமியை இந்நாளில் இந் திரனுக்குக் கொடுத்தது போல யுதிஷ்டிரருக்கு நீ கொடுப்பாய். இதில் சந்தேகம் இல்லை. நீ துரியோதனனுடைய இரு தொடைகளையும் முறித்து, உன் சபதத்தை நீ நிறைவேற்றிக் கொள். திறமையோடு நீ துரியோதனனை எதிர்க்க வேண் டும்" என்று பீமசேனனை உற்சாகப்படுத்தினார்.

பீமசேனன் சொன்ன வீர வார்த்தைகளைச் செவிமடுத்த சாத்யகி முதலானவர்களும் பாஞ்சாலர்களும் அவனைப் பெரி தும் பாராட்டினர்.

பீமசேனன் யுதிஷ்டிரரிடம், "அரசே! துரியோதனனை எதிர்க்கப் போதிய ஆற்றலும் திறமையும் எனக்கு உண்டு. இழிந்த துரியோதனனுக்கு என்னை வெல்லும் ஆற்றல் கிடை யாது. இவ்வளவு காலமும் அடக்கி வைத்திருந்த கோபம் என்னிடமிருந்து வெளிப்பட்டால் அவன் அழிந்துபோவான். உயிர், செல்வம், நாடு ஆகிய மூன்றையும் துரியோதனன் இழக்கப் போகிறான். என்றால் அவன் மாண்டதைக் கேட்டு,

திருதராட்டிர மன்னனும் அதிர்ச்சி அடையப் போகிறான்" என்று சொன்னான்.

பிறகு கதாயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, துரியோதனனைப் போருக்கு அழைத்தான் பீமன். பரபரப்போ கலக்கமோ கொள்ளாமல் துரியோதனன் கதையைக் கையில் எடுத்துக்கொண்டு தைரியமாக நின்றான். சிம்மத்தைப்போல நின்ற அவனைக் கண்டு பாண்டவர்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள்.

"துரியோதனா! நீ செய்த பாவங்களுக்கு உரிய பலன்களை இப்பொழுது நீ அனுபவிக்கப் போகிறாய். உன் நிமித்தம் போர்செய்து பாட்டனார் பீஷ்மர் அம்புப் படுக்கையில் படுத்து இருக்கிறார். துரோணர், சகுனி, கர்ணன், சல்லியன், உன் தம்பியர்கள் அனைவரும் போரில் மாண்டார்கள். திரௌபதிக்குத் துன்பம் விளைவித்த பிராதிகாமியும் கொலைப் பட்டான். குலத்தைக் கெடுக்கப் பிறந்த கீழோனான நீ ஒருவன்தானே இன்னும் எஞ்சி இருக்கிறாய். உன்னையும் இப்பொழுது நான் கதையால் கொல்லப்போகிறேன். உனது அகந்தையும் ஆசையும் அழியப்போகின்றன" என்று சொன்னான்.

அதற்குத் துரியோதனன், "விருகோதரா! நீ ஏன் வீணே தற்புகழ்ச்சி செய்துகொள்கிறாய்? வந்து என்னுடன் போர் செய். போர்செய்ய நான் தயாராக இருப்பது உனக்குத் தெரியவில்லையா? வீண் முழக்கம் செய்யாது உன் கைவரிசையைக் காட்டு" என்று சொன்னான்.

துரியோதனன் சொன்னதை அங்கு நின்றவர்கள் பெரிதும் புகழ்ந்தார்கள்.

போர் தொடங்கியது; மற்றப் பாண்டவர்கள் ஓர் இடத்தில் உட்கார்ந்து பீமனுக்கும் துரியோதனனுக்கும் இடையில் நடக்கும் கதாயுதப் போரைக் கவனித்தார்கள்.

இது சமயம் கலப்பையை ஆயுதமாகவுடைய பலராமர் அங்கு வந்து சேர்ந்தார். துரியோதனனும் பீமனும் இவரிடம் கதாயுதப் பயிற்சி பெற்றவர்கள். தன் சீடர்கள் இருவரும் கதாயுதப் போர் செய்யப்போவதை அறிந்து, அதைக் காணும் பொருட்டு, அவர் வந்திருந்தார்.

அவரை யுதிட்டிரரும் கண்ணனும் வரவேற்று உபசரித்தார்கள். அவர் அங்கு யுதிட்டிரர் முதலானவர்களிடம், "நான் தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்டு இன்றோடு

நாற்பத்து இரண்டு நாட்கள் ஆகின்றன. கதா யுத்தம் நடப்பதைக் காணும்பொருட்டு வந்தேன்" என்று சொன்னார்.

யுதிஷ்டிரரும் கண்ணனும் அவரைத் தழுவிக்கொண்டார்கள். தீர்த்த யாத்திரைபற்றி வினவினார்கள்.

பிறகு பீமனும் துரியோதனனும் தம் குருவை வணங்கினார்கள்.

யுதிஷ்டிரர் பிறகு பலராமரை நோக்கி, "பலராமரே! சகோதரர்களுக்கு இடையில் நடக்கும் கதா யுத்தத்தைப் பாரும்!" என்று சொன்னார்.

அதன்படி பலராமர், பாண்டவர்களுக்கு நடுவில் அமர்ந்து, நடக்கப்போகும் யுத்தத்தைக் கவனித்தார்.

## பலராமர்

பாரதப்போர் தொடங்குவதற்கு முன், அதில் தான் பங்குபெற முடியாது என்று கூறிவிட்டு, தீர்த்த யாத்திரை செய்யக் கிளம்பி இருந்தார் பலராமர். அவர் பல தீர்த்தங்களுக்கும், ஆசிரமங்களுக்கும் சென்றுவிட்டு இமயத்தில் இருக்கிற மித்ராவருணர்களுடைய ஆசிரமத்துக்குப் போனார். அங்கு நீராடிவிட்டு, ஆசிரமத்தில் இருக்கும் ரிஷிகளுடன் பலராமர் அளவளாவிக்கொண்டிருந்தார்.

இது சமயம் நாரத மகரிஷி பலராமர் இருக்கும் இடத்துக்கு வந்தார். பலராமர் எழுந்து அவரை வரவேற்றார். "கௌரவர்கள் எப்படி இருக்கிறார்கள்?" என்று அவரிடம் வினவினார்.

"பீஷ்மர், துரோணர், கர்ணன், சல்லியன், ஜயத்சதன், பூரிசிரவஸ் இன்னும் பலரும் உயிரில் ஆசையை விட்டு, போர்புரிந்து, துரியோதனனை பொருட்டாய் உயிர் துறந்தார்கள். கௌரவ வீரர்களில் கிருபர், கிருதவர்மா, அசுவத்தாமா ஆகிய மூவரும்தான் எஞ்சி இருக்கிறார்கள். அவர்களும் பயந்து ஓட்டம் பிடித்தார்கள். பயந்து துரியோதனன் மடுவில் பதுங்கிக்கொண்டான். கடுஞ் சொற்களால் இடித்து உரைத்து, பாண்டவர்களும் கிருஷ்ணனும், மடுவை விட்டு, துரியோதனனை வெளிப்படச் செய்துவிட்டார்கள். துரியோதனனுக்கும் பீமனுக்கும் இப்பொழுது கதாயுதப்

போர் நடக்கப் போகிறது. உம் சீடர்களின் கதாயுதப் போரை நீர் காண விரும்பினால் தாமதியாது அங்கே புறப்பட்டுச் செல்லும்" என்று கூறினார்.

விவரம் தெரிய வந்ததும் பலராமர் இமய மலையிலிருந்து கீழே இறங்கினார். தம் சீடர்கள் இருவரும் கதாயுதப் போர் நடத்த இருக்கும் இடத்துக்குச் சென்றார்.

போர் நடப்பதைப் பார்க்கப் பலராமர் வந்திருப்பதை அறிந்த துரியோதனன் மகிழ்ச்சி அடைந்தான். அவரைக் கண்டதும் அன்போடு எழுந்து எதிர்கொண்டு அழைத்தான். பிறகு யுதிட்டிரரை நோக்கி, 'அரசே! சமந்த பஞ்சகம் என்னும் புண்ணிய தலத்தைக் குறித்துச் செல்வோம். அந்த இடத்தில் போர்புரிந்து மரணம் அடைபவர்க்குச் சொர்க்கம் கிட்டும்" என்று சொன்னான்.

"சரி. அந்த இடத்துக்குச் செல்லலாம்" என்று சம்மதித்து யுதிட்டிரர் அங்கே புறப்பட்டார்.

துரியோதனன் பெரிய கதையைத் தூக்கிக்கொண்டு நடந்து சென்றான். "நல்லது, நல்லது" என்று தேவர்கள் துரியோதனனைப் புகழ்ந்தார்கள்.

எல்லோரும் நடந்து குருக்ஷேத்திரத்தை அடைந்தார்கள். வாத்தியங்களின் பேரொலியும், வீரர்களின் முழக்கங்களும் திசைகள் அதிரும்படி கேட்டன. கதாயுதப் போர் நடப்பதற்கு, களர்மண் இல்லாத ஓர் இடத்தை, சரஸ்வதி நதிக்குத் தென்புறத்தில் சேர்ந்து எடுத்தார்கள்.

கவசத்தை அணிந்து, கதையை எடுத்துக்கொண்டு பீமன் கருடனைப்போல் நின்றான். துரியோதனன் மேருமலைபோல் நின்றான். இருவரும் இரண்டு மதங்கொண்ட யானைபோல் விளங்கினார்கள்; கோபம் கொண்ட பாம்புகள் போல், ஒருவரை ஒருவர் நோக்கினார்கள்; துரியோதனன் கையில் கதையை எடுத்துக்கொண்டு, கடைவாய்களை நக்கிக்கொண்டு, மகிழ்ச்சியுடன் பீமனைப் போருக்கு அழைத்தான்.

துரியோதனன் யுதிட்டிரரை நோக்கி, "அண்ணலே! பீமனுக்கும் எனக்கு மிடையில் போர் தொடங்கப் போகிறது. அருகே அமர்ந்து போர் நடப்பதைப் பாருங்கள்" என்று சொன்னான்.

பலராமர், அரசர்களுக்கு நடுவில் அமர்ந்திருந்தார்; கறுப்பு உடை அணிந்திருந்தார். வெண்ணிறமுள்ள அவர் ஆகாயத்தில் இருக்கும் முழுமதிபோல விளங்கினார்.

ஒருவரை ஒருவர் நிந்தித்து, அறைகூவி அழைத்துக் கொண்டு, துரியோதனனும் பீமனும் போரிடத் தொடங்கினார்கள்.

## மேலான மரணம்

துரியோதனன் மகிழ்ச்சியுடன் பீமனைப் போருக்கு அழைத்தது தான் தாமதம். பயங்கரமான கெட்ட நிமித்தங்கள் தோன்றின; காற்றும் இடியும் கடுமையாய் இருந்தன. புழுதி மழை பொழிந்தது; எங்கும் ஒரே இருள் மயம். நூற்றுக்கணக்கான எரிகொள்ளிகள் ஆகாயத்திலிருந்து கீழே விழுந்தன. பூமி நடுங்கிற்று. நரிகள் கோரமாக ஊளையிட்டன.

இந்தத் தீய நிமித்தங்களைக் கண்ட பீமன் யுதிஷ்டிரரிடம், "அரசே! மந்த புத்தியுள்ள இந்தத் துரியோதனனை நான் வெல்வது திண்ணம். என் கதையினால் அடிபட்டு அஸ்தினாபுரத்துக்கு இனி இவன் திரும்ப மாட்டான். சந்தனுவின் குலத்தைக் கெடுக்கப் பிறந்த இந்தப் பாவிக்கு ஆயுள், பொருள், நாடு அனைத்தும் இன்றைக்கு இல்லாது போகப் போகின்றன" என்று சொல்லிவிட்டு, துரியோதனனை அணுகினான்.

துரியோதனன் பெரு முழக்கம் செய்துகொண்டு அவனை ஊக்கத்துடன் எதிர்த்து வந்தான். கொம்புகளுள்ள இரு காளைகள் ஒன்றுடன் ஒன்று மோதிக்கொள்வதுபோல இருவரும் மோதிக்கொண்டார்கள். இடிபோன்ற சப்தம் உண்டாயிற்று. பார்ப்பவர் உரோமங்கள் பொடிப்ப, போர் நடந்தது. காயமுற்று, இரத்தம் ஒழுகியதால் இருவரும் களைப்படைந்தார்கள்

சிறிது நேரம் இளைப்பாறிய பின்னர், மீண்டும் போரைத் தொடங்கினார்கள். இந்தப் போரைக் கண்டு அசுரர்களும் தேவர்களும், சித்தர்களும் கந்தர்வர்களும் ஆச்சரியமடைந்தார்கள். விசித்திரமாயும், வேகமாயும் சுழன்று சுழன்று ஒருவரை ஒருவர் அடித்தார்கள். பீமனுடைய விலாப்புறத்தில் துரியோதனன் ஓங்கி அடித்தான். பீமன் அதைப் பொருட்படுத்தவில்லை. விரைவிலும் திறமையிலும் துரியோதனன் பீமனைக் காட்டிலும் சிறந்து விளங்கினான். கதைகள் ஒன்றோடொன்று அடிபடும் அதிர்ச்சியினால் பூமியே அதிர்ந்து நடுங்கியது.

போர் நடக்கும்போது, பீமன் கையில் இருந்த கதை பிடி தளர்ந்து, கீழே விழுந்தது. அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி, துரியோதனன் கதையால் பீமனை மார்பில் அடித்தான். அதனால் மயக்கமுற்று, எதிர்க்க முடியாமல் பீமன் தயங்கினான். இதைக் கண்ட பாண்டவர்கள் ஆசை அழிந்து, அமைதி குலைந்தார்கள்.

அடிபட்ட பீமன் கோபமுற்ற யானைபோல் எழுந்தான். கதையை எடுத்துக் கொண்டு துரியோதனனை வேகமாகத் தாக்கினான். விலாப்புறத்தில் பீமன் ஓங்கி அடித்ததால், கால்கள் மடிந்து, துரியோதனன் பூமியில் விழுந்தான். சிருஞ்சயர்கள் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தார்கள்.

புயவலிமிக்க துரியோதனன் இதைப் பொறுக்கவில்லை. பாம்புபோல் சீறி இரு கண்களாலும் பீமனை உற்று நோக்கினான். கதையைத் தூக்கி, பீமன் நெற்றியில் ஓங்கி அடித்தான் துரியோதனன்.

அசையாது நின்று, கதையால், துரியோதனனைத் திருப்பி அடித்தான் பீமன். பெருங் காற்றால் அடிபட்டுப் பூமியில் விழும் பெரிய மரம்போல, துரியோதனன் பூமியில் விழுந்தான்.

பாண்டவர்கள் மகிழ்ச்சி அடைந்து, ஆரவாரம் செய்தார்கள். துரியோதனன் கோபங்கொண்டு, பீமனை அடித்தான். பீமனும் நிலை தளர்ந்து பூமியில் சாய்ந்தான்.

இதைக் கண்ட துரியோதனன் பெரு முழக்கம்செய்தான். பீமனுடைய கவசத்தையும் உடைத்தான்.

தேவர்கள் மகிழ்ச்சி அடைந்து, பூமாரி பொழிந்தார்கள். பாண்டவர்கள் பயந்தார்கள்.

பீமன் மூர்ச்சை தெளிந்து எழுந்தான். இரு கண்களையும் உருட்டி விழித்தான்.

குருகுல வீரர் இருவரும் சளைக்காது போர் செய்வதைக் கவனித்த அர்ச்சுனன், "வாசுதேவரே! இந்த இரு வீரர்களில் திறமையாகப் போர்புரியத் தெரிந்தவன் யார்? இருவருக்கும் சிறப்பாக அமைந்த ஆற்றல் எது?" என்று கேட்டான்.

"இருவரும் சமமாகக் கல்வி கற்றவர்கள்; பீமனுக்குப் பலம் அதிகம்; துரியோதனனுக்குப் பயிற்சி அதிகம்; சுறுசுறுப்பும் அதிகம். தருமமாகப் போர் செய்தால், துரியோதனனைப் பீமனால் வெல்ல முடியாது. முறை பிறழ்ந்து போர் செய்தால்தான், துரியோதனனைப் பீமன் கொல்ல முடியும்.

அசுரர்களைத் தேவர்கள் மாயையால்தான் வென்றார்கள். அதுபோல, சூழ்ச்சியால்தான், துரியோதனனைப் பீமன் வெல்ல வேண்டும். சூதாட்டத்துக்குப் பின்னர், 'உனது இரு தொடைகளையும் கதையினால் பிளப்பேன்' என்று பீமன் சபதம் செய்திருக்கிறான். அந்தச் சபதத்தை இப்பொழுது பீமன் நிறைவேற்ற வேண்டும். நியாய முறையில் போர் செய்தால் துரியோதனனை வெல்ல முடியாது. 'முறியடிக்கப்பட்டவர்கள் திரும்பி வந்து, போர் செய்வார்களாயின, அவர்கள் மிகுந்த உறுதியுடன் போர் செய்வார்கள். அவர்களுக்கு பயப்படுவது அவசியம்' என்று சுக்கிரர் சொல்லி இருக்கிறார். ஆகையால், முறையல்லா முறையில் போர் செய்தாவது துரியோதனனைக் கொல்ல வேண்டும்" என்று கிருஷ்ணன் சொன்னார்.

கிருஷ்ணன் சொன்ன குறிப்பை அறிந்து, அர்ச்சுனன், பீமனுக்கு இடது தொடையைத் தட்டிக் காட்டினான்.

பீமன் தெரிந்து கொண்டான். இடமாகவும் வலமாகவும் சுற்றிச் சுற்றி, கதையை எடுத்துக் கொண்டு, துரியோதனனுடன் போர் செய்தான். இருவரும் நெடு நேரம் போர் செய்தார்கள்.

புன்னகை செய்துகொண்டு, துரியோதனன் பீமனை நெருங்கினான். பீமன் கதையால் அவனை ஓங்கி அடிக்கப் போனான். அடி விழாது விலகி, துரியோதனன் தப்பித்துக் கொண்டான். கதையின் அடி பூமியில்தான் விழுந்ததே தவிர, துரியோதனன்மீது விழவில்லை.

இதனால் பரபரப்பு அடைந்த துரியோதனன், கதையால் பீமனை ஓங்கி அடித்தான். இரத்தம் பெருக, பீமன் மூர்ச்சையுற்றான். ஆனால் அடியைத் தாங்கிக்கொண்டு அசையாது நின்றான். பீமனின் நிலைமையைத் துரியோதனன் தெரிந்து கொள்ளவில்லை. தன்னை எதிர்த்து அடிக்க அப்படி அசையாது நிற்கிறான் என்பதாக எண்ணிக் கொண்டான்.

பீமன் மூர்ச்சை தெளிந்து, கதையை எடுத்துக்கொண்டு துரியோதனனை அடிக்க விரைந்தான். அந்த அடியையும் விலக்க விரும்பிய துரியோதனன், மேலே எவ்விக் குதித்து பீமனை ஏமாற்றப் பார்த்தான்.

துரியோதனனின் இந்தக் கபட எண்ணத்தைப் பீமன் புரிந்து கொண்டான். ஆகவே அவன் எவ்விக் குதித்தபோது இரண்டு தொடைகளையும் குறிவைத்து, கதையால் ஓங்கி

அடித்தான் பீமன். உடனே துரியோதனனுடைய இரு தொடைகளும் முறிந்தன. தொப்பென்று துரியோதனன் பூமியில் விழுந்தான்.

இடியும் காற்றும் கோரமாய் இருந்தன; புழுதி மழை பொழிந்தது; மரங்களும் மலைகளும் நடுங்கின. குதிரைகளும் யானைகளும் கதறின; மானுடர்களும் கதறினார்கள். இந்தத் தீய நிமித்தங்களைக் கண்டு, பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் கலக்கமடைந்தார்கள்.

பிறகு, பெரு மரம்போல் கிடக்கின்ற துரியோதனனைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தார்கள். புளகாங்கிதம் அடைந்து பெருமித முற்றார்கள்.

கீழே விழுந்து கிடக்கின்ற துரியோதனனிடம் சென்று, "தீயவனே! சபையில் 'பசு பசு' என்று சொல்லி, திரௌபதியை நீ பரிகாசம் செய்தாயே, அதன் பலனை இப்போது அனுபவி" என்று சொல்லி, தனது இடது காலைத் தூக்கி, துரியோதனன் தலையில் பீமன் உதைத்தான். தலையைப் பலமுறை புரட்டிப் புரட்டி உதைத்தான், "வஞ்சனை செய்து சூதாடி, பகைவர்களை நாங்கள் வெல்லவில்லை. எங்கள் புய பலத்தினால்தான் வென்றோம்" என்று சொன்னான்.

பிறகு மீண்டும் துரியோதனனை அணுகி, கையில் கதையை எடுத்துக்கொண்டு, துரியோதனன் தலையில் மீண்டும் ஓங்கி உதைத்தான் பீமன்.

குருகுல வேந்தன் தலையைப் பீமன் மிதிப்பதைக் கண்டு சோமகர்கள் பொறுக்கவில்லை. தற்புகழ்ச்சி செய்துகொண்டு வெற்றி மமதையினால் கூத்தாடுகிற பீமனிடம், "பீமா! பகைமையை நீ தீர்த்துக் கொண்டாய், உன் சபதம் நிறைவேறிவிட்டது. கோபத்தை அடக்கிக் கொள், துரியோதனனுடைய தலையைக் காலால் உதைக்காதே; தருமத்தை மீறி நடக்காதே. இவன் பதினொரு அக்குரோணி சேனைக்கு அதிபதியாக இருந்தவன்; நம் உறவினன், அடிபட்டுக் கிடப்பவன். இவனை நீ உதைக்காதே. இவன் நிலைக்கு நாம் வருந்த வேண்டுமே யல்லாது, எள்ளி நகையாடக் கூடாது" என்று யுதிட்டிரர் சொன்னார்.

பீமசேனனை இவ்வாறு கண்டித்துவிட்டு, யுதிட்டிரர் துரியோதனன் அருகில் சென்றார். கண்களில் கண்ணீர் பெருக, பேசமுடியாத நிலையில் தத்தளித்த அவர், "அப்பா துரியோதனா! கோபியாதே. கவலையும் கொள்ளாதே. விதிப்படி நடக்க வேண்டியது நடந்துவிட்டது. தெய்வத்தின் கட்டளையை

யாராலும் மீற முடியாது. போர்க்களத்தில் நீ மரணம் எய்தி இருப்பதால், உனது மரணம் மேலானது. உற்றார் உறவினர்களைக் கொன்ற நாங்கள்தான் துக்கமுற்று வருந்தப் போகிறோம். கணவர்களை இழந்து, கைம்பெண்ணாகிவிட்ட, பெண்மணிகளை நாங்கள் எவ்வாறு பார்ப்போம்? பெண்பாலரின் நிந்தனை எங்களை எதிர்நோக்கி இருக்கிறது" என்று சொல்லி, பெருமூச்சுவிட்டார். நெடுநேரம் பலவாறு புலம்பினார்.

## தரும விரோதம்

துரியோதனன் தலையைப் பீமன் மிதிப்பதைப் பார்த்த பலராமர் அளவற்ற சீற்றம் கொண்டார். தனது கலப்பை ஆயுதத்தைக் கையில் பிடித்துக்கொண்டு, பீமனை நிந்தித்தார். "சீச்சீ! பீமா! என்ன காரியம் செய்தாய்? நாபிக்குக் கீழே பகைவனை அடிப்பது நியாயமான போர் முறை அன்று. கதாயுதப் போரில் இத்தகைய நிகழ்ச்சி இதற்குமுன் நடந்தது இல்லை. நாபிக்குக் கீழே அடிக்கக்கூடாது என்று சாஸ்திரங்கள் வரையறை செய்து இருக்கின்றன. அதை மீறி, நீ போர் செய்திருக்கிறாய்" என்று கூறி, கோபத்துடன் சென்று, கலப்பையால் பீமனை அடிக்க விரைந்தார்.

இதைக் கண்டதும் வாசுதேவர் அடக்கத்துடன் சென்று பலராமரின் பருத்த இரு கைகளையும் பற்றிக்கொண்டார். பலராமரின் கோபத்தைத் தணிக்கும் எண்ணத்துடன் கேசவர் அவருடன் பேசலானார்.

"தன் வளர்ச்சி, நண்பன் வளர்ச்சி, நண்பனுக்கு நண்பன் வளர்ச்சி, பகைவனின் அழிவு, அவனுடைய நண்பனின் அழிவு, நண்பனுக்கு நண்பனின் அழிவு, இந்த ஆறையும் பொறுத்தே ஒருவன் முன்னேறுகிறான். தனக்கும் நண்பனுக்கும் மாறுபாடாகக் காட்டும் போக்குகளைக் கண்டு ஒருவன் வருந்த வேண்டும். மாறுபாட்டை நிவர்த்தித்துக் கொள்ள ஒருவன் உடனே முயல வேண்டும். பாண்டவர்கள் நமக்கு உறவினர்கள்; நம் அத்தை பிள்ளைகள்; பகைவர்களால் அவர்கள் பெரிதும் நலிந்து இருக்கிறார்கள். சபதத்தை நிறைவேற்றிக்கொள்வது அரச குலத்தில் பிறந்தவனுக்குத் தலையாய கடமை; 'துரியோதனனின் இரு தொடைகளையும் கதையால் பிளப்பேன்' என்று சபையில் முன்பு பீமன் சபதம்

செய்து இருக்கிறன். 'உனது தொடைகளைப் பீமன் பிளப்பான்' என்று மைத்ரேய மகரிஷியும் துரியோதனனைச் சபித்து இருக்கிறார். ஆகையால் பீமன் நடத்தையில் நான் குற்றம் காணவில்லை', ஆகவே நீர் கோபிக்க வேண்டாம்'' என்று சமாதானம் சொன்னார்.

கண்ணன் சொன்ன காரணங்களை, பலராமர் ஏற்கவில்லை. அறங்களின் இயல்புகளை நன்கு அறிந்த அவர், ''கோவிந்தா! பொருளின் பொருட்டாகவும் இன்பத்தின் பொருட்டாகவும் கடைப்பிடிக்கிற அறம், தரத்தில், குறைந்துவிடும். பேராசைக்காரன் பொருளைப் பெரிதாக மதிப்பான்; புலன் நுகர்ச்சியை விரும்புபவன் இன்பத்தைப் பெரிதாக மதிப்பான். அறத்தோடு பொருளையும், அறத்தோடு இன்பத்தையும். பொருளோடு இன்பத்தையும் பொருத்திப் பிணையாமல், அறம் பொருள் இன்பம் மூன்றையும் எவன் கடைப்பிடிக்கிறனோ, அவன் மேலான நலத்தை அடைவான். நீ கூறுகிற வாதம் பொருந்தாத வாதம். பீமனின் நடத்தை அந்தத் தருமத்துக்குப் புறம்பான நடத்தை'' என்று சொன்னார்.

அதற்குக் கண்ணன், ''நீர் அறத்தில் மிகுந்த நாட்டமுள்ளவர். கோபம் கொள்ளவேண்டாம். தருமத்தை அறிந்த நீர் கோபத்தை அடக்கிக்கொள்வதுதான் சிறப்பு. கலியுகம் வந்துவிட்டது என்பதைத் தெரிந்துகொள்ளும். வஞ்சனையால் வென்றவனை வஞ்சனையால் வெல்வது அதருமம் அன்று. இவன் தூண்டுதலால்தான் பலர் சேர்ந்து பாலன் அபிமன்யுவைக் கொன்றார்கள். குலத்தைக் கெடுத்த பாவி துரியோதனனைப் பீமன் கொன்றது அறம் தப்பிய செயல் அன்று. மேலே எழும்பி, பீமனைக் கொல்ல எண்ணியிருந்த துரியோதனனின் தொடைகளைப் பீமன் பிளந்தான். நிற்கும் போது, தொடையில் பீமன் அடிக்கவில்லை'' என்று கிருஷ்ணன் சமாதானம் சொன்னார்.

கேசவன் சொன்ன இந்தக் கபட தருமத்தைப் பலராமர் ஏற்கவில்லை. அவர் சபையினரை நோக்கி, ''பீமனுக்குக் கெட்ட பெயரும் துரியோதனனுக்கு நல்ல பெயரும் பூமியில் நிலைக்கப் போகின்றன. கபடமாகப் போர் புரிபவன் என்ற பெயர் பீமனுக்கு என்றும் நிலைத்து இருக்கும். நேரிய வழியில் போர் செய்த வீரன் என்ற பெயர் துரியோதனனுக்கு நிலைத்து இருக்கும். அவன் நண்பர்களோடும் உறவினர்களோடும் சொர்க்கம் சென்று அழிவில்லாத கதியை அடைவான்'' என்று சொன்னார்.

பிறகு தனது தேரில் ஏறிக்கொண்டு துவாரகைக்குத் திரும்பினார்.

பலராமர் சென்ற பிறகு, பாஞ்சாலர்களும் பாண்டவர்களும் மகிழ்ச்சி குன்றி இருந்தார்கள்.

யுதிட்டிரரோ கவலையுற்று, தலைகுனிந்து உட்கார்ந்து இருந்தார்; வாசுதேவர் அவரை அணுகி, "தருமசீலரே! அதருமமான ஒரு செயலைச் செய்யப் பீமனுக்கு நீர் ஏன் அனுமதி கொடுத்தீர்? துரியோதனன் தலையைப் பீமன் உதைக்க நீர் அனுமதித்து இருக்கலாகாது" என்று சொன்னார்.

மனக்களிப்புடன் இருந்த பீமன் கைகுவித்துக்கொண்டு யுதிட்டிரரை அணுகினான். "அரசே! பகைவர்களை அழித்து விட்டோம். பூமி முழுவதும் நமக்கு வசப்பட்டுவிட்டது. அதனை ஆளும் வஞ்சனையுள்ள துரியோதனன் அடிபட்டுப் பூமியில் படுத்து இருக்கிறான். செல்வம் நிறைந்த இந்தப் பூமியை நீர் திருப்தியுடன் ஆளும்" என்று சொன்னான்.

"அவமதிக்க முடியாதவனே! நீ வெற்றி வீரனாக விளங்குகிறாய். வாசுதேவர் சொற்படி நடந்து பூமியை நாம் இப்போது அடைந்திருக்கிறோம். பாக்கிய வசத்தினால் நம் பகைவன் மாண்டான்" என்று சொன்னார் யுதிட்டிரர்.

பீமன் துரியோதனனுடைய தொடைகளைப் பிளந்து அவன் கொலையுண்டான் என்று கருதி, பாஞ்சாலர்களும், மற்றவர்களும் தங்கள் தங்கள் மேலாடைகளை வீசி, மகிழ்ச்சியை வெளிப்படுத்தினார்கள்; பெருமுழக்கம் செய்து குதித்தார்கள்; சிரித்தார்கள்; விளையாடினார்கள். 'விருத்திரனை இந்திரன் வதம் செய்ததுபோல, துரியோதனனைப் பீமன் வதம் செய்துவிட்டான். பீமனைத் தவிர்த்து வேறு யாரால் துரியோதனனை வதம் செய்யமுடியும்? பகைவனின் தலையை நீ காலால் உதைத்தாய்; சிங்கம் கடாமாட்டின் இரத்தத்தைக் குடிப்பதுபோலத் துச்சாதனனின் இரத்தத்தை நீ குடித்தாய். துரியோதனனை நீ வதம் செய்ததனால் உனது புகழ் பூமியில் மங்காமல் நிலைத்து நிற்கப்போகிறது. பீமா! உனது ஆற்றலை நாங்கள் பெரிதும் பாராட்டுகிறோம். ஆனந்த மிகுதியாக

உரோமம் சிலிர்த்தது இன்னும் எங்களுக்குத் தணியவில்லை" என்று சொன்னார்கள்.

பாஞ்சாலர்கள் பீமனை இவ்வாறு பாராட்டியதைக் கிருஷ்ணன் அங்கீகரிக்கவில்லை. "அரசர்களே! காயமுற்று மரணப்படுக்கையில் கிடக்கிற பகைவனை, கடும் சொற்களால் தாக்குவது நியாயம் அன்று. துரியோதனன் மந்த புத்தியுள்ளவன்; பேராசைக்காரன்; தீயவர்களின் நட்பைப் பெற்றவன்; வெட்கமில்லாதவன். கொடிய இந்தப் பாவி மாண்டான். விதுரர், துரோணர், பீஷ்மர், கிருபர் வேண்டியும் உரிய பாகத்தைப் பாண்டவர்களுக்குக் கொடுக்க இவன் சம்மதிக்கவில்லை. அரசர்களே. தேர்களில் ஏறுங்கள்! நாம் திரும்பலாம்" என்று சொன்னார்.

கண்ணன் இப்படிச் சொன்னதும் அடங்காத கோபம் கொண்டு, துரியோதனன், கையை ஊன்றிக்கொண்டு உட்கார்ந்தான். புருவங்களைச் சுளித்துக்கொண்டு கிருஷ்ணனை முறைத்துப் பார்த்தான். வால் அறுபட்ட பாம்பு போலச் சீறினான். மரண வேதனையையும் பொருட்படுத்தாமல், கடுஞ் சொற்களால் வாசுதேவரின் மனம் நோகச் செய்தான்.

"கம்சனுக்கு அடிமையாய் இருந்த வாசுதேவன் மகனே! 'தொடைகளைப் பிள' என்று குறிப்புக்காட்டி, அதர்ம வழியில் போர் செய்யப் பீமனை நீ தூண்டினாயே? அதற்காக நீ நாணப் படவில்லையா? அர்ச்சுனனைப் பார்த்து நீ சொன்ன சொற்களை நான் அறிவேன். உன்னிடம் தயையும் இல்லை; வெட்கமும் இல்லை. சிகண்டியைக் கொண்டு பாட்டனார் பீஷ்மரைக் கொல்வித்தாய்; அசுவத்தாமா என்று ஒரு யானையின் பெயரைச் சொல்லி, அசுவத்தாமா மடிந்துவிட்டதாக ஒரு பொய் வதந்தியைக் கிளப்பி, ஆசாரியர் துரோணரை ஆயுதங்களை எறியும்படி செய்தாய். திட்டத்துய்மனன் அவரை வதம் செய்தபோது பார்த்துக்கொண்டிருந்தாய். இன்னும் எத்தனையோ சூழ்ச்சிகளைச் செய்தாய். இவற்றை எல்லாம் நான் அறிவேன். என்னை, கர்ணனை, பீஷ்மரை, துரோணரை போரில் நீ நியாயமாக எதிர்த்திருந்தால் நிச்சயம் தோல்வி அடைந்திருப்பாய். அரசகுல தருமத்தைக் கடைப்பிடித்த நாங்களும் மற்ற அரசர்களும் அயோக்கியனான உன்னால் வஞ்சிக்கப்பட்டு உயிரை இழந்தோம்" என்று சொன்னான்.

"காந்தாரி மைந்தா! பாவ வழியில் சென்ற நீயும் உன் உறவினர்களும் பரிவாரங்களும் அதன் பலனை அனுபவித்து மடிந்தீர்கள். நான் தூது வந்து கேட்டும் பாண்டவர்களுக்கு

உரிய பங்கைக் கொடுக்க உனக்கு மனம் வரவில்லை. விஷமிட்டு நீ பீமனைக் கொல்ல முயன்றாய். அரக்கு மாளிகையில் தீ வைத்து, பாண்டவர்களை எரித்தாய். திரௌபதியை அவமானப்படுத்தினாய். இவற்றின் பலன்களை இப்பொழுது போர்க்களத்தில் அனுபவிக்கிறாய். தன் [illegible] பீஷ்மரைச் சிகண்டி கொன்றான். இதில் குற்றம் இல்லை. சுய தருமத்தை விட்டுவிட்டு உன் நன்மையின் பொருட்டாய் தீயோர் வழியில் சென்ற துரோணரைத் திட்டத்துய்மன் கொன்றான். நீ தீயவன்; நல்லோரை அடுத்ததேயும் இல்லை; அவர்கள் கூறும் நல்லுரைகளைக் கேட்டதும் இல்லை. ஆசையினாலும் மோகத்தினாலும் செய்யத் தகாத காரியங்களை எல்லாம் நீ செய்தாய் அதன் பலனை இப்பொழுது அனுபவிக்கிறாய்'' என்று கூறினார்.

''அச்சுதா! நான் முறைப்படி கல்வி கற்றவன்; தான தருமங்களைச் செய்தவன்; கடல் சூழ்ந்த அவனி முழுவதையும் ஆண்டவன்; பகைவர்களையும் கட்டுப்படுத்தி வாழ்ந்தவன். என்னைவிடச் சிறந்த அரசன் வேறு யார் உளன்? அரச குலத்தார் அடையத் தகும் சிறந்த மேலான மரணம் எனக்குக் கிட்டி இருக்கிறது. தேவர்கள் மானுடர்கள் அனுபவிக்கும் சுகபோகங்களை எல்லாம் நான் அனுபவித்தவன்; என்னைவிடச் சிறந்த அரசன் எவன் உளன்? நண்பர்களோடும் சுற்றத்தினர்களோடும் நான் சொர்க்கம் செல்லப் போகிறேன். நிந்தனைக்கு உள்ளாகி நீங்கள் துயரப்படப் போகிறீர்கள். பீமன் எனது தலையைக் காலால் மிதித்ததற்காக நான் இப்பொழுது வருந்தவில்லை. இன்னும் சிறிது நேரத்தில் காக்கைகளோ பருந்தோ, கழுகோ எனது தலைமீது காலை வைக்கப் போகின்றது'' என்று பதில் சொன்னான் துரியோதனன்.

இப்படித் துரியோதனன் சொல்லி ஓய்ந்ததும், நறுமணமுள்ள மலர்மாரி நெடு நேரம் பெய்தது. கந்தர்வர்கள் இன்னிசை முழக்கினார்கள். சுகந்த காற்று மென்மையாக வீசியது. திசைகள் பிரகாசித்தன.

இந்த அதிசயங்களைக் கண்டு பாண்டவர்கள் நாணமுற்றார்கள். கவலையும் ஏக்கமும் அவர்களை வாட்டின

இதைக் கவனித்த கிருஷ்ணன் அவர்களை உற்சாகப் படுத்த முனைந்தார். "நேரிய வழியில் போர் செய்தால் துரியோதனன் முதலான வீரர்களை உங்களால் வென்று இருக்க முடியாது. நான் கூறின உபாயத்தை மேற்கொண்டதனால் அவர்கள் மரணம் அடைந்தார்கள். பகைவர்களை

வஞ்சித்துக் கொல்வது பாபமாகாது. அசுரர்களைத் தேவர்
கள் முன்பு வஞ்சித்துத்தான் கொன்று இருக்கிறார்கள். விதி
யைப் பலத்தினால் வெல்வது சாத்யமன்று நாம் திரும்ப
லாம். அரசர்களும் வாகனங்களும் களைப்பாறட்டும்” என்று
சொன்னார்.

பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் மகிழ்ச்சி அடைந்
தார்கள். கிருஷ்ணன் பாஞ்சசன்யத்தை ஊதினார்; அர்ச்சுனன்
தேவதத்தத்தை ஊதினான்; யுதிட்டிரர் அநந்த விஜயத்தை
ஊதினார்; பீமன் பௌண்டிரம் எனும் சங்கத்தை ஊதினான்;
நகுலன் சுகோஷத்தையும், சகாதேவன் மணிபுஷ்பகத்தையும்
ஊதினார்கள்; திட்டத்துய்மனன் ஜைத்ரம் என்னும் சங்
கத்தை ஊதினான்; சாத்யகி நந்திவர்த்தனம் எனும் சங்
கத்தை ஊதினான்; சகலவிதமான வாத்தியங்களும் பாண்
டவ சேனைகளில் முழங்கின.

## கண்ணன் சொன்ன சமாதானம்

வாசுதேவர் இப்படிச் சொன்னதும் அரசர்கள் மகிழ்ச்சி
யுற்றுத் தத்தம் பாசறைகளுக்குத் திரும்பினார்கள். துரியோ
தனனுடைய இடத்தை நோக்கிச் செல்லுகின்ற பாண்டவர்
களைத் தொடர்ந்து யுயுத்சுவும் சாத்யகியும் சென்றார்கள்.

துரியோதனனுடைய பாசறை சோபை இழந்து இருந்
தது; திருவிழாக்கள் இல்லாத நகரம் போலவும் நகரம் பிடி
பட்ட யடுப்போலவும் காட்சி அளித்தது; நாதனை இழந்த
பெண்களும் பேடிகளும் அங்கு நிறைய இருந்தார்கள். வயது
முதிர்ந்த மந்திரிகளும் இருந்தார்கள்.

பாண்டவர்கள் அந்தப் பாசறைக்குள் நுழைந்ததும்
காவி உடை தரித்து, துரியோதனனுக்கு முன் செல்பவர்கள்,
இப்போது அழுக்கடைந்த ஆடை தரித்து, கைகூப்பி
வணங்கிப் பாண்டவர்களை வரவேற்றார்கள்.

பாண்டவர்கள் தேரிலிருந்து இறங்கிக்கொண்டார்கள்
காண்டீவத்தையும் அம்புத் தூளிகளையும் எடுத்துக்கொண்டு,
தேரை விட்டு இறங்கும்படி அர்ச்சுனனைக் கேசவர் விரைவு
படுத்தினார்.

அர்ச்சுனன் அவர் சொன்னபடி இறங்கிக் கொண்டான்;
மாதவர் கடிவாளத்தை விட்டுவிட்டுத் தானும் தேரிலிருந்து
இறங்கிக் கொண்டார். உடனே தேரின் கொடிமீது இருந்த

வானரம் மறைந்து விட்டது. தேரும் தீப்பற்றி எரிந்து சாம்பலாகிவிட்டது.

இதைக் கண்டதும் பாண்டவர்கள் ஆச்சரியம் அடைந்தார்கள். அர்ச்சுனன் கைகூப்பி வணங்கி, "அச்சுதரே! எனது தேர் இப்படி எரிந்து சாம்பலாகக் காரணம் என்ன?" என்று கேட்டான்.

"அர்ச்சுனா! முன்பே கர்ணன், துரோணர் இவர்களின் கணைகளால் இந்தத் தேர் எரிக்கப்பட்டது. நான் இருந்த காரணத்தால் இதுவரை எரியாமல் இருந்தது" என்று கண்ணன் பதில் சொன்னார்.

இதன் பின்னர்த் துரியோதனனுடைய பாசறைக்குள் புகுந்து, அங்கிருந்த செல்வங்களைத் திரட்டிக்கொண்டார்கள்; வெள்ளி, தங்கம், முத்து, நகைகள், கம்பளங்கள், மணிகள், படுக்கைகள், குதிரைகள், யானைகள், பணியாட்கள் ராஜ்யத்துக்குத் தேவையான இதர உபகரணங்கள் அனைத்தையும் கைப்பற்றிக்கொண்டார்கள். பகைவர்கள் ஒழிந்த அவர்கள் மகிழ்ச்சியுடன் இருந்தார்கள். பிறகு மாதவர் அவர்களிடம், "நாம் பாசறைக்கு வெளியே இரவைக் கழிப்பது நலம்" என்று சொன்னார்.

"அவ்வாறே செய்வோம்" என்று சொல்லி, ஓகவதி நதிக்குச் சென்று, இரவை அதன் கரையில் கழித்தார்கள்.

பொழுது புலர்ந்ததும் மாதவரை யுதிஷ்டிரர் காந்தாரியிடம் அனுப்பினார். "மாதவரே! நீர் காந்தாரியிடம் சென்று அவளுக்கு உள்ள கோபத்தைத் தணியச் செய்ய வேண்டும். காரண காரியங்களை எடுத்துக் காட்டி அவளுக்குள்ள கோபம் அடங்கச் செய்ய வேண்டும். வியாச முனிவரும் அங்கே இருப்பார்" என்று சொன்னார்.

"ஆகட்டும்" என்று சொல்லி, கண்ணன் அத்தினபுரத்துக்குப் புறப்பட்டார். நகரத்தை அடைந்து, திருதராட்டிர மன்னனையும் வியாசரையும் சந்தித்து அவர்களை வணங்கினார். பிறகு காந்தாரியை வணங்கினார்.

பிறகு திருதராட்டிரனுடைய இரு கைகளையும் பற்றிக்கொண்டு, அழுது புலம்பினார். கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, அடக்கத்துடன் திருதராட்டிர மன்னனிடம் பேசத் தொடங்கினார். "அரசே! இதுவரை நடந்ததும் இனிமேல் நடக்கப்போவதும் உமக்குத் தெரியாததல்ல; யுதிட்டிரர்

பொறுமையுடன் இருந்து வனவாசம் செய்தார். கரந்து வாழ்ந்து அல்லலுற்றார். பிறகு நானே நேரில் வந்து பாண்டவர்களுக்காக ஐந்து கிராமங்களை உம்மிடம் யாசித்தேன். பேராசையின் பயனாய் நீர் தரச் சம்மதிக்கவில்லை. அதன் பயனாய் அரசகுலம் அழிந்துவிட்டது. பாண்டவர்கள் மீது குற்றம் இல்லை. இத்தனை அழிவுக்கும் நீரே காரணம். ஆதலால் நீர் பாண்டவர்கள் மீது கோபப்படக்கூடாது. நீரும் கவலைப்படக்கூடாது. காந்தாரியும் கவலைப்படக் கூடாது. யுதிட்டிரர் உம்மிடம் அன்பாக இருக்கிறார். நேசத்தோடும் பக்தியோடும் இருக்கிறார். பகைவரை அழித்த, மன அமைதி இழந்து தவிக்கிறார்; புத்திரனை இழந்து இருக்கும் உம்மைக் காண அவர் நாணப்படுகிறார்'' என்று சொன்னார்.

இதன் பின்னர், காந்தாரியை நோக்கி ''சுபலன் மகளே! 'அறம் இருக்கும் இடத்தில் வெற்றி இருக்கும்' என்று நீ சொன்னதை உன் மகன் கேட்கவில்லை. நீ சொன்ன சொல் பலித்துவிட்டது. நடந்ததை எண்ணி நீ கவலைப்பட வேண்டாம்; பாண்டவர்கள் அழிவை நீ நினைக்க வேண்டாம். தவ வலிமையினால் உலகம் முழுவதையும் எரிக்கும் ஆற்றல் பெற்றவள் நீ'' என்று சொன்னார்.

''கேசவரே! நீர்தான் எங்களுக்குக் கதி'' என்று சொல்லி முகத்தை மூடிக்கொண்டு காந்தாரி அழுதாள்.

காரண காரியங்களை எடுத்துச் சொல்லி, திருதராட்டிரனையும் காந்தாரியையும் சமாதானம் செய்து விட்டு விடை பெற்றுக் கொண்டார் கண்ணன். ''அரசே! உம்மிடம் விடை பெற்றுக் கொள்கிறேன். அசுவத்தாமா பாண்டவர்களை அழிக்கும் எண்ணத்தில் இருக்கிறார் அவர்களை நான் காப்பாற்றவேண்டும் அதற்காக விரைவில் செல்லுகிறேன்'' என்று சொல்லிப் புறப்பட்டார்.

''சீக்கிரமாகச் சென்று பாண்டவர்களைக் காப்பாற்றும்'' என்று காந்தாரியும் திருதராட்டிரனும் கேசவரிடம் சொன்னார்கள்.

அத்தினபுரத்திலிருந்து புறப்பட்ட மாதவர் இரவில் பாண்டவர்கள் இருக்கும் பாசறையை அடைந்தார். நடந்தவற்றைப் பாண்டவர்களிடம் தெரிவித்துவிட்டு, எச்சரிக்கையாக இருந்தார்.

# சேனாபதி அசுவத்தாமா

தொடைகள் முறிந்து, புழுதியில் கிடந்த துரியோதனன் தன் தலைமயிர்களைக் கோதிவிட்டுக்கொண்டான்; பத்துத் திசைகளையும் நோக்கிப் பெருமூச்சுவிட்டான். அவன் கண்களில் கண்ணீரும் கோபமும் நிறைந்திருந்தன. பாண்டவர்களால் மிகுந்த கோபத்துடன் இருந்த அவன், சஞ்சயனை நோக்கி, "சஞ்சயா! காலத்தைக் கடக்க யாராலும் முடியாது. பதினொரு அக்ஷௌஹிணிக்கு நாதனாக இருந்த நான், அடைந்திருக்கும் நிலைமையைப் பார். 'யுத்த முறையை மீறி, பீமனால் நான் அடிக்கப்பட்டேன்' என்பதை என்னைச் சேர்ந்தவர்களிடம் தெரிவி. என் பெற்றோரிடம் அரச குலத்தில் பிறந்தவன் அடையும் மேலான கதியை நான் அடைந்தேன்' என்று கூறு" என்று சொன்னான்.

பிறகு கிருபர், கிருதவர்மா, அசுவத்தாமா மூவருக்கும் தூதுவர் மூலம் செய்தி அனுப்பினான். "யுத்த முறையை மீறி அதர்ம வழியில் என்னைப் பீமன் கொன்றான். நான் சொர்க்கம் சென்று துரோணர், கர்ணன், சல்லியன், சகுனி, ஜயத்ரதன் இவர்களையும் இன்னும் மற்றவர்களையும் சந்திக்கப் போகிறேன். கூட்டத்திலிருந்து வழி தவறின வழிப்போக்கனைப் போல, அவர்களை நான் பின்தொடரப் போகிறேன்" என்று சொன்னான்.

அந்தத் தூதுவர்கள் அசுவத்தாமாவிடம் சென்று, நடந்தது நடந்தபடி தெரிவித்தார்கள்.

விவரம் தெரிய வந்ததும், மூவரும் வேகமாகச் செல்லும் குதிரைகளில் ஏறிக்கொண்டு, துரியோதனன் அடிபட்டுக்கிடக்கும் இடத்தை அடைந்தார்கள்.

புயலால் தள்ளப்பட்ட பெரிய மரம்போல் துரியோதனன் பூமியில் கிடந்தான்; உடல் முழுவதும் உரத்தத்தால் நனைந்திருந்தது; பூதகணங்களும் ஊன் உண்ணும் பிராணிகளும் அவனைச் சூழ்ந்து நின்றன. புருவத்தை நெரித்துக் கொண்டும், கோபத்தால் கண்களைப் புரட்டி விழித்துக் கொண்டும் துரியோதனன் படுத்துக் கிடந்தான்.

பூமியில் புரள்கின்ற அரசனைக் கண்டதும் வருத்தமுற்ற அவர்கள் தேரிலிருந்து இறங்கிச் சென்று, அவன் அருகில் உட்கார்ந்தார்கள்.

கண்களில் நீர் ததும்ப அசுவத்தாமா துரியோதனனை நோக்கினார். பெருமூச்சுவிட்டுக்கொண்டே, அவனை நோக்கி, "அண்ணலே! அரசனாக இருந்து பூமியை ஆண்ட நீ, இப்பொழுது காட்டில் தனியே படுத்துப் புரள்கிறாய். புழுதியில் கிடக்கும் உன் மேனியைப் பார்த்தால் உலகத்தில் புண்ணியம் என்பது இல்லை என்று சொல்லத் தோன்றுகிறது. தெய்வத்தின் போக்கும் அறிய முடியாது என்று எண்ணத் தோன்றுகிறது" என்று சொல்லி வருந்தினார்.

துரியோதனன் தன் கண்களைத் துடைத்துக்கொண்டான். ஆயினும் துக்க மேலீட்டினால் கண்ணீர் கொட்டுவது தடைப்பட்டு நிற்கவில்லை. அவன் அவர்கள் மூவரையும் நோக்கி, "பிறந்த உயிர்கள் அனைத்தும் காலக்கிரமத்தில் அழியும் என்பது பிரம்மதேவரின் கட்டளை. அப்படிப்பட்ட அழிவைத்தான் இப்பொழுது நான் அடைந்திருப்பதை நீங்கள் காணுகிறீர்கள். பூமியை ஆண்டு அனுபவித்த நான் இந்தக் கதியை அடைந்தேன். போரில் நான் புறங்காட்டி ஓடவில்லை. பாவிகள் வஞ்சித்து என்னைக் கொன்றுவிட்டார்கள். இந்த நிலையில் உங்களை நான் பார்க்க நேர்ந்தது என் பெரும் பாக்கியம். நீங்கள் வருந்த வேண்டாம். க்ஷத்திரிய தருமத்துக்குப் புறம்பான காரியம் எதையும் நான் செய்யவில்லை. செய்யவேண்டிய முயற்சியைச் செய்தோம். தெய்வத் திருவுளம் வேறு விதமாய் இருந்திருக்கிறது" என்று சொன்னான்.

இப்படிச் சொன்னதும் துரியோதனன் கண்களில் நீர் ததும்பியது. அவனால் பேச முடியவில்லை.

இந்த நிலையைக் கண்ட துரோண புத்திரர் அளவற்ற சீற்றம் கொண்டார். கைகளைப் பிசைந்துகொண்டு கண்ணீர் உகுத்தார். அவர் துரியோதனனை நோக்கி, "அரசனே! என் தந்தையை அற்பர்கள் கொடிய முறையில் கொன்றார்கள். அப்பொழுது அடைந்த வருத்தத்தைக் காட்டிலும் உன் நிலையைக் கண்டு நான் அதிகம் வருந்துகிறேன். நான் சொல்வதைக் கவனமாகக் கேள். இன்று இரவு வாசுதேவன் பார்த்திருக்கும்பொழுதே, பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் நான் கொல்லப்போகிறேன். எனக்கு நீ அனுமதி கொடு" என்று சொன்னார்.

அசுவத்தாமா இப்படிச் சொன்னதும் துரியோதனன் கிருபரிடம், "ஆசாரியரே! நீர் நிறைந்த ஒரு பாத்திரத்தைத் தாருங்கள்" என்று சொன்னான்.

அதன்படி ஒரு குடத்தைக் கிருபர் துரியோதனன் அருகில் வைத்தார். உடனே அவன் கிருபரிடம், "உத்தமரே! என் கட்டளைப்படி அசுவத்தாமாவை, சேனாபதியாக அபிஷேகம் செய்யும்" என்று சொன்னான்.

கிருபர் அசுவத்தாமாவைச் சேனாபதியாக்கி அபிஷேகம் செய்தார்.

அசுவத்தாமா துரியோதனனைத் தழுவிக்கொண்டார். பிறகு, பெருமுழக்கம் செய்துகொண்டு அங்கிருந்து புறப்பட்டார்.

# வியாசர்

அருளிய

# மகாபாரதம்

சௌப்திக பருவம்

# வியாசர்

அருளிய

# மகா பாரதம்

---

## கோட்டான் கற்றுக் கொடுத்த பாடம்

கிருபர், கிருதவர்மா, அசுவத்தாமா ஆகிய மூவரும் துரியோதனனிடம் விடைபெற்றுக்கொண்டு, தென் திசையை நாடிச் சென்றார்கள். சூரியன் அஸ்தமிக்கும் சமயம். பாண்டவர்களின் பாசறையை அணுகி, குதிரைகளை அங்கேயே விட்டுவிட்டு, பாண்டவப் படையினருக்குத் தெரியாதிருக்கும் பொருட்டு, அடர்த்தியான ஒரு காட்டுக்குள் நுழைந்து ஒளிந்துகொண்டார்கள். காயமுற்று இருந்த அவர்கள், பாண்டவர்களை நிந்தித்துக்கொண்டு ஓர் இடத்தில் தங்கினார்கள். பாண்டவர்கள் வந்துவிடுவார்களோ என்ற அச்சம் அவர்களை வாட்டியதால், எழுந்து கிழக்குத் திசையை நோக்கி ஓடினார்கள்.

ஓர் ஆல மரத்தை அடைந்து, அதன் கீழே அமர்ந்தார்கள். சூரியன் அஸ்தமித்து இருள் பரவத் தொடங்கியது. இரவில் சஞ்சரிக்கும் பறவைகள் வெளிக் கிளம்பின; பகலில் சஞ்சரிப்பவை தூங்கப் போய்விட்டன.

இரவில் நடமாடும் பிராணிகள் பயங்கரமாகக் கத்தின. கிருதவர்மா, கிருபர், அசுவத்தாமா ஆகிய மூவரும் நெருங்கி உட்கார்ந்தார்கள்; பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் ஏற்பட்ட அழிவை நினைத்து வருந்தினார்கள். காயமுற்றுக் களைத்து இருந்ததனால், கிருபரும் கிருதவர்மாவும் அயர்ந்து தூங்கிவிட்டார்கள்.

சினமும் பொருமையும் மிகுதியாக இருந்த காரணத்தால், அசுவத்தாமா தூங்கவில்லை. காட்டை அவர் சுற்றுமுற்றும் பார்த்தார். தாம் தங்கியிருக்கும் ஆலமரத்தையும் நோக்கினார். ஆயிரக்கணக்கான காகங்கள் ஆலமரத்தில் தனித் தனியாகக் கூடுகட்டிக்கொண்டு வசித்தன; தத்தம் கூடுகளில் அவை சுகமாக உறங்கிக்கொண்டிருந்த தருணத்தில் பயங்கரமான கோட்டான் ஒன்று, ஆலமரத்தை நாடி வருவதை அசுவத்தாமா கண்டார்.

அந்தக் கோட்டான் மிகப் பெரிதாய் இருந்தது; கண்கள் மரகதப் பச்சை நிறத்தில் இருந்தன; உடலோ சாம்பல் நிறம்; கூரிய பெரிய மூக்கும் நகங்களுமுள்ள அந்தக் கோட்டான், பெரிய சத்தம் போட்டுக்கொண்டு, கருடனைப்போல் வேகமாக ஆல மரத்தை நாடி வந்தது. காகங்களுக்குப் பகைவனான கோட்டான் மெல்ல ஆலமரத்தின் கிளையில் அமர்ந்தது. தூங்கிக்கொண்டிருக்கும் காகங்களை ஒவ்வொன்றாகக் கொல்லத் தொடங்கியது. இறகுகளை முறித்துச் சில காகங்களைக் கொன்றது; சிலவற்றை, கழுத்தைத் துண்டித்துக் கொன்றது.

இதைக் கவனித்த அசுவத்தாமா தாமும் அதைப்போல நடக்க விரும்பினார். "கோட்டான் நடத்தையால் நான் பாடம் கற்றுக்கொண்டேன். நியாயமாகப் போர் செய்தால் உயிர் போவது நிச்சயம். கபடமாகப் போர் செய்தால்தான் வெற்றி பெறலாம். சந்தேகத்துக்கு இடமான பயனைக் காட்டிலும், சந்தேகமில்லாத பயனே சிறந்தது. கபடத்தைக் கடைப்பிடித்தே பாண்டவர்கள் வெற்றி பெற்றுள்ளனர். 'களைத்திருக்கும் சமயம், பிளக்கப்பட்டிருக்கும் சமயம், சாப்பிடும் சமயம், பிரயாண சமயம், பிரவேசிக்கும் சமயம், நடுநிசியில் தூங்கும் சமயம், தலைவர் இல்லாத சமயம், வீரர்கள் பிரிந்திருக்கும் சமயம் ஆகிய இந்தச் சமயங்களில் பகைவனை அடித்தால் வெற்றி அவசியம் கிட்டும்' என்று அறிஞர்கள் கூறியிருக்கிறார்கள். இது அசுவத்தாமாவின் நினைவுக்கு வந்தது

ஆகவே, தூங்கும் சமயத்தில் பாண்டவர்களைக் கொல்ல வேண்டும் என்று அசுவத்தாமா உறுதிப்படுத்திக்கொண்டார். பல முறை யோசித்து ஒரு முடிவுக்கு வந்த அவர், தூங்கிக்கொண்டிருக்கும் தம் மாமன் கிருபரையும் கிருதவர்மாவையும் எழுப்பினார். தாம் முடிவு செய்து இருக்கும் எண்ணத்தை அவர்கள் இருவரிடமும் வெளியிட்டார்.

நாணமுற்று இருவரும் பதில் சொல்லாது இருந்தனர். சிறிது நேரத்துக்குப் பின்னர், இருவரையும் நோக்கி, "துரியோதனனைப் பொருட்டுப் பாண்டவர்களை நாம் பகைத்துக் கொண்டோம். துரியோதனனும் போரில் மாண்டான். பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் வெற்றிக் களிப்பினால் சிரிக்கிறார்கள்; வாத்தியங்களை முழங்குகிறார்கள். நடந்த போரில் நாம் மூவர்தான் மிஞ்சியிருக்கிறோம். நான் சொன்னபடி பாண்டவர்களை வதம் செய்வதுதான் உகந்தது. நமக்கு நன்மை பயக்கும் யோசனையைக் கூறுங்கள்" என்று சொன்னார் அசுவத்தாமா.

அதற்குக் கிருபர், "அண்ணலே! காரணங்களுடன் நீ கூறியவற்றை முழுவதும் கேட்டேன். அப்பொழுது நான் கூறுவதை நீயும் கேள். பெரும் பகுதி தெய்வச் செயலாலும், சிறு பகுதி மனித முயற்சியாலும், உலகம் நடைபெறுகிறது. தெய்வம், மனிதன் இந்த இரண்டினுள்ளும் அனைத்தும் கட்டுப்பட்டுள்ளன. தெய்வம் ஒன்றினால் மட்டும் காரியங்கள் கைகூடுவது இல்லை; அதுபோல, மனித முயற்சியால்மட்டும் காரியங்கள் நடைபெறுவது இல்லை. இரண்டும் ஒருங்கு சேர்ந்த இடத்தில்தான் காரியசித்தி ஏற்படுகிறது. தனித்த மனித முயற்சியும் தனித்த தெய்வ முயற்சியும் பயன்தர மாட்டா. முயற்சியுள்ளவன் அதற்குரிய பயனைத் தெய்வ சங்கல்பத்தால் அடைய முடியாமல் போனால் அதற்காக உலகம் அவனை இகழாது; ஆனால் முயற்சியின்றி, சோம்பேறியாய் இருப்பவனை உலகம் பழிக்கும். பெரியோர்களை அடுத்து, நன்மை தீமைகளை அறிந்து, ஒருவன் காரியத்தில் இறங்க வேண்டும். துரியோதனன் பெரியோர்களை அடுக்காததால் தான் பாண்டவர்களைப் பகைத்துக்கொண்டான். தீயவனான துரியோதனன் சொல்லை அனுசரித்து நாம் காரியத்தில் இறங்கி இருக்கக்கூடாது. அவனை அனுசரித்ததனால், அநீதியான காரியத்தைச் செய்யவும் நமக்குத் துணிவு வருகிறது. கவலை வயப்பட்டு, புத்தி மயங்கி இருக்கிற நாம், எது நன்மை என்பதை அறிய முடியாது தவிக்கிறோம். மதிமயக்கம் ஏற்பட்டதால், நண்பர்களை அடுத்து, மயக்கத்தை நாம் போக்கிக்கொள்ள வேண்டும். நாம் சென்று திருதராட்டிரன், காந்தாரி, விதுரர் இவர்களை இதுபற்றிக் கேட்போம். அவர்கள் சொல்லுகிறபடி நடப்போம். முயற்சியுள்ள மனிதன் காரியசித்தி பெறாவிட்டால், அது தெய்வ சங்கல்பம் என்று தெரிந்து கொள்வது நலம்" என்று சொன்னார்.

# சிவபெருமான் கொடுத்த கத்தி

துயரமேலிட்டு இருந்த காரணத்தால், கிருபர் சொன்ன நல்லுரைகளை அசுவத்தாமா கேட்கவில்லை. மனத்தை அவர் மேலும் கடுமையாக்கிக்கொண்டார். அவர் மற்ற இருவரையும் நோக்கி, "தனக்கு நல்லது என்று தோன்றுவதைச் செய்கின்ற மனிதன் மகிழ்ச்சி அடைகிறான். மனிதனுடைய புத்தி ஒரே நிலையில் இருப்பது இல்லை. குழந்தை வாலிபம், மத்திய பருவம், முதுமை இந்த நான்கு பருவங்களிலும் மனிதனுடைய புத்தி வெவ்வேறு விதமாக இருக்கும். அதே போலப் பெருங் கலையும் பெருத்த செல்வமும் மனிதனுடைய புத்தியில் வேறுபாட்டைக் காட்டுகின்றன. பிராமண குலத்தில் பிறந்த நான், பாக்கியக் குறைவினால் அரசகுலதருமத்தைக் கடைப்பிடிக்க வேண்டியவன் ஆனேன். இப்பொழுது நான் அந்தணகுல தருமத்தைக் கடைப்பிடிக்க முயன்றால், பெரியோர்கள் சம்மதிக்க மாட்டார்கள். நாங்கள் வெற்றியடைந்துவிட்ட பெருமிதத்தினால் மகிழ்ச்சியுற்றுப் பாஞ்சாலர்கள் உறங்குகிறார்கள். பாசறைக்குள், புகுந்து அவர்களை நான் தாக்கப் போகிறேன். ஆட்டின் தலையை வெட்டுவதுபோல, திட்டத்துய்மனன் தலையை இன்று இரவு துண்டித்து, கடமையை நிறைவேற்றி, நான் ஆனந்தம் அடையப் போகிறேன் என்று சொன்னார்.

அசுவத்தாமா இப்படிச் சொன்னதும் கிருபர் "வீரனே! பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்ற முனைப்புடன் நீ இருக்கிறாய். உன் போக்கை யாரும் தடுக்க முடியாது. நாளைக் காலையில் நாங்கள் இருவரும் உன்னுடன் வருகிறோம். கவசத்தைக் கழற்றி வைத்துவிட்டு, இன்று இரவு இளைப்பாறு. பகைவர்களான பாஞ்சாலர்களை நாளைய தினம் நீ கொல்லலாம், நெடுநேரம் விழித்துக்கொண்டிருந்த நீ, நன்கு துயின்று சோர்வை அகற்றிக்கொள். காலையில் எழுந்து பகைவர்களை அழிக்கலாம். ஆயுதம் பிடித்த உன்னைத் தேவர்களாலும் வெல்ல முடியாது. மூவரும் சேர்ந்து சென்றால் வெகு எளிதில் பாஞ்சாலர்களை வதம் செய்துவிடலாம். காலையில் நாம் போவோம்" என்று சொன்னார்.

கிருபர் சொன்ன புத்திமதி அசுவத்தாமாவுக்குப் பிடிக்கவில்லை. கோபங்கொண்டு கண்களை அவர் புரட்டி விழித்தார். "நோயாளி, பொறாமைக்காரன், பண ஆசைபிடித்

தவன், பெண்ணுசை கொண்டவன் இவர்களுக்கு உறக்கம் வராது. பொறுமைக் குணம் எனது தூக்கத்தைக் கலேத்து விட்டது. என் தந்தையைக் கொன்றவன் உயிருடன் இருக்கும்பொழுது, எனக்கு எப்படித் தூக்கம் வரும்? திட்டத்துய் மனைவைக் கொல்லாதவரை எனக்குள்ள ஆத்திரம் தணியாது. அவனே அவசியம் நான் கொன்றேயாக வேண்டும். பகைவர் களை அழிக்காதவரை எனக்கு உறக்கமும் வராது; சுகமும், ஏற்படாது'' என்று அசுவத்தாமா பதில் சொன்னுர்.

"கேட்க வேண்டும் என்ற விருப்பம் இருந்தாலும், அடக்க மில்லாதவனுக்கும் தீயபுத்தியுள்ளவனுக்கும் பிறர் சொல்லும் நல்லுரை காதில் ஏறவே ஏருது. மேதாவியாய் இருந்தாலும் அடக்கமில்லாதவனுக்கு அறத்தைத் தெரிந்துகொள்ள முடியாது. பருப்பின் சுவையைக் கரண்டி அறியாதது போல், பண்டிதனே அடுத்து இருந்தாலும், மந்தபுத்தியுள்ளவனுக்கு அறத்தின் இயல்புகளைத் தெரிந்து கொள்ள முடியாது. வீரனே! உறங்கிக் கொண்டிருப்பவர்களைக் கொல்வது தருமம் அன்று. சிறந்த வில்லாளியான நீ கொடுமையான காரியங்களைத் துணிந்து செய்யாதே. உத்தமமான உன் புகழுக்கு மாசை உண்டாக்கிக்கொள்ளாதே. நாளைக் காலை சூரிய உதயமானதும் பகைவர்களை அழிக்க நீ செல்லலாம். அதனுல், உனக்குப் பெருமை உண்டு'' என்று சொன்னுர் கிருபர்.

''மாதுலரே! தாங்கள் திறமையாக உபதேசம் செய்கிறீர்கள். பலர் பார்த்திருக்க, பாண்டவர்கள் தருமம் என்கிற அணையை உடைத்துவிட்டார்கள். நிராயுதபாணியாக இருந்த என் தந்தையை வதம் செய்துவிட்டார்கள், கர்ணன், பீஷ்மர், பூரிசிரவஸ், துரியோதனன் இவர்களை எல்லாம் அதர்மமாகவே பாஞ்சாலர்கள் கொன்றுர்கள். ஆகவே, என் தந்தையைக் கொன்ற பாஞ்சாலர்களைக் கொன்று, புழு வாகவோ பறவையாகவோ நான் பிறந்தாலும் பாதகம் இல்லை. என் தந்தையைக் கொன்றவனைக் கொல்லாமல் நான் தூங்கப் போவது இல்லை'' என்று சொன்னுர் அசுவத்தாமா.

பிறகு குதிரைகள் பூட்டிய தேரில் ஏறிக்கொண்டு, பகைவரை நோக்கி அவர் சென்றுர்.

இதைக் கவனித்த கிருபரும் கிருதவர்மாவும் "தேரில் ஏன் புறப்பட்டுச் செல்கிருய்? நாங்களும் உன்னுடன் வந்து சுக துக்கங்களில் பங்குகொள்கிறேம்'' என்று சொன்னுர்கள்.

“என் தந்தையைப் பாஞ்சாலன் திட்டத்துய்மனன் கொன்ருன். கவசத்தைக் கழற்றிவிட்டு, அமைதியாக இருக்கும் அவனை நான் கொல்லப்போகிறேன். நீங்களும் கவசம் தரித்துக் கத்தியை எடுத்துக் கொள்ளுங்கள். என் பின்னே வாருங்கள்” என்று சொன்ஞர் அசுவத்தாமா.

அதன்படி இருவரும் அசுவத்தாமாவைப் பின்தொடர்ந்தார்கள். பாஞ்சாலர்கள் உறங்கும் பாசறையை அடைந்தார்கள்; அசுவத்தாமா அதன் வாயிலில் நின்ருர்.

அந்த வாயிலை மறித்துக்கொண்டு பெரிய பூதம் ஒன்று நின்றது. அந்தப் பூதம் புலித் தோலை ஆடையாகவும் மான் தோலை மேலாடையாகவும் அணிந்திருந்தது. அதனுடைய பருத்த தேகம் சந்திரர் சூரியர்களைப்போல் பளபளத்தது. அதன் மார்பில் பாம்பு பூணுலாகக் கிடந்தது. பருத்த ஆகிருதியோடு விளங்கிய அந்தப் பூதத்துக்கு ஆயிரம் கண்கள் இருந்தன.

இந்தப் பூதத்தைப் பார்ப்பவர்கள் யாரும் பயந்து போவார்கள்; ஆனல் அசுவத்தாமாவோ பயப்படாது அதன் மீது பாணங்களை எய்தார். அவை அனைத்தும் பயனற்றுப் போயின. பிறகு சிறந்த கத்தி ஒன்றை எடுத்துப் பூதத்தின் மீது வீசினர். அதுவும் பயனற்றுக் கீழே விழுந்தது. அசுவத்தாமாவிடம் இருந்த ஆயுதங்கள் அனைத்தும் தீர்ந்து போயின.

அசுவத்தாமா ஆச்சரியம் அடைந்தார். கிருபர், கிருதவர்மா இருவரும் சொன்ன நல்லுரைகளை நினைவுபடுத்திக் கொண்டார். “நல்லோர் சொல்லும் புத்திமதியைக் கடைப்பிடியாதவன் துக்கமடைவான். தருமத்தை மீறி அதருமம் செய்பவன் அவதிப்படுவான். ‘பசு, பிராமணன், அரசகுலப் பெண்டிர், நண்பன், தாய், குரு, முதியோர், சிறுவன், மந்தன், குருடன், தூங்குபவன், பயந்தவன், எழுந்திருப்பவன், மதம் கொண்டவன், பித்தன், கவனக் குறைவாக இருப்பவன் இவர்கள்மீது ஆயுதப் பிரயோகம் செய்யக் கூடாது என்று பெரியவர்கள் வரையறை செய்திருக்கிருர்கள். பெரியோர் சொல்லை மதியாது மீறி நடந்ததனுல் நான் பேராபத்தில் சிக்கிக்கொண்டேன். பெரிய காரியத்தைத் தொடங்கிப் பிறகு பயத்தினுல் அதை விட்டுவிட்டுப் பேராபத்து என்று அறிஞர்கள் கூறி இருக்கிருர்கள். மனித முயற்சியால் முடியாததைத் தெய்வ பலத்தினுல் சாதித்துக்கொள்ளலாம். ஆகவே இப்பொழுது மகாதேவரை வழிபட்டால், இந்தப் பூதத்தை

அவர் அழிப்பார்" என்று தனக்குத் தானே சொல்லிக்கொண் டார்.

பிறகு அசுவத்தாமா, மகாதேவரை நினைத்துத் தியானம் செய்தார். துதித்தார்; அக்கினியில் தம்மை அர்ப்பணித்துக் கொள்ளத் தொடங்கினார்.

பூதவடிவில் வந்திருந்த மகாதேவர் சிரித்துக்கொண்டே அசுவத்தாமாவுக்கு உடனே தரிசனம் தந்தார். ஒரு கத்தியை யும் அசுவத்தாமாவிடம் கொடுத்தார்.

## படுகொலை

கத்தியைக் கையில் பிடித்துக் கொண்டு, பாசறையை நோக்கி அசுவத்தாமா புறப்பட்டார்; கிருபரும், கிருதவர்மா வும் அவரைப் பின்தொடர்ந்தார்கள். அவர்கள் தன்னுடன் வருவதைக் கண்டு அசுவத்தாமா மகிழ்ச்சி யடைந்தார். "நான் பாசறைக்குள் புகுந்து, தூங்குபவர்களை வதம் செய்யப் போகிறேன். தப்பியோடி வருபவர்களை நீங்கள் இருவரும் கொல்லுங்கள். இதையே நான் உங்களிடம் எதிர் பார்க்கிறேன்" என்று சொன்னார்.

பிறகு பாஞ்சாலர்களின் பாசறைக்குள் வேறு வழியாகப் புகுந்தார். தூங்கிக்கொண்டிருப்பவர்களைச் சுற்றும் முற்றும் பார்த்தார். திட்டத்துய்மனன் துயிலும் இடத்துக்கு மெது வாகச் சென்றார். போரில் வெற்றி பெற்று இருந்த அவர்கள் கவலையின்றி அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தார்கள்.

வெண்பட்டினால் செய்த மென்மையான மெத்தையில் திட்டத்துய்மனன் தூங்கிக் கொண்டிருந்தான். நறுமண மலர் களும், வாசனைப் புகையும் அந்தப் படுக்கை அறையில் கமழ்ந் தன; உள்ளே புகுந்த அசுவத்தாமா, பயமின்றியும், கவலை யின்றியும் உறங்கிக் கொண்டிருந்த திட்டத்துய்மனனை எட்டிக்காலால் உதைத்தார்.

திட்டத்துய்மனன் விழித்துப் பார்த்தான்; வந்திருப்பவர் அசுவத்தாமா என்பது தெரிந்து எழுந்தான். இரு கை களாலும் அவன் குடுமியைப்பற்றி இழுத்து. தரை மீது தள்ளி, அவனை அசுவத்தாமா தேய்த்தார். தூக்கக் கலக்கத்தில் இருந்தபடியால் திட்டத்துய்மனனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. நாண் கயிற்றை விரைவாக அவிழ்த்து அதைத் திட்டத்துய்மனன் கழுத்தில் மாட்டிக் கொல்லப்

போனான். கீழே தள்ளிக் கிடந்த அவன் மீது ஏறி, கழுத்திலும் மார்பிலும் கால்களிலும் மிதித்தார்.

திட்டத்துய்மனன் தன் நகங்களால் அசுவத்தாமாவைப் பிராண்டினான். குளறிக் கொண்டு, "ஆசாரியரின் புதல்வரே! என்னை ஆயுதத்தால் கொல்லும்; அதனால் எனக்குப் புண்ணிய லோகம் கிட்டும்" என்று வேண்டினான்.

"குலத்தைக் கெடுத்த பாவி! ஆசாரியனைக் கொன்றவனுக்கு நல்ல உலகு கிட்டாது. குரூரமாக என் தந்தையைக் கொன்ற உன்னை நான் குரூரமாகக் கொல்வேன்" என்று சொல்லி, உயிர்நிலை உறுப்புகளில் ஓங்கி உதைத்தார்.

திட்டத்துய்மனன் போட்ட அலறலைக் கேட்டு, பெண்களும் காவல்காரர்களும் விழித்துக் கொண்டார்கள். அசுவத்தாமாவின் தோற்றத்தைக் கண்டதும் பூதம் எனப் பயந்து பேசாமல் இருந்துவிட்டார்கள் திட்டத்துய்மனனை இவ்வாறு கொன்ற பின், திரும்பி வந்து தனது தேரில் அசுவத்தாமா ஏறிக்கொண்டார். திசைகள் அதிர முழங்கிக்கொண்டு மற்றொரு வீரனின் பாசறைக்கு விரைந்தார்.

வீட்டிலுள்ள காவல்காரர்களும் பெண்களும் "அரக்கனோ, பூதமோ, மனிதனோ தெரியவில்லை. அரசகுமாரனைக் கொன்றுவிட்டுத் தேரில் ஏறிச் செல்கிறான்" என்று கூவினார்கள்.

மற்ற வீரர்கள் எழுந்து, அசுவத்தாமாவைத் தாக்கினார்கள். அவர்கள் அனைவரையும் அசுவத்தாமா ஒரு நொடியில் அழித்துவிட்டார்.

இதன் பின்னர் அவர் உத்தமௌஜஸ் என்பவனைக் காலால் உதைத்துக் கொன்றார். கதையை எடுத்து எதிர்த்து வந்த யுதாமன்யுவை, ஆட்டைக் கொல்வதுபோல் கொன்றார். கத்தியை எடுத்துக் கொண்டு வெறிபிடித்தவர்போல் படுத்து உறங்கும் ஒவ்வொருவரையும் வெட்டிச் சாய்த்தார். குதிரைகளையும் யானைகளையும் வெட்டினார். அசுவத்தாமாவின் தோற்றமும் சாயலும் அதி பயங்கரமாய் இருந்தன.

திட்டத்துய்மனனைக் கொன்ற விவரம் தெரியவந்து, திரௌபதியின் புதல்வர்கள், அசுவத்தாமாவை எதிர்த்தார்கள். அவர்கள் ஐவரையும் அசுவத்தாமா கொன்றார். பிரதிவிந்தியன், சுதசோமன், சதானீகன், சிருதவர்மா, சுருதகீர்த்தி ஆகிய ஐவரும் அவருடைய வாளுக்கு இரையாயினர்.

பிறகு, பீஷ்மரைக் கொன்ற சிகண்டியை இரண்டு துண்டாக வெட்டிக் கொன்றார். விராடன், துருபதன் முதலியவர்களின் எஞ்சியிருந்த சேனைவீரர்களையும் அழித்தார்.

அசுவத்தாமா செய்த அட்டகாசத்தையும் ஆர்ப்பாட்டத்தையும் கண்டு, போர்வீரர்கள் எழுந்து ஆங்காங்கு ஓடினார்கள்; அலறினார்கள்; விகாரமாகக் கதறினார்கள்; நிலைகுலைந்து பதுங்கினார்கள்; சிலர் மலத்தைக் கழித்தார்கள்; சிலர் மூத்திரத்தைப் பெய்தார்கள்; யானைகளும் குதிரைகளும் கட்டறுத்துக்கொண்டு நாலா திக்கிலும் ஓடின.

பாசறையிலிருந்து தப்பிஓடிவந்தவர்களை, கிருபரும் கிருதவர்மாவும் வாயில்படியில் நின்று கொன்றார்கள். கைகூப்பி வணங்கியவர்கள், பயந்தவர்கள், துடித்தவர்கள் இவர்களைக் கூட அவர்கள் விடவில்லை. கூடுமானவரை அடித்துக்கொன்ற பின்னர், பாசறையில் மூன்று இடங்களில் கிருபரும் கிருதவர்மாவும் நெருப்பு வைத்தார்கள்.

பாதி இராத்திரி சமயத்தில், பாண்டவர்களின் படையில் பெரும் பகுதியை அசுவத்தாமா அழித்து முடித்தார். அரக்கர்களும், பேய் பிசாசுகளும் மானுட இறைச்சியைத் தின்பதற்குப் பெரும் கூட்டமாக கூடி விட்டன, 'இது சிறந்தது; இது பரிசுத்தமானது. இது ருசியுள்ளது' என்று கூறிக்கொண்டே இறைச்சிகளையும் எலும்புகளையும் கொழுப்புகளையும் அவை தின்றன.

பொழுது புலரும்வரை, பாண்டவ வீரர்களை வதம் செய்துவிட்டு, அசுவத்தாமா ஓய்ந்தார்; பிறகு அசுவத்தாமா பாசறையை விட்டு வெளியே வந்தார். கிருபரிடமும் கிருதவர்மாவிடமும் நடந்தவற்றைச் சொன்னார். "பாக்கியம் பாக்கியம்" என்று சொல்லி, மூவரும் மகிழ்ச்சி அடைந்தார்கள்; கிருபர், கிருதவர்மா இருவரையும் கட்டித் தழுவிக் கொண்டார் அசுவத்தாமா.

"நாம் பாஞ்சாலர்களையும் திரௌபதி புதல்வர்களையும் வதம் செய்து நமது கடமையை நிறைவேற்றி முடித்தோம். காலதாமதம் செய்யாமல், நாம் சென்று துரியோதனனைச் சந்திக்கலாம். உயிருடன் இருந்தால் அரசன் இதனால் பெரிதும் மகிழ்ச்சி அடைவான்" என்று அசுவத்தாமா சொன்னார்.

மூவரும் துரியோதனன் அடிபட்டுக் கிடக்கும் இடத்துக்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

# துரியோதனன் முடிவு

பாஞ்சாலர்கள் அனைவரையும் படுகொலை செய்து விட்டுச் சென்ற அந்த மூவரும், குற்றுயிராகக் கிடக்கும் துரியோதனனிடம் போனார்கள். தேரிலிருந்து இறங்கி, அவனைச் சூழ்ந்து நின்றார்கள்.

துரியோதனன் பூமியில் புரண்டு கொண்டிருந்தான். நினைவு குன்றி, வாய் வழியாக இரத்தத்தைக் கக்கிக்கொண்டு அவன் கிடந்தான். கொடிய விலங்குகளும் நாய்களும் அவனைத் தின்ன அணுகி வந்தன; மிகுந்த சிரமத்துடன் துரியோதனன் அந்தக் கொடிய விலங்குகளை அப்பால் விரட்டினான்.

இந்த நிலையைக் கண்டதும், மூன்று வீரர்களும் புலம்பி அழுதார்கள். அடையத்தகாத நிலையை அடைந்த அரசனது நிலையைக் கண்டு, துயரம் மேலிட்டுக் கதறினார்கள்.

கிருபர் அரசனுடைய வாயிலிருந்து ஒழுகும் உதிரத்தைத் துடைத்துவிட்டார். "பதினோரு அக்குரோணி சேனைக்கு அதிபனாக இருந்த அரசன் அநாதைபோலப் படுத்து இருக்கிறான். தன் பொறுப்பைச் செய்யத் தெய்வம் தவறி விட்டது. மனைவிபோல் பிரியத்தோடு அரசன் வைத்திருந்த பொன் மயமான கதாயுதம் அப்பால் கிடக்கிறது முடி சூடின மன்னர்களுக்கு எல்லாம் மன்னனாக விளங்கிய அரசன், மண்ணைக் கௌவிக்கொண்டு தரையில் கிடக்கிறான். அந்தோ! காலத்தின் கோலம் தான் என்னே! எந்த அரசனைக் கண்டு மற்ற அரசர்கள் பயந்து வணங்கினார்களோ, அந்த அரசன் புலால் தின்னும் பிராணிகளால் சூழப்பட்டு, கிடக்கிறான்!" என்று பலவாறு புலம்பினார்.

அசுவத்தாமா துரியோதனனைக் கட்டிக்கொண்டு துயரம் தாங்காது அழுதார். "அண்ணலே! வில்லாளிகள் அனைவரிலும் மேம்பட்ட வில்லாளியான உன்னைச் சமையல் வேலையில் தேர்ந்த பீமன் எவ்வாறு காயப்படுத்தினான்? இந்த ஆற்றல் அவனுக்கு எப்படி வந்தது? வீரனே! போரில் நீ வீழ்ந்ததனால் உனக்கு வீர சொர்க்கம் கிட்டும். உனக்காக நான் கவலைப்படவில்லை. வயது முதிர்ந்த உன் தாய் தந்தையர்களை எண்ணும் பொழுதுதான் எனக்குக் கவலை பொங்குகிறது உன்னை அடுத்திருந்த நானும் கிருதவர்மாவும் கிருபரும் போரில் உயிர் நீத்திருந்தால் எங்களுக்குப் பெருமையாம்

இருந்திருக்கும். உன்னை நாங்கள் பின்தொடராமல் இருப்பதால் எங்கள் நிலை நிந்திக்கத்தக்கது. நானும் என் தந்தையும் என் மாமனும் உன்னை அடுத்து சுகபோகமாக வாழ்ந்தோம். உன்னைப் பிரிந்த பின் எங்களுக்குச் சுகம் ஏது? சொர்க்கத்தில் ஆசாரியரைச் சந்திக்கும்பொழுது, திட்டத்துய்மனை நான் வதம் செய்ததை அவரிடம் தெரிவி. நம் பொருட்டு உயிர் நீத்த மற்ற வீரர்களிடமும் நான் நலம் விசாரித்ததாகக் கூறு'' என்று சொன்னார்.

பிறகு மேலும் தொடர்ந்து, 'அரசனே! நீ உயிருடன் இருப்பதால், உனது காதுகள் குளிரும்படியான வார்த்தையைக் கேள்; பாண்டவர்களில் ஏழு பேர் மிகுந்தனர்; நம்மில் மூவர் மிகுந்தோம். மற்றவர்கள் அனைவரும் கொல்லப்பட்டார்கள். பாண்டவர்களின் பாசறையில் புகுந்து அனைவரையும் கொன்று முடித்துவிட்டேன்'' என்று கூறினார்.

மனதுக்கு இனிய இந்த வார்த்தைகளைக் கேட்டதும், துரியோதனன் உற்சாகம் அடைந்தான். ''கிருபர், கிருதவர்மா, நீர் ஆகிய மூவரும் செய்திருக்கிற காரியத்தைப்போல் பீஷ்மரும் எனக்குச் செய்யவில்லை, கர்ணனும் செய்யவில்லை; துரோணரும் செய்யவில்லை. திட்டத்துய்மனும் சிகண்டியும் கொல்லப்பட்டதை அறிந்து மகிழ்ச்சி. இன்று என்னை இந்திரனுக்கே சமமாக நான் மதிக்கிறேன். உங்களுக்கு நன்றி. மறுபடியும் சொர்க்கத்தில் நாம் சந்திப்போம்'' என்று சொன்னான் துரியோதனன்.

இவ்வாறு சொல்லிவிட்டு, உதாரகுணமுள்ள துரியோதனன் உயிர் துறந்தான்.

அவனுடைய உடலத்தை அசுவத்தாமா, கிருபர், கிருதவர்மா மூவரும் கட்டித் தழுவிக் கொண்டார்கள். திரும்பத் திரும்ப அவனைப் பார்த்துக் கொண்டே தேர்களில் ஏறினார்கள்.

## புத்திர சோகம்

பொழுது புலர்ந்ததும் திட்டத்துய்மனுடைய தேர்ப்பாகன் அரசன் யுதிட்டிரரிடம் சென்றான். இரவில் பாசறையில் நடந்த படுகொலையைப்பற்றி அவரிடம் விவரித்தான்.

"அரசே! இரவு திரௌபதி புதல்வர்களும் துருபத மன்னருடைய புதல்வர்களும் கவலையின்றி, கவனக் குறைவாக உறங்கிக்கொண்டிருந்தார்கள். கொலைகாரன் இருபன், பாவி அசுவத்தாமா, கிருதவர்மா மூவரும் பாசறைக்குள் புகுந்து, படுகொலை செய்து விட்டார்கள். நான் ஒருவன் தான் அந்த படுகொலையினின்று தப்பியவன். கிருதவர்மாவின் பிடிப்பிலிருந்து தப்பியது பெரும் பிரயாசை ஆகிவிட்டது" என்று சொன்னான்.

தேர்ப்பாகன் சொன்ன அமங்களமான இந்தச் சொற்களைக் கேட்டு அரசர் யுதிட்டிரர் பூமியில் சாய்ந்தார். விரைந்து சென்று சாத்யகி அவரைத் தாங்கிக் கொண்டான்; தம்பியர் நால்வரும் தலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டார்கள்.

மூர்ச்சை தெளிந்து யுதிட்டிரர் பலவாறு புலம்பினார். பகைவர்களை வென்று இருக்கும் தம்மைப் பிறர் முடிவில் வென்றது குறித்து வருந்தினார். "எது எது எப்படி நடக்கும் என்பதை வீரர்களால்கூட முன்னதாக அறிய முடியாது. நாம் தோற்கடித்த பகைவர்கள் இப்பொழுது நம்மை தோற்கடித்து விட்டார்கள். வெற்றி வீரர்களாகத் திகழ்ந்த நாம் இப்பொழுது முழுத் தோல்வி அடைந்தோம். இதனால் செழிப்பு வறுமையாகி விட்டது; வறுமை செழிப்பாகி விட்டது. நாம் பெற்ற வெற்றியே நமக்குத் தோல்வியாகி விட்டது. வீணன்போல அழுது புலம்பும் நிலை ஏற்பட்டுள்ளது. கிடைத்திருக்கும் வெற்றி ஒரு வெற்றியாகுமா? கவனக்குறைவாக இருப்பவனுக்கு புகழ்கிட்டாது; பொருள் கிட்டாது; எதிலும் அவன் வெற்றி பெறவும் முடியாது; வெற்றி பெற்றாலும் நிலையாய் இராது: செல்வப் பெருக்குள்ள வியாபாரிகள் பெரிய சமுத்திரத்தைக் கடந்து, சிறிய நதியில் மூழ்கினது போன்ற ஒரு கதியை நாம் இப்பொழுது அடைந்துள்ளோம்: திரௌபதி இந்தத் துயரத்தை எவ்வாறு சகிப்பாள் என்பதுதான் எனக்குப் பெருங் கவலையாய் இருக்கிறது. தந்தை, சகோதரர்கள், புலவர்கள் இவர்களைப் பறிகொடுத்து எப்படி அவள் மனம் தேறுவாள்?" என்று சொல்லிப் புலம்பினார்.

அருகில் நின்ற நகுலனை நோக்கி, "பாக்கியக் குறைவுள்ள திரௌபதியை நீ இங்கே அழைத்துவா. பாஞ்சால மன்னர்களின் மனைவியர்களையும் அழைத்துவா" என்று சொன்னார்.

அதன்படி அழைத்து வர நகுலன் சென்றான். யுதிட்டிரர்
மற்றவர்களை அழைத்துக் கொண்டு, பாசறையை நாடிச்
சென்றார். அங்கே தன் உறவினர்களும் நண்பர்களும் வெட்
டுண்டும் அடியுண்டும், குத்துண்டும் கொலையுண்டும் கிடப்
பதைக் கண்டார். துயரம் தாங்காது வாய்விட்டு அலறினார்.
மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்தார். கண்ணீர் உகுத்து அழுது
புலம்பும் அவருக்கு நண்பர்கள் ஆறுதல் சொன்னார்கள்.

இது சமயம் திரௌபதியை அழைத்துக்கொண்டு நகுலன்
வந்து சேர்ந்தான். உபப்லாவியத்தில் இருந்த திரௌ
பதி தன் புதல்வர்கள் கொல்லப்பட்டதைக் கேட்டு,
காற்றினால் தள்ளாடும் வாழை மரம் போல் கீழே
விழுந்தாள்.

பரபரப்புடன் எழுந்து, தன் இரு கைகளிலும் அவளைப்
பீமன் தூக்கினான்; அவளுக்குச் சமாதானம் சொன்னான்.
பாஞ்சாலி அழுதுகொண்டே யுதிட்டிரரைப் பார்த்தாள்.
“அரசே! புதல்வர்களை அரசகுல தருமப்படி யமனுக்குக்
கொடுத்துவிட்டு, இந்த அகண்ட பூமியை ஆண்டு அனுப
விக்கப் போகிறீர். தூங்கிக் கொண்டிருந்த என் புதல்வர்களை
வதம் செய்த அசுவத்தாமாவைக் கொன்றாக வேண்டும்.
இல்லையேல் நெருப்பில் விழுந்து உயிரைவிடுவேன்” என்று
சொன்னாள்.

இப்படிச் சொல்லிவிட்டு உட்கார்ந்த திரௌபதிக்கு,
யுதிட்டிரர் ஆறுதல் சொன்னார். “தருமத்தை அறிந்தவளே!
உன் புதல்வரும் சகோதரர்களும் இறந்ததற்காக நீ வருந்தாதே.
அசுவத்தாமா இங்கிருந்து வெகு தொலைவிலுள்ள ஒரு காட்
டுக்குப் போய் விட்டார். கண்டுபிடித்து அவரை வதம் செய்
வது எளிதல்லவே!” என்று கூறினார்.

அதற்குத் திரௌபதி, “அசுவத்தாமாவின் தலையில் உடன்
பிறந்த மணி ஒன்று இருக்கிறதாம். அந்தப் பாவியைக்
கொன்று அவன் தலையில் இருக்கும் மணியை என்னிடம் எடுத்
துத் தர வேண்டும். இல்லையேல் உயிர் தரியேன்” என்று
சொன்னாள்.

இவ்வாறு யுதிட்டிரரிடம் சொல்லிவிட்டு, பீமனின் கரங்
களைத் திரௌபதி பற்றிக் கொண்டாள். “பீமசேனரே! அரச
குல தருமத்தை நினைந்து என்னை நீர் காப்பாற்றும். சம்பரனை
இந்திரன் கொன்றது போல, துரோண புத்திரனை நீர் கொல்
லும். உம்மைக் காட்டிலும் பராக்கிரமசாலி வேறு யார்

உளன்? ஆபத்துக் காலங்களில் எல்லாம் பார்த்தர்களை நீர் தான் காப்பாற்றி இருக்கிறீர். இப்போதும் துரோண புத்தி ரனைக் கொன்று நீர் சுகத்தை அடையும்" என்று பீமனை முடுக்

திரௌபதியின் துயரத்தைக் கண்ட பீமன் கொதித்து எழுந்தான். அம்புகளையும் வில்லையும் எடுத்துக்கொண்டு விரைந்து பெரிய தேரின்மீது ஏறினான். நகுலன் தேரை ஓட்டினான். அசுவத்தாமாவை நாடி, பீமன் புறப்பட்டான்.

## கொடிய பாணம்

பீமன் புறப்பட்டுப்போன பின்பு கண்ணன் யுதிட்டிரரை நோக்கினார். "அரசே! புத்திர சோகம் தாங்காது, தன்னந் தனியாகப் பீமன் அசுவத்தாமாவை எதிர்த்துச் செல்கிறான். பிரம்மசிரஸ் என்னும் அத்திரத்தைத் துரோணர், அர்ச்சுன னுக்கும் தம் புதல்வர் அசுவத்தாமாவுக்கும் தான் கற்றுக் கொடுத்திருக்கிறார். அசுவத்தாமா தீய குண முள்ளவன். கொடியவன்; பிரம்மசிரஸை அறிந்தவன்; அதனிடமிருந்து பீமனைக் காப்பது அவசியம்" என்று சொன்னார்.

இவ்வாறு சொல்லிவிட்டு, விரைவாகச் செல்லும் தேரில் கண்ணன் ஏறிக் கொண்டார். கருடக் கொடி கம்பீரமாகப் பறக்கும் அந்தத் தேரில் அர்ச்சுனனும் யுதிட்டிரரும் ஏறிக் கொண்டனர். கண்ணன் குதிரைகளைத் தட்டிவிட்டுத் தேரை ஓட்டினார். தேர் வேகமாகச் சென்றது. பீமசேனனைத் தொடர்ந்து அவர்கள் சென்றார்கள். பீமசேனனைத் தடுத்து அவர்களால் நிறுத்த முடியவில்லை.

பீமனே, பாகீரதி நதிக் கரையில் அசுவத்தாமா இருக்கி றார் என்பதை அறிந்து விரைவாக அங்கே போனான்.

அங்கே அசுவத்தாமா புழுதிபடிந்த மேனியுடன் இருந் தார்; அவருக்குப் பக்கத்தில் வியாச மகரிஷி வீற்றிருந்தார். அம்புகளையும் வில்லையும் எடுத்துக்கொண்டு 'நில் நில்' என்று சொல்லி, அசுவத்தாமாவைப் பீமன் எதிர்க்க விரைந் தான். கிருஷ்ணனும் 'அர்ச்சுனனும் யுதிட்டிரரும் தேரில் வருவதை அசுவத்தாமா பார்த்துவிட்டார். தமக்கு அந்திம காலம் நெருங்கிவிட்டதை அவர் உணர்ந்தார். உடனே அவருக்கு, தன் தந்தை கற்றுத் தந்த பிரம்மசிரஸ் எனும்

அத்திரம் நினைவுக்கு வந்தது. ஒரு புல்லை எடுத்து மந்தரித்தார். 'பாண்டவர்களை அழிக்கட்டும்' என்று சொல்லி அந்த அத்திரத்தை ஏவினார். மூன்று உலகங்களையும் எரிக்கப் புறப்படுவதுபோல, அந்த அத்திரம் நெருப்பைக் கக்கிக் கொண்டு புறப்பட்டு வந்தது.

இதைக் கவனித்த வாசுதேவர் "அர்ச்சுனா! இந்த அத்திரத்தைத் தடுப்பதற்கு உரிய பதில் அத்திரத்தைப் பிரயோகம் செய். உன் சகோதரனைக் காப்பாற்று" என்று சொன்னார்.

உடனே அர்ச்சுனன் வில்லையும் அம்பையும் எடுத்துக் கொண்டு தேரிலிருந்து இறங்கினான். பெரியோர்களை வாழ்த்தி வழிபட்டுவிட்டு, பதில் அத்திரத்தைப் பிரயோகித்தான்.

அதனால் உலகமே கிடுகிடுத்து நடுங்கியது; ஆயிரக்கணக்கான இடிகள் விழுந்தன. இதைக்கண்ட நாரதரும்,வியாசரும் அத்திரங்களின் வேகத்தைத் தணிக்கக் காட்சி கொடுத்தார்கள்; இரண்டு அத்திரங்களுக்கும் நடுவே நின்றுகொண்டு, அவற்றின் வேகத்தை இரண்டு ரிஷிகளும் தடுத்தார்கள். "வீரர்களே! இந்த அத்திரத்தை மனிதர்கள்மீது பிரயோகிக்கக்கூடாதே! என்ன காரியம் செய்தீர்கள்? பெருத்த அழிவை அல்லவா உண்டு பண்ணிவிட்டீர்கள்?" என்று சொன்னார்கள்.

மகரிஷிகள் இப்படிச் சொன்னதும், அர்ச்சுனன் தான் ஏவின அத்திரத்தைத் திருப்பி அழைத்துக்கொண்டான்.

அசுவத்தாமா தான் ஏவிய அத்திரத்தைத் திருப்ப முயன்றார். அவரால் முடியவில்லை. அவர் வியாச மகரிஷியை நோக்கி "உயிரைக் காக்க ஆசைகொண்டு, பீமன்மீது இந்த அத்திரத்தை ஏவினேன். துரியோதனனை அதரும வழியில் கொன்ற பீமனைக் கொல்ல ஆசைப்பட்டு அதை விடுத்தேன். ஆனால் அதைத் திருப்பி அழைக்கும் ஆற்றல் எனக்கு இல்லை. பாண்டவர்களைக் குறிவைத்து ஏவிய இந்தக் கணை அவர்களைக் கொல்லாமல் விடாது" என்று சொன்னார்.

வியாசர் அசுவத்தாமாவிடம் "குழந்தாய்! அர்ச்சுனன் தான் ஏவின கணையைத் திருப்பி அழைத்துவிட்டான்; நீயும் திருப்பி அழைத்துக்கொள். இல்லையேல் உலகில் பன்னிரண்டு ஆண்டுகள் ஒரு துளிகூட மழை பெய்யாது: உயிரினங்கள் வாடித் துன்புறும். அதனால்தான் இரக்க நெஞ்சமுள்ள

பிறகு திரௌபதி "இந்த மணியை அணிந்து கொள்ளத் தக்கவர் யுதிட்டிரர்தான்" என்று சொல்லி, அதை அவரிடம் கொடுத்தாள்.

யுதிட்டிரரும் மணியை வாங்கித் தமது தலையில் அணிந்து கொண்டு சந்திரன்போல் பிரகாசித்தார்.

இதன்பின்னர் யுதிட்டிரரை நோக்கி, "அரசே! இனிச்செய்ய வேண்டிய காரியங்களைக் கவனியும்" என்று சொன்னார் கண்ணன்.

**வியாசர்**

அருளிய

# மகாபாரதம்

---

## வியாசர் சொன்ன ஆறுதல்

*நூறு புதல்வர்களும் போரில் மடிந்ததனால் திருதராட்டிர மன்னன் அளவற்ற துயரம் அடைந்தான். சஞ்சயன் அவனுக்கு ஆறுதல் சொன்னான். "அரசே! துக்கப்படுவதால் யாது பயன்? பதினெட்டு அக்குரோணி சேனைகள் இந்தப் போரில் மாண்டன. உம் மைந்தன் பொருட்டாக, பற்பல நாட்டு மன்னரும் உயிர் துறந்தனர். அவர்களுக்கும் உன் மைந்தர்களுக்கும் உறவினர்களுக்கும் அந்திமக் கிரியைகள் செய்ய வேண்டும். அதற்கு ஏற்பாடு செய்யும்" என்று சொன்னான் சஞ்சயன்.*

*"சஞ்சயா! புதல்வர்களையும் உற்றார் உறவினரையும் இழந்த பின்னர், உயிருடன் வாழ்வதால் யாது பயன்? பெரியோர் சொன்ன புத்திமதிகளை உதறித் தள்ளிய நான், இப்போது சிறகு ஒடிந்த பறவையேபோல் தத்தளிக்கிறேன். முற்பிறப்பில் நான்செய்த தீவினைகள்தான் இப்பிறப்பில் என்னைச் சாடித் தாக்குகின்றன. என்னைப்போல் அதிர்ஷ்டக் கட்டையான ஒருவனை இந்த அவனி முழுவதிலும் காணமுடியாது" என்று புலம்பினான் திருதராட்டிரன்.*

*விதுரரும் திருதராட்டிரனுக்கு வேண்டிய ஆறுதல் சொன்னார். "அரசே! உலகத்துக்கு நாதரே! மனத்தைத் திடமாக வைத்துக் கொள்ளும். வளர்வது தேய்வதும், உயர்வது தாழ்வதும், சேர்வது பிரிவதும், உயிருள்ளது இறப்பதும் தவிர்க்க முடியாத உலக நியதி. வீரனாயினும் சரி, காலத்தைக் கடப்*

பது இயலாத காரியம். வேண்டியவன், வேண்டாதவன் என்ற வேறுபாடு காலத்துக்குக் கிடையாது. பார்வைக்குப் புலப் படாத இடத்திலிருந்து வந்தார்கள். இப்போது பார்வைக்கு புலப்படாத இடத்துக்குத் திரும்பி விட்டார்கள். இவர்களின் பொருட்டு வருந்துவதால் யாது பயன்? இளமை, வடிவம், உயிர், செல்வம், உடல் நலம், நண்பர்களுடன் இசைந்துவாழ் தல் இவை அனைத்தும் நிலையில்லாதவை. ஆகையால், கவ லையை விட்டுவிடும். நினைக்க நினைக்கக் கவலைதான் மிகுதி யாகும்" என்று சொன்னார்.

விதுரர் சொன்ன ஆறுதலால் நிம்மதியடையாத திருத ராட்டிரன், புத்திர சோகத்தினால் நலிந்து, மூர்ச்சையுற்று, கீழே விழுந்தான். வியாசரும், விதுரரும், சஞ்சயனும் மற்ற வர்களும் நீரால் முகத்தைக் கழுவி, திருதராட்டிரனுக்கு மூர்ச்சை தெளிவித்தார்கள். அவன் வியாசரை நோக்கி, "உத்தமரே! உற்றார் உறவினரையும் புத்திரர்களையும் இழந் தேன்; பொருள்களையும் இழந்தேன்; மிச்சம் இருப்பது அவமானம்தான். அதைக்கொண்டு உயிர் வாழ நான் பிரியப் படவில்லை. உயிர் துறப்பதைத் தவிர, வேறு வழி எனக்குப் புலப்படவில்லை" என்று பன்னிப் பன்னிப் புலம்பினான்.

"மைந்தா! நான் சொல்வதைக் கேள். நீ யாவற்றையும் அறிந்தவன். உனக்குத் தெரிய வேண்டுவது இனி ஒன்றும் பாக்கிஇல்லை. இவ்வளவு பெரிய அழிவும் தெய்வ சங்கல் பத்தால் ஏற்பட்டது. என்பதை நீ தெரிந்து கொள். நீ கவலைப்படுவது தெரியவந்தால் யுதிட்டிரன் உயிர் தரியான். அவன் மிகுந்த கருணையுள்ளவன்; அன்போடும் மரியாதை யோடும் உன்னை அவன் நடத்துவான். உயிரை மாய்த்துக் கொள்ள எண்ணாதே. அது அதர்மமாகும்" என்று வியாசர் திருதராட்டிரனுக்கு ஆறுதல் சொன்னார்.

அதற்குத் திருதராட்டிரன், "உத்தமரே! நீர் சொல்லு கிறபடி நடப்பேன். உயிரோடு வாழவும் துக்கத்தை மறக் கவும் என்னாலானவரை முயல்வேன்" என்று பதில்சொன்னான்

வியாச மகரிஷி மறைந்துவிட்டார்.

வியாசர் மறைந்த பின்னர், திருதராட்டிரன், "சஞ்சயா! தேரில் குதிரைகளைப் பூட்டு" என்று கட்டளையிட்டான். பிறகு விதுரரை நோக்கி, "நீ சென்று காந்தாரியையும் மற்றக் கௌரவ குலப் பெண்டிரையும் இங்கே அழைத்துவா" என்று ஏவினன்.

மன்னனுடைய கட்டளைப்படி, காந்தாரியும் குந்தியும் மற்றப் பெண்களும் அலறிக்கொண்டு அரசனிடம் விரைந்தார்கள். ஆறுதல் வார்த்தைகள் சொல்லி அவர்களைத் தேரில் ஏறச்செய்து, அவர்களுடன் தாமும் புறப்பட்டார் விதுரர்.

கணவனை இழந்த அந்த மாதர்கள், கூந்தல்கள் அவிழ்ந்து கிடக்க, அணிகலன்களைக் கழற்றி எறிந்துவிட்டு, ஒற்றைத் துகிலுடன் சென்றார்கள்.

அழுகின்ற ஆயிரக்கணக்கான மாதர்கள் தம்மைத் தொடர்ந்து வர, திருதராட்டிர மன்னன் அத்தினபுரத்திலிருந்து புறப்பட்டான். அந்த நகரிலுள்ள அனைவரும் குழந்தைகள் உள்படக் கூக்குரலிட்டு அழுதார்கள்.

ஒரு குரோச தூரம் சென்றதும், கிருபர், அசுவத்தாமா, கிருதவர்மா ஆகிய மூவரையும் அவர்கள் கண்டார்கள். அழுதுகொண்டு வருகின்ற அரசனைக் கண்டு, அவர்களும் கண்ணீர் உகுத்தார்கள்; பேசமுடியாமல் குரல் தடுமாறியது. அவர்கள் மூவரும் அரசனை நோக்கி, "வேந்தே! செயற்கரும் காரியத்தைச் செய்து, உம் புதல்வன் பரிவாரங்களுடன் இந்திர லோகம் சென்றான். துரியோதனனுடைய சேனையில், நாங்கள் மூவரும்தான் எஞ்சி உயிர் தப்பினோம்" என்று கூறினார்கள்.

பிறகு கிருபர், காந்தாரியை நோக்கி, "அரசி! உன் மைந்தர்கள் தீவிரமாகப் போர் புரிந்தார்கள்; பகைவர்களைக் கொன்று உயிர் நீத்தார்கள். அவர்கள் கும்பிட்டு வாழவில்லை. புறங்காட்டி ஓடவில்லை. போர்க்களத்தில் வீர சொர்க்கம் அடைந்தார்கள். அசுவத்தாமா பெருந் துயரக் கடலில் பாண்டவர்களை அமிழ்த்துவிட்டபடியால், அவர்கள் எங்களைத் துரத்திக்கொண்டு வரக்கூடும். நாங்கள் விடைபெற்றுக்கொள்கிறோம்" என்று சொன்னார்.

சொல்லிய பின், மூவரும் வலம்வந்து அரசனிடம் ——— பெற்றுக்கொண்டார்கள். அவனைப் பார்த்துக்கொண்டே கங்கைக் கரையை நோக்கிக் குதிரைகளைச் செலுத்தினார்கள். சிறிது தூரம் சென்றதும், மிக்க வருத்தத்துடன் ஒருவருடன் ஒருவர் விடைபெற்றுக்கொண்டு மூன்று பிரிவுகளாகப் பிரிந்து சென்றார்கள்.

கிருபர் அத்தினபுரத்திற்குத் திரும்பினார். கிருதவர்மா தன் நாட்டுக்குப் போனான். அசுவத்தாமா வியாசருடைய ஆசிரமத்துக்குப் போனார்.

## இரும்புப் பாவை

சகல வீரர்களும் போரில் மடிந்த பின்னர், தம் பெரிய தந்தை திருதராட்டிர மன்னன், அத்தினபுரத்திலிருந்து புறப்பட்டு வருவதாக யுதிட்டிரர் கேள்விப்பட்டார். புத்திர சோகத்தினால் வருந்தும் அவர், தன் தம்பியரையும் கண்ணனையும் சாத்யகியையும் அழைத்துக்கொண்டு, திருதராட்டிரனை எதிர்நோக்கிச் சென்றார். துயரத்தால் நலிந்திருக்கும் திரௌபதியும், பாஞ்சால அரசியர்களை அழைத்துக் கொண்டு, யுதிட்டிரரைப் பின்தொடர்ந்தாள்.

போர்க்களத்து அருகே அன்றில் பேடுகள்போல அலறிக் கொண்டு, மாதர்கள் கூட்டமாக நிற்பதை யுதிட்டிரர் கண்டார். "அரசனிடம் கருணையும் இல்லை. தருமமும் இல்லை. துரோணர், பீஷ்மர், ஜயத்ரதன் இவர்களையும் மற்றவர்களையும் கொன்று நாட்டை ஆள்வதால் யாது பயன்? அபிமன்யு, திரௌபதி புதல்வர்கள் இவர்களைப் பலி கொடுத்த பின், ராஜ்யத்தைப் பெற்று நீர் செய்யப்போவது என்ன?" என்று சொல்லி அலறினார்கள்.

இவ்வாறு அலறிக்கொண்டிருக்கிற மாதர்களைக் கடந்து யுதிட்டிரர், தம் பெரிய தந்தையிடம் சென்று அவரை வணங்கினார். பிறகு மற்றப் பாண்டவர்களும் கிரமமாக. திருதராட்டிரனை வணங்கி, தாங்கள் பெயரைத் தெரிவித்துக்கொண் கொண்டார்கள்.

புத்திர சோகத்தினால் பீடித்திருந்த திருதராட்டிரன் அன்பில்லாமலே யுதிட்டிரரைத் தழுவிக்கொண்டான். பிறகு அவன் பீமனைத் தழுவிக்கொள்ளப் பிரியப்பட்டான்.

திருதராட்டிரன் கோபத்துடன் இருப்பதைத் தெரிந்து கொண்ட வாசுதேவர், தழுவிக்கொள்ள இடம்கொடாமல் பீமனை அப்பால் போகச் சொல்லிவிட்டு, பீமனை ஒத்த இரும்புப் பாவை ஒன்றைத் திருதராட்டிரன் முன்னே வைத்தார்.

பதினாயிரம் யானைப் பலம்கொண்ட திருதராட்டிர மன்னன், அந்த இரும்புப் பாவையைத் தழுவிக்கொண்டான். தம் மைந்தர்களைக் கொன்றவன் இவன் என்ற ஆத்திரம் மேலிட்டுவிடவே, அழுத்திப் பிடித்து இறுக்கி, பாவையைப் பொடிப் பொடியாக்கிவிட்டான் திருதராட்டிரன். தானும் இரத்தத்தைக்கக்கிக்கொண்டு மூர்ச்சித்துக் கீழே சாய்ந்தான்.

கற்றறிந்தவனான சஞ்சயன் அவனைத் தூக்கி நிறுத்தி, "அரசே! தாங்கள் இப்படி நடப்பது கூடாது" என்று சொல்லி மன்னனுக்கு இருக்கும் துக்கத்தைத் தணிக்க முயன்றான்.

தான் பீமனைக் கொன்றுவிட்டதாகக் கருதி, திருதராட்டிர மன்னனே மனமுடைந்து வருந்தினான். "பீமசேனா! பீமசேனா!" என்று கதறினான்.

திருதராட்டிரனுக்கு இருந்த கோபம் தணிந்துவிட்டது என்பதை அறிந்த கண்ணன், "மன்னரே! தாங்கள் கவலைப் பட வேண்டாம். பீமன் சாகவில்லை. பீமனைப் போன்ற இரும்புப் பாவையைத்தான் தாங்கள் நொறுக்கிப் பொடிச் செய்தீர்கள். கோபத்துடன் இருந்ததால் உண்மையான பீமன் உம் அருகில் வராமல் விலகி இருக்கிறான். பதினாயிரம் யானைப் பலம்கொண்ட உம் கையில் சிக்கியவன் எவனும் உயிருடன் தப்புவது சாத்தியமா? இதனால் முன்னெச்சரிக்கை யாக இரும்புப் பாவையை உம் முன்னர் நான் வைத்தேன். புத்திர சோகம் மீறியிருப்பதால் உம் மனம் தருமத்தினின்று நழுவி இருக்கிறது. பீமனைக் கொல்லும் விருப்பத்துடன் நீர் இருப்பது உம் தகுதிக்கு அடுக்காது; பீமனைக் கொன்றதனால் உம் புதல்வர்கள் உயிர்பெற்று எழப்போவது இல்லை. நடந்து போனது குறித்துக் கவலை வேண்டாம். ஆறுதல் அடையும்" என்று சொன்னார்.

பணிப் பெண்கள் வந்து திருதராட்டிர மன்னனின் உடம்பைத் துடைத்துவிட்டார்கள்.

கண்ணன் மேலும் திருதராட்டிர மன்னனுக்கு ஆறுதல் சொன்னார். "வேந்தே! வேதங்களையும் புராணங்களையும் சாத்திரங்களையும் கற்றவர் நீர்; இராஜ தருமங்களையும் அறிந்

தவர் நீர். உம்மிடம் இருக்கும் குறைபாடுகளைப் பேரறிஞரான நீர் ஏன் காணத் தவறுகிறீர்? பீஷ்மரும் நானும் விதுரரும் சஞ்சயனும் இதுபற்றி முன்பே உமக்கு எடுத்துச்சொல்லி எச்சரித்தோம். நாங்கள் சொன்னதை நீர் ஏற்க மறுத்து விட்டீர். தன் குற்றத்தைத் தானே தெரிந்துகொண்டு, திருத்தும் அரசன்தான் மேன்மை அடைவான். துரியோதனனிடத்தில் அளவற்ற வாஞ்சைகொண்டு, அவனுக்குக் கட்டுப் பட்டு நீர் நடந்துகொண்டீர். அதன் பயனை இப்பொழுது அனுபவிக்கிறீர். குற்றம் உம்பால் இருக்க, கோபம் கொண்டு, பீமனை நீர் கொல்ல முயன்றது தகுமா?" என்று கேட்டார்.

"மாதவரே! நீ கூறுவது உண்மைதான். புத்திரபாசம் தருமத்தினின்று என்னை நழுவச் செய்துவிட்டது. என் கைப் பிடிப்பில் சிக்காமல் பீமனை நீர் அப்பால் விலகி இருக்கச் செய்தது என் பாக்கியம்தான். எனக்குள்ள கோபம் முற்றும் இப்பொழுது எனக்குத் தணிந்துவிட்டதால், பீமனைத் தழுவிக் கொள்ள நான் பிரியப்படுகிறேன்" என்று சொன்னான் திருதராட்டிரன்.

பிறகு பீமன், அர்ச்சுனன், நகுலன், சகதேவன் ஆகியோரை அவன் தழுவிக்கொண்டான்.

## பாண்டவர்களின் நடுக்கம்

இதன் பின்னர் திருதராட்டிர மன்னனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு, பாண்டவர்களும் கண்ணனும் காந்தாரியைக் காணச் சென்றனர். தன் புதல்வர்களைக் கொல்லக் காரணமாயிருந்த யுதிட்டிரரைச் சபிக்கும் எண்ணத்துடன் காந்தாரி இருந்தாள்.

அவளுடைய எண்ணத்தை வியாச மகரிஷி தெரிந்து கொண்டார். கங்கையில் நீராடிவிட்டு இருந்த அவர், ஞானக் கண்ணால் விவரத்தை அறிந்து, விரைவாகக் காந்தாரியிடம் வந்தார். வந்தவர் அவளை நோக்கி, "காந்தாரி! பாண்டவர்களிடம் பகைமை கொள்ளாதே; கோபத்தை விட்டுவிடு. தருமசீலரான பாண்டவர்கள் வெற்றிபெற்று இருக்கின்றனர். சபிக்கும் எண்ணத்தை விட்டுவிட்டுத் தருமத்தைக் கடைப்பிடி" என்று சொன்னார்.

"முனிவரே! புத்திர சோகத்தினால் என் மனம் தடுமாறுகிறது. நாபிக்குக் கீழ் அதருமமாக அடித்துத் துரியோதனனைப் பீமன் கொன்றதுதான், எனது கோபத்துக்குக் காரணம். கண்ணனும் பார்த்திருக்க, இப்படி ஓர் அதருமச் செயல் நடந்திருக்கக்கூடாது" என்று சொன்னாள் காந்தாரி.

காந்தாரி சொன்னதைக் கேட்டு, பீமன் பயந்துபோனான். அவளுக்கு ஆறுதல் சொல்ல, பீமன் முயன்றான். "தற்காத்துக்கொள்ள எண்ணிய நான், பயந்து தருமமாகவோ, அதருமமாகவோ செய்த செயலை நீ பொறுத்துக்கொள். தர்ம முறையில் போர் செய்தால் துரியோதனனை ஒருபோதும் என்னால் ஜயிக்க முடியாது. அதனால் அநியாயமாக அவனை நான் கொன்றேன். அவன் செய்த கொடுமையான காரியங்களை நினைந்து நினைந்து ஆத்திரமுற்று நான் கொன்றேன். சபை நடுவே இடது தொடையைத் தட்டிக் காட்டி, திரௌபதியை உன் மகன் அவமதித்தான். இத்தகைய அநியாயங்களுக்கு எல்லாம் ஒரு முடிவைக் கண்டு நாங்கள் எங்கள் கோபத்தை விட்டுவிட்டோம். தர முடியாது என்று துரியோதனன் மறுத்துச் சொன்ன இராஜ்யமும் எங்களுக்குக் கிடைத்துவிட்டது" என்று பதில் சொன்னான் பீமன்.

"விருகோதரா! நீ சொன்ன சொற்படி யாவற்றையும் செய்து முடித்துவிட்டாய்; துச்சாதனனுடைய இரத்தத்தைக் குடித்தாய், பெரியோர்களால் நிந்திக்கப்பட்ட இழிந்த இந்தக் காரியத்தை நீ செய்திருக்கலாகாது" என்று சொன்னாள் காந்தாரி.

"இரத்தத்தைக் குடிப்பதாகச் சபதம் செய்தேன். அதை நிறைவேற்றினேன்; ஆயினும் உதட்டையும் பற்களையும் தாண்டி உதிரம் அப்பால் செல்லவில்லை. அம்மா! நீ கவலைப்படாதே. சபதத்தை நிறைவேற்றாவிடில் பெரும் பழியுடன் வாழ நேரும் என்று அஞ்சித்தான் இதைச் செய்தேன். உன் புதல்வர்களை அடக்கிக் கட்டுப்படுத்தாமல் எங்கள்மீது நீ குற்றம் சுமத்துவது தவறு" என்று சொன்னான் பீமன்.

"அப்பா! நாங்கள் வயது முதிர்ந்தவர்கள். எங்கள் இருவருக்கும் ஊன்றுகோலாக எங்கள் பிள்ளைகளில் ஒருவனையாவது நீ விட்டுவைத்திருக்கக் கூடாதா? அப்படி ஒருவனை நீ விட்டுவிட்டிருந்தால், எங்கள் துக்கம் குறைந்திருக்குமே" என்று சொன்னாள் காந்தாரி.

பிறகு அவள், "அரசன் எங்கே?" என்று கேட்டாள்.

காந்தாரி கேட்டதும் யுதிஷ்டிரர் நடுங்கினார். கைகளைக்

குவித்துக் கொண்டு அவனை அணுகினார். "தேவி உன் புதல்வர் களைக் கொன்ற கொடியவன் இதோ நிற்கிறேன். உன் இஷ்டம்போல் என்னைச் சபி. உற்றார் உறவினர்களைக் கொன்ற எனக்கு இராஜ்யத்திலோ உயிரிலோ விருப்பம் இல்லை" என்று கூறினார்.

காந்தாரி பதில் ஒன்றும் சொல்லவில்லை. தன்னை அணுகி வணங்கி நிற்கும் யுதிட்டிரரின் கால் பெருவிரலைத் தன் கண்ணை மறைத்திருக்கும் பட்டுத் துணி மூலம் அவள் பார்த் தாள். யுதிட்டிரரின் கால் நகங்கள் அதனால் விகாரமாகி விட்டன.

இதைக் கவனித்த அர்ச்சுனன் பயந்து, வாசுதேவரின் பின்புறத்தில் பதுங்கிக்கொண்டான். பாண்டவர்கள் பயந்து பதுங்குவதை அறிந்த காந்தாரி, அவர்கள்மீது பரிவுகொண் டாள். கோபத்தைவிட்டு தாய்போல் அன்புடன் பேசினாள்.

பாண்டவர்கள் அவளிடம் அனுமதி பெற்றுக்கொண்டு, தங்கள் அன்னை குந்தியைக் காணச் சென்றனர்.

வெகு காலத்திற்குப் பின்னர் தன் புதல்தர்களைக் கண்ட குந்தி, கண்களை மூடிக்கொண்டு அழுதாள். காயமுற்ற மேனி யுடன் தன் முன்னே நிற்கும் புதல்வர்களைக் கண்டு கண்ணீர் சொரிந்தாள். அடிக்கடி அவர்களைத் தடவிக் கொடுத்தாள்.

புத்திரர்களை இழந்து பரிதவிக்கும் திரௌபதியைக் கண்டு பெரிதும் வருந்தினாள்.

திரௌபதி அவளை நோக்கி, "தாயே! உன் பேரன்மார் அனைவரும், அபிமன்யு உள்பட மாண்டு போயினர்; புதல்வர் களை இழந்தபின் இராஜ்யத்தில் எனக்கு யாது பயன்?" என்று புலம்பினாள்.

தன் மடியில் திரௌபதியைத் தூக்கி வைத்துக்கொண்டு குந்தி ஆறுதல் சொன்னாள்.

பிறகு புதல்வர்களை இழந்து வருந்தும் காந்தாரியிடம் சென்றாள். காந்தாரியும் குந்தியும் சேர்ந்து திரௌபதிக்கு ஆறுதல் சொன்னார்கள். "மாதே நீ கவலைப்படாதே. நானும் உன்னைப்போல் புதல்வர்களைப் போரில் இழந்து விட்டேன். கிருஷ்ணனும், விதுரரும் சொன்னதைக் கேட் காததனால் இவ்வளவு பெருத்த அழிவு ஏற்பட்டுவிட்டது. நடந்துபோன, தவிர்க்க முடியாத நாசத்தைக் குறித்து இப்பொழுது வருந்துவதால் யாது பயன்?" என்று ஆறுதல் சொன்னாள் காந்தாரி.

# காந்தாரியின் சாபம்

வியாச முனிவருடைய அருளினால் கற்பரசி காந்தாரி ஞானக்கண் பெற்று, இருந்த இடத்தில் இருந்தபடியே போர்க்களத்தைப் பார்த்தாள். பார்த்துப் பார்த்து, மனம் வெதும்பிப் புலம்பினாள்.

போர்க்களம் பார்க்கப் பயங்கரமாய் இருந்தது. எலும்புகள், மயிர்கள், தசைகள், ஊனீர், இரத்தம் முதலியன எங்கும் கிடந்தன. ஆயிரக்கணக்கான மானுட உடல்கள் இரத்த வெள்ளத்தில் மூழ்கிக்கிடந்தன; குதிரைகளும், யானைகளும் உயிர் இழந்து கிடந்தன; நரிகள், கழுகுகள், காக்கைகள் முதலியன போர்க்களத்தை வியாபித்துக் கொண்டிருந்தன.

வியாச மகரிஷி போர்க்களத்தைக் காண, திருதராட்டிர மன்னனுக்கும், ஞானக்கண்ணைக் கொடுத்தார். திருதராட்டிரன், காந்தாரி, கண்ணன், பாண்டவர்கள், கௌரவர்களின் மனைவியர்கள் எல்லோரும் போர்க்களத்துக்குச் சென்றனர்.

குருசேட்த்திரத்தில் கணவன் தந்தை, மகன், அண்ணன், தம்பி முதலியோர் மாண்டுகிடப்பதையும், நரி, கழுகு, பேய், பிசாசு, அரக்கர் முதலியோர் அவர்களைச் சூழ்ந்து திரிவதையும் கண்டு அந்த மாதர்கள் அன்றில் பேடுகள்போல் அலறினார்கள்; மயானம்போல் விளங்கிய போர்க்களத்தைக் கண்டு மருண்டு, மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்தார்கள். மாதர்களின் அழுகையும் புலம்பலும் அந்தப் போர்க்களம் முழுவதும் வியாபித்தன.

அழுகையையும், புலம்பலையும் செவிமடுத்த காந்தாரி மாதவரை நோக்கி, "கணவன்மார்களைப் பறிகொடுத்து, அன்றில்போல என் மருகியர்கள் புலம்புவதைப் பாரும். போரில் உயிர்நீத்த வீரர்களைக் கழுகுகளும், பருந்துகளும் கொத்தித் தின்னுகின்றன! பஞ்சணையில் படுத்திருந்து பழகிய அவர்கள் இப்பொழுது பாழும் தரையில் படுத்திருக்கிறார்கள். சந்தனமும், அகிற் சாந்தும் பூசிப் பழக்கமுள்ள அவர்கள் புழுதியில் கிடந்து புரள்கிறார்கள். கேசவா! ஒற்றை ஆடை உடுத்து, துரியோதனனுடைய மனைவியர் கூட்டமாக நின்று பொருள் விளங்காது புலம்புவதைப் பாரும். தலையில்லாத முண்டத்தையும், முண்டமில்லாத தலையையும் கண்டு அவர்கள் மதிமயக்க மடைகிறார்கள். பழக்கமுள்ள சரீரம் முண்டமாகக் கிடப்பதையும் அதன் அருகே தலை காணாமல் கிடப்பதையும் கண்டு திகைத்து, வேறு தலையை அந்த முண்டத்தோடு பொருத்திப் பார்த்து மலைக்

கிறார்கள். போன ஜன்மத்தில் செய்த பாவம்தான், இத்தகைய அலங்கோலங்களை எல்லாம் நான் காண நேர்ந்திருக்கிறது" என்று பலவாறு புலம்பினாள்.

துரியோதனனைக் கண்டதும், வாழைமரம் விழுவதுபோல் தரையில் சாய்ந்தாள் காந்தாரி. இரத்தத்தில் தோய்ந்து கிடக்கும் மகனைக் கட்டி அணைத்துக் கொண்டு, "மகனே!" என்று அலறினாள்.

அவள் கண்ணனை நோக்கி, "விருஷ்ணிகுலத் தோன்றலே! போர் தொடங்க இருந்த தருணத்தில் துரியோதனன் என்னை அணுகி, 'போரில் வெற்றிபெற எனக்கு ஆசி கூறு!' என்று கைகூப்பி வேண்டினான். 'எங்கே தருமம் இருக்கிறதோ, அங்குதான் ஜயம் ஏற்படும்' என்று அவனுக்கு நான் சொன்னேன். இப்பொழுது அவன் இறந்ததற்காக நான் துயரப்படவில்லை. வயது முதிர்ந்த திருதராட்டிரரைப்பற்றித்தான் எனக்குக் கவலையாய் இருக்கிறது. பதின்மூன்று ஆண்டுகள் பகைவர்கள் இன்றி இந்தப் பூமியை ஆண்ட என் மைந்தன், இப்பொழுது அநாதைபோல் பூமியில் படுத்து இருக்கிறான். என் நூறு புதல்வர்களையும் பீமன் கொன்றுவிட்டான். இதைக்காட்டிலும் வேறு பெரிய துயரம் எனக்கு என்ன இருக்கிறது? தத்தம் கணவனின் உடலைக் கொத்தித் தின்ன வரும் கழுகுகளை அந்தப் பெண்கள் அலறிக் கொண்டு விரட்டுவதை நீர் பாரும். போரில் மாண்ட தன் கணவன் அபிமன்யுவை நினைந்து அவன் மனைவி இளநங்கை விராட மகள் அழுது புலம்புவதைப் பாரும். தன் கணவன் முகத்தை அன்போடு அவள் தடவிக் கொடுப்பதைக் கவனியும். நான் இவ்வளவு சொல்லியும், எனக்கு நீர் ஏன் மறுமொழி கூறாமல் இருக்கிறீர்? துரோணர் வதம் செய்த விராட மன்னனைக் கழுகுகளும் காக்கைகளும் கொத்தித் தின்பதைப் பாரும். எவனை நினைத்துப் பயந்து பதின்மூன்று ஆண்டுகள் தூக்கம் வராமல் யுதிட்டிரன் அவதிப்பட்டானோ, அந்தக் கர்ணன் அர்ச்சுனனால் கொல்லப்பட்டு, பூமியில் கிடப்பதைப் பாரும். வீரன் ஜயத்ரதனைப் பயங்கர விலங்குகள் அதோ பள்ளத்துக்கு இழுத்துச் செல்கின்றன. என் மகள் துச்சலையும் என் மருகியரும் கைம்பெண்கள் ஆகிவிட்டனர். இதைவிடத் துயரம் தருவது எனக்கு வேறு என்ன இருக்கிறது? தன் நாயகனின் தலையைக்காணாமல் என் புதல்வி துச்சலை தவிக்கிறான். மத்ர மன்னன் சல்லியனின் நாவைப் பறவைகள் துண்டித்துத் தின்னும் கொடுமையைப் பாரும். காயமுற்று, அம்புப் படுக்கையில் கந்தனைப் போல் படுத்திருக்கிற பீஷ்ம

ரைப் பாரும். தேவர்களுக்கு நிகரான பீஷ்மரே உயிரை இழக்க நேருமாயின், மற்றக் கௌரவர்களைப்பற்றி நினைக்க என்ன இருக்கிறது? அனைவருக்கும் வில்லாசிரியராக இருந்த துரோணர் மாண்டு கிடப்பதையும், அவருக்கு அருகே இருந்து கிருபி புலம்புவதையும் பாரும்" என்று பலவாறு பன்னிப் பன்னிக் காந்தாரி புலம்பினள்.

"மதுசூதனா! இவ்வளவு அழிவுக்கும் நீரே காரணமானீர். வாக்கு வன்மையுடைய நீர் முயன்று இருந்தால் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் அழிவு நேராமல் அவசியம் தடுத்திருக்க முடியும். வேண்டுமென்றே நீர் அலட்சியமாக இருந்துவிட்டீர். என் கணவருக்கு உண்மையாக நான் ஊழியம் புரிந்திருப்பின், தவம் செய்திருப்பின், நான் இப்போது உம்மைச் சபிப்பது பலிக்கட்டும். இன்னும் முப்பத்தாறும் ஆண்டில் நீர் உம் உற்றார் உறவினருடன் கொல்லப்படுவீர்; அநாதைபோல் காட்டில் சஞ்சரித்து நீர் அலையக் கடவீர். தம் உற்றார் உறவினர்களைப் பறிகொடுத்து, பரதகுலப் பெண்டிர் இன்று அழுது புலம்புவது போல, உம் மனைவியரும் மற்ற மாதரும் புலம்பட்டும்" என்று சபித்தாள்.

காந்தாரி இப்படிச் சபித்ததும் கண்ணன் புன்னகை புரிந்தார். "மாதே! இப்படித்தான் நடக்கும் என்பதை நானும் அறிவேன். ஒருவருடன் ஒருவர் அடித்துக்கொண்டு யாதவர்கள் அழிவர். இதில் சந்தேகம் இல்லை" என்று பதில் சொன்னார்.

கண்ணன் சொன்ன பதிலைக் கேட்டு, பாண்டவர்கள் நடுங்கிவிட்டார்கள்; அவர்களுக்கு உயிரின்மீதே ஆசை இல்லாது போயிற்று.

## நீர்க் கடன்

இதன் பின்னர், காந்தாரியை நோக்கி, "காந்தாரி! ...ரு. வருந்தாதே. உன் புதல்வன் அகந்தை கொண்ட...வன், தீயவன்; பெரியோரை அவமதித்து நடப்பவன்; அவன்மீதுள்ள பாசத்தால், அவனுடைய தீய நடத்தை உனக்கு நல்ல நடத்தைபோல் தோன்றுகிறது. உன்மீதுள்ள குற்றத்தை என்மீது சுமத்தப் பார்க்கிறாய். ஓடிப் போனவன், காணாமல் போனவன், இறந்துபோனவன் இவர்களைப்பற்றி நினைக்க நினைக்கத் துயரம்தான் அதிகமாகும். ஆகவே, துயரத்தை விட்டுவிடு. சிறந்த பக, பெரும் பாரத்தைச்

சுமக்கக் கூடிய காளையைப் பெறுகிறது. பெண் குதிரை வேகமாக ஓடும் குதிரைக் குட்டியை ஈனுகிறது. உன்னைப் போன்ற அரசியர் போரில் மடியும் புதல்வர்களைப் பெறுகிறார்கள். இதற்கு என் செய்வது?" என்று சொன்னார் கண்ணன்.

பிரியமில்லாத இந்த வார்த்தைகளைக் கேட்டு, காந்தாரி பெரிதும் வருந்தினாள். கண்கள் கலங்கின; பேசாது அவள் இருந்துவிட்டாள்.

இதன் பின்னர், போரில் மடிந்தவர்களை நல்லடக்கம் செய்யும்படி யுதிட்டிரர் உத்தரவிட்டார்.

விதுரர், சஞ்சயன், தௌமியர், இந்திரசேனன் ஆகியோர் சந்தனக் கட்டை, அகில் கட்டை இவற்றை அடுக்க, வெண் பட்டினால் மூடி, நெய் ஊற்றி, தகனம் செய்தார்கள். செய்ய வேண்டிய விதிப்படி, மற்றச் சடங்குகளையும் செய்து முடித்தார்கள்.

இதன் பின்னர் யுதிட்டிரர் திருதராட்டிர மன்னனை முன்னிட்டுக்கொண்டு கங்கையை நோக்கிச் சென்றார்.

கங்கையை அடைந்ததும் தலைப்பாகை, மேல்வேட்டி, அணிகலன்கள் ஆகியவற்றை அகற்றிவிட்டு, கங்கையில் இறங்கி நீராடினார்கள். நீர்க் கடன் முதலியவற்றையும் செய்தார்கள்.

குந்தி அழுதுகொண்டே தன்புதல்வன் யுதிட்டிரனிடமும் மற்றப் பாண்டவர்களிடமும், "மைந்தர்களே! நிகரற்ற வீரன் கர்ணன் உங்களுக்கு அண்ணன். எனக்குச் சூரியனிடத்தில் பிறந்தவன். அவனுக்கு நீங்கள் நீர்க் கடன் செய்யுங்கள்" என்று சொன்னாள்.

குந்தி சொன்னதைக் கேட்டு, விவரம் தெரிந்து, பாண்டவர்கள் பெரிதும் வருந்தினார்கள்.

யுதிட்டிரர் பாம்புபோல் பெருமூச்சுவிட்டு வருந்தினார். "கர்ணன் எங்கள் தமையன் என்பதை இவ்வளவு காலமும் எங்களிடம் ஏன் தெரிவியாமல் இருந்தாய்? அவனை முன்பு நீ எவ்வாறு பெற்றாய்?" என்று சொல்லிவிட்டு, கர்ணனுக்குச் செய்யவேண்டிய நீர்க் கடனையும் செய்தார்.

யாவரும் கங்கையிலிருந்து கரைக்கு வந்தார்கள். யுதிட்டிரர் மிகுந்த கலக்கத்துடன் இருந்தார். "உடன் பிறந்த தமையனை நான் கொன்றுவிட்டேன். இனி எந்த இரகசியமும் மாதர் மனத்தில் தங்காமல் இருக்கட்டும்" என்று சொல்லி விட்டு, கரையை அடைந்தார்.

(முற்றும்)